# பதஞ்சலி நாடி ஜோதிடம்

மணிமேகலைப் பிரசுரம்



பதஞ்சலி கதிர்
நல்லை ராஜா

பாகம்-1

# பதஞ்சலி
# நாடி ஜோதிடம்

## பாகம் - I



ஆசிரியர் :
**புதஞ்சலி கதிர் நல்லைய ராஜா**

## மணிமேகலைப் பிரசுரம்



தபால் பெட்டி எண் : 1447
7 (ப.எண். 4), தணிகாசலம் சாலை,
தியாகராய நகர், சென்னை - 600 017.
தொலைபேசி : 24342926
தொலைநகல் : 0091-44-24346082
மின் அஞ்சல் : manimekalai1@dataone.in
WebSite : www.tamilvanan.com

## நூல் விவரம்


| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | ➢ | பதஞ்சலி நாடி ஜோதிடம் பாகம் - 1 |
| ஆசிரியர் | ➢ | கதிர் நல்லைய ராஜா |
| மொழி | ➢ | தமிழ் |
| பதிப்பு ஆண்டு | ➢ | 1993, 99, 02, 07 |
| பதிப்பு விவரம் | ➢ | நான்காம் பதிப்பு |
| தாளின் தன்மை | ➢ | 11.6 கி.கி. |
| நூலின் அளவு | ➢ | கிரௌன் சைஸ் (12½ x 18½ செ.மீ.) |
| அச்சு எழுத்து அளவு | ➢ | 11 புள்ளி |
| மொத்த பக்கங்கள் | ➢ | 396 |
| அட்டைப்பட ஓவியம் | ➢ | திரு. சாய் |
| லேசர் வடிவமைப்பு | ➢ | கிறிஸ்ட் கம்ப்யூட்டர்ஸ் சென்னை - 26. |
| அச்சிட்டோர் | ➢ | ஸ்கிரிப்ட் ஆஃப்செட் சென்னை - 94. |
| நூல் கட்டுமானம் | ➢ | தையல் |
| வெளியிட்டோர் | ➢ | மணிமேகலைப் பிரசுரம் சென்னை - 17. |

நூலின் விலை : ரூ.90.00

# பொருளடக்கம்!

# விற்பனையாகும் இதர நூல்கள்

## புராணம் – Mythology

| | |
|---|---|
| சிவ புராணம் | 55.00 |
| விநாயகரும் விநோதச் செய்திகளும் | 17.00 |
| நாரதர் புராணம் | 25.00 |
| சூரிய புராணம் | 23.00 |
| மார்க்கண்டேயர் அருளிய புராணம் | 33.00 |
| தேவி பாகவதம் | 42.00 |
| பரந்தாமனின் பத்து அவதாரங்கள் | 60.00 |
| மகாபாரதம் | 225.00 |
| மகாபாரதம் பாகம்-2 (குருஷேத்திர போர்க் காட்சிகள்) | 57.00 |
| புராணச் சிறுகதைகள் | 16.00 |
| திருப்பதி வெங்கடாசலபதியின் வரலாறும் வழிபாட்டு முறைகளும் | 24.00 |
| காளஹஸ்தி தலபுராணமும் பெருமைகளும் | 33.00 |
| தேவி கருமாரியம்மன் வரலாறு | 29.00 |
| ஆன்மிகம் ஒரு சிந்தனை | 70.00 |
| ஸ்ரீமத் பாகவதம் | 77.00 |
| கவிச் சக்கரவர்த்தி கம்பரின் கவி நயம் | 26.00 |
| நெஞ்சில் நிற்கும் நீலகண்டன் திருவிளையாடல்கள் | 45.00 |
| மகாபாரதப் பிறப்பும் பகவத்கீதை தொகுப்பும் | 65.00 |
| மகாபாரத உபதேசக் கவிதைகள் | 22.00 |
| மகாபாரதத்தில் நவமணிகள் | |

## யாத்திரை – Pilgrimage

| | |
|---|---|
| திருத்தலங்களைத் தரிசிக்க வாரீர்! | 22.00 |
| வைணவத் திருப்பதிகள் | 15.00 |
| தமிழக இந்துக் கோயில்கள் பாகம்-1 | 27.00 |
| பாகம்-2 | 26.00 |
| திருப்பதி செல்கிறவர்களுக்கான தெளிவான வழிகாட்டி | 15.00 |
| திருமணத்தடையை நீக்கும் திருத்தலங்களும் பரிகாரங்களும் | |
| புகழ்பெற்ற 108 அம்பாள் ஆலயங்கள் | 80.00 |
| வட இந்தியத் திருத்தல வரலாறு | 50.00 |
| நலம் தரும் நவக்கிரகத் திருத்தலங்கள் | 60.00 |
| அற்புதங்கள் நிறைந்த அபூர்வக் கோயில்கள் | 50.00 |
| திருக்கோணேஸ்வர திருத்தல யாத்திரை | 70.00 |
| பத்ரிநாத்திலிருந்து இராமேசுவரம் வரை புனிதப் பயணம் | 40.00 |

# விற்பனையாகும் இதர நூல்கள்

## பக்தி – Pias

| | |
|---|---|
| அஷ்டலட்சுமிகள் வரலாறும் வழிபாட்டு முறைகளும் | 26.00 |
| இந்துப் பண்டிகைகளின் வரலாறும் வழிபாட்டு முறைகளும் | 18.00 |
| எந்தக் காரியம் வெற்றி பெற எந்தக் கடவுளை எப்படி வணங்க வேண்டும்? | 35.00 |
| ஆன்மீக ஐயங்களும் - விடைகளும் | 18.00 |
| ஆன்ம ஞான இரகசியம் - பி. ஏ. பகவத்சிங் | 17.00 |
| ஆன்மாவைத் தரிசியுங்கள் | 27.00 |
| ஆதிபகவானின் சக்தியும் விஞ்ஞான ஆராய்ச்சியும் | 36.00 |
| நன்மையில் முடிந்த நாரதர் கலகங்கள் | 18.00 |
| இலங்கையில் மகா அஸ்வமேத யாகம் | 21.00 |
| ஆதிபராசக்தி வழிபாடும் வழிபாட்டு முறைகளும் | 27.00 |
| சர்வதோஷ நிவர்த்தி தரும் சர்வேஸ்வரன் சிவன், சங்கரன் வழிபாடு | 11.00 |
| அருமையான ஆன்மீக விஷயங்கள் | 20.00 |
| தெரிந்துகொள்வோம் சிவநெறி | 38.00 |
| திருக்கோயில் கூறும் தத்துவங்கள் | 35.00 |
| திருக்கடையூரில் ஆயுள் விருத்தி ஹோமமும் அறுபதாம் கல்யாணமும் | 38.00 |
| வெள்ளிக்கிழமை விரதமும் அதன் மகிமையும் | 32.00 |
| பிள்ளையார்பட்டி விநாயகரின் மகிமைகள் | 25.00 |
| தேவாரம் | 40.00 |
| திருக்கோணேஸ்வரம்தான் தெட்சணக் கைலாயம் | 45.00 |
| மெய்ஞ்ஞானமும் அணுவிஞ்ஞானமும் | 28.00 |
| ஆன்மிகத்தில் அசத்தலான கேள்விகளும் ஆணித்தரமான பதில்களும் | 35.00 |
| திருவாசகம் அது ஒருவாசகம் | 35.00 |
| உண்மையைக் காட்டும் காலக் கண்ணாடி | 32.00 |
| கேட்ட வரம் தரும் வேளாங்கன்னி மாதாவும் நாகூர் ஆண்டவரும் | 34.00 |
| ஈழத்துத் திருக்கோயில்கள் வரலாறும் மரபும் | 100.00 |
| கும்பகோணம் மகாமகத்தின் வரலாறும் மகிமைகளும் | 27.00 |
| கேதார கௌரி விரதம் (விளக்கமும் பாடல்களும்) | 6.00 |
| கண்ணன் சொல்வதை கேளுங்கள்...! | 25.00 |
| Pilgrimage to Thirukoneswaram | 40.00 |
| பத்ரகாளி அம்பாளின் பாதாதிகேச தரிசனம் | 30.00 |
| பக்தி யோகம் | 50.00 |
| கேது பகவான் வழிபட்ட திருக்கேதீஸ்வரம் | 35.00 |

# விற்பனையாகும் இதர நூல்கள்

சிவ வழிபாடு ---------- 130.00
குலதெய்வங்கள் காட்டும் வரலாறு ---------- 55.00
தெய்வ நம்பிக்கையும் தெளிவுமிக்க வாழ்க்கையும் ---------- 18.00
ஆத்மீக வாழ்வு ---------- 25.00

## தர்மசாஸ்திரம் – Ethics

திருமந்திரமும் சிவஞான போதமும் ---------- 17.00
(ஓர் ஒப்பு நோக்கு ஆய்வு நூல்)
திருமந்திரம் (மூலமும் உரையும்) பாகம்-1 ---------- 93.00
பாகம்-3 ---------- 80.00
பாகம்-4 ---------- 68.00
யோக சுவாமிகள் அருளிய நான்கு மகாவாக்கிய
விளக்கமும் சரித்திரமும் ---------- 26.00
கர்மயோகம் விளக்கவுரை ---------- 32.00
குறைவற்ற வாழ்க்கைக்கு வழிகாட்டும் கீதாசாரம் ---------- 50.00

## சைவ சமயம்

சைவ சமயம் ---------- 35.00
சைவ சித்தாந்தமும் விஞ்ஞான உலகமும் ---------- 75.00
சைவ சமயத்தை வளர்த்த அருளாளர்கள் ஐவர் ---------- 40.00
சைவ நீதியும் சமய வாழ்வும் ---------- 30.00
பின்பற்ற வேண்டிய சைவ சமய தத்துவங்கள் ----------

## பக்திமான் – Spiritual People

ஸ்ரீஷிர்டி சாய்பாபா ---------- 35.00
காஞ்சிப் பெரியவர்களின் வரலாறு ---------- 11.00
அறுபத்துமூவரும் பன்னிரு ஆழ்வாரும் ---------- 39.00
உள்ளொளி காட்டும் தாயுமானவர் ---------- 23.00
ஆன்மிகச் செல்வர்கள் வாழ்வில்
நிகழ்ந்த அற்புத நிகழ்ச்சிகள் ---------- 11.75
பக்த விஜயம் ---------- 11.50
சுவாமி சின்மயானந்தரின் சிறப்புச் சிந்தனைகள் ---------- 39.00
ரமணர் வழியில் தன்னை அறிதல் ---------- 27.00
வாழ்விக்க வந்த வள்ளலார் ---------- 35.00
வள்ளலார் கண்ட வாழ்க்கை நெறிகள் ---------- 19.00
கைவல்ய உபநிஷதமும் தமிழில் விளக்கமும் ---------- 13.00
திருவண்ணாமலையின் ஞான தீபங்கள் ---------- 100.00

# விற்பனையாகும் இதர நூல்கள்

மகான்களும் மகிமைகளும் ---------------------------------------- 80.00
சாயி வந்தனன் வாழ்வு தந்தனன் --------------------------------- 40.00
வாழ்வை நெறிப்படுத்தும் கெங்காதரானந்தா ----------------------- 50.00
ஸ்ரீசத்தியசாயிபாபா வரலாறும் மகிமைகளும் ---------------------- 60.00
அறுபத்து மூவரின் அற்புதப் படைப்புகள் -------------------------

## பக்திப் பாடல் – Devotional Song

அன்றாடம் இந்துக் கடவுள்களை வழிபட உதவும் பாடல்கள் ---- 20.00
நினைத்தது நிறைவேற உதவும் இறையருட் பாடல்கள் ----------- 50.00
துன்பம் தீர்க்கும் துதிப் பாடல்கள் ------------------------------ 22.00
பக்தி பஜனைப் பாடல்கள் ---------------------------------------- 33.00
அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ் மாலை -------------------- 28.00
திருமுறை திவ்யப் பிரபந்தத் திரட்டு ---------------------------- 9.50
ஸ்தோத்திர மாலை ------------------------------------------------- 32.00
அபிராமி அந்தாதி - மூலமும் உரையும் -------------------------
சௌந்தர்ய லஹரி கனகதாரா ஸ்தோத்திரம் மூலமும் தெளிவுரையும் 17.00
காரிய சித்திதரும் லலிதா சஹஸ்ரநாமம் ------------------------ 27.00
மேல்மருவத்தூர் அம்மாவின் திருப்புகழ் ------------------------ 6.00
திருப்பதியார் திருப்புகழ் -------------------------------------- 42.00
லக்ஷ்மி அஷ்டோத்திர நாமாவளியும்
இதர ஸ்தோத்திரங்களும் ------------------- 26.00
லண்டன் லூசியம் சிவன்கோயில் கீர்த்தனைகள் ------------------ 11.00
இஷ்ட தெய்வ வழிபாடு (சண்முகம் சதாசிவம்) ----------------- 15.00
சக்திதரும் சந்தப் பாமாலை ------------------------------------- 65.00
அற்புதமான பக்திப் பாடல்கள் ----------------------------------- 60.00
நவக்கிரக வேண்டுதலும் திருப்பள்ளியெழுச்சிப் பாடல்களும் ----- 20.00
அம்பாள் செய்யும் அற்புதங்கள் --------------------------------- 40.00
துர்க்கை வழிபாடு ------------------------------------------------ 5.00
தின வழிபாடு ---------------------------------------------------- 5.00
இளைய தலைமுறையினருக்கு பன்னிரு திருமுறைகள் திரட்டு -- 220.00
சாயி பஜனை ------------------------------------------------------ 100.00

## முருகனைப்பற்றிய நூல்கள் – Books on Lord Muruga

கந்தபுராணம் ----------------------------------------------------- 100.00
Kandar Anubuti (Direct Congnition of Supreme Bliss ------------------- 20.00
மன சரவணம் - கண்ணப்ப மனோகரன் ---------------------------- 53.00
சரவண மாலை - " ------------------------------------------------ 21.00
நெஞ்சை உருக்கும் முருகன் பாடல்கள் ------------------------- 18.00

# விற்பனையாகும் இதர நூல்கள்

சக்தி வாய்ந்த சண்முகக் கவசம் ---------------------------------- 11.00
முருகன் திருக்கல்யாணப் பாடல்கள் -
பகவத ஸ்ரீ கே.வி. வெங்கட்ட ரமணி ------------------- 45.00
திருவேரக முருகன் மும்மணிமாலை ------------------------- 15.00
தமிழ்க் கடவுள் முருகனின் பெருமைகள் ------------------- 40.00
கந்த சஷ்டி சிந்தனைகள் -------------------------------------- 40.00

## சுவாமி ஐயப்பன் – Lord Iyappa

ஐயப்பன் புராணமும் பாடல்களும் ------------------------------ 33.00
சபரிமலை வரலாறும் சுவையான அனுபவங்களும் -------------- 35.00
சுவாமி ஐயப்பனைப் பற்றிய
அருமையான பாடல்கள் ---------------------------- 32.00

## இசை – Music

இசையியல் - ஓர் புதிய கண்ணோட்டம் பாகம்-1 -------------- 55.00
பாகம்-2 ------------ 72.00
இராக, தாள வகைகளைத் தெரிந்து கொள்ளுங்கள் -------------- 50.00
1500 இராகங்களின் ஆரோகணம், அவரோகணங்கள் --------------
100 இராகங்களுக்கான எளிய ஆலாபனை ------------------- 40.00
கர்நாடக இசையை முறைப்படி
பாடக் கற்றுக்கொள்ளுங்கள் --------------------- 35.00
குரல் வளம் பெறுங்கள் ------------------------------------------ 16.00
புகழ்பெற்ற கீர்த்தனைகள் ------------------------------------- 39.00
வில்லுப்பாட்டின் கதை ---------------------------------------- 8.00
இசைத் துணைவன் (அரசுத் தேர்வு
விதிமுறைத் திட்டத்திற்கேற்ப எழுதப்பட்டது) ------------- 30.00
Gana Priya ------------------------------------------------------- 18.00
இசையும் அவற்றினால் ஏற்படும் பலன்களும் ------------------ 39.00
பக்தகோடிகளுக்கான கோஷ்டி கானங்கள் -------------------- 14.00
இசையுடன் பாட பாரதிதாசனின் இனிய பாடல்கள் -------------- 25.00
கதாகாலட்சேபக் கலையும் கலைஞர்களும் -------------------- 66.00
புகழ்மிக்க சங்கீத மூர்த்திகளின் கீர்த்தனைகள் ---------------- 65.00

## இசைக் கலைஞர் – Musician

தென்னிந்திய இசைக் கலைஞர்கள் -------------------------- 15.00
ஏழிசை நாயகன் யேசுதாஸ் ---------------------------------- 41.00
இணையற்ற பாடகர் யேசுதாஸ் ------------------------------ 80.00
Yesudas the king of Melodies ------------------------------ 38.00
The Greatest Singer Yesudas ------------------------------ 100.00

# பதஞ்சலி நாடி ஜோதிடம்

## குரு வணக்கம்

ஓம் அருள் சித்த குருப்யோ நம:
ஓம் பதஞ்சலி சித்தராய நம:

## நவக்கிரக துதி

வெய்யோன் பிறையும் குசனுடன் கணக்கன்
வேதன் சுங்கன் காரியரவு சேடன்
உய்வழி கொடுக்கும் நவக்கிரக தேவரீர்
ஊழ்வினை யகற்றி வாழவைப் பீரே !

# மேஷம்

## முதல் பாவம்

அம்புலியும் கிடாயதனில் தானிருக்க
    அசுபதியும் பரணியொத்து கிருத்திகையொன்று
வம்பில்லா மேடாதி இராசியொத்து
    வகையான சாரபலன் தானேகேளாய்!

கேளேதான் இரக்கமே குணவான்கள்
    கெடியுடனே அதிலேதான் கெண்டமப்பா!
மீளதொரு வழிதேடி மைந்தருமே
    மயக்கமாய் அல்லலொடு திரிவதாகும்!

ஆகுமப்பா கிருஷிநலம் தானுண்டு
    அறியவரும் கொல்லனுட வேலைக்கெல்லாம்
வாகான அனலிரும்பு காரகமும்
    வழுத்தவே யிவன்தனக்கு வந்தேசேரும்!

சேரவே கூடாத கிரகமொன்று
    சாரத்திலே வெய்யோனும் காரியொடு
காரணமாய்க் கூடினாலே கலகந்தானே
    குமரனுக்குக் குறிப்புடனே முன்கோபம்!

கோபமேல் இரக்கசிந்தை தான்மெத்த
    கெடியான பொன் பொருள் பூஷணவர்க்கம்
பாபமில்லை ஐசுவர்யம் பெறலாகும்
    பகரவரும் களத்திரமும் நளினமாகும்!

ஆகவரும் ஆசையதும் இல்லாள்மேல்
    அறியக்கேள் வீணான விபகாரம்
போகியே தலையிட்டால் வீணாய்ப் போசசு
    பொருந்தமேல் பாக்கியங்கள் தானாய்க்கிட்ட!

கிட்டுமப்பா விதிதீர்க்கம் தானுமுண்டு
    கருத்தான அரசுகர்மம் சிலவாறாய்!
திட்டமாய் மைந்தருக்குக் கிடைக்கலாகும்
    துன்பமில்லை யிருடியான் பாடினேனே!

# விளக்கம்

அசுபதி 4ஆம் பாதமும் பரணி 4ஆம் பாதமும் கிருத்திகையின் 1ஆம் பாதமும் கூடிய மேஷ இராசி அன்பர்களே!

உங்களின் வாழ்வில் பொதுவான பலன்களையும், வரும் இடர்களையும், நீங்கள் மாற்ற வேண்டிய குணாதிசயங்களையும், மகரிஷி பதஞ்சலி ஐயா கூறுவதைக் கேளுங்கள்.

நீங்கள் முழுக்கச் செவ்வாயின் ஆதிக்கத்தைப் படைத்தவர்கள். உங்களின் மேஷ இராசியில் செவ்வாய் ஆட்சி மூலத்திரி கோணத்தையும், அதிபதி பலத்தையும் பெற்றுள்ளார். இந்தச் செவ்வாய்க்கு அதிபதி சுப்பிரமணிய ஸ்வாமி. அந்த ஸ்வாமியைப் போலவே உங்களுக்கு முன்கோபம் அதிகம். முருகன், தன் தாய், தந்தையரோடு கோபித்துக்கொண்டு தனியனாய்ப் பழனி மலையில் அமர்ந்தது போல், நீங்களும் கோபம் ஏற்பட்டால் தனியாய் அமர்ந்து கொள்வீர்கள். ஆனால், பின்பு சாந்தமாகி அதனை எண்ணி வருத்தப்பட்டு, கோபத்திற்குக் காரணமானவர்களின்மீது இரக்கப் படுவீர்கள்.

உங்களின் இந்தப் பின்னிரக்கக் குணத்தைக்கொண்டு, உங்களை மகிழ்வித்துக் காரியங்கள் சாதிப்பவர் பலர். அவர்களிடம் நீங்கள் சதா சர்வ ஜாக்கிரதையாய் இருத்தல் வேண்டும்.

எதிலும் நீங்கள் நிதானமாய் நடந்தால் மிகவும் நல்லது. அவசரப்பட்டு அடுத்தவருக்கு உதவி செய்யப் போய் மாட்டிக் கொள்ளும் வழக்கம் மேஷ இராசிக்காரர்களுக்கு அதிகம் உண்டு.

"வளர்த்த கிடா மார்பில் பாயும்" என்பதற்கேற்ப, நீங்கள் வளர்த்துவிட்டவர்களே, உங்களுக்கு எதிரியாக, எமனாக வந்து தொல்லை செய்யும் நிலை உங்களுக்கு ஏற்படும். இருந்தாலும் ஸ்ரீ சுப்பிரமணிய ஸ்வாமியின் அருள் உங்களுக்குப் பூரணமாக உண்டு. அவரருளால் பகைவர்களை சம்ஹாரம் செய்யும் சக்தி எப்போதும் உங்களுக்கு உண்டு.

உங்களின் தேகம் உஷ்ண தேகம். மூலத்தொந்தரவும், வெள்ளை, வெட்டை நோயும் அடிக்கடி ஏற்படும்.

அஸ்வினி மூன்றாம் பாதத்தில் பிறந்தவர்களுக்கு இரத்த மூலம் ஏற்படலாம்.

மேஷ இராசிக்காரர்களின் உடல், பித்த தேகமாகும். அவர்கள் வெயிலில் சென்றால் சிரசு சுற்றுகின்ற மாதிரி இருக்கும்.

உங்களுக்குப் பெரிய ஆசைகள் அதிகம்; அற்ப ஆசைகள் அதிகமாய் இரா. வாழ்வின் மத்திம காலங்களில், பொன், பொருள், பூஷணவர்க்கங்கள் ஆகிய அனைத்தும் இருக்கும்; ஆனால், நிம்மதியிராது. வரக்கூடிய பெண், செல்வச் சீமானின் வீட்டில் வளர்ந்தவள் போல், சதா சர்வ காலமும், ஆடை, அலங்காரம் ஆபரணம் என்றே திரிபவளாயிருப்பாள்.

இந்தக் குணத்தை மாற்ற முடியாது. உங்களுக்குப் பெரும்பாலும் கிருஷி - அதாவது, விவசாய - தொழில்களில் ஈடுபாடு அதிகம் இருக்கும். உலோகம் மற்றும் அனல் சார்புத் தொழில்கள் ஒருவாறாய்ப் பின்னால் செய்ய விதியும் உண்டு.

அரசாங்கத் தொழில்களில் மேஷ இராசியினர் அதிகமாக இருப்பார்கள்; ஆனால்,, கிரகச் சூழ்நிலையாக இராசிக்கு 10ஆம் இடத்து அதிபதி சனியுடன், இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான சூரியன் சேர்ந்திருந்தால், இவர்கள் பல துன்பங்களை அடைய வேண்டியிருக்கும் என்று மகரிஷி கூறுகின்றார். ஆனால், உங்களுக்கு விதி தீர்க்கம். 75 வயதுவரை ஆயுள் உண்டு என்று காண்ட நூல்கள் கூறுகின்றன.

பெரும்பாலும், அசுபதி நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் சிறு வயதிலேயே புத்தி சாதுரியமும், தவறான சிநேகங்களையும் கொண்டிருப்பார்கள். ஆனால், பின்வாழ்வில் புகழையும், பொருள்களையும் பெற்றுத் திகழ்வார்கள். இந்த நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் "ஆயகலைகள் அறுபத்து நான்கையும்" கற்க வேண்டும் என்ற ஆர்வத்தோடும், படித்ததால், சற்றுக் கர்வத்தோடும் இருப்பார்கள்.

"ஆவானே கிரகிக்கும் ஆற்றல்பல
அறிந்ததோர் கெர்வமதும் மெத்தவுண்டு!

தாவாமல் ஓரிடத்தில் நின்றாலே
துலங்குமந்த வாழ்வின்பலன் மெத்தபாரே"

என்று அஸ்வினி நட்சத்திரத்தில் பிறந்தவர்களைச் சித்தர் இவ்வாறு பாடுகின்றார்.

இவர்கள் அறியாமல் செய்த பிழை நிறைய உண்டு. பின்பு, உணர்ந்து நல்லவர்களாகத் திருந்தி வாழ்வார்கள். பரணியில் பிறந்தவர்கள் தேவி துர்க்கையின் அருளைப் பெற்றவர்கள். இவர்களுக்குப் பெண் விஷயங்களிலும் சரி, எந்தத் தொழில் விஷயமானாலும் திருப்தி அவ்வளவாக இராது.

இவர்களுக்குப் பெண்களினால் தொல்லைகள் அதிகம் உண்டு.

"வல்லதோர் ஸ்திரீபிரியன் போகப்பிரியன்
வந்தவினை அதிலேதான் இருக்கும்பாரே !
துல்லியமோர் பெண்டென்றால் பேயாவான்
தனயனவன் வெட்டினாலும் வருமேகாண்"

என்பது போல், பெண்கள் தொந்தரவு அதிகமாய் இருக்கும். இவர்களையே அவர்கள் அண்டி வருவர். விரட்டினாலும் திரும்பி வரும் நிலையை உண்டுபண்ணும்.

பரணி நட்சத்திரத்தில் பிறந்தவர்களுக்குச் சத்துருக்கள் அதிகமாய் இருந்தாலும், தேவி துர்க்கையின் அருள் இவர்களுக்கு எப்பொழுதும் உண்டு. அதனால் சத்ருஜெயம் கைவந்த கலையாக இருக்கும்.

இவர்கள் செய்த தர்மமே இவர்களைக் காக்கும். இவர்களுக்கு அதிகமான கோபகுணங்கள் உண்டு. அதனாலே அதிக வில்லங்கங்களைச் சந்திக்க வேண்டியிருக்கும். ஆயிரமாயிரம் அனுஷ்டானம், சாஸ்திரங்கள் கற்றிருந்தும் கோபத்தினால் நொடியில் விவகாரத்தைச் சந்திக்கிழுக்கும் நிலையுண்டு. இவர்கள் பலஹீனத்தை வெளியே காட்டினால் அதனாலே தொல்லைகள் ஏற்படும். மறைத்துவிட்டோம் என்று தன் வாயாலே அதனைக் காட்டிக் கொடுக்கும் நிலையுமுண்டு.

கண்ணில் பூவிழுதல், புரையோடுதல் போன்ற நேத்திர நோய்கள் மத்திம காலங்களில் ஏற்படலாம்.

பொதுவாக, சகவாச குணங்களை நீக்க வேண்டும்.

"போச்சப்பா சகவாச குணத்தாலே
பொய்யான செகத்தினிலே தொல்லைதானே
ஆச்சேதான் அத்தனையும் விட்டாயானால்
அச்சமில்லை வாழ்வான வாழ்வுதானே"

இவ்வாறாய்ப் பரணி நட்சத்திரத்தில் பிறந்தவர்களுக்குப் பதஞ்சலி மகரிஷி பலன்களைக் கூறியுள்ளார்.

இதே மேஷ இராசியில் கிருத்திகை 1ஆம் பாதத்தில் பிறந்தவர்களுக்குப் பலன் என்னவென்றால், உங்களுக்குக் கேள்வி ஞானங்கள் அதிகமாய் இருக்கும். ஆனால், கல்வி குறைவாகவே இருக்கும்.

"காணேதான் ஆசார சீலனாவான்
குறும்பான நாசிநுனி கோபியுமாவான்
வானேதான் மாரியது விட்டிடினும்
வல்லவனுக்கும் வாழ்வுநலம் உண்டுதானே !"

நீங்கள் மூக்கின் நுனி கோபக்காரர்கள். ஆனால், அது வந்த வேகத்தில் மறைந்துவிடும். கிரகிக்கும் ஆற்றல்கள் அதிகம் உண்டு. அடுத்தவர்கள் முணுமுணுப்பதைக்கூடச் சரியாக யூகிக்கும் திறன் நிரம்பப் பெற்றவர்கள். உங்களுக்கென்று தனிப்பலன்: "உங்கள் காட்டில் மழை" என்பது போல், அந்தப் பலனைக் கண்கூடாகக் காணலாம்.

இப்படி அசுபதி, பரணி, கிருத்திகை 1ஆம் பாதமுடைய மேஷ இராசிக்காரர்களுக்குச் செவ்வாயின் ஆதிக்கம் அதிகமாயிருப்பதால் மூர்க்க குணங்கள் அதிகமாயிருக்கும்.

நவரத்தினங்களுள் ஒன்றான பவளத்தை மோதிரத்தில் அடைத்து, அதைப் பஞ்ச கௌவியம் என்ற ஒரே பசு மாட்டிலிருந்து எடுக்கப்பட்ட பால், நெய், தயிர், கோமியம், சாணம் ஆகிய ஐந்து பொருள்களிலும் சுத்தி செய்து, வளர்பிறை செவ்வாய்க்கிழமை சூரிய உதயத்திற்கு முன் வலக்கை மோதிர விரலில் அணிய, சகல ஐஸ்வரியங்களும் கிட்டி சுபிட்சமாக இருப்பீர்கள்.

சகல பாவங்களும் போகும். இவ்வாறாய் மேஷ இராசியில் பிறந்தவர்களுக்குப் பதஞ்சலி மகரிஷி உபாயம் கூறியுள்ளார்.

மேஷ இராசியாதிபதியான செவ்வாய் கேந்திரங்களான 1, 4, 7, 10ஆம் இடங்களில் இருந்தாலும், கோணங்களான 1, 5, 9ஆம் இடங்களில் இருந்தாலும், உத்தம பலன்கள். நீச வீடுகளிலும், பகை வீடான புதன் வீட்டிலும் இருந்தால் பெரும்பாலும் தன் காரகப் பலன்களை அதமமாகவே கொடுப்பார்.

செவ்வாய் உச்ச வீடான மகரத்திலிருந்து அவனைச் சுபர்கள் பார்த்தால், அவர் திசை புத்தியில் உச்ச பலன்களையே உத்தமமான பலன்களாகச் செய்வார்.

உங்கள் இராசியாதிபதி செவ்வாய்க்கு 7ஆம் பார்வை பொதுவாக இருந்தாலும் 4ஆம் பார்வையும் 8ஆம் பார்வையும் உண்டு. 4, 8, பார்வைகள் விசேஷ பார்வைகளாகும்.

இராசியாதிபதியான செவ்வாயின் கிரக ஆதிபத்தியங்களைப் பற்றி மகரிஷி கூறுகின்றார்:

செவ்வாய் ஆட்சி பெற்றால் படைக்குத் தலைமை தாங்குதல், இரத்த பலி கொடுத்தல், குரூர பார்வைகள், உடன்பிறந்தவர்களால் நன்மை, சதா ஸ்திரீ போகங்கள், மனைகள் வாங்குதல், சுகமாயிருத்தல் போன்ற பலன்களைச் செய்வார்.

செவ்வாய் மகர வீட்டில் உச்சமானால் நல்ல சந்தோஷங்கள், காரிய ஜெயங்கள், தெய்விக உபாசனைகள், சதித் திட்டம் தீட்டுதல், பலி கொடுத்தல் போன்ற பலன்களைச் செய்வார். இராசியாதிபதி செவ்வாய் எந்த வீடுகளிலாவது நட்புப் பலன்களைப் பெற்றிருந்தால், அக்கினி பயம், காயம் ஏற்படுதல், அதிகக் கர்வம், சிறிது நிதானப் போக்கு, பகைவனை அழிக்க யோசித்தல், கஷ்டமும் சந்தோஷமும் கலந்திருத்தல் போன்ற பலன்களைச் செய்வார்.

செவ்வாயானவர் சந்திரன் வீடான கடகத்தில் நீசமானால் செய்யத்தகாத செயல், பெண்களால் கேவலம், காயப்படுதல், சண்டையில் அல்லது தொழிலில் தோல்வி, சோரம் போதல், பிளவை என்ற புற்று நோய் ஏற்பட்டு இரத்தம் ஒழுகுதல், சகோதரர்களால் தீங்கு போன்ற பலன்களைச் செய்வார்.

இவ்வாறு நீசம் பெற்ற இராசியாதிபதி செவ்வாயை எந்தச் சுபக்கிரகமோ, குருவோ பார்க்காமல், முழுக்கக் கெட்டுப்போனாலும் அதிலும் இராஜயோகப் பலன்கள் சிலவற்றைச் செய்வார்.

மேஷ இராசியாதிபதி, அந்த இராசிக்கு அட்டமாதிபதி செவ்வாயாகப்பட்டவர் யாதொரு வீடுகளிலும் பகை பெற்றால் இரத்த அழுத்த நோய்கள், புண்களால் தொல்லைகள், தீயினால் விபத்துகள், பித்தக் கிறுகிறுப்பு, வாய்வு, குன்ம உபத்திரவங்கள் போன்ற இடர்களையும் செய்வார்.

செவ்வாய் ஒவ்வோர் இராசியையும் கடப்பதற்கு 45 நாள்கள் ஆகின்றன. இது முறையே உச்சம், ஆட்சி, பகை, நீசம் என்று ஒவ்வொரு வீட்டிலும் மேற்சொன்ன பலன்களை ஒவ்வொரு விதமாகச் செய்வார்.

இராசியாதிபதி, இராசிக்கு அட்டமாதிபதி செவ்வாயின் சில தீய பலன்களிலிருந்து தப்பப் பதஞ்சலி மகரிஷி உபாயங்களைக் கூறுகின்றார்:

செவ்வாய்க்குக் கருங்காலி விறகினால் சிவப்பான குங்கிலியம் வாங்கி, வேள்விகள் செய்வதனாலும், மூன்று சந்நியாசிகளுக்குச் சிவப்பு வஸ்திரதானமும், அன்னதானமும் செய்வதாலும், செவ்வாய்க் கிரகத்துக்கோ, சுப்பிரமணிய ஸ்வாமிக்கோ துவரம் பருப்புப் படையல் செய்வதனாலும், அர்ச்சனைகள் செய்வதாலும் செவ்வாயின் தீய பலன்களிலிருந்து தப்பலாம்.

மேஷ இராசி அன்பர்களே! மேற்கூறிய பலன்கள் அனைத்தும் பொதுக் காண்ட பலன்கள் மட்டுமே. அவற்றுள் இராசியாதிபதியைப் பற்றியும், அவரால் ஏற்படும் நன்மை தீமைகளைப்பற்றி மட்டும் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. இராசியாதிபதி செவ்வாய்க்கு மேற்சொன்ன பிரீதிகள் செய்து வாழ்வில் நலம் பெற வேண்டுமாய் வேண்டுகிறேன்.

## ரிஷபம்

## முதல் பாவம்

**கார்த்திகையும் இருமூன்று நான்கொடுதான்**
**கருத்தான ரோகிணியும் சீரிடம்ரெண்டு**

சார்வான இடபமதில் அம்புலியேறச்
சாற்றவரும் இன்னமந்த பலனைக் கேளாய்!

கேளப்பா கம்பீரத் தோற்றனாவான்
குறிப்பான குறுகுறுத்த பார்வையொடு
சூலான வயிற்றைப்போல் தோற்றம் கண்டு
சுத்தமாய் நியமங்கள் செய்வோன்காண்!

காணவரு மிடபமதின் பலனைக் கேளாய்
காந்தனுக்கு சுக்ராம்சம் மெத்தவுண்டு!
பேணவரும் ஸ்திரீகளுமே மோகிப்பாரே
பெருமைமேல் வினோதங்கள் செய்வான்பாரே!

பாரேதான் களிக்கூத்து விசேடங்கள்
பகர்வானே வேடிக்கை சொற்களெல்லாம்
தேரேதான் ஓட்டிச்செல்லும் தெய்வக்ஞன்
தெள்ளியநீர் போலேதான் மனமுந்தானே!

தானேதான் தர்மங்கள் நியாயங்கள்
தனயனுக்குச் சிலவாறாய் உண்டெனினும்
ஆனதொரு காமாதி குணங்களெல்லாம்
அறிந்தாலும் விட்டிடாது தொடரும் பின்னே!

பின்னவரும் வீடுமனை வாகனங்கள்
பொருந்தமேல் களத்திரமும் நன்மையாகும்!
தன்னகத்தில் மர்மமென்ற தானத்தில்
தனயனுக்குச் சிலரோகம் செய்யலாகும்!

ஆகுமப்பா மாசற்ற வைரமதும்
அறியவரும் மைந்தனவன் கணையாழி
வாகுடனே அணிந்தாலே நன்மைதானே
வழுத்தவரும் மைந்தனுக்குச் சிலேத்துமதேகம்

தேகமேல் தென்கிழக்குப் பலன்மெத்த
தனயனுக்கு அருளாசி உண்டுமேலாய்
மோகிக்கும் பெண்டிரையே நம்பிடாதே
மோனத்தி லர்த்தமுண்டு புரிந்து பாரே!

# விளக்கம்

ரிஷப இராசி அன்பர்களே! நீங்கள் சம உயரத் தோற்றத்துடனும் ஓரளவு வெண்மையான தோற்றத்தோடும், நிறத்தோடும், கம்பீரமாகவும், குறுகுறுத்த பார்வைகளுடனும், சிறுதொப்பைகளுடனும் இருப்பீர்கள்.

நீங்கள் உண்டு, உங்கள் கடமையுண்டென்று நீங்கள் இருந்தாலும், உங்களின் பார்வை பெண்களை மோகிக்கச் செய்யும். நீங்கள் முழுக்க சுக்ராம்சம் நிறையப் பெற்றவர்கள்.

எவ்வளவுதான் வறியவர்களாயிருந்தாலும், நீங்கள் அணியும் ஆடைகளில் பகட்டும், சுத்தமும் இருக்க விரும்புவீர்கள். நீங்கள் சும்மாயிருந்தாலும், உங்களைக் கண்டு பெண்கள் சும்மாயிருக்க மாட்டார்கள். அசுர குரு சுக்கிராச்சாரியின் ரூபம் பெற்ற நீங்கள், சில சமயம் அசுரராக மாற வேண்டிய நிர்ப்பந்தமுண்டு. அந்தக் கால கட்டங்களில் பிடிவாத குணங்கள் அதிகமாயிருக்கும். நீங்கள் இருக்கும் துறை பெரும்பாலும் நவீன காலத் துறையாக இருக்கும். இயல், இசை, நாடக சம்பந்தப்பட்ட அழகு, ஆபரணத் துறைகளில் புகைப்படத் துறைகளில், அதிக ஆளுமையாக இருப்பீர்கள்.

மற்றும், உலோக சம்பந்தப்பட்ட துறைகளும் அடுத்த பட்சமாயிருக்கும். நீங்கள் பேசும் பேச்சு நளினமாகவும், விகடமாகவும், மாற்றி மாற்றிப் பேசக்கூடிய, அடுத்தவர்களைப் கவரக்கூடிய நிலையை உண்டு பண்ணும். அதனால் மனத்தினில் அதிகக் குற்றங்கள் இல்லை. காம குணங்களால் சில சபலங்கள் ஏற்பட்டு அதனால் சொல்ல முடியாத விபரீதங்கள் உண்டாகும்.

> "ஆவதும் பெண்ணாலே - மனிதன்
> அழிவதும் பெண்ணாலே !"

என்பதற்கேற்ப உங்களின் வாழ்வு பெண்களாலேயே நலம் பெறும்; பெண்களாலே நலம் குன்றும். மற்றபடி, உங்களுக்கு ஆளடிச் சேவகங்கள், வீடு, மனை, வாகனம் போன்ற இல்வகையான சுகங்கள் நிறைய உண்டு.

மத்தள யோகம் போன்ற நிலை ரிஷப இராசிக்காரர்களுக்கு உண்டு. அதாவது, கெட்டுப்போய் மீட்டேறி மறுபடியும் கெடுவது போன்ற நிலையாகும்.

உங்கள் இராசியாதிபதி ஆறாமிடத்ததிபதி சுக்கிரன் கலகத்திற்குக் காரணமானவர். அவர் திசை புத்திகளில் வேண்டிய பொன், பொருள், இதர சௌபாக்கியங்களைக் கொடுத்தாலும் அவற்றை அனுபவிக்க முடியாத துயரத்தையும் கூடவே சேர்த்தும் கொடுப்பார்.

"ஆமப்பா சுக்கிரனும் கலகக்காரன்
அழகான படகளித்துத் துடுப்பளியான்"

என்பது போல, நதியைக் கடப்பதற்கு அழகான படகைக் கொடுத்தாலும், படகு செலுத்துவதற்குக் கருவியான துடுப்பைத் தரமாட்டார். இந்த நிலை இதிலுமட்டுமல்லாது, நல்ல யோகங்களைச் செய்தாலும் அவ்வாறேயுண்டு. இதனால் உங்களுக்கு விரக்தி நிலைகள் ஏற்படலாம்.

மத்திம வயதான 30 முதல் 40 வயதிற்குள் மர்ம ஸ்தான நோய்கள் ஏற்பட வாய்ப்புண்டு. ஜலத்திற்கு நீங்கள் எப்பொழுதும் அஞ்ச வேண்டும்.

இந்த இராசியில் பிறந்த 2, 3, 4ஆம் பாத கார்த்திகை நட்சத்தினருக்குப் பதஞ்சலி மகரிஷி பலன்களைக் கூறுகின்றார்:

"மெய்யில்லை இவ்வுலகில் இல்லையென்று
மேட்டுக்குடி ராசன்போல் வீற்றிருப்பான் !
மெய்யான சாஸ்திரமும் பொய்யென்று
மைந்தனிவன் முன்கூறி பின்னடைவான்"

என்றபடி புராணங்கள், இதிகாசங்கள் ஆகிய அனைத்தும் பொய்யென்றும் கூறி, முன்வாழ்வில் தடுமாறி நாத்திகனாகவே வாழ்வார்கள்.

ஒவ்வொரு விஷயங்களிலும் நம்பிக்கையற்று விகடமாகவும், விரக்தியாகவும் அடுத்தவரிடம் சுட்டிக்காட்டிப் புறம் பேசிக் கொண்டிருப்பார்கள். உயர்ந்த குடியில் பிறந்தவர்களைப் போல் பகட்டாய் வாழும் வாழ்க்கை முன்வாழ்வில் உண்டு. இவர்கள் கபட

வேஷங்களும் போடுவார்கள். ஆனால், பின்வாழ்வில் தெய்வ நம்பிக்கையோடும், புராணங்களைக் கையில் வைத்துக்கொண்டு, குருமார்களை அண்டி ஆத்திகனாக இருப்பார்கள்.

இவர்களுக்குப் பொன், பொருள், சுகவர்க்கம் அனைத்தும் எதிர்பாராத விதமாகவே வரும்; அதே வேகத்தில் திரும்பிவிடும்.

பரத்தைகள் எனப்பட்ட தாசிகளின் சிநேகம் சில கட்டங்களில் அதிகமாக உண்டு.

"மெத்தவரும் கேடேதான் அங்குவரும்
மேவியதன் மணலதனில் குழியிருக்கும் !
உத்தமனே பொற்கலயம் ஒட்டைசெய்வான்
உள்ளதொரு இதுசூக்ஷ்மம் புரிந்து வாழே"

இது போல் மேடான மணலைப் போல் இருக்கும் ஆடம்பரங் களையும், பகட்டையும் நம்பக்கூடாது. உள்ளே பாதாளமான குழிகள் இருக்கக்கூடும் - அதாவது, கீழ்த்தரமான எண்ணங்களுடன் மனிதர்களும், மற்ற வகைகளும் இருக்கும். இராசியாதிபதி சுக்கிரன் ஏதாவது யோகங்களைச் செய்தால், பொன்கலயத்தையும் கொடுத்து, அதனுள் ஒட்டையிட்டும் கொடுப்பார். நாம் எடுப்பதற்குள் ஒட்டை வழியே சிந்தி வீணாகிவிடும்.

"உண்டப்பா விகட விநோத வித்தைகள்
உரைக்கமேல் களிக்கூத்து மெத்தநலம்
கண்டதொரு நண்டுபாய்ச்சல் தானாகும்
கருமமே கண்ணானால் பலனுந்தானே"

இதுபோல், கார்த்திகை நட்சத்திரத்தில் பிறந்தவர்களுக்கு விகட, விநோத வித்தைகள் அதிகமாயிருக்கும். தம் பேச்சு வயத்தாலே அடுத்தவரிடம் காரியத்தைச் சாதிக்கும் நிலை அதிகம் உண்டு. நண்டு எப்படி முன்னும் பின்னும் பக்கவாட்டிலும் சென்று நிலையில்லாது செல்லுமோ, அது போல், இவர்கள், மனம்போன போக்கில் அலைய வேண்டியிருக்கும்.

ரோகிணி நட்சத்திரத்தில் பிறந்தவர்களின் முகம், ரிஷப முக அமைப்பில் அமைந்திருக்கும். இவர்களுக்கு நண்பர்கள் சகவாசம் அதிகம். இவர்கள் ஏழையரோ உயர்குடியினரோ, இவர்கள் வாழ்வு

புரியாத புதிராய் இருக்கும். பெண்களின் சகவாசம் அதிகம் உண்டு. ஒவ்வொரு காரியத்திற்கும் காரணம் கற்பிப்பார்கள்.

"உண்டேதான் பெருதனங்கள் உண்டுசெய்வர்
உள்ளவரும் கடல்கடந்து தேசம் செல்வர்!
கண்டேதான் திரவியங்கள் மிகுந்ததாகும்
குமரனுக்கு இதனாலு மிடர்தானே."

ரோகிணி 1-இல் பிறந்தவர்களுக்குப் பெரும் பொருள்கள் சம்பாதிக்கக்கூடிய திறன்களும், கடல் கடந்து திரவியங்கள் சேர்க்கும் ஆவலும், அதே போல், சென்று மீண்டு வருதலும் உண்டு. ஆனால், இதனால்தான் உயிர்ப்பயமும் சொந்தபந்தங்களிடையே சச்சரவுகளும் உண்டு. சம்பாதித்த சொத்துகளைக் காப்பாற்றுவதில் கவனம் இல்லையாயின் மற்றவர்கள் அவற்றை அபகரிக்கக்கூடும்.

"தானதுவாய் ஸ்திரீ போகம் மெத்தவுண்டு
துலக்கமில்லை அடிமைவகை கர்மமாகும்
ஆனதொரு ஊர்க்குருவி போலேதான்
அறியவே அண்டியே வாழ்வார் தானே"

ரோகிணி 2, 3இல் பிறந்தவர்களுக்கு ஸ்திரீ போகங்களில் மூழ்கியிருக்கும் நிலை அதிகம் உண்டு. பின்பு, தெளிவுடனே இருப்பார்கள். கலை ஈடுபாடு அதிகம் உண்டு. சுயவேலைகளில் நாட்டமிராது. அடுத்தவர்களிடம் கைகட்டிச் சேவகம் செய்யும் வாய்ப்பு அதிகமிருக்கும். எவரையேனும் அண்டியிருந்துதான் இவர்கள் வாழ்வு நலம் பெறும்.

வாழ்வு சீராகச் சென்றுகொண்டிருந்தாலும் திடீர் தன பிராப்தி உண்டு.

"ஆகுமப்பா வேசியொடு ஒட்டுறவு
அறியக்கேள் ரோகமுண்டு பயமுமுண்டு!
வாகான கபடங்கள் செய்யலாகும்
வறுமையில்லை மத்திமமும் பலனுண்டு!"

என்றபடி, பெண்கள் விஷயங்களிலும், அவை சம்பந்தமாய் ஏற்படும் நோய்களிலும் என்றும் கவனமாயிருத்தல் வேண்டும்.

இந்த ரிஷப இராசிக்காரர்களுள் ரோகிணி 4ஆம் பாதத்தில் பிறந்தவர்கள் அரசியலிலும், பேச்சு மேடைகளிலும் அதிகமாக ஈடுபட விதியுண்டு. இந்தத் துறை அதிகமாகக் கிட்டும். அடுத்தவர்களின் பொருளில் ஒரு கண் வைத்தவாறே இருப்பார்கள்.

"கட்டமப்பா மாற்றானின் திரவி யத்தில்
கருத்துடனே கண்ணுமது வைக்கத் தோன்றும்
திட்டமாய் முன்போலே யிருந்திட்டாலே
துலங்கவரும் வாழ்வதுவும் மெய்யாய்த் தோன்றும்."

என்பது போல், சில கால கட்டங்களில் அற்ப எண்ணங்களும், அடுத்தவரைப் பார்த்துப் பொறாமை போன்ற குணங்களும் ஏற்பட்டாலும் அவற்றைத் தவிர்க்க முயல வேண்டும். கருமமே கண்ணானால் அதிகமான பலனுண்டு. இது இப்படியிருக்க, இதே ரிஷப இராசியில் மிருகசீரிடம் 1, 2இல் பிறந்தவர்கள் மற்ற இராசிக்காரர்களைவிட நல்ல வாழ்வு வாழ வேண்டிய விதியுண்டு. ஆனால், பொல்லாத கோபங்கள் வரும். அதனாலே இல்லத்தாரிடையே சண்டைகள், சச்சரவுகள் போன்றவை ஏற்படுவதில் ஐயமில்லை.

"மெத்தமேல் சத்ருவும் பங்கமுண்டு
மெல்லவே செயலதுவும் செய்யலாகும் !
உத்தமமாய் களத்திரமும் தோசமுண்டு
உரைக்கமேல் ஒன்றுபலன் ஒன்றிடரே !"

இந்த நட்சத்திரத்தில் பிறந்தவர், குறிப்பாக, மிருகசீரிடத்தில் 1ஆம் பாதக்காரர்களுக்கு இருதார விதியுண்டு. அம்மனைவியருள் ஒருத்தி குணமுள்ளவளாகவும், மற்றொருத்தி அதம குணமுடைய வளாகவும் இருப்பார்கள். இவர்கள் பெண்களிடம் கவனமாய் இருத்தல் வேண்டும். இடம் கொடுத்தால் பெண்கள் ஆளையே விழுங்கிவிடுவார்கள். அப்புறம் எவ்வளவு முயன்றாலும் உறவைத் துண்டிக்க முடியாது.

"அப்பனே ஆற்றில் ஒன்று சேற்றிலொன்று
அகப்படாத மீனும்வரும் முதலைவரும்
தப்பினாலே கெண்டமது தாண்டினாலே
தனபனுக்கு வாழ்வான வாழ்வுதானே."

இவர்கள் தங்கள் மத்திம வயதில் பலவாறாய் இடர்களைச் சந்திக்க வேண்டியிருக்கும். அங்கும் இங்குமாய் அலைவார்கள். அந்த வயதில் சில கண்டங்களைத் தாண்டினால் வாழ்வு நன்மையானதாய் இருக்கும். இவ்வாறாய்க் கார்த்திகை, ரோஹிணி, மிருகசீரிடம் ஆகிய பாதங்கள் கலந்த ரிஷப இராசிக்காரர்கள், நல்ல நீரோட்டமான வைரக்கல்லினைப் பஞ்சகௌவியத்தால் சுத்தி செய்து, அதனை வளர்பிறை வெள்ளிக்கிழமை சூரிய உதயத்திற்கு முன் பிரம்ம முகூர்த்த நேரத்தில் அணிந்தால் அவர்களுக்கு நல்ல பலன்களும் ஐஸ்வரியங்களும் உண்டாகும். அவ்வாறு செய்ய வசதியில்லாதவர்கள், வெள்ளியில் நட்சத்திர உருவம் செய்து அணிந்தால் அதே பலன்கள் கிடைக்கும். இராசியாதிபதி சுக்கிரனின் அருள் கிட்டும்.

சுக்கிரன் 6, 8, 12ஆம் வீடுகளைத் தவிர ஆட்சி வீடான ரிஷபத்திலும், நட்பு வீடுகளிலும் நல்ல சுபபலன்களைச் செய்வார். 8ஆம் இடமான தனுசிலும் 12ஆம் இடமான மேடத்திலும் மத்திம பலன்களைச் செய்வார். சுக்கிரன் கன்னியில் நீசமானாலும் திசை புத்திகளில் கடுமையான துர்பலன்களையே செய்வார் என்பதாம். நீசபங்க இராஜயோகம் ஏற்பட்டாலும் யோக பலன்களைக் கொடுத்துப் பின்னால் பிடுங்கிவிடுவார்.

## இராசியாதிபதி சுக்கிரன் கிரகாதிபத்தியங்கள்

சுக்கிரன் ரிஷபத்திலாவது, துலாம் வீட்டிலாவது ஆட்சி பெற்றால் கால்நடை வர்க்கங்களும், நல்ல நிகழ்ச்சிகளும், பரிமளாதி வஸ்துகளுடன் கூடியிருத்தலும், ஆடை ஆபரணப் பகட்டும் அதிகமாய் உண்டு. வாகனங்கள் வாங்கலாம். குடும்பநலம் நன்றாயிருக்கும்.

சுக்கிரன் மீனத்தில் உச்சம் பெற்றால் அயல்நாடு செல்லுதல், நயனத் தொந்தரவு இருந்தால் நீக்குதல், நல்ல போகபாக்கியங்கள், அடுத்தவருக்குத் தானஞ்செய்தல், விட்டுக் கொடுத்தல், சதா சர்வ காலமும் புதிய ஆடை, ஆபரணங்களை அணிதல் போன்றவை ஏற்படும்.

சுக்கிரன் யாதேனுமொரு நட்புக் கிரக வீட்டில் நட்புப் பெற்றால் நல்ல ஐஸ்வரியங்களும், செவ்வாயோடு சேர்ந்தால் பின்லாபங்களும்,

உட்கார்ந்துகொண்டே தனம் பார்த்தல், ஸ்திரீபோகம், திருமகள் வாசம் போன்ற நல்ல நிகழ்வுகளும் வாய்க்கும்.

சுக்கிரன் கன்னியில் நீசமடைந்தால் மனைவியுடன் சண்டை, பெண்களால் வெறுக்கப்படுதல், கண்களில் நோய், மர்மஸ்தான நோய், சுக்கில வறட்சி, பலவீனம், தலை, வெள்ளை நரையாதல், வாகன பயம், அந்நிய தேசங்களிலிருந்து விரட்டப்படுதல், பித்த ரோகம் போன்றவை ஏற்படும். மேலும், சுக்கிரன் இராசிக்கோ, இலக்கினத்துக்கோ எந்த வீட்டின் அதிபதியோ, அத்தனையாவது வீட்டின் காரகப் பலன்களைக் கெடுப்பார் என்பதாகும்.

சுக்கிரன் பகை பெற்றால் எந்த விஷயத்திலும் படபடப்பு, எதிரிகள் வலுத்திருத்தல், சத்ரு பயம், தொழில்நட்டம் போன்றவை நடைபெறும்.

ரிஷப இராசிக்காரர்களே! அசுர குரு உங்களுக்கு இராசியாதிபதியாய் இருப்பதால், இராசியாதிபதி பலன்கள் வேகமாகவே வரும். ஆனால், வந்த வேகத்தில் பிடுங்கிவிடுவார். அதனால் சுக்கிரனுக்குக் காரக சாந்திகள் செய்து - அதாவது, சுக்கிர தேவருக்கு மொச்சையில் படையல் செய்து - வணங்கியும், மகாலட்சுமியை வெண்டாமரை மலரால் அர்ச்சித்தும், இலவங்க மரப்பட்டை, அத்திமரச் சமித்து ஆகியவற்றால் ஹோமம் செய்தும், இராசியாதிபதி சுக்கிரனுடைய பலன்களைப் பெறலாம். சுக்கிரன் ஒரு மாதத்திற்கு ஒருமுறை ஒவ்வொரு வீட்டையும் சுற்றுவார். ஒரு வீட்டைத் தாண்ட 30 நாள்கள் ஆகின்றன. அப்படி ஒவ்வொரு வீட்டிலும் மேற்சொன்ன பலன்களே நடக்கும் என்று பதஞ்சலி மகரிஷி கூறியுள்ளார்.

## மிதுனம்
## முதல் பாவம்

**சீரிடமும் முன்னான்கு ஆதிரையும் புனர்வசுவில்**
**சார்புடனே முன்மூன்று பலன்மேவ**
**ஓரிடத்தில் நின்றாலே மைதுனமாகும்**
**உள்ளத்தால் ஆண், பெண்டிர் கூடுமிடம்!**

இடமதுவே களத்திர பிரியனாவான்
இயம்பவே காயாம்பு மேனியவன்
திடமான மனமொத்து துணிவுநிலை
துன்பமுண்டு துயரம்மேல் லாபமுண்டு.

உண்டப்பா உயர்வான அங்கங்கொண்டோன்
உரைக்கவரும் சூக்குமத்தை மறைப்பான் பாரே!
கண்டதொரு இடமெல்லாம் தந்திரம் கெலிக்கக்
கருத்தான கபடுமெத்த கனவிலேதான்!

தானதுவே நனவாக்கத் திட்டம் செய்வான்
தனயனுக்கு நகைப்புமது மெத்தவுண்டு!
ஆனதுமோர் தெய்வநிலை ஐக்கியங்கள்
அறியக்கேள் தீர்க்கமாகத் தானிருக்கும்!

இருக்குமது முப்பாலும் அகவைமேல்
இயம்பவரும் மைந்தனுக்கு லாபமாகும்!
வருமேதான் பலன்மேலும் தக்கவைக்க
வையகத்தில் வாழ்வான வாழ்வு பாராய்!

பாராயே வருபெண்டால் குணநலமும்
பகரமேல் குணவதியால் இனியானே!
காரணமாய்க் கோபமுண்டு தாபமுண்டு
கருத்துடனே நடக்கத்தான் விதிமெத்த

மெத்தவரும் மைந்தனுக்கு வடக்கேதான்
மேவும்நல் பலன்கள்மெத்த அனேகமாக
மத்திமமாய் முன்வாழ்வு இருந்திடினும்
மங்கையாலே வாழ்வுபெற வல்லான் காண்!

காணவரும் கண்டநோய் பித்தநோய்
கருத்தான மைந்தனுக்கு வருமேதான்!
கோணவே வாததேகம் உட்சூடு
குமரனுக்கு அவிழ்தமதால் தீரும்பின்னே!

பின்னவரும் வாழ்வுநிலை எழுத்தாதி
பகரமேல் பணிமெத்த உபமார்க்கம்

கண்டதொரு மற்றபணி உபயமாயே
காட்டலாம் முன்கோபம் அதிலுமுண்டு!

உண்டப்பா கோபுரமாய் உண்டெனினும்
உரைக்கவரும் அடித்தளமும் பலன்மெத்த!
கண்டதொரு எண்பானும் அகவை மேலாய்
குமரனவன் பூவுலகில் இருப்பான்தானே!

## விளக்கம்

அன்பும், பண்பும் நிறைந்த மிதுன இராசிக்காரர்களே! மாநிறமான தோற்றத்தில், நீண்டு உயர்ந்து, வளர்ந்து, நீண்ட கண்டத்தினையுடையவர்களாய் இருக்க விதியுண்டு.

இரகசியத்தை இரகசியமாய் வைப்பதில் உங்களுக்கு நிகர் எவருமில்லை. யாரிடமும் தனிப்பட்ட முறையில் பேச விருப்பப் படுவீர்கள். தந்திரமாகவும், அதே சமயத்தில் காரியத்தைத் தீர்வாக முடிப்பதிலும் கை தேர்ந்தவர்களாய் இருப்பீர்கள். சூழ்ச்சியைப்பற்றி மனத்தினில் கற்பனை நிறைய உண்டு. மனச்சாட்சி தடுத்தாலும் அதனைச் செயலாற்றும் துணிவும் உண்டு. வாழ்க்கையைச் சூசகமாக ஓட்ட நினைப்பீர்கள்.

உங்கள் இராசிகளில் பெரும்பாலும் 30 வயதிற்கு மேல்தான் பலன் அதிகம். அதற்குப் பின் கோபுரத்தின் உச்சியில் இருக்கும் நிலையுண்டு. எழுத்து வகையான துறைகளிலும், கணித வகைத் துறையிலும் அதிகமான ஈடுபாடு உண்டு. அந்தத் துறையில் முன்னிலை வகிப்பீர்கள். மற்ற தொழில்கள் உபதொழில்களாகவே இருக்கும், எவ்வளவு துக்கங்கள் வாழ்வில் இருந்தாலும் அவற்றை வெளிக்காட்ட மனம் இராது. மற்றபடி, ஆச்சார அனுட்டானங்கள் தெய்வ பக்திகள் அதிகமாய் இருக்கும்.

உங்கள் இஷ்ட தெய்வத்தின் பூரண அருள் உங்களுக்கு எப்போதுமே உண்டு. பெரும்பாலும் உங்கள் இராசிக்காரர்கள் 30 வயதிற்குள் அந்த வெற்றியை அடைந்துவிடலாம் என்று ஒவ்வொரு துறையிலும் முன்னேற நினைத்தாலும், முக்கினாலும் முனகினாலும், 30 வயதிற்கு மேல்தான் பலன்கள் உண்டு. அதற்கு மேல் அந்த

வெற்றி உங்கள் கையில்தான். நல்ல பலன்கள் உண்டு. அந்தக் காலகட்டத்தில் நல்ல அனுபவத்தைப் பெற்றிருப்பீர்கள்.

உங்கள் இராசியாதிபதி புதனுக்குக் கிரக அதிபதி, திருமால். அவருக்குப் பூசைகள் செய்து வந்தால் நல்ல பலன்கள் கிடைக்கும். திருமணம் உங்களுக்குச் சற்று தாமதமாகவே நடைபெறும். அதைப்பற்றி அவ்வளவு கவலையிராது. அந்தக் காலத்தில் எடுத்த முயற்சியிலேயே கவனத்தைச் செலுத்துவீர்கள். வரக்கூடிய பெண் நல்ல குணவதியாகவும், அழகுடனும், தெய்வக்கலை பொருந்தியு மிருப்பாள்.

உங்களுக்குக் களத்திர தானதிபதியும், பத்தாமிடமான தொழிலதிபதியும் குருவேதான். குருவானவர் ஆட்சி வீடுகளிலோ, உச்ச வீடான கடகத்தில் இருந்தாலோ, வரக்கூடிய மனைவியினால் யோகமும், தொழிலும் ஏற்படும். அப்படி வரக்கூடியவள் பொன், பொருள், திரவியங்களுடன், நல்ல மனைகள், சகோதரர்களுடன் இருப்பாள் என்று காண்ட நூல்கள் கூறுகின்றன.

உங்களுக்குத் தொண்டை சம்பந்தமான நோய்களும், பித்தப்பை கற்கள் மற்றும் கிறுகிறுப்பு நோய்களும் உண்டு. வாததேகமாகவும், உட்சூடு அதிகமாகவும் இருக்கும். வெளியே தெரியாது. இதனால் நீர்க்கடுப்பு, நீர் வியாதிகள் ஏற்பட ஏதுவாகும். உங்கள் இருப்புக்கு வடக்கில் என்றுமே இலாபமுண்டு. நல்ல வரவேற்பும் உண்டு. உங்கள் இராசியில் மிருகசீரிடம் 3, 4ஆம் பாதங்களில் பிறந்தவர்களுக்கு மகரிஷி பதஞ்சலி பலன் கூறுகின்றார்.

"துக்கமில்லை சீரிடமும் மூன்று நான்கு
துயர்மேலே துயரங்கள் வந்திட்டாலும்
பக்கமாய் வெய்கண்ட பனிபோலே
பலமேதான் இட்டதெய்வ பலனுமுண்டே"

என்பது போல, இஷ்ட தெய்வத்தின் அருளும், பலன்களும் அதிகமாய் உண்டு. உங்கள் துயரங்கள் உங்கள் இஷ்ட தெய்வத்தினாலே விலகும். பல காரியங்களில் உறுதுணையாய் நிற்கும். நல்ல அறிவு குணயூகங்களோடு இருப்பீர்கள். வரக்கூடிய பெண்ணின் அனுசரணையும் உண்டு.

திருவாதிரை 1ஆம் பாதத்தில் பிறந்தவர்கள்

"மெத்தமேல் திரவியங்கள் சேர்க்கலாகும்
மோகித்தே இளகினாலே போச்சதாகும்
சத்தியமே பெருபலனும் பெற்றிருப்பான்
சான்றோனின் அருளினாலே வாழ்வான் பாரே"

இவ்வாறு பலன்கள் இருந்தும், உங்களுக்கு அஹிம்சைக் குணங்கள் பொதுவாகப் பிடிக்காது. பெண்களிடம் அதிகம் இரக்கப்படுவீர்கள். அப்படி இரங்கி எதையாவது கொடுத்தாலும் அதனால் உங்களுக்குத் தொல்லைதான் அதிகம்.

இந்தத் திருவாதிரை 2ஆம் பாதத்தில் பிறந்தவர்களுக்குப் பந்துக்களின் ஆதரவு அதிகம் இருந்தும், அவர்களைக் காரணத்தோடு வெறுத்து ஒதுக்குவார்கள். சில சமயங்களில் பிடிவாதமும், வீணான முரண்டு குணங்களும் உண்டு. அவற்றைச் சமய சந்தர்ப்பங்களில் பயன்படுத்தினால் நல்ல பலன்கள் கிடைக்கும்.

திருவாதிரை 3, 4ஆம் பாதங்களில் பிறந்தவர்களுக்குத் துறவற குணம் அதிகம் உண்டு. இல்லறத்தை வெறுப்பர்.

"வேண்டிதொரு புலையன்போல் தானிருப்பார்
வெறுப்பில்லை அத்துணையும் இருந்துமேதான்
ஆண்டிபோல் அலைந்துபொருள் சேர்ப்பான்
அறிவான ஸ்திரீகளுமே தூசிப்பாரே."

இவ்வாறு வாழ்க்கையே வெறுத்தது போல் கோலம் பூண்டாலும், பொருள் சேர்க்கும் எண்ணங்கள் உண்டு. பெண்கள்கூடச் சில சமயம் வெறுக்கும் நிலை உண்டாகும். அடுத்தவர்களுக்குப் பார்க்கப் பைத்தியக்காரன் போல் தெரிய வேண்டுமென்றும், தன்னை யாரும் புரிந்துகொள்ளக்கூடாது என்றும், தன்னைத்தானே தாழ்த்திக் கொண்டும் இருப்பீர்கள்.

இதே மிதுன இராசியில் புனர்பூசம் 1, 2, 3-ஆம் பாதங்கள் உண்டு. இவற்றில் பிறந்தவர்கள் என்றும் உண்மையானவர்களை அறிய விதியிருக்காது. நம்பி மோசம் போய் அவர்களைத் தூசிப்பார்கள் என்று ரிஷி கூறுகின்றார். உங்களுக்குத் தோல் நோயையும், நீருபாதைகளையும் உண்டு பண்ணும். வாழ்வில்

மற்றவர்களைவிட நன்றாகவே இருப்பீர்கள். கனத்த சரீரம் உண்டு. அதனால் நோயும் சில கட்டங்கள் வந்து செல்லும்.

"புனர்வசியும் ஏகம் தோகம் சூலமதில்
புகழான வாழ்வுமுண்டு புசிப்புமுண்டு !
கனமான தூலமுண்டு நோயுமுண்டு
கருத்தான கண்களையே நம்பிடாரே !"

ஒரு காரியம் செய்வதற்கு ஆயிரம் யோசனைகள் செய்வீர்கள். அடுத்தவரின் பேச்சைக் கேட்டு வீணாய்ப் போகச் சில காலம் உண்டு. எப்போதும் தான் தரித்திரியப் பட்டது போல் எண்ணித் தன்னைத்தானே வருத்தும் நிலைகளும் உண்டு. நீங்கள் 30 வயதிற்குள் படாத கஷ்டமில்லை எனலாம். பிணபலன்கள் அனேகமுண்டு. காத்திருந்து கடைசியில் காப்பாற்ற முடியாத நிலையும் சில வகையில் உண்டு பண்ணும்.

மிதுன இராசிக்குப் பாதபலன்கள் வெவ்வேறாய் இருந்தாலும், சில செயல்கள் ஒன்றாகவே இருக்கும். உங்களுக்கு 80 வயதுவரை விதி தீர்க்கமுண்டு என்று காண்ட நூல்கள் கூறுகின்றன.

உங்கள் இராசியின் அதிபதியான புதனுக்கு நவரத்தினத்தினுள் ஒன்றான பச்சைக் கல் வாங்கி, அதைப் பஞ்ச கௌவியத்தால் சுத்தி செய்து கணையாழியில் அடைத்து, மகாவிஷ்ணு மூர்த்தி முன் வைத்து, வளர்பிறை புதன்கிழமை சூரிய உதயத்திற்கு முன் எடுத்தணிய, சகல ஐஸ்வர்யங்களும் கிட்டும்; சகல பாபங்களும் போகும்.

### இராசியாதிபதி புதனின் கிரகாதிபத்தியங்கள்

புதனானவர் மிதுனத்திலோ, கன்னியிலோ ஆட்சியானால் பேச்சு வன்மைகளும், தர்க்கங்களில் வெற்றி, காரிய ஜெயம், குடும்ப நன்மைகள், சொந்தபந்தங்கள் சேர்க்கை போன்றவை ஏற்படும்.

புதனானவர் கன்னியில் ஆட்சி உச்சம் அடைந்தால், முன்சொன்ன பலன்களுடன் தேவ ஆராதனை, ஞானங்கள், கீர்த்திகள், வித்தையில் தேர்ச்சி, கலையை இரசித்தல் போன்ற பலன்களை ஏற்படுத்துவார். மனைகள், வீடுகள் கட்ட விதிகள் அதிகம் உண்டு.

புதன் யாதொரு வீட்டிலும் நட்புப் பெற்றால் புதுமனை குடிபோதல், விதை விதைத்தல், கால்நடைகள் வாங்குதல், அச்சாரமிடுதல், எழுத்து வேலைகள், கணிதக் கெலிதம் போன்ற பலன்கள் நடைபெறும்.

புதன் மீன வீட்டில் நீசமானால், சதா ஸ்திரீ போகம், தொண்டை நோய்கள், வாய்வு ரோகங்கள், இயலாமை, பலவீனம் போன்ற கேடுகளும் ஏற்படும். சொந்தபந்தங்கள், எதிர்ப்பும், மேலதிகாரிகள் முன்விரோதமும் ஏற்படும்.

புதன் பகை பெற்றால் சொந்தபந்த விரோதங்களும், தோல் நோய்களும் சரீர வறட்சியும், துறவறத்தனங்களும், சரீர பீடைகளும் ஏற்படும்.

இராசியாதிபதி புதனின் நற்பலன்களைப் பெற ஸ்ரீமந்நாராயண மூர்த்திக்குத் துளசியால் அர்ச்சனையும், நாயுருவி சமித்துகளால் கற்பூரமிட்டு வேள்விகளும், வடக்கு நோக்கித் தியானமும் செய்தாலும், சுதர்ஸன ஹோமங்கள் செய்தாலும் நல்ல பலன்கள் கிடைக்குமென்று பதஞ்சலி மகரிஷி காண்ட நூல்களில் கூறியுள்ளார். மிதுன இராசிக்காரர்களே, இதன்படி தெய்வ அனுக்கிரகத்தைப் பெற்று, வாழ்வில் நலம் பெற வேண்டுமாய் வேண்டுகின்றோம்.

## கடகம்
## முதல் பாவம்

குமரனவன் நண்டதனில் தான்தோன்றின்
குறிப்பான சலசலப்பு குணமெத்த
சமரில்லை உயர்ந்தோனாய்ப் பகட்டுக் காட்டி
சொன்னசொல் திரும்பவே புரைப்பான்காண் !

காணவரும் களத்திரமும் நன்றதாகும்
காந்தனவன் போகப்பிரியன் அட்டியில்லை
ஆனதொரு சிலவுகளும் திட்டமிட்டே
அறியக்கேள் கருமியாகத் திரிவான்பாரே !

பாரேதான் அனுக்கிரகம் மெத்தவுண்டு
பகரவரும் புறம்பேசும் குணம்மெத்த
சார்புடனே உள்ளொன்று தான்வைத்துச்
சான்றோரை மதியாமல் நடப்பான்தானே !

தானேதான் தன்னுள்ளே பயம்சிலவும்
தனயனுக்குத் தன்குடும்ப வழியிலேதான்
ஆனதொரு மைந்தனுக்கு வயிற்றுநோயும்
அல்லலேதான் குன்மநோய் செய்யக்காட்டும் !

காட்டவரும் பெற்றதன் மைந்தனுமே
கருத்தான மைந்தனுக்குச் சத்ருவாய்
தாட்டியமாய் பல்லிடரும் தான்செய்வான்
தன்மையான பந்துக்களும் தூசிப்பாரே !

தூசிப்பாரே துயரமதும் அங்குமாகும்
துன்பமான வாழ்வுதனை வாட்டலாகும் !
பேசியே கொல்லுகின்ற மானிடராய்
புகழான மைந்தனுக்கு விதிதீர்க்கம் !

தீர்க்கமொடு சிரசுதொந்தம் சிலவாறாய்த்
தனயனுக்குச் சிலகட்டம் தான்காட்ட
மூர்க்கனுமே முசலுக்கும் மூன்று காலாய்
மைந்தனிவன் நின்றிருப்பான் பிடிவாதத்தோடே !

தோடநிலை முன்னூழில் தான்மெத்த
துயரங்கள் துன்பங்கள் கலந்து காணும்
ஆடவரும் வாய்சாலம் கெலிக்குமேதான்
அடங்கினால் அத்துணையும் வீணாய்ப்போச்சு !

போச்சேதான் சத்ருகள் மைந்தனுக்குப்
பொருத்தேதான் இடர்காட்ட விதிமெத்த
மூச்சேதான் நிற்கும்வரை பலனுண்டு
மைந்தனுக்கு எண்பானும் விதிதீர்க்கம் !

## விளக்கம்

தேவி பராசக்தியின் திருவருளைப் பெற்ற கடக இராசி அன்பர்களே!

பேச்சே, உயிர் மூச்சாய்க் கொண்டவர்கள் நீங்கள். யார் எது சொன்னாலும் அதற்கு விளக்கம் சரியானபடி அளிப்பீர்கள். அல்லது சரி, தவறென்று நிரூபிக்கும் குணமும் உண்டு. "நெற்றிக்கண் திறப்பினும் குற்றம் குற்றமே" என்று கூறிய நக்கீரரைப்போல், தாம் சொல்லுவதுதான் சரியென்று கடைசிவரை வாதிடும் குணம் உங்களின் இயற்கையான குணம். பொதுவாக, கடக இராசியில் பிறந்தவர்கள் ஏழையோ, பணக்காரரோ, தம் சுய கௌரவத்தை ஒரு போதும் விட்டுக்கொடுக்க மாட்டார்கள். சில சமயம், வறட்டுக் கௌரவத்திற்கும் அது இடமளிக்கும். வீர தீர பிரதாபங்களையும், தாம் பட்ட கஷ்டங்களையும், அடுத்தவரிடம் கூறிக்கொள்ளும் குணமும் இருக்கும்.

உங்கள் மனைவி நல்ல குணவதியாகவும், அதே சமயம் உங்களுக்கு எதிரான குணங்களையும், கருத்துகளையும் உடையவளாகவும் இருப்பாள். இதனால் குடும்பங்களில் வில்லங்கம், விவகாரம் ஏற்படும். என்பதில் ஐயமில்லை. நீங்கள் சகல சாஸ்திரங்களையும் கற்றவர்கள். ஆனால், அதன்படி நடக்க விதியில்லை.

உங்களுக்கு அதிகமாகச் செலவு செய்யும் குணமில்லை. சிக்கனமாக வாழ வேண்டுமென்று விரும்புவீர்கள். சேமிக்க விரும்பினாலும், பணம் எங்கே போகும் என்று உங்களுக்கே தெரியாது. அதை நினைத்துப் புலம்ப வேண்டியிருக்கும். வீண் விரயங்களும் அதிகம் ஆகும்.

மற்றபடி சுக, போக பாக்கியங்கள் அனைத்துமுண்டு, ஆனால், ஓரிடத்தில் நிலையாக இருக்க வேண்டுமென்றால் அது கட்டாயம் முடியாது.

உங்களின் இராசியாதிபதி சந்திரன் பாதி நாள் வளருவார், பாதி நாள் தேய்வார். உடல் அதிபதியும் அவரே. அதேபோல், உங்களுக்கு உடல்நிலை காரணமில்லாமல் நலம் குன்றும். பின்பு சரியாகிவிடும். பெண்களிடம் மரியாதையாக இருக்க வேண்டுமென்று நினைப்

பீர்கள். அந்த அளவு சிலரைக் கண்டால் மதிக்காமல் அவமரியாதை செய்ய வேண்டியதுவரும். பொதுவாக, எந்த விஷயங்களிலும், நம்பிக்கை வருதற்கு நாளாகும். பொதுவாக, முன்வாழ்க்கையானது நாத்திகமாகவே இருக்கும்; பின்பு, வாழ்வின் அனுபவங்களால் ஆத்திகனாய் மாறவேண்டிய சூழ்நிலைகள் வரும். பின்வாழ்வு பெரும்பாலும் ஆன்மிகத்தையே தழுவி நிற்கும். உங்களுக்குக் குடும்பங்களைப்பற்றிய கவலைகள் அதிகமாயிருக்கும். அவற்றை நினைத்துச் சதா வருத்தப்பட்டாலும், உங்களின் புத்திரர்கள் உங்களை மதிக்காமல் தன்னிஷ்டப்படி நடப்பார்கள். அவர்களை நினைத்து அதிகத் துன்பப்படுவீர்கள். அதை விதியென்று எண்ணி மௌனமாய் இருப்பீர்கள்.

உங்களுக்குச் சிரசு நோய்கள் கண்டிப்பாக உண்டு. கண்ணில் நீர் வடிதலும், கண் கோளாறும் அதிகத் தொந்தரவு செய்யும். சொந்தபந்தங்களை அவ்வளவாக விரும்புவதில்லை. அவர்களிடம் பொய்யான அன்பை மட்டும் வெளிப்படுத்தத் தோன்றும். பொதுவாக, அடிமைத் தொழில்களே அதிகமாயிருக்கும், சுய தொழில் செய்ய மனம் விரும்பும். ஆனால், பெரும்பாலும் தடைப்பட்டுக்கொண்டேயிருக்கும்.

மற்றவர் புரிந்துகொள்ள முடியாதபடி உங்கள் செயல்கள் ஒவ்வொரு சமயமும் ஒவ்வொரு விதமாய் இருக்கும். எப்போது குணம் மாறும் என்று யாரும் புரிந்துகொள்ள முடியாது.

படபடவென்று பேசும் குணமும், பேசினால் பேசிக்கொண்டே இருத்தலும் உங்கள் இயல்பாகும். அதனை விட்டால் அனேக துன்பங்கள் நேரும்; அடுத்தவர்களின் ஏச்சையும் பேச்சையும் கேட்க வேண்டியிருக்கும்.

உங்களின் எதிரிகள் உங்களுக்கு உடனடியான துன்பத்தைக் கொடுக்க மாட்டார்கள்; சிறுகச் சிறுக வேதனைப்படுத்துவார்கள். சில கட்டங்களில் ஏன் பிறந்தோமென்று நினைக்கத் தோன்றுகிற வேதனைகளும் வாழ்வில் அனுபவத்தில் ஏற்படுவது உண்டு. ஆன்மிக உணர்வாலும், பக்தி மேலீட்டாலும் மாற்றியமைக்கும் விதி உங்களுக்கே உண்டு.

கடக இராசியில் புனர்பூசம் 4ஆம் பாதமும் பூசம், ஆயில்யம் நட்சத்திரமும் உண்டு.

இந்தப் புனர்பூசம் 4ஆம் பாதத்தில் பிறந்தவர்களுக்கு நீதி, நியாயங்கள் மனத்தில் இருந்தாலும், அவற்றைச் செயல்படுத்த முடியாது. ஒருவரின் பேச்சினைக்கொண்டே அதை மெய்யா பொய்யா எனக் கண்டுகொள்கின்ற திறனுமுண்டு. பூச நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் பிஞ்சிலே பழுத்தது போல், இளமையிலேயே அறிவு முதிர்ச்சியுடன் இருப்பார்கள்.

"குற்றமென்றால் குற்றஞ் செய்யுங் குணமுண்டு
கூரான வாள்மீதே நடப்பான் பாரே!
கற்றதொரு கல்வியதும் பெருமை சேர்க்கக்
கஸ்தூரி மானிடத்தே மகத்துவம் பாராய்!"

ஒருவர் செய்த தவற்றைத் தாம் அனுபவித்தாலும், திரும்பவும் பலிவாங்கும் உணர்வு உண்டு. அதற்காக என்ன செய்யவும் தயங்க மாட்டீர்கள். முரட்டுத்தனமான பிடிவாத குணங்களும் உண்டு. மான் தன்னிடமுள்ள கஸ்தூரியை எப்படி அறியாதோ, அது போல், உங்கள் அருமை உங்களுக்கே தெரியாது. இதைவிட்டுச் சில அதர்மச் செயல்களும் உண்டு. உங்கள் மனத்திற்கு எது சரியென்று படுகின்றதோ அதைச் செய்யத் தோன்றும். அதையே சுட்டிக் காட்ட வேண்டியிருக்கும்.

ஆயில்யம் நட்சத்திரத்தில் பிறந்தவர்களே!

"மைந்தனுக்கு ஆமைவேகச் செயலுமுண்டு
மெல்லவே குறுக்கவே தான்பாயப்
பந்தமதில் பாசமில்லை பற்றுமில்லை
புற்றிலுள்ள பாம்பிற்கும் தவளையிரையே"

இப்படி உங்கள் செயல்கள் மெதுவாகவே இருக்கும். திடீரென்று குறுக்கே பாய்ந்து செயலாற்ற நினைப்பதுண்டு. அதனால் சில தோல்விகளும் ஏற்படுவதுண்டு. சொந்தபந்தங்களில் பற்று, பாசம் ஏதுமில்லை. ஆனால், உங்களைக் கவ்வப் பின்னால் சொந்த பந்தங்கள் காத்துக்கொண்டிருக்கும்.

இளமையில் காமக் களியாட்டங்களிலும், லாகிரி வஸ்துகளிலும் அதிக ஈடுபாடு உண்டு. இதை எண்ணிப் பின்னால் மனம் நோவதுண்டு.

கடக இராசிக்காரர்களுக்கும் அதிலிருந்து எட்டாம் வீடான கும்ப இராசிக்கும் எப்பொழுதும் ஆகாது, நண்பர்களாய் இருந்தாலும் பிரிந்துவிடுவார்கள். திருமணப் பொருத்தங்கள் பார்த்தே செய்ய வேண்டும்.

இராசியாதிபதியான சந்திரனின் கிரகாதிபத்தியங்கள்படி உங்களுக்கு கோட்சாரத்திலும், ஜென்ம சாரத்திலும் சில பலன்கள் நடக்கும்.

இராசியாதிபதி சந்திரன் கடக இராசியில் ஆட்சியானால், தாய்க்குச் சுகமும், தர்க்கங்களில் வெற்றியும், குடும்ப சந்தோஷங் களும், புகழாரங்களும், தெய்வ வழிபாடுகளும் சிறந்து விளங்கும்.

சந்திரன் ரிஷப வீட்டில் உச்ச மூல திரிகோணத்தைப் பெற்றால், நல்ல நிலைகளும், பொன்கலயத்தில் பாலுண்ணும் அளவு ஐஸ்வரியங்களும் உண்டு.

இராசியாதிபதி கோட்சாரத்தில் அப்படியிருக்க, அப்படி உச்சம் பெற்றவரைக் குருவானவர் மகரத்திலிருந்து நீசம் பெற்றுப் பார்த்தால் பலன்கள் மாறி நடக்க விதியுண்டு.

சந்திரன் யாதொரு வீட்டில் நட்பாய் இருந்தாலும், நல்ல சுக போஜனமும், வாகனத்தில் வலம் வருதலும், தொழிலில் நல்ல கீர்த்திகளும் உண்டு.

சந்திரன் விருச்சிகத்தில் நீசம் பெற்றால் முகத்தில் ரோகமும், குளிர் சுரமும், சன்னியும் ஏற்படும். பரத்தையர் உறவும் அந்தக் காலத்தில் ஏற்படலாம்.

இராசியாதிபதி சந்திரன் கோட்சாரத்தில் யாதொரு வீடுகளிலாவது பகை பெற்றால் தாய்க்குப் பீடையும், ஜல கண்டங்களும், நோய்களும், சகோதரப் பிரிவும் உண்டாம்.

கடக இராசிக்காரர்களே! உங்கள் இராசியின் அதிபதியான சந்திரனின் நல்ல பலன்களைப் பெறச் சோமதேவருக்கும், கிரக அதிதேவதையான பார்வதி தேவிக்கும், முருக்கன் கட்டையை அல்லது வேரைக் கரியாக்கிச் சாம்பிராணி தூபமிடுதலாலும், பொங்கல் படையல் படைத்தலாலும் நன்மை பெறலாம். நவரத்தினங்களுள் ஒன்றான முத்துவை வாங்கிப் பஞ்ச கௌவிய சுத்தி செய்து, மோதிரமாய் வலமோதிர விரலில், வளர்பிறை சோம

பாரத்தில் அணிய, நல்ல பலன்களும் ஐஸ்வரியங்களும் உண்டாம். இதன்படி செய்து இராசியாதிபதி சோம தேவரின் நல்லருளைப் பெறவேண்டுமென்று வேண்டுகிறோம்.

## சிம்மம்
## முதல் பாவம்

மகமொடுதான் பூரம் உத்திரமொன்று
  மகத்துவமாய் அரியதனின் பலனைக் கேளாய்!
சுகமொடுதான் பாக்கியங்கள் நல்கலாகும்
  சுற்றத்தார் விரும்பியே வருவார்காணே!

காணேதான் தைரிய வீரிய பட்டங்களும்
  கருத்தான பதவிகளும் பகட்டுமேலாய்
வீணேதான் போகத்தில் மூழ்கியிருப்பார்
  விரும்பமேல் தர்மங்கள் செய்வார்பின்னே.

பின்னேவரும் கர்மங்கள் தானழியப்
  புகழான சாஸ்திரங்கள் சல்லியங்கள்
துன்பமில்லா முறைநிலை கைக்கொண்டு
  துயரம்செய்யும் எதிரிகளை அழிப்பார் பாரே!

பாரேதான் பாரிலுள்ள செல்வங்களும்
  பகட்டான பஞ்சுமெத்தை சொர்ணமார்க்கம்!
தாரேதான் மாலையுடன் சேர்ந்தவாறே
  தனயனவன் ஒருகாலும் வாழ்வாருலகில்!

உலகினிலே உலகநாதன் அருளும்கிட்டும்
  ஊர்க்குருவி போலில்லை கருடன்போலே
நலமான வாழ்வுகளும் இவருக்குத்தான்
  நாயகனும் அரசுகட்டில் வீற்றிருப்பார்!

இருப்பாரே பிரகாச லட்சணமொடு
  இயம்பமேல் வேள்விநிலை யாகத்தொண்டு
கருதவரும் சத்ருகள் அசுரர்போலே
  காட்டலாம் வெட்டினாலும் தழைப்பார் பின்னே!

பின்னேதான் சத்ருக்கள் ஜெயமுமுண்டு
மேலான கிரகவருள் பலமதாகும்!
பின்னமாய்ப் பந்துக்களும் சத்ருவாய்
பகரவரும் மைந்தனுக்கும் இருப்பாரே!

பாரேதான் கிரகங்களும் மெத்தவுண்டு
பகரலாம் சிரரோகம் தானேயுண்டு!
காரணமாய் மாணிக்கம் என்றவொரு
கருத்தான ரத்தினத்தைச் சுத்திசெய்து

செய்யமேல் கணையாழி தான்பின்னும்
சார்வான மைந்தனிவன் அணியத்தானே
உய்யவரும் நல்லூழின் விதியாலே
உரைக்கமேல் நற்பலனும் பாடினேனே!

## விளக்கம்

சிம்ம இராசி அன்பர்களே! நீங்கள் பிரகாசத் தோற்றத்தோடும் எடுப்பான நாசியோடும், சம அளவு உயரத்தோடும் தைரியம், வீரியம், பட்டம், பதவி, ஆளடிமை, சமூகத்தில் நல்ல அந்தஸ்து, தான் விரும்பிய பெண்ணை மணம் செய்தல் ஆகிய விதிகள் உங்களுக்கு உண்டு!

நீங்கள் உங்கள் எதிரியை ஒரு கண் வைத்தபடி பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும். அதே போல், எதிரியைப்பற்றிச் சதா நினைப்பு உங்களுக்கு இருந்துகொண்டேயிருக்கும். சத்ருக்கள் ஜெயம் உங்களுக்குக் கைவந்த கலை. இதனால் எதிரியைப்பற்றிக் கவலையில்லாவிட்டாலும், நீங்கள் எப்போது தடுமாறுவீர்கள் என்று பார்த்தவண்ணமே இருப்பார்கள், உங்கள் எதிரிகள். மற்ற இராசிக்காரர்களுக்கு இல்லாத பாக்கியங்கள் அத்துணையும் உங்களுக்கு இளமையிலேயே உண்டு. இளவயதிலேயே அத்துணை சுகங்களையும் அனுபவித்துவிடுவீர்கள்.

சாஸ்திரங்கள், சகுனங்கள்மீதும் அளவு கடந்த நம்பிக்கை உண்டு. தெய்வ நம்பிக்கைகளும் அதிகமாய் இருக்கும். எந்த வகையிலாவது தலைமையை எட்ட வேண்டுமென்று நினைப்பீர்கள் அதனை முடிக்கும் திறமையும் உண்டு.

உங்களுக்கும் மகர, கும்பங்களுக்கும் அவ்வளவாக ஒத்துப் போகாது. தொழில் மற்றும் குடும்பங்களிலும் அப்படியே மற்றபடி, வேள்வி நடத்துவதிலும். யாகங்கள், பூசைகள் ஆகியவற்றில் அதிகமான ஈடுபாடும் உண்டு.

உங்கள் எதிரிகள் வலுவானவர்கள்; வீழ்த்தினாலும் மறுபடியும் அசுரர்கள் போலத் தொடர்ந்து வருவார்கள். மூர்க்கத்தனமான தாக்குதலும் உண்டு. உங்களுக்குச் சிரசு சம்பந்த நோய்களும், கால்கடுப்பும் உண்டு. வாதங்கள் பின்னால் ஏற்படலாம். உங்களுக்குச் சில நேரம் சுய கௌரவ காரணத்தினால் கர்வம் ஏற்பட விதியுண்டு. யாரையும் போய்ப் பார்க்க மதிப்பு தேடுவீர்கள். தமக்கு நிகரில்லாத இடத்திற்குச் செல்ல அஞ்சுவீர்கள். ஆனால், காரியம் ஆகவேண்டுமானால் என்ன செய்ய வேண்டுமானாலும் செய்யத் துணிவீர்கள். சொந்த பந்த ஆதரவிருந்தும் அது வேண்டிய சமயம் உதவாது; காலை வாரிவிடும்.

இந்த இராசியில் மகத்தினில் பிறந்தவர்களுக்கு,

"தானேதான் இவ்வுலகின் செல்வங்கள்
தனயனுக்கு முப்பானும் அகவையுள்ளாய்
வானேதான் சொர்ணமாரி பொழியுமாறு
வருகுமென்றே யிருடியான் விளம்பினேனே"

என்பது போல், 30 வயதிற்குள்ளேயே அனைத்துச் செல்வங்களையும் அடைவதற்கு விதிகளுமுண்டு. அந்த அளவு முயற்சிகளால் வெற்றிகளும் கிடைக்கும். அடுத்தவர்களின் சுடு சொற்களை உங்களால் தாங்க முடியாது. அதற்கான எதிர்ப்பு விளைவுகளும் பயங்கர மாயிருக்கும். அடிமைத் தொழில் உங்களுக்கு நன்மை தராது.

பூரம் நட்சத்திரத்தில் பிறந்தவர்கள்,

"ஆகுமது முன்கோபம் அத்துணையும்
அறியமேல் தெய்வங்கள் பிதுர்களொத்து

வாகுடனே வசைபாடித் தான்திரிய
வம்பனவன் கவலைஏதும் பொறுக்கக்காண்"

இவ்வாறு கோபத்தினால் தெய்வங்களையும், தந்தை வர்க்கத்தினரையும் வசை பாடும் நிலையை ஏற்படுத்தும். உங்களின் பின்வாழ்வில் ஆன்மிகமே நிறைந்திருக்கும். இந்த நட்சத்திரத்தில் பிறந்தவர் சாமுத்திரிகா குண லட்சணப்படி சரீர அமைப்புகளையும் சொல் சுத்தங்களையும் பெற்றிருப்பார்கள். உங்களின் 30 வயதிலிருந்து 40 வயதுவரை பல்வேறான கடுங்கஷ்டங்கள் வந்துபோகும்.

உத்திரம் 1-க்கும் இந்தப் பலன் சேரும்.

"நாயகனும் உஷ்ணதேகம் தான்கொண்டே
நாயகியை நாடியே செல்வான்தானே
கோளதனில் குறையில்லை ஊழ்குறையாய்
குமரனுக்கு மத்திமத்தி லிடர்தானே"

இவ்வாறாய் உத்திரம் 1-இல் பிறந்தவர்கள் உஷ்ண தேகிகளாய் இருப்பார்கள். இதனால் பரத்தையர்கள் சகவாசமுண்டு. இவர்கள் கோளில் குறையில்லாவிட்டாலும், ஊழ்குறை நிறைந்திருக்கும். அது காலத்தால் துயரம் செய்து, பின்பு மாறும்.

சிம்ம இராசிக்கு அதிபதி, சூரியன். அவருக்கு அதிபதி, சிவன். அந்த உலகநாதனை வணங்கினால் அனைத்துப் பலன்களையும் பெறலாம். தினமும் அதிகாலை சூரிய ஜெபம் ஜெபித்தால் நலமுண்டு.

அந்தச் சூரியன் பகை வீடுகளான ரிஷபம், மகரம், கும்பத்திலிருந்துதான் மத்திமமான பலன்களைச் செய்வார். ஆட்சி வீடான சிம்மத்திலும், உச்ச வீடான மேஷத்திலும், உத்தம பலன்களைச் செய்வார்.

சூரியனோடு சனி சம்பந்தப்பட்டிருந்தால் இருந்த வீட்டின் பலன்கள் குழப்பமாகவே இருக்கும்.

சூரியன் துலா வீட்டில் நீசமானாலும், சனி மேடத்திலிருந்து நீசமாகிப் பார்த்தாலும் அவயோகங்கள் உண்டாகின்றன. சுபர்கள் பார்த்தால் நல்ல நிலைமைகளை உண்டு பண்ணும். பதஞ்சலி மகரிஷி சூரியனின் கிரகாதிபத்திய பலன்களைக் கூறியுள்ளார் அவை,

இராசியாதிபதி சூரியன் சிம்மத்தில் ஆட்சி பெற்றால் உயர்ந்த பதவிகளும், சன்மானமும், தந்தை நலமும், உண்மையான குணமும், நல்ல ஆபரணங்களும், தெய்வ பக்தியும், மனத்திருப்தியும் இருக்கும்.

சூரியன் மேடத்தில் உச்சமானால் சிவ பக்தியும் அதனால் பலனும், மன்மத லீலைகளும், ஸ்திரீ போகமும், உடல் உஷ்ணமும். தேக வீரியமும், மன மகிழ்ச்சியும், செல்வாக்கும் உண்டு.

சூரியன் யாதொரு வீடுகளிலும் நட்புப்பலம் பெற்றால் ஓரளவு வளர்ச்சியும், காடுகளில் சுற்றுதலும், தகப்பன் நோய் தீருதலும், உளைச்சல் செலவும் உண்டாம்.

சூரியன் துலாத்தில் நீசமானால் தகப்பனார் மாரக கண்டமும், நோய்களும், உடல் உஷ்ண நோய்களும், தெய்வ பக்திக் குறைவும், பேச்சினால் தொந்தரவும், தீராத தலைவலியும் உண்டுபண்ணும்.

இராசியாதிபதி சூரியன் யாதொரு வீட்டிலும் பகையாகில் உஷ்ண நோய், கண் புகைச்சல், சலோதர நோய்கள், தேகம் புண்ணாதல், எதிரி பயம் போன்ற பலன்கள் சூரியன் இருக்கும் வீட்டிற்கும் கோட்சாரத்திலும் நடைபெறுமாம்.

சிம்ம இராசிக்காரர்களே! இராசியாதிபதி சூரியனின் பலனை அடைய எருக்கன் குச்சியையும், சந்தனக் கட்டையையும் எரித்து ஹோமமும், கிழக்கு நோக்கி ஜெபமும் செய்தாலும், செந்தாமரை மலர்களைக்கொண்டு அர்ச்சித்தாலும், சூரிய பகவானுக்குக் கோதுமைப் படையல் செய்தாலும், சிவனைப் போற்றி வணங்கினாலும் அவர் திசை புத்திகளில், கோட்சாரத்தில் நல்ல பலன்கள் கிடைக்கும் என்பதாம். நவரத்தினங்களுள் ஒன்றான மாணிக்கத்தை வாங்கிப் பஞ்ச கௌவிய சுத்தி செய்து, மோதிரத்தில்

வைத்து, சிவனை வணங்கி, வளர்பிறை ஆதிவாரம் சூரிய உதய காலத்தில் ஜலக்கரையில் நின்று, வலமோதிர, விரலில் அணிய, நல்ல ஐஸ்வர்யங்களும், பலனும் கிடைக்கும். அல்லது, நல்ல தாமிரத்தைச் சுத்தி செய்து, வளையமாக முன் சொன்னது போல் செய்தாலும் நல்ல பலன்களாம்.

சிம்ம இராசிக்காரர்களே! மேற்சொன்ன பிரீதி முறைகளைக் கடைப்பிடித்து வாழ்வில் மேலோங்க வேண்டுகிறேன்.

## கன்னி

## முதல் பாவம்

உபயமொன்றில் மாலவனு மாட்சியுச்சம்
உருகன்னி மதினின்ற பலனைக் கேளாய்
சுபமற்றும் அசுப பலன்கள் கலந்தேவரும்
சுத்ததொரு தெய்வக்ஞன் விவேகியாக

ஆகதொரு பலன்செய்ய ஆமைவேகம்
அறிவிருந்து மில்லார்போல் தான்காட்ட
மோகமென்றே ஸ்திரீபின்னும் சிலகாலம்
மைந்தனிவன் தான்திரியக் கட்டமாச்சே!

ஆச்சேதான் அறுபானின் கண்டம் தாண்ட
அறிவான விதிவழுவும் விரக்தி காட்டும்!
மூச்சேதான் நின்றாலும் உயிர்போகா
முகங்கோணி பந்துக்களும் நிற்பார்தானே!

தானேதான் கிடைக்காத திரவியங்கள்
தனயனுக்குக் களத்திரமும் கிட்டும்பாக்யம்
பேணவரும் சொத்துசுகம் தனநிலைகள்
பொருந்தவே முப்பானும் அகவைமேலாய்

மேலதனில் அட்சரமணியும் மார்க்கம்
மெட்டெடுத்துப் பாடுகின்ற நூலின் மார்க்கம்
பாலக வயதினிலே கிடைக்கும் மெத்த
பலன்பெற்றே பின்வாழ்வில் பலனே செய்ய

செய்வானே வருபெண்டாள் வருபின்னும்
சொத்துசுகம் அத்துணையும் அவள்யோகம்!
உய்யவரும் வாழ்வதுவும் களத்திரத்தாலே
உவகையுடன் வாழ்வினிலே கலந்தே வாழ

வாழமூன்று யோகநிலை யிவன்வாழ்வில்
வையகத்தில் களத்திரத்தால் ஓர்யோகம்
சூழவரும் பந்துக்களால் சிலயோகம்
சுற்றியதன் ஊழ்விதியால் தனபிராப்தம்!

பிராப்தமென்ற மாயநிலை சம்பத்துக்கள்
பகர்வரும் முப்பானும் ஐம்பானும் எழுபானில்
தராமலே தந்தருளும் விதியுண்டு
தனயனவன் கோள்விதியால் கண்டுகொள்ளே!

## விளக்கம்

கன்னி இராசிக்காரர்களே! வாக்குச் சுத்தமும், பேச்சில் வன்மையும் நூதன செயலும் உங்கள் அம்சம். பொதுவாக, உங்களுக்கு 30 வயதிற்கு மேல்தான் அதிகமான பலன்கள். அதுவரை மத்திம பலன்களே தொடர்ந்துவரும். சுப, அசுப பலன்கள் கலந்தேதான் வரும். தெய்வ பக்தியிலும், ஆசாரத்திலும், ஆராய்ச்சியிலும் தேர்ந்தவர்களாக இருப்பீர்கள். மற்றவர்களைக்காட்டிலும் விவேக குணங்கள் அதிகமாகவே இருக்கும். வார்த்தையை அளந்து, அதே சமயத்தில், நிதானமாகப் பேசும் குணம் உண்டு. நிதானமான செயல்கள் இருந்தாலும் அற்பத்தனமான வேலைகளில் கெட்ட பெயர் உண்டு பண்ணும்.

சில இடங்களில் ஒன்றுமே தெரியாதவர் போல் நடிக்கத் தோன்றும். பெண்கள் மேல் அதிக ஆசையும், அதனால் மன மகிழ்ச்சிகளும் உண்டு. பெண் சினேகங்களில் சில சமயம் தோல்வி உண்டு. அது கடைசிவரை மனத்தில் உறுத்தும். பொதுவாக, கன்னி இராசியில் பிறந்தவர்களுக்கு முப்பது வயதிற்கு மேல் அயல் தேச யோகங்கள் கட்டாயம் உண்டு. பொன், பொருள், திரவிய

வர்க்கங்கள் தேடவேண்டிய கட்டமும், கிடைக்கும் பாக்யமும் கட்டாயம் உண்டுபண்ணும்.

சில நோய்களினால் அதிக நாள்கள் படுத்திருக்க வேண்டியிருக்கும். கடைக்காலங்களில் இதய நோயும், முழங்கால் வாதமும், இரத்தக் கொதிப்பும் உண்டுபண்ணும். சொந்தபந்தங்கள், அயல் பந்தங்கள் உங்கள் 30 வயதுவரை கண்டும் காணாமலும் அதற்குப் பின்பு உறவாடியும் மகிழ்வார்கள். பெரும்பாலும் கணிதப் பணிகளும், வாக்கு வழி மார்க்கங்களும் அதிகம் கிடைக்கும். விவசாயமும் உண்டு. மலைக்காடுகள் 40 வயதிற்கு மேல் வாங்க லாகும். சிறு வயதிலேயே அத்தனை துறைகளிலேயும் நாட்ட மிருக்கும். கொஞ்சம் கொஞ்சமாகத் தெரிந்துகொண்டிருப்பீர்கள். அந்த அனுபவமே பின்வாழ்வில் உங்களுக்கு உதவும். இந்த இராசிக்காரர்கள் பெரும்பாலும் அடுத்தவர்களுக்குப் போதிக்கக்கூடிய தொழில்களிலேயே அதிகம் இருப்பார்கள்.

உபாத்தியாயத் தொழில்கள் சிறந்து விளங்கும். மனைவி வந்த பின்னாலேயே உங்களுக்கு நல்ல வாழ்வு உண்டு. குரு நல்ல இடங்களில் இருந்தாலும், புதன் சேர்ந்திருந்தாலும் வரும் பெண்ணால் யோகம் உண்டு. வரும் பெண் நல்ல குணவதியாகவும் நல்ல அந்தஸ்துடனும் இருப்பாள். மனைவியால் ஒரு யோகமும், தன் சுற்றத்தால் ஒரு யோகமும், திடீர்த் தனப்பிராப்தியால் ஒரு யோகமும் உங்களுக்கு உண்டுபண்ணும். அது நாம் மாயா சம்பத்து என்று கூறக்கூடிய எதிர்பாரா பணவரவாகும். லாட்டரி சீட்டுகள், புதை பொருள்கள் ஆகியவை இதில் அடங்கும். இந்த யோகங்கள், 30, 50, 70 ஆகிய வயதுகளில் ஏற்படும்.

இந்த இராசியில் உத்திர நட்சத்திரத்திற்குப் பலன்கள் :

**"செய்யத்தான் திட்டமிட்ட பலாபலன்கள்**
**செம்மையாய் வாழ்வினிலே வருகுங்காண் !**
**உய்யவரும் வாழ்வினிலே ஒட்டையுண்டு**
**ஊழ்வழியில் விட்டுவிட்டால் வீணாய்ப் போச்சே."**

உத்திர நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் ஓரளவு திட்டமிட்ட பலன்களை அடைந்தாலும், அதிலும் பழுதிருக்கும்; சில விரயமாகும். எவ்வாறு ஆகுமென்று இவர்களுக்குத் தெரியாது. அது ஊழ்வழிக் காரணங்களாகவே இருக்கும்.

அஸ்த நட்சத்திரத்தில் பிறந்தவர்களுக்குக் கன்னி இராசியின் பலன்கள்:

"போலவேதான் கோடிப்பொன் கொடுத்தாலும்
பங்கமில்லை வந்ததுவும் வந்தவழி
தோலேசா னகற்றிவிட்ட சர்ப்பம் போலே
தனயனுக்கு மறுவாழ்வு தாஸ்பாரே"

இந்த நட்சத்திரத்தில் பிறந்தவர்களுக்கு ஆயிரம் பொன் கொடுத்தாலும், அது நிமிட நேரத்தில் வீணாகிவிடும். இதைத் தடுத்து நிறுத்த முடியாது. பெண்கள் சகவாசமும் உண்டு. பணமும் அந்த வகையில் சில வீணாகும். எப்படிப் போனாலும் இழந்த செல்வங்களை மீண்டும் அடையும் பாக்கியமுண்டு.

அதிலும் சித்திரையில் பிறந்த கன்னி இராசிக்காரர்களுக்குப் பலன்கள் :

"தானேதான் முன்கோபி பின்னிரக்கம்
தனயனுக்கு முப்பான்மேல் பலனே காட்டும்!
வீணோதான் அதனுள்ளே செய்யும் முயற்வு
விரணத்திலே யக்னியை யிட்டது போலே."

முப்பது வயதிற்குள் என்ன பாடுபட்டாலும் முன்னேறுவது கடினம். அந்த வயதில் ஆயிரம் முயற்சிகள் செய்தாலும், அவற்றால் அடையும் தோல்விகள் 'புண்ணில் தீயைப் பாய்ச்சியது போல' வேதனையைத் தரும். முப்பது வயதுக்கு மேல் அபரிமிதமான யோகங்கள் உண்டு. முன்முயற்சிகள் உடனே பலனளிக்கும்.

கன்னி இராசியாதிபதியான புதன் தன்னுடைய வீட்டில் ஆட்சி யுச்சத்தை அடைந்தும் அவர் கிரகாதிபத்திங்கள் குறிப்பிடப்

பட்டுள்ளன. புதனானவர் குருவோடு சேர்ந்தால் களத்திர இலாப முண்டாகும். தொழிலையும் நல்லதாகக் கொடுப்பார்.

7ஆம் இடமான மீனத்தில் நீசமாகி குருவோ, சுபகிரகங்களோ பார்வையில்லாவிடில் கோசாரத்தில் மத்திமமான பலன்களே உண்டுபண்ணும்.

கிரகாதிபத்தியங்கள்

புதன் ஆட்சி உச்சம் பெறில் பேச்சு வன்மை, தொழில் அபிவிருத்தி, தாய்சுகம், பந்தங்கள் ஆதரவு, எழுத்தால், பேச்சால் நன்மை, வித்தை, ஞானம், பக்தி, விஷ்ணுவாராதனை, உபாசனை போன்ற நன்மைகள் ஏற்படும்.

இராசியாதிபதி கன்னி இராசிக்கு 7ஆம் இடமான மீனத்தில் நீசமானால் களத்திர நட்டம், துர்பாக்கியம், நீச ஸ்திரீ போகம், புத்திரர் இன்மை, வாய்வு ரோகங்கள், களத்திர அவமானம் போன்றவை யுண்டு.

இராசியாதிபதி இராசிக்கு 10ஆம் இடமான மிதுனத்தில் ஆட்சியாகில் தொழில் நன்மைகள், கூட்டுக் கிரகமிருந்தால் கூட்டுத் தொழில், பெரிய காரியாலயம் அமைத்தல், மனைகள் எழுப்புதல் போன்ற பலன்கள் ஏற்படும்.

இராசியாதிபதி புதன் யாதொரு வீட்டிலும் பகையாகில் சொந்தபந்த விரோதங்கள், பந்துக்கள் சேதம், பேச்சு மாறுதல், சொன்ன சொல்லைக் காப்பாற்றாமலிருத்தல் போன்ற பலன்கள் நடைபெறும்.

அன்பர்களே! இராசியாதிபதி புதனின் பலனை அடையப் பச்சையான மரகதத்தை அணிந்தால் நன்மையான பலனும், மிதுன இராசியில் கூறியது போல் ஹோமங்களும், பிரீதிகளும் செய்யச் சுபபலன்களும், புதபகவான் அருளும் கிட்டுமென்று பதஞ்சலி மகரிஷி கூறியுள்ளார்.

# துலாம்
## முதல் பாவம்

அசுரகுரு பளிங்குசனன் சுக்கிராச்சாரி
    ஆட்சியேற்ற மறுவில்லம் நிறுவையொத்து
பசுவிட்ட நிறுவையதின் பலனைக்கேளாய்
    பகரவரும் விகடனவன் விவேகியாவான்!

ஆவானே அறிவுகுண யூகமெத்த
    அறிஞனவன் கண்டேதான் திறத்தால் வெல்வான்!
மேவவரும் முன்னூழில் விதிமெத்த
    மைந்தனிடம் தர்க்கமது கெலிக்கும்தானே!

தானேதான் வெள்ளாடும் அனைத்துமேயும்
    தனயனவன் நூலறிவான் பொருளறிவான்
பானையுள் சுடர்போலும் சிலகாலும்
    பண்புடனே நிறுவைக்கும் பலன்தானே!

பலனுமேல் களத்திரத்தின் உதவிமேலாய்
    பயன்பெறவே இல்சுகங்கள் வாய்க்கலாகும்!
நலமான பொன்மணிகள் முத்தாரங்கள்
    நாயகனும் வாழ்வினிலே கண்டுசெல்வான்!

செல்வானே செல்வத்தின் சீமானாய்ச்
    சுயம்மேலாய்க் கருமநிலை பலன்மெத்த
வல்லதொரு வார்த்தைகளும் கபடமாகும்
    வாய்க்கதொரு நிறுத்தியே பகருவானே!

பகருவான் பண்பட்ட துறவிபோலப்
    பயன்மேலாய்க் கோள்நிலையும் ஆயவல்லான்!
சுகமொடுதான் சுற்றங்கள் நிரம்பியுமே
    சுடுசொற்கள் சிலகட்டம் வீசுவான்காண்!

காணமேல் கௌரவங்கள் குறையாது
    காந்தனுக்குக் களத்திரத்தால் யோகம்சொல்ல
ஆனதொரு பெண்டவளும் தோடசாரம்
    அறியக்கேள் கண்டுகொண்டே தீர்வுசொல்ல

சொல்லேதான் சாஸ்திரங்கள் கற்றறிந்து
சிரத்தையுடன் கடைக்காலம் குழம்பிப்போக
நூல்வழியும் குறைவில்லை எவ்விதத்தும்
நாயகனும் இதுவாறாய் புரிந்துவாழே!

## விளக்கம்

பேச்சுகளில் விகடம், ஹாஸ்யம், நகைச்சுவைக் குணம் ஆகியன கொண்ட துலா இராசி அன்பர்களே!

யார் எதைச் சொன்னாலும் அதைக் கிண்டல் செய்யும் பாவனைகளும், பேச்சுகளும் உங்களுக்குக் கூடப்பிறந்த குணம். சமயத்தில் விவேகியாகவும் இருப்பீர்கள். அறிவு, குண யூகங்கள் உங்களுக்கு அதிகம். எதையும் சிந்தித்துச் செயல்படும் நிதானமான போக்கு உண்டு. உங்கள் இராசியே தராசு. அடுத்தவரால் இன்ன காரியமாகும், இன்னது முடியும் என்று அறியும் திறனும், பல வீனத்தை புரிந்துகொள்ளும் யூகமும் அதிகம்: அதாவது, நிறுத்துப் பார்த்து அறியும் திறன். இதை வைத்தே அதிகக் காரியங்களைச் சாதிப்பார்கள். தர்க்கங்களிலும் அடுத்தவர்களோடு புரியும் வாதங் களிலும் கேலி, கிண்டல் போன்றவற்றிலும் நீங்களே வெற்றி பெறுவீர்கள்.

உங்கள் பேச்சுகள் அனைத்தும் மென்மையாகவும், நளினமாகவும் இருக்கும். எப்போதும் சுத்தமாய் இருக்கவே விரும்புவீர்கள். அதிக வேலை, பளுவான காரியங்கள் ஆகியவற்றை விட்டுவிட்டுச் சுலபமான மூளைக்குரிய வேலைகளே அதிகமாயிருக்கும்.

வழக்குரைஞர்கள், வாதுரைப்பவர்கள் பணிகள் அதிகமாயுண்டு.

வெள்ளாடு அத்தனையையும் மேயும். அது போல், அனைத்து நூல்களையும் கற்க வேண்டுமென்ற ஆவல் அதிகமாயிருக்கும்.

அதைப்பற்றி விமரிசனமும் உண்டு. உங்களுக்கு வரக்கூடிய மனைவி பெரும்பாலும் செவ்வாய் தோசத்திற்கு ஆட்பட்டு இருக்கக் கூடிய விதியும் உண்டு. இரத்த அணுக்கள் வீரியப்பட்டிருக்கும்.

இளவயதில் பல்வேறான அறிவுத்திறன்கள் இருந்தாலும், குறிப்பிட்ட வயதுவரை "பானையிலிட்ட சுடர்போல்" வாழ

வேண்டியிருக்கும். அதனை எண்ணி வேதனையும் உண்டு. அதற்குப் பின்பு 'குன்றிலிட்ட விளக்கு போல்' ஜொலிப்பீர்கள். அதனால் மற்றவர்களுக்குப் பயன்தரக்கூடிய நிலையும் உண்டு. இந்த இராசிக்காரர்கள் எவ்வளவு வறியவர்களாய் இருந்தாலும் வாழ்வில் அனைத்துச் சுக, போகங்களையும் அனுபவித்தே செல்வர்.

அனுபவத்தால் பண்பட்ட துறவிகள் போல் வாழ்வில் ஒவ்வோர் அங்கத்திலும் நிதானமான செயல்பாடுகள் உண்டு.

பெரும்பாலும் சுய தொழிலே இந்த இராசிக்கு நல்ல நன்மை அளிக்கும்.

அடுத்தவர்களிடம் கைகட்டிச் சேவகம் செய்தாலும் அவர்களைப் பற்றிச் சில சமயம் தூற்ற வேண்டியது வரும். குற்றம் சொல்லும் நிலைமைகளும் உண்டு.

மற்றபடி ஜோதிட சம்பந்தங்களிலும், வான சாஸ்திரங்களிலும், வருங்காலப் பலன்களிலும் அதிக ஆர்வமும் அதே பேச்சென்றும் இருப்பார்கள்.

உங்கள் சுற்றத்தார் மத்தியில் உங்களுக்குக் கௌரவம் குறையக் கூடாது என்று மிகவும் கவனமாக இருக்க வேண்டியதுவரும். வரக்கூடிய பெண்ணாலும் யோகமுண்டு. அயல்பந்தமே நிலைத்து நிற்கும். வரும் பெண்ணிற்குத் தோஷ சாதகமாகவே இருக்கும. நிதானமாக முடிவெடுத்தல் என்றும் நல்லது. சகல சாஸ்திரங்களைக் கற்றிருந்தாலும் அது சமயத்தில் பலன் தராது. நூல்களைக் குறை கூறிப் பலனேதுமில்லை.

உங்கள் இராசியாதிபதி சுக்கிரனுக்கு அதிதேவதை மகாலட்சுமி. இலட்சுமி தேவதையைச் செந்தாமரை மலர்களால் அர்ச்சித்து வணங்கி வர நற்பலன்கள் உண்டாம். அத்திமரச் சமித்தினால் ஹோமம் செய்தாலும், சன்னியாசி தானங்கள் செய்தாலும் நல்ல பலன்கள் செய்வார். பொதுவாக 75 வயதுவரை ஆயுளுமுண்டு.

இந்த இராசியில் பிறந்த சித்திரை 3, 4ஆம் பாதக்காரர்களுக்குச் சித்தர் கூறும் பலன்கள்:

**"அன்னவனே திடவானாய்க் கோபியென்றே**
**அறிஞனாய் நடைதளர்வாய் அகன்ற நெஞ்சோன் !**

மன்னவனே நல்குணத்தான் வீண்செல வாளியென்றே
மோனமாய் மங்கைக்கினி யோனாய் வாழ்வானே"

இந்தச் சித்திரை 3, 4ஆம் பாதங்களில் பிறந்தவர்களுக்குத் திடமான மனம் இருந்தாலும், முன்கோபம் அதிகமாய் இருக்கும். நல்ல அறிவும், அகன்ற மார்பும் உண்டு; ஆனால், நடை தளர்வாகவே இருக்கும். செலவுகள், வீண் செலவுகள் அதிகம் செய்வர். பெரும்பாலும் மௌனத்தையே சாதிப்பார்கள். பெண்கள் என்ன கூறினாலும் சிரித்துக் காரியத்தை முடித்துக்கொள்ளுவார்கள்.

இந்தச் சுவாதி நட்சத்திரத்தில் பிறந்தவர்களுக்குப் பலன்கள்:

"சகலமாய் சாஸ்தி உபன்யாசியென்றே யுரைப்பேன்
சுற்றங்கள் தூஷித்தே வாழ்வான் பின்னால்
திகழமேல் நெறிகளொத்த தேவ சித்திகளும்
தரணியிலே வாழ்வாங்கு வாழ்வுதானே"

சுவாதி நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் சகல சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்தவர்கள்; ஆனால், சுயநலக் குணம் அதிகமுண்டு. சொந்தபந்தங்கள் உதவியிருந்தாலும், அவர்களைப் பிடிக்காது. சில நேரங்களில் குறுக்கு வழியில் மனம் செல்ல விரும்பும். நீங்கள் வழிபடும் தெய்வம் அதற்கு விடாது. பின்பு, நெறிகளோடு நல்ல வாழ்வு வாழ வேண்டிய விதியுண்டு.

இந்த இராசியில் விசாக மீனில் பிறந்தவர்களுக்கான பலன்கள்:

"மறுவேதான் தூலமெங்கும் நிறைந்திருக்கும்
மைந்தனுக்கு நாணல்போல் குணமாகும்!
சுருதிகளும் சூக்குமங்களும் தெய்வசித்தி
சிவனிடத்தே பெறுவானென்று விளம்பினேனே"

இவர்கள் உடம்பில் மச்சம், மருக்கள் ஆகியன அதிகமாய் இருக்கும். எதிலும் நெளிவு, சுளிவாய் இருப்பார்கள். வளைந்து கொடுக்கக்கூடிய தன்மையினராயும், பந்தம், பாசமென்று சில கட்டங்களில் சுயநலத்தினராயும் இருக்க வேண்டியிருக்கும். சாஸ்திரங்கள், தேவசித்திகள், எவரும் அறிய முடியாத

இரகசியங்கள், உங்கள் உடலிலுள்ள மச்சம் மருக்களால் வந்து சேரும். கைலை நாதன் சிவபெருமான் அருள் எப்போதும் உண்டு.

பொதுவாக, துலா இராசிக்காரர்களுக்கு ஹிருதய சம்பந்தப்பட்ட நோய்களும், கபரோகமும் அதிகமாய் ஏற்படும்.

இராசியாதிபதியான சுக்கிரன் பகை வீடுகளான கடகம், சிம்மம், தனுசு ஆகிய வீடுகளிலிருந்தாலும், கன்னியில் நீசமடைந்தாலும் அசுப பலன்களேயுண்டு. சுக்கிரன், மூலத்திரிகோணமான துலாத்திலும், ஆட்சி வீடான ரிஷபத்திலும் சுப பலன்களைச் செய்வார்.

சுக்கிரன் நீசமடைந்தாலும், குரு தான் இருக்குமிடத்திலிருந்து 5, 7, 9 என்று நீசம் பெற்ற இடத்தைப் பார்த்தாலும் ஓரளவு நல்ல பலன்கள் திசை புத்திகளில் கிடைக்கும். ஆனால், கோட்சாரத்தில் பலன் குறைவாகவே இருக்கும்.

மற்றபடி சுபகிரகங்கள் இராசியாதிபதி சுக்கிரனோடு கூடினால் அந்த வீட்டிற்குரிய பலன்கள் செம்மைப்படும். சுக்கிரன் முற்பலன் செய்யாது; பிற்பலன் செய்தாலே நல்ல பலன் செய்வார் என்றும், அதனால் பலன் தக்கவைக்கும் நிலை உண்டென்றும் கூறுகின்றார்.

இராசியாதிபதி சுக்கிரன் மீனத்தில் உச்சமாகி அவர் திசை புத்தி இளமையில் வந்தால், "குட்டிச் சுக்கிரன் குடியைக் கெடுப்பான்" என்ற அளவில், மிக தீய பலன்களை அனுபவிக்க நேரிடும். எனவே, சுக்கிரசாந்திகளையும், சாதுக்கள் அன்னதானத்தையும், ரிஷப இராசிக்குச் செய்ததுபோல் செய்தால் சுக்கிரனின் அருள் பெற்று நீடூழி வாழலாம் என்று பதஞ்சலி மகரிஷி கூறுகின்றார்.

(பிரீதிகள் அனைத்தும் ரிஷப இராசிக்குக் கூறியவையே. கிரகாதி பத்தியங்களும் ரிஷப இராசியில் கூறியவை துலா இராசிக்கும் பொருந்தும்)

## விருச்சிகம்
## முதல் பாவம்

**தேளதனில் சிலவிதத்தும் பலனைக்கேளு**
**தனயனுக்குப் பிதுர்வழியில் தொந்தம்காட்டும்**

கோளதனில் பலனிருந்தும் பயனில்லை
குறிப்புடனே தன்னிட்டம் தயவில்லை!

இல்லையப்பா அன்னவனே மூர்க்ககுணம்
இயம்பக்கேள் தர்மவான் களத்திரப்பிரியன்
வல்லதோர் பணிவிடைகள் மெத்தமேலாம்
வல்லாளன் அற்பனிடம் பயந்திருப்பான்!

இருப்பானே யானைக்கு மடிசறுக்கும்
இருக்கும்நிலை மேலிருந்து கீழ்வருவான்!
கருதவரும் சினேகனே சத்ருவாய்
காட்டலாம் கூட்டுகர்மம் இடர்மெத்த

மெத்தமேல் நம்பிக்கை மோசநிலை
மேவியநல் மைந்தனுக்குத் தான்செய்ய
உத்தமமாய்ப் பின்னாளில் பலனுண்டு
உள்ளபலன் விட்டிடினும் வீணாய்ப் போச்சே!

போச்சேதான் அதிகாசை அற்ப வெண்ணம்
பொறுமையுடன் இருந்தாலும் துரத்திவரும்!
ஆச்சேதான் அதனாலே யெல்லாம் வீணே
அறிவுடனே யூகித்தால் பிழைக்கலாமே!

ஆவானே எய்தவனை விட்டுவிட்டு
அறியமேல் அம்பையுமே நோவான்காண்!
நோவாமல் விட்டிடினும் நன்மைமெத்த
துன்பம்மேல் துயரப்பட்டு வாழலாகும்!

ஆகுமப்பா எழுபானும் ஐந்தகவை
அறியவரும் எண்பானுள் விதிதீர்க்கம்
வாகான வாளிப்பையும் விட்டுவிட்டால்
வையகத்தில் சத்ருகள் சூழ்வார்தாமே!

தானேதான் பின்வாழ்வில் கீர்த்திகளும்
தனயனுக்குப் புகழொடுதான் வாழ்வுபல
தேனேதான் பாலதுவும் கலந்தேதான்
தனயனவன் சொர்ணமதில் பருகுவானே!

# விளக்கம்

அன்பார்ந்த விருச்சிக இராசி அன்பர்களே! உங்கள் விழிகள் பிதுங்கினாற்போல், மூர்க்கமான பார்வையோடும், சரீர இலட்சணங் கள் மற்றவர்களைவிடச் சற்று முரட்டுத்தனமாகவும், ரோமக்கட்டுகள் அடர்த்தியாகவும் இருக்கும். இளமையிலேயே தலை முடி கொட்டும். அதனால் வேதனைகள் இருக்கும். கை நகங்கள் வித்தியாச மானவையாகவும், சற்று தடிமனாகவும், மூர்க்கத் தோற்றத்தோடும் இருப்பீர்கள். தேள் குணம் போலே - அதாவது, தேள், மற்ற பிராணி கள் தன்னைத் தீண்ட வரும் முன்னே எப்படித் தீண்டுமோ அதே போல் எதிரிகளிடம் சுதாரிப்பாகவும், மூர்க்கத்தனமாகவும் இருப்பீர்கள்.

மனைவி விஷயத்தில் மட்டும் நீங்கள் உங்கள் இஷ்டப்படி இருப்பது கடினம்.

வீட்டில் சொல்லும் பெண்ணையே மணம் செய்ய வேண்டியது வரலாம்.

மற்றபடி தர்மங்கள் செய்தலும், தெய்வபக்தி கொள்ளுதலும் அற்ப ஆசையில்லாதிருத்தலும் உங்கள் குணம். தன் குடும்பத்தாரிடையே பாசங்கள் அதிகம் இருந்தாலும், அதை வெளிக்காட்டுவதில்லை.

எவ்வளவு பெரிய பண முதலைகளோடும் இராட்சத மனிதர்களோடும் மோதியும், சில அற்ப மனிதர்களுக்காகப் பயப்பட வேண்டியது வரும். "யானைக்கும் கட்டெறும்பு பயமல்லவா' என்பதற்கேற்ப அற்பர்களால் சில தொல்லைகளும் உண்டு. "யானைக்கும் அடிசறுக்கும்" என்பது போல், தானென்ற உணர்வுகள் சில கட்டங்களில் இருந்தாலும், அதனால் சில இடர்களைச் சந்திக்க வேண்டியிருக்கும்.

மண்மேட்டிலிருந்து கோபுரத்தின் உச்சிக்கே போய் அங்கிருந்து கீழே விழும் நிலையும் வாழ்வில் உண்டு.

உங்கள் நண்பர்கள் அவ்வளவு நல்லவர்கள் என்று சொல்ல முடியாது. நண்பனே, கூட்டாளியே சத்துருவாய் மாறவேண்டிய

நிர்ப்பந்தம் உண்டு. அவர்கள் நம்பிக்கை மோசமும் துரோகமும் செய்ய வேண்டிவரும்.

உங்களுக்குக் கூட்டுத் தொழில் பெரும்பாலும் ஆகாது. சிறிதளவு முதலிடாய் இருந்தாலும் அதனைத் தனிப்பட்ட முறையில் செய்வது நல்லது. அதனால் நன்மையும், நல்ல விருத்தியும் உண்டு. அரசாங்க உத்தியோகமும், அரசாங்க உதவியும் எவ்வாறேனும் கிட்டும்.

உங்கள் மனைவி உங்களைவிடப் பண வளத்திலும், அந்தஸ்திலும் உயர்ந்தவளாய் இருப்பாள். சில கால கட்டங்களில் அதிக ஆசையினால் சீர்கேடான நிலைகளும் ஏற்படும்.

தேவையில்லாமல் மற்றவர்களைக் கோபிக்க நேரும். "எய்தவனிருக்க அம்பை நோவது போல்" விதியானது சில நேரங்களில் சதி செய்யலாம். எழுபத்தைந்திலிருந்து எண்பது வயதுவரை இடையில் மரணங்கள் நிகழலாம். நல்ல வாளிப்பாக உடலுள்ள சூழ்நிலைகளிலேயே சம்பாதித்தல் நலம் ; அதே போல், சுதாரிக்க வேண்டும். வாழ்வில் பிற்காலத்தில் நல்ல கீர்த்திகளோடும் புகழோடும் வாழ விதியுண்டு. அந்த உயர்வான காலத்தில் தங்கப் பாத்திரத்தில் தேனும் பாலும் கலந்துண்ணும் அளவுக்குச் செல்வாக்குகள் ஏற்படும். சுக போகங்கள் ஓங்கியிருக்கும்.

இதில் விசாகம் 4ஆம் பாதத்திலும், அனுஷம், கேட்டை ஆகிய நட்சத்திரங்களுள் அனுஷ நட்சத்திரத்தில் பிறந்தவர்களுக்கும் பதஞ்சலி மகரிஷி பலன் கூறுகின்றார்.

"அழகனே கோபியுமாய்க் காமியுமான காமுகனென்றே
அறிந்ததோர் வித்தைபல உண்டெனினும்
சூழலிலே சிக்கியதன் கலம்போலே
சூட்சுமமாய்த் தடுமாறிப் போகுந்தானே"

அனுஷ நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் நல்ல படிப்பு, குணம் ஆகியன உள்ளவர்களாயிருந்தாலும், அவர்களுக்குக் கோபம் அதிகம் உண்டு. காமியாகவும், காம குணங்கள் அதிகம் பெற்றவர்களாகவும், என்ன படித்திருந்தாலும், "சுழியில் சிக்கிய கலம் போல" வாழ்வில் தடுமாற்றங்கள் அதிகம் உள்ளவர்களாகவும் இருப்பார்கள். இதனை உணர்ந்து வாழ்ந்தால் நலம்.

கேட்டை நட்சத்திரத்தில் பிறந்தவர்களுக்கான பலன்கள்:

"அகலென்றே பிதுங்குகின்ற நயனத்தோன் !
அன்பில்லான் வெறியெடுத்த மயிர்ச்சடையோன் !
திகழ்வானே போகியென்றே நீசச்சினேகம்
துயிலுக்கும் கும்பனென்றே மயிலுக்கு வம்பன்தானே"

இவ்வாறு கண்கள் பிதுங்கியவராகவும், வெறுப்பான பேச்சு பேசக் கூடியவராகவும், தலைமுடி வித்தியாசப்பட்டவராகவும், முரட்டுத்தன மானவராகவும், போகத்தில் அதிகம் ஈடுபாடு உள்ளவராகவும், சில கட்டங்களில் நீசர்களின் சினேகங்களைப் பெற்றவர்களாகவும் இருப்பார்கள். தூக்கத்தில் கும்பகர்ணர்களாகவும், அழகான பொருள் களையும், பெண்களையும், அடையத் துடிக்கின்றவராகவும், இருப்பார் கள். சகல சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்தவராகவும் உழைத்துச் செல்வராக வேண்டுமென்று நினைப்பவராகவும் இருப்பார்கள்; கேட்டை நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் ஒரு கோட்டையாவது கட்ட வேண்டியது விதி. கிரகங்களும், திசை, புத்திகளும் நல்ல பலன்களைச் செய்தால் இவர்களுக்கு நிகர் இவர்களேதாம்.

இந்த விருச்சிக இராசியாதிபதியான செவ்வாய், புதன் வீடு தவிர நட்பு வீடுகளிலும், உச்ச வீடான மகரத்திலும், ஆட்சி வீடான மேஷம், விருச்சிகத்திலும் இருந்தால், நல்ல பலன்களையே கொடுப்பார் என்பதாம். நீச வீடான கடகத்திலிருந்து சுபகிரகங்களின் பார்வை யில்லாவிட்டாலும், குருபார்வையில்லாவிட்டாலும், அதமமான பலன் களே கிடைக்கும் என்பதாம்.

இராசியாதிபதி செவ்வாய் தன் உச்ச வீட்டிலிருந்தோ, ஆட்சி வீட்டிலிருந்தோ, 4, 7, 8 பார்வைகளில் தன் வீட்டையோ, உச்ச வீட்டையோ பார்த்தால், காரகாதிபத்திய பலன்கள் கூடுமென்பதாம். இவர்கள் இராசியாதிபதி பலனைப் பெறக் கருங்காலி சமித்தினால் கூடிய குங்கிலிய வேள்விகள் செய்தாலும், மூன்று சாதுக்களுக்கு வஸ்திரதானமும் அன்ன தானமும் செய்தாலும், தோஷத்திற்கும், கடுமையான பலனுக்கும் நன்மையளிக்கும்.

இராசியாதிபதி செவ்வாய் தோஷம் பெற்றால், சிவப்பு வஸ்திரத்தில், சிவப்பான கிழங்கு வகைகள், கருங்காலி விறகு, சிவப்புக் குங்கிலியம், துவரம் பருப்பு, பவளம். தாமிரம் போன்றவற்றை

இட்டு ஏழு முடிச்சிட்டு, தோஷம் பெற்றவர்களின் கையில் கொடுத்து, சுப்பிரமணிய தேவரை 9 முறை வலம் வரச்செய்து, சமுத்திரத்தில் வீசி, 48 முறை முங்கி, குளிக்கச் செய்தால் தோஷம் நீங்கும். பின் வந்து, ஏழு சந்நியாசிகளுக்கு அன்னதானம் செய்யத் திருமண பாக்கியம் உண்டாகும். நல்ல பலன்களும் நடக்கும், இவ்வாறு பதஞ்சலி மகரிஷி, காண்ட நூல்களில் கூறியுள்ளார். கிரகாதிபத்திய பலன்களை மேஷ இராசிக்குள்ளவற்றைப் படித்துத் தெரிந்து கொள்ள வேண்டுகின்றோம்.

## தனுசு
## முதல் பாவம்

வில்லதனில் பிறந்தோரின் பலனைக் கேளாய்
வீரனாய் பிரதாபம் செய்யலாகும்!
வல்லதொரு எதிரியையும் நல்லறிவால்
வல்லாளன் வெல்லுவானே அட்டியில்லை!

அட்டியில்லை மூர்க்கங்கள் இருந்தாலும்
அறிவான மைந்தனிவன் அடக்கிவைத்தே
திட்டமாய்க் காரியமே கண்ணாவான்
திறன்படவே செயல்களுமே மெத்ததாகும்!

ஆகுமென்ற வித்தையொரு கல்விஞானம்
அறியமேல் பிராயத்திலே மெத்தவுண்டு!
தீருமே அற்பங்கள் சிலவாறாய்த்
தனயனுக்கு வாய்க்கேடு நிலையும் பாராய்!

பாராயே பகட்டுநிலை படாடோபம்
பகரவரும் மைந்தனுக்குக் குறைவுகாண்!
காரணமாய்த் தெய்வநிலை இருடிகளின்
கருத்தான வாக்குமெத்த தானுமுண்டு!

உண்டெனினும் ஆயிரமாம் கற்றவித்தை
உரைக்கவரும் செயலுக்கும் ஆகாகாண்!
கண்டதொரு படுகுழிச் சேற்றினிலே
கருத்தான மைந்தனவன் மாட்டியேதான்!

தானதுவாய் முன்முயற்சி செய்திடினும்
தனயனுக்குச் சேற்றினுள்ளே யிழுக்கும்நிலை!
ஆனதொரு மத்திமத்தில் தானுமுண்டு
அறிவான மைந்தனிவன் யூகத்தாலே!

யூகத்தாலே வாக்காதி கெணிதாதி
யௌவனத்தில் எழுத்தாதி மார்க்கங்களும்
ஆகமேல் பயன்பட்டே இலாபங்களாய்
அறியமேல் தீர்வுடனே வருமேகாணே!

## விளக்கம்

அளவான உயரமும், நல்ல உடல்வாகும் தீர்க்கமான முக அமைப்பும் பெற்ற தனுர் இராசி அன்பர்களே!

உங்கள் வீரதீர பிரதாபங்களையும், பராக்கிரமங்களையும் செயல்படுத்தலாம். பெரும்பாலும், எதிரியாகினும், வாது என்னும் தர்க்கமானாலும், அறிவாலும் தம் பேச்சாலும் சரிக்கட்டி அனுப்பக் கூடிய திறமைகள் உங்களுக்கு உண்டு. மூர்க்கக் கோபங்கள் இருந்தாலும் அவற்றை அடக்கும் திறனும், சிரித்தும் புன்முறுவல் செய்து காரியத்தைச் சாதிக்கும் குணமும் அதிகம். நீங்கள், "ஆரியக் கூத்தாடினாலும் காரியத்தில் கண்ணாய்" இருக்கின்றவர்கள். ஒருவர் போக்கிலேயே சென்று காரியத்தை முடித்தலும், தன் வயப்படுத்துதலும் சூழ்ச்சிகளும் உங்களுக்கு அத்துபடி. அதுபோல், ஆச்சார அனுஷ்டானங்கள், சாஸ்திரங்களைத் திறனோடு கற்றல் ஆகியவற்றில் சிறுபிராயம் முதற்கொண்டே ஈடுபாடும் விவேகமும் உண்டு. ஆனால், தம் வாயாலேயே கெடும் நிலையும் உண்டு. பகட்டுகள், படாடோபங்கள் குறைவு. சான்றோர்களின் அருளும் ஆசியும் அதிகமாய் இருக்கும். ஆயிரம் வித்தைகள் படித்தாலும், "ஏட்டுச் சுரைக்காய் கறிக்குதவாது" என்றபடி, கற்றது சில சமயம் பலனளிக்காமல் நோக வேண்டியிருக்கும்.

மத்திம காலகட்டங்களில் 30 முதல் 40 வரை கஷ்டங்கள் அதிகமாயிருக்கும். கல்லூரி, பல்கலைக் கழகப்பணிகளும், கணிதப் பணிகளும், விவசாய மார்க்கங்களும், எழுத்துப் பணிகளுமே அதிகமாயிருக்கும். வரித்துறை மார்க்கங்களில் அதிக ஈடுபாடு

உண்டு. வரக்கூடிய பெண் கபில நிறமாய் இருப்பாள். நல்ல பொருள் வசதிகளுடன், சகோதரர்கள் அதிகமாய் பெற்றிருப்பாள். இராசிக்கு 7, 10-க்குடையவரான புதன் நல்ல ஸ்தானங்களில் இருந்தால், அதாவது, 7, 10ஆம் இடமான மிதுனம், கன்னியில் ஆட்சியானால் நல்ல யோகம் கூடிய தோடசாதகப் பெண்ணாவாள். இராசியாதிபதி குரு தன் சொந்த வீட்டிலிருந்து 7ஆம் பார்வையாகப் பார்த்தால் நல்ல பலன் உண்டு. உங்கள் தேகம், வாத தேகம். இரத்தக் கொதிப்பு, இதயநோய், பித்த நோய் ஆகியன மத்திம வயதுகளில் ஏற்படும்.

உங்கள் இராசியாதிபதி குருவின் கிரக அதிபதி தட்சிணா மூர்த்தியாவார். அவருக்குப் பூசைகள், அர்ச்சனைகள் ஆகியன செய்தால் இராசியாதிபதியின் பலனைப் பெறலாம். திசை புத்தியிலும் நல்ல பலன்கள் கிட்டும். இந்த இராசியில் மூல நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் குறித்துச் சித்தர் சில பாடல்கள் பாடியுள்ளார்:

"மத்ங்கொண்ட வேழமதி னுருவம் போலே
மைந்தனுக்கு நயனமது சிறுரூப மாகும்!
குதரோகம் சிலபீடை பிணிக ளொத்துக்
குமரனுக்கு மத்திமம் மேல் யோகம் பாரே"

இவர்கள் பெரிய உருவத்தினர்களாகவும், சிறிய கண்கள் உடையவர்களாகவும் இருப்பார்கள். இவர்களின் மத்திம வயதில் மலவாயிலில் ரோகமும், சில பீடை, பிணிகளும் ஏற்பட்டு விலகும். இவ்வாறு ஏற்பட்டு விலகிய பின் நல்ல யோகங்கள் பின்னால் வருமென்று காண்ட நூல்கள் கூறுகின்றன.

இதே இராசியில் பூராட நட்சத்திரத்தில் பிறந்தவர்களுக்குரிய பலன்கள் :

"புண்ணியங்கள் புஜபல பராக்கிரமங்கள்
பொன்களொத்துத் திரவியங்கள் தேடும் மார்க்கம்
கண்ணியனாய்த் தாய்தந்தை உபாசியென்க
கள்ளனுக்குக் கள்ளனென்றே மல்லனுக்கு மல்லன்தானே"

எதிரிகளை வெல்லுவதில் புஜபல பராக்கிரமம் கொண்டவர் களாகவும், பொருள்களைத் தேடுவதில் ஆர்வமுள்ளவர்களாகவும்,

நல்ல வாழ்வு வாழ வேண்டுமென்ற தீவிர விருப்பமுள்ளவர்களாகவும், அதே சமயத்தில் கண்ணியமுள்ளவர்களாகவும், தாய், தந்தையரை மதித்து நடப்பவர்களாகவும் தீயவர்களுக்குத் தீயராகவும், முரடர் களுக்கு முரடராகவும் இருப்பார்கள். அயல் தேசங்கள் சென்று மீண்டுவரும் பாக்கியமும் உண்டு.

இதே இராசியில் உத்திராட நட்சத்திரத்தில் பிறந்தவர்களுக்குரிய பலன்கள் :

"மாற்றுக் குறையாத சொக்கமென்றே
மோகினிக்கு மஞ்சாத மௌனயோகி
ஆற்றுக்கு லிட்டாலும் அளந்திடுவான்
அறிவாளன் மூர்க்கனும் முதலைதானே."

இவ்வாறாய், எவரும் குற்றம் சொல்ல முடியாத குணங்கள் இருந்தும், பெண்ணென்றால் சில காலம் சற்று விலகியிருத்தலும், இனம் புரியாத மௌன நிலையில் இருத்தலும், யாருக்கு எந்தப் பொருளைக் கொடுத்தாலும் அவருக்குத் தகுமாறு கொடுத்தலும், நல்லதைச் செய்தலும், நல்ல அறிவுடன் இருந்தாலும், கிடைத்ததைச் சுருட்டுகின்ற மனோபாவமும் உண்டு. இப்படித் தனுர் இராசியில் பிறந்தவர்களுக்குப் பலன் இருந்தாலும், இராசியாதிபதி குருவின் பலனை அடைய நவரத்தினங்களுள் ஒன்றான புஷ்பராகத்தைப் பஞ்ச கௌவிய சுத்தி செய்து, தங்க மோதிரத்தில் வைத்து, வளர்பிறை குருவாரம் சூரிய உதயத்திற்கு முன் வல மோதிர விரலில் அணிய நல்ல ஐஸ்வரியங்களும், நல்ல பலன்களும் உண்டாம். தட்சிணா மூர்த்தி தேவருக்குப் பிரீதிகள், அர்ச்சனைகள் செய்தால் நல்ல பலன்கள் உண்டு.

குருவின் கிரக ஆதிபத்திய பலன்களைப் பதஞ்சலி மகரிஷி கூறுகின்றார்.

இராசியாதிபதி குரு ஆட்சி பெற்றால் நல்ல அந்தஸ்து, சாஸ்திர உபன்யாசம், ஆச்சாரிய பீடம், குரு நிலையடைதல், உபதேச கர்மம், மகப்பேறு, சொர்ணலோக வேலைகள், சொர்ணாபரணம் அணிதல், அதிபதி நிலையடைதல் போன்ற பலன்கள் அமையும்.

குருவானவர் கடகத்தில் உச்சம் பெற்றால் வாக்குவன்மை, அரசு உத்தியோகம், உயர் பதவியடைதல், இதய நோய் நீங்குதல், அட்டமா சித்துகள் சித்தியாதல், சொர்ண வைரவர் சித்தி கிட்டுதல், குரு யோகங்கள், புத்திர இலாபங்கள், ஏதாவது ஒரு யோகத்தை ஜென்மத்தில் குருவானவர் உச்சம் பெற்றால், கோட்சாரத்தில் அந்த இடத்திற்கு வரும்பொழுது தீர்க்கமாய்க் கிடைக்கும்.

இராசியாதிபதி குருவானவர் யாதொரு கிரகத்திலும் நட்புப் பெறில், ஆட்சி பெற்ற பலனைப் போல், பாதிப்பலன் அடைவார்கள் என்பதாம். புத்திர சந்தானம், குலதெய்வ பாக்கியம், வழிபடுதல், தெய்வ உபாசனை போன்றவையும் நடக்கும்.

குருவானவர் யாதொரு வீடுகளிலும் பகை பெற்றால் புத்திர விரோதம், புத்திர கவலை, சித்தி கிட்டாமை, சொர்ண நட்டம், இதய நோய் போன்றவை ஏற்படுமென்பதாம்.

குருவானவர் மகரத்தில் நீசமானால் புத்திரனால் கேடு, புத்திர தோடம், மாரணம், இதய நோய், படபடப்பு, புகழ் மங்குதல், குருபீடச் சரிவு, இழுக்கு ஏற்படுதல் போன்ற பலன்களும் ஏற்படும்.

குரு கேந்திரங்களான 1, 4, 7,. 10இல் இருந்தால் உபய இலக்கினங்களுக்கோ, இராசிக்கோ கேந்திராதிபத்திய தோடமாகும். இது ஒரு தொல்லை தரும் தோடம். குருவானவர் எந்த வீட்டில் இருந்தாரோ அந்த வீட்டின் பலனைக் கெடுத்துக் கொடுப்பார் என்பதாம். கேந்திராதிபத்திய தோடம் பெற்றவர்கள் குரு, திசை புத்திகளில் புத்திர வேதனைகள் அடைவார்கள். இன்னும் பல காரக இன்னல் உண்டு. அவற்றை நீக்கிக் குருதேவரின் அருளைப் பெற புஷ்ப ராகத்தை அணிவதாலும், நவக்கிரகங்களுள் குருபக வானையோ தட்சிணாமூர்த்தி அல்லது பிரம்ம தேவனையோ வணங்கி வந்தாலும், நல்ல பலன்களைப் பெறலாம்.

அரச மரச் சமித்தினால் நெய் விட்டு ஹோமம் செய்வதாலும், தாமரை மலர்களால் குரு பகவானை அர்ச்சிப்பதாலும், கொண்டைக் கடலைப் படையல் செய்வதாலும், சந்தனம், மஞ்சள் அபிஷேகம் செய்வதாலும், குருபகவானின் அருளைப் பெறலாம். கேந்திராதி பத்திய தோடம் கொண்டவர்கள் அமாவாசை தொட்டு அடுத்த அமாவாசை - அதாவது, 45 நாள்களில் அதனுள்ளே வரும்

குருவாரம் அனைத்தும் விரதம் இருந்து, கடைசிக் குருவாரம் அன்று தட்சிணாமூர்த்தித் தேவருக்குக் கொண்டைக் கடலைப் படையல் செய்து, தாமரை மாலை அணிவித்து, சந்தன அபிஷேகஞ்செய்து, நெய் விளக்கேற்றி, மஞ்சள்ஆடை அணிவித்து, வணங்கி, குரு நாமாவளியை 108 தரம் கூறி, தரையில் சாஷ்டாங்கமாக வணங்கி வர, கேந்திராதிபத்தியம் விலகும். அன்று உபவாசமிருந்து தம்மால் இயன்ற அளவு சந்நியாசிகளுக்கு வஸ்திரதானமும், அன்னதானமும் செய்ய நல்ல பலனும், கேந்திராதிபத்தியம் விலகிச் சுபிட்சமும், குருதிசை புத்திகளில் அதித பலன்களையும் அடையலாம். குருபக வானுக்கு ஹோம சாந்திகள் செய்து . – அதாவது, முல்லை, தாமரை ஆகிய மலர்களைக்கொண்டு அர்ச்சித்து, அரச மர சமித்துகளால் ஹோமம் செய்து ஈசானிய திக்கு நோக்கி ஆவாஹனம் செய்வதாலும் குருபகவானின் பலனை அடையலாம் என்று பதஞ்சலி மகரிஷி பலன்கள் அடையும் உபாயங்களைக் கூறியுள்ளார்.

கேந்திராதிபத்திய தோடத்திற்கு மாற்று உபாயமாகக் குரு ஹோமம் செய்து, அதில் சிறிது பொன்னையும், மஞ்சள் வஸ்திரத்தையும், முல்லை, கொண்டைக்கடலை, கனக புஷ்பராகம், சர்க்கரை, அரசமர சமித்து போன்றவற்றை ஆவாஹனம் செய்து, ஆஹுர்தியாக்கி, செந்தூரான குருதலத்திற்குச் சென்று வணங்கி, ஆஹுர்தியை கடலில் கரைக்க, தோடம் விலகும். சாதுக்களுக்கு அன்னதானமும் செய்யலாம். இதனால் புத்திர சந்தானங்கள் உண்டாகும். புத்திர வேதனைகள், பீடைகள் ஆகியன விலகும்,

தனுர் இராசி அன்பர்களே! இந்தப் பிரீதியைச் செய்து தங்கள் வாழ்வில் சகல பாக்கியங்களையும், குருதேவரின் அருளைப் பெற வேண்டுமாறு வணங்குகின்றேன்.

## மகரம்
## முதல் பாவம்

`அப்பனே மகரமென்ற பலனைக் கேளாய்
அறிவாளன் அனுட்டானம் தெய்வநிலை

தப்பாது ஆசார விதியுடனேயிருக்கத்
துலங்கமேல் வையகத்தே வாழ்வானே!

வாழ்வானே சிக்கனமும் குணவானாய்
வறுமையில்லை சேர்த்துவைத்த செல்வங்களால்
தாழ்வில்லை மைந்தனுக்கு நல்யோகம்
தரணியிலே சிறிதிருந்தே பெரிதாகும்!

ஆகுமே செல்வங்கள் குவியும்காண்!
அன்பனவன் அன்பாலே அடிபணிவான்!
தேகமேல் சௌக்கியங்கள் நலமுண்டு!
துன்பத்திலும் இன்பநிலை காண்பார்மெத்த!

மெத்தமேல் புத்திரங்கள் குறைவில்லை!
மௌனமாய் மைந்தனவன் தான்செல்ல
மத்திமத்தில் தாண்டியே உத்தமமாய்
மைந்தனுக்குக் குருவருளின் திருவருளால்!

திருவருளால் புராணங்கள் காதையொத்துத்
தனயனுக்குப் பெருவாறாய் அறிவுநிலை
கருத்துடனே தர்மநிலை மெத்தவுண்டு
காட்டலாம் தன்பந்த பலனுமில்லை!

இல்லையப்பா தூற்றும்விதி மெத்தவுண்டு
இயல்புடனே விட்டிடினும் நலமாகும்!
வல்லதொரு காலமதும் மெத்தமேலாய்
வையகத்தில் வாழ்வான வாழ்வுதானே!

தானென்ற தனயனவன் கபிலநிறம்
தகடான சொர்ணம்போல் வளையும் வித்தை
ஊனென்ற உடலதுவும் உள்ளவரை
உண்மையுமாய் வளைந்துநெளிந்து தான்செல்ல

செல்வானே காரியங்கள் ஜெயவானாய்
சீமானும் கைகட்டும் நிலையொக்கும்
வாழ்வுமேல் வாழ்வொத்து மைந்தனுக்கு
விரணமாகி ஆறிப்போன வடுதான்பாரே!

## விளக்கம்

உத்திராடம் 2, 3, 4ஆம் பாதமும், திருவோணமும் அவிட்டம் 1, 2ஆம் பாதம் கூடிய மகர இராசி அன்பர்களே!

நீங்கள் தெய்வ பக்தி உள்ளவராயும், ஆச்சார அனுட்டான விதிகளைக் கடைப்பிடிப்பவராயும், நல்ல கல்வியறிவுடையவராயும் குலதெய்வ அருள் பெற்றவராயும் விளங்குவீர்கள். பெரும்பாலும் தீய பழக்கவழக்கம் ஏதும் இராது. அப்படியே இருந்தாலும், 30 வயதிற்குள் அவை அனைத்தும் கைவிடப்படும். அதிகச் செலவு செய்ய மாட்டீர்கள். வழக்கு, வில்லங்கம் என்று ஏதாவது இருக்கும். அதனால் பணம் விரயமாகும். சேர்த்து வைத்த செல்வங்கள் குறையா. நல்ல நண்பர்கள் சகவாசமும், அவர்கள் உதவியும் வாய்க்கும். உங்கள் வாழ்வு சாதாரணமாகத் தொடங்கி வளர்ந்து சிறப்புடன் மலரும். பெரும்பாலும் உங்கள் குணம், அன்புக்கு அடிபணியும் குணமாகும். யாரேனும் முரட்டுத்தனமாய்ப் பேசினால் அவர்களைப் பொருட்படுத்துவதேயில்லை. உங்களின் சில பழக்க வழக்கங்கள் மற்றவர்களுக்கு எதிராகவேயிருக்கும். மற்றவர்கள் உங்களைக் கஞ்சன், கருமி என்று தூற்றும் நிலைகூடச் சில காலகட்டங்களில் ஏற்படும். மனைவியரிடத்தில் பிரியம் இருந்தாலும், அவர்கள் உங்களைப் புரிந்துகொள்ளாமல் பேசுவார்கள். சிறிது நோயுடன் கூடிய மனைவியே அமைவார்கள். அவர்களுக்கு நோய் ஏற்படும். பின்பு விலகிவிடும்.

துன்பத்தில் இன்பம் காண்பவர்கள் நீங்கள். உங்களுக்குக் குழந்தை பாக்கியம் குறைவிருக்காது. நல்ல மகான்களின் அருளும், தெய்வங்களின் அருளும் பூரணமாய் உண்டு. உங்களி பந்துக்கள் நெருங்கியிருந்தாலும், அவர்களால் துளியும் பயனில்லை. சில காலங் களில் உங்கள் சொந்தபந்தங்களே உங்களைத் தூற்றும். பெரும் பாலும் எதிலும் வளைந்து கொடுக்கக்கூடிய திறனுண்டு. மற்றவர்கள் போக்கிற்கேற்ப அனுசரித்துச் செல்வீர்கள்! பெரும்பாலும் உண்மை யாய் நடக்கவேண்டுமென்று விரும்புவது உங்கள் இயல்பு.

வாலிப வயதுகளில் செய்த சில தவறுகளினால் உங்களுக்குக் கடைசிவரை சஞ்சலமும், பயமும் இருக்கும். மற்றபடி காரியங்களை ஜெயிக்கும் திறனும், பெரிய மனிதர்களே உங்களை வணங்கும்

குணமும், மதிக்கும் திறனும் உங்களிடம் உண்டு. 'ஆறிவிட்ட புண்ணின் வடுப்போல்' வாழ்வின் சில நிகழ்ச்சிகள் மனத்தில் மாறாமல் இருக்கும். அந்த நிகழ்ச்சிகளை நினைத்து அதிகம் வருத்தப்படுவீர்கள்.

மகர இராசியில் பிறந்த உத்திராடம் 2, 3, 4ஆம் பாதக்காரர்களுக்கு மகர இராசியில் தனிப்பட்ட பலன்கள் உண்டு. இவர்கள் மரியாதையான குணமுடையவர்கள். இவர்களிடம் காரிய ஜெயம் அதிகம் உண்டு. ஏமாற்றத்தைத் தாங்கும் குணம் குறைவு. அதனால் சஞ்சலங்கள் அதிகமாகும். தெய்வ பக்தியும், அனுட்டானங்களும் நிறையவே இருக்கும்.

திருவோண நட்சத்திரத்தில் பிறந்தவர்களின் பலன்கள்:

"இன்னவனும் கருமியென்றே கோபியாவான்
இயம்பினாலும் மாற்றியுரைத்தே குழம்புவானே !
அன்னவனும் வோணத்தில் சூரனென்றே
அறிவாளன் ஆத்திரத்தால் பாதகன் பாரே !"

இவ்வாறு, சிக்கன குணமுடையவர்களாகவும், முன்கோபமுள்ளவர்களாகவும், அவசரத்தில் ஏதேனும் பேசிவிட்டால் அதை மன்னிக்கும்படி கேட்டுக்கொண்டு மறுபடியும் மாற்றிப் பேசும் குணமுள்ளவர்களாகவும் இருப்பார்கள். ஆத்திரத்தால் சில செயல்கள் பாதகப்படும்; ஆனால், தெய்வபக்தி, மிகுந்தவர்களாயிருப்பார்கள்.

இந்த இராசியில் அவிட்ட நட்சத்திரத்தில் 1, 2ஆம் பாதத்தில் பிறந்தவருக்குச் சில பலன்கள் மகரிஷி கூறியுள்ளார்:

"பெருத்ததொரு அங்கமது தான்கொண்டு
பெருமைக்குப் பஞ்சமில்லை வீரனாவான் !
சுருதிபல கற்றிருந்தும் நடக்கான்காணே
சுத்ததொரு தெய்வக்ஞன் பெருங்கோபியாவான்"

இவ்வாறு, கனத்த சரீரத்தையும் சிறந்த பெருமைகளையும் உடையவர்களாகவும், எதற்கும் அஞ்சாதவர்களாகவும், இளைப்பு நோய் உடையவர்களாகவும், பல சாஸ்திரங்கள் கற்றிருந்தும் அவற்றின்படி யோசித்தே நடப்பவர்களாகவும் இருப்பார்கள். சில காலம் சாஸ்திரங்கள் தமக்கில்லையென்று எண்ணத் தோன்றும்.

குணத்தையும் பெற்றவர்களே. ஆனால், தெய்வ பக்தியினராகவும், குரு விசுவாசியாகவும், பெருங்கோபக்காரர்களுமாகவும் விளங்கு வார்கள். இத்தகைய மகர இராசிக்காரர்கள் வாத ரோகம் உடையவர்களாய் இருப்பார்கள். மத்திம வயதிற்குமேல் முழங்கால் வாதம் ஏற்பட வாய்ப்பு உண்டு. இந்த இராசியாதிபதி சனியின் கிரக அதிபதியான சாஸ்தாவையும், ஐயனாரையும் வழிபட்டால் நல்ல நன்மையுண்டு. ஐயப்ப ஸ்வாமி கோயிலுக்கு ஒரு முறை சென்று வந்தால் திசை புத்தியில் நல்ல பலன்கள் கிட்டும்.

இவர்கள் மேற்கு நோக்கி நின்று, சனியை வழிபட்டு, காக்கைக்கு அன்னமிட்டால் 7½ சனியும், அட்டமத்துச் சனியும் நல்ல பலன்களைச் செய்யும்.

கருங்காலி விறகினால் கூடிய வன்னி சமித்தினால் சனி ஹோமம் செய்து, எள்ளுச்சாதம், படைத்து, கரிய வஸ்திரம் சாற்றி, சாஸ்தாவையோ, சனி பகவானையோ வணங்கினால் மிகுந்த நன்மையுண்டாகும். அதனால் திசை, புத்திகளிலும், சனி கோட் சாரத்திலும் நல்ல பலன்களைக் கொடுப்பார்.

நவரத்தினங்களுள் ஒன்றான நீல இரத்தினத்தைப் பஞ்ச கௌவிய சுத்தி செய்து, மோதிரத்தில் வைத்து, வளர்பிறை சனிவாரம், சூரிய உதயத்திற்கு முன், வலமோதிர விரலில் அணிய உத்தமமான பலன்கள் கிடைக்கும். நீல இரத்தினத்தை ஒருவாரம் வீடுகளில் வைத்திருந்து பலனைப் பார்த்து, அதன் பின்பு அணிய நல்ல நிலைகள் உண்டு.

உங்கள் இராசியாதிபதியான சனி மந்த நடையுள்ளவர். ஒரு வீட்டைத் தாண்டுவதற்கு 2½ வருடம் ஆகும். வக்கிரமானால் 3 வருடங்கூட ஆகலாம். ஆனால், இராசியாதிபதி தம் சொந்த வீடான மகரத்திற்கு வரும்போது ஓரளவு நல்ல பலன்களையே செய்வார்.

இராசியாதிபதி சனி, கடகம், சிம்மம், விருச்சிகம் ஆகிய பகை வீடுகளைத் தவிர்த்தும் நீச வீடான மேஷத்தைத் தவிர்த்தும் மற்ற வீடுகளில் இருந்தால் நல்ல பலன்களே செய்வார்.

இராசியாதிபதி சனி துலாம் வீட்டில் உச்சமாகித் தம் சொந்த வீடான மகரத்தை 3ஆம் பார்வையாகப் பார்த்தாலும், மகரத்தில்

ஆட்சியாகி 10ஆம் பார்வையாக உச்ச வீட்டைப் பார்த்தாலும். நல்ல பலன்கள் திசை புத்திகளிலும் கோட்சாரத்திலும் உண்டு.

சனி சூரியனோடு அவர்கள் வீடுகளில் சேர்ந்திருந்தாலும், சூரியன் சனி வீட்டில் சேர்ந்திருந்தாலும் அதமமான பலன்களையே செய்வார் என்பதாம். அந்தத் திசை புத்திகளில் குழப்பமான பலன்களே அதிகமாகும்.

சனி மேஷ வீட்டில் நீசமாகி, அந்த வீட்டு இராசியாதிபதி செவ்வாய் ஆட்சி உச்சம் ஏறினாலும், அந்த இராஜயோகமானது அவருடைய திசையில் மட்டுமே கிடைக்குமென்பதாம்.

இவ்வாறாய் மகர இராசி அன்பர்களுக்குப் பலன் இருப்பதால் சனி பகவானை வணங்கி, நல்ல பலனைப் பெறுமாறு வேண்டுகின்றோம்.

## கும்பம்
## முதல் பாவம்

கோகுடமே யதனில் ஜெனித்தோரின் ரூபங்களும்
    குறிப்பான விட்டம் முன்னான்கு சதயமொத்து
வாகுடனே பூரட்டை சூலத் தோடும்
    வையகத்தில் சார்வான பலனைக் கேளே!

கேளேதான் என்னருமை ஞான தண்டி!
    குள்ளனாய் நடுத்தரவான் ரோமக் கட்டாய்த்
தோளிலோ பராக்கிரமம் செய்யலாகும்
    துலங்கமேல் அனுட்டானம் தெய்வபயம்!

பயமேலாய் பக்தியொத்துத் தானிருக்கப்
    பங்கமாய்ச் சுவாசங்கள் தொல்லைதானே!
துயரமொடு துன்பங்கள் கலந்தே வாழ்வான்!
    தனயனவன் கும்பமுனி போலேதான்!

போலவரும் தொப்பையுடன் தொந்தியொத்துப்
    புகலவரும் சினேகங்கள் தொந்தம்தானாய்

சூழவரும் சத்ருகள் தொல்லைமேல்
சூட்சுமமாய் விலகிடவே நன்மைதானே !

தானுமொரு தனங்கள்பல செய்யவேண்டித்
தனயனவன் பொன்பொருளைத் தானிழக்கக்
காணுமொரு விதிவயத்தால் பிற்பலனாய்க்
குமரனவன் பின்வாழ்வில் பெறுவான்பாரே !

பாரப்பா பகட்டுகள் குறைந்தேகாணும் !
பங்கமொடு சிலசூழ்ச்சி செய்யத் தோன்றும் !
காரணமாய் விட்டுவிட மனதேயெண்ணிக்
கன்னியர்க்கு யினியனாய் இருப்பான்காணே !

காணவரும் குன்மநோய் வருமேதான்
கருதமேல் வாயுத்தொந்தம் அட்டியில்லை !
பேணவரும் முழங்காலும் ரோகம் காணும்
பொருத்தமில்லாப் பருதியவர் காரியுடன் !

காரியுடன் கூடிடவே விதியே மாறும்
கருத்தான மைந்தருக்குப் பலனே கூறக்
கூறிடுமோர் காரிசாந்தி தான்பின்னாய்க்
குறிப்புடனே ஆயுளதும் தீர்க்கமப்பா !

அப்பனே ஆயிரமாம் வித்தையுண்டு !
அறியமேல் தெளிவில்லை தோண்டுவானே !
தப்பாமல் களத்திரமும் நன்றேயாயின்
தனயனுக்கு நற்பலன்கள் பெருகும் பாரே !

## விளக்கம்

அவிட்டம் 3, 4ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி 1, 2, 3ஆம் பாதங்கள் ஆகியவற்றில் பிறந்தவர்களான கும்ப இராசி அன்பர்களே!

நீங்கள் நடுத்தர உயரத்தோடு, கடுமையான ரோமக்கட்டோடும், நல்ல திரேக இலட்சணங்களோடும் திகழ்வீர்கள். மற்ற இராசிக்காரர்களின் இரகசியங்களைகூடக் கண்டுபிடித்துவிடலாம். ஆனால், கும்ப இராசிக்காரர்களிடமிருந்து உண்மையைப் பெறுவது கடினம். கும்ப இராசியான கும்பத்தில் என்ன இருக்கிறது என்று

யாருக்குத் தெரியும்? பெரும்பாலும் உங்களைப் புரிந்துகொள்ள முடியாது. அனைத்தையும் மூடி மறைப்பீர்கள். பார்க்கச் சாதுபோல் இருப்பீர்கள்; ஆனால், மனத்தில் அந்தச் சாதுத்தனத்தை மிஞ்சுகின்ற பயங்கர எண்ணங்கள் உருவாகும். அது ஏன் என்று உங்களுக்குத் தெரிந்திருந்தும் குழம்ப வேண்டியிருக்கும். நீங்கள் உங்களின் நண்பர்களிடம் அதிகமாய் ஒட்டுவது கடினம். இந்த விஷயத்தில் யாரையும் நம்பமாட்டீர்கள். நேரத்திற்கு ஒரு யோசனை இருக்கும். நண்பர்கள் பழக்கங்களும் அதிக நாள் நீடித்திருக்கா. சில வம்பான விவகாரங்கள் அவர்களை வந்து அழைத்துச் செல்லும். சிம்ம இராசிக்காரர்கள் உங்களிடம் எவ்வளவு நெருங்கிப் பழகினாலும், அப்பழக்கம் வெட்டிச் சென்றுவிடும்.

எந்த விஷயத்தையும் கண்டும் காணாததுபோல் இருந்துவிட்டாலும் அதை எண்ணிச் சதா குழம்ப வேண்டியிருக்கும். கும்ப இராசிக்காரர்களுக்குக் கும்ப முனியான அகஸ்தியரைப் போலவே இளவயதில் தொந்தியிருக்கும்.

வாய்வு சம்பந்தப்பட்ட நோய்களும், சில சமயங்களில் சுவாசத்தடையும், குன்ம நோயும், கால்கடுப்பும் முழங்கால் ரோகமும் ஏற்பட வாய்ப்பு உண்டு.

மூர்க்கத்தனமான கோபங்கள் எப்போதாவது ஏற்படும். அதைக் கண்டு அனைவரும் அஞ்ச நேரும். ஆனால், கோபம் வந்த வேகத்தில் மறைந்துவிடும்.

இந்த இராசிக்காரர்கள் பெரும்பாலும் சுயதொழில் செய்வார்கள். அரசு வேலையில் இருப்போர் சதா மேலதிகாரிகளின் தொல்லையை அனுபவித்துக்கொண்டிருப்பார்கள்.

இந்த இராசியில் அவிட்டம் 3, 4ஆம் பாதத்தில் பிறந்தவர்களுக்கான பலன்கள் :

**"அப்பனே சோம்பலுடன் திரிவான் காணே !**
**அறியமேல் கர்மமென்றால் வெறியாய்க் காணும் !**
**தப்பாமல் நம்பினோரைக் கைவிடாது**
**தனயனவன் ஆயுளொடு இருப்பான் பாரே !"**

இந்த அவிட்டம் 3, 4ஆம் பாதங்களில் பிறந்தவர்கள், மிகுந்த சோம்பல்காரர்கள். இந்த சோம்பலாலேயே அதிகக் காரியங்கள், முடிவுகள் வீணாய்ப் போவதுண்டு. ஆனால், இக்கட்டான சூழ்நிலையில் தொழிலொன்று செய்தே ஆகவேண்டுமென்று வெறியாய் இருப்பார்கள். சொன்ன சொல்லைக் காப்பாற்றும் குணமுண்டு. அது முன், பின்னே நடக்கும்.

இந்தக் கும்ப இராசியில் சதய நட்சத்திரத்தில் பிறந்தவர் களுக்கான பலன்கள்:

"வாய்ச்சாலன் வல்வித்தை சோதிடனாய்
வலிவுள்ளோன் மெய்யோனாய் முன்கோபி
தாய்உபாசியென்றே சத்ருக்கள் செயவானாய்த்
தனயனுக்கு முன்பல யோகங்கள் உண்டுதானே !"

இவர்கள் ஒரு கருத்தை மாற்றிக் கூறுவதில் வல்லவர்கள். இந்த நட்சத்திரத்தில் பிறந்த பலர் சோதிட அறிஞர்களாகவும் சோதிடத்தை ஆராய்பவர்களாகவும் இருப்பார்கள். தேக வலிமையோடும், பொய் பேசாத குணத்தோடும் ஒருவர் சொல்லைப் பொறுத்துக்கொள்ள இயலாதவர்களாகவும், தம் தாயினிடத்தில் பற்றுள்ளவர்களாகவும், சத்துருக்களை ஜெயிப்பவர்களாகவும், முன்பே நல்ல யோக குணங் களைப் பெற்றவர்களாகவும் இருப்பார்கள்.

இதே கும்ப இராசியில் பிறந்த பூரட்டாதி நட்சத்திரக்காரர் களுக்குரிய பலன்கள்:

"பந்தங்களை அற்றதொரு தொடர்பேதான்
பகருவேன் தனியனாய் மந்திபோலே !
மந்தமொடு மதிமயக்க குணமும் பெற்றே
மைந்தனவன் இருடிபோல் வாழ்வான் பாரே"

இவ்வாறாய்ச் சொந்தபந்தங்கள் இளமையில் கூடியிருந்தும், அவர்களின் தொல்லையால் வெறுப்புற்றுத் தனியே இருப்பார்கள். மற்றவர்களைக் கலந்தாலோசிக்காது தாமே முடிவு செய்து கொள்ளும் குணம் பெற்றவர்கள். சில காலம் இலாகிரி வஸ்துக்கள், மதிமயக்கும் பெண், போதை ஆகியவற்றின் தொடர்பு பெற்றுத் திரிய நேரிடும். பின்பு, யோகி போல், தாம் அறிந்ததை மற்றவர்களுக்குப்

போதிப்பதிலேயும், மற்றவருக்கு நல்ல ஆசிகளைச் செய்வதிலேயும் தம் வாழ்வைக் கழிப்பார்கள்.

இவ்வாறு கும்ப இராசியில் பிறந்த நட்சத்திரக்காரர்களுக்குப் பலன்கள் அளிப்பார். இராசியாதிபதி சனி மிகவும் மந்தமான கிரகம்; ஆனால், பலன்கள் கொடுப்பதில் வல்லவர்.

இராசியாதிபதி சனி $7\frac{1}{2}$ நாட்டிலும், அட்டமத்துச் சனியிலும் கேடான பலன்களைச் செய்வார். மகர இராசிக்குக் கூறியது போல், சனி பிரீதிகளைச் செய்தால் சுபிட்சமான பலன்கள் உண்டு. அல்லது நீல இரத்தினத்தை அணிய நன்மையான பலன்கள் ஏற்படும். சனியின் கிரகாதிபத்தியங்கள் சிலவற்றைப் பார்க்கையில், சனி மகர, கும்பங்களில் ஆட்சி பெற்றால் அலட்சியப் போக்கும்,, எதைப் பற்றியுமே கவலை கொள்ளாதிருத்தலும், அயல்தேச யோகமும் உண்டு. விரயத்தில் ஆட்சியானால் வீண் விரயமும், வீண் அலைச்சலும் அதிகமாயிருக்கும். கும்பத்தில் ஜென்மத்தில் ஆட்சியானால், எதிலும் தலையிடுதல், நிதானமின்மை, மாட்டுவித்தல் போன்றவை ஏற்பட வாய்ப்பு உண்டு.

சனியானவர் துலாத்தில் உச்சமானால் ஆயுள் பலமும், கேட்டதைக் கொடுத்தலும், உயர்ந்த அந்தஸ்தும் தைரியமும் வீரியமும் ஏற்படும்.

சனியானவர் மேஷத்தில் நீசமானால் முழங்கால் வாதம், கால்கடுப்பு, மந்த நடை, சோம்பல், தாழ்ந்தோர் நட்பு, அலட்சியப் போக்கு போன்ற பலன்கள் நடைபெறும். உழவுத்தொழில் சிறப்பாயிராது. அங்கஹீனம் ஏற்பட வாய்ப்புண்டு.

இராசியாதிபதி சனி யாதொரு வீட்டிலும் நட்புப் பெற்றால் உண்ணுதல், உறங்குதல் எல்லாவற்றிற்கும் தலையாட்டிக்கொண்டு சோம்பல்தனமாகவே காரியங்களைச் செய்தல் என வாழ்க்கை அமையும். சொற்ப இலாபமும் உண்டு.

சனியானவர் யாதொரு வீட்டிலேனும் பகை பெற்றால் தண்டனையும், உயர்ந்தோரிடத்தில் பகையும், மனக்கிலேசமும், தள்ளாடி நடத்தலும், தடுமாற்றமும், புத்தி பேதலித்தலும், வாகன பயமும், களத்திர துரோகமும் உண்டாகும்.

இவ்வாறாய்ச் சனி கிரகாதிபத்திய பலனிருந்தாலும் சனியின் துர்பலன்களை நீக்க, முன் சொன்ன சாந்தி முறைகளைச் செய்து, நல்ல பலன்களை அனுபவிக்குமாறு வேண்டுகிறோம்.

## மீனம்

## முதல் பாவம்

கெண்டையிலே அம்புலியும் தானிருக்கக்
குமரனுக்கு முற்பலன்கள் மெத்தவுண்டே!
தொண்டேதான் தெய்வசித்தி நிறைந்து மேதான்
தனயனுக்குப் பின்வாழ்வு மத்திமம் பாராய்!

மத்திமத்தில் மைந்தனுக்குப் பந்தயிடர்
மயக்கியே தட்டியே பறித்துச் செல்வர்!
சித்தமதும் சிதறுண்டே வீணாய்ப் போகச்
சித்தனருள் பித்தனுக்குப் பின்தானாய்

தானாயே வருந்தியே வாழ்வதுவும்
தன்குடும்ப வாழ்வொத்து தனியனாயே
கோனான வாழ்வதுவும் தான்கிட்ட
குமரனுக்கு முன்னூழின் பங்கமெத்த

மெத்தமேல் மனையாளால் லாபமுண்டு
மேவியதோர் முன்வினையும் பின்தாக்க
சிக்கியதன் வலையினிலே தவிக்கும் மீனாய்ச்
சோதரரின் கபடமொழி பலபடவாய்!

பலபடவாய் மைந்தனவன் தான்சிக்கப்
பயங்கரங்கள் பலவாறாய் அனுபவிக்கச்
சிலகாலும் மேடேதான் வருமேதான்
சிலவில்லை வரும்படிகள் மெத்தவாகும்!

ஆகுமென்றே நீருபாதை மைந்தனுக்கு
ஆறேழின் அகவைமேல் தான்காட்ட
நோகுமென்ற உடலதனால் விதிநிலையும்
நாயகனால் நாயகிக்கும் தொல்லைதானே!

தொல்லைமேல் துயரங்கள் தான்பட்டும்
தொலைதூரம் ஜலம்மேலச் செல்லலாகும்!
வல்லதொரு வாகனங்கள் கால்நடைகள்
வழுத்தக்கேள் கிருஷிநலம் தானுண்டாம்!

உண்டப்பா உடுக்கையோகத் திறத்தாலே
உரைக்கவரும் மைந்தனவன் மீடேறக்
கண்டதொரு வல்வினையும் தானகற்றக்
காட்டலாம் குருபிருதி விளம்பினேனே!

## விளக்கம்

கல்வியறிவிலும், கேள்வி ஞானத்திலும் தெய்வ பக்தியிலும் மேலோங்கியிருக்கும் மீன இராசி அன்பர்களே!

வாழ்க்கையில் உங்களுக்கு முற்பலன்கள் அதிகம். 20ஆம் வயதிலிருந்து 35ஆம் வயதுவரை இராஜபோகமாய் வாழ விதியுண்டு. ஆடம்பரப் பிரியரான நீங்கள் அனைத்துச் செல்வங்களையும், அறியாமலேயே அழிக்க வேண்டியது நேரலாம். எனவே, கவனமாய் இருத்தல் நலம். பின்வாழ்வில் அநேக துயரங்கள் உண்டு. நீங்கள் ஆடம்பரமாய் இருந்த காலத்தில் சொந்தபந்தங்கள் உங்களைச் சுற்றியிருந்து இருப்பதைச் சுருட்டிச் செல்லும். அதன் பின்னால் பந்தங்களினால் சிறு உதவியும் கிட்டாது. உங்களின் சித்தத்தை மயக்கத்திலேயே செலவிட வேண்டியிருக்கும். ஆனால், வரக்கூடிய மனைவி சகலத்தையும் கட்டிக் காப்பாற்றக்கூடியவளாயிருப்பாள். 7ஆம் இடத்ததிபதி புதனோ 10ஆம் இடத்ததிபதி குருவோ சேர்ந்து சுப வீடுகளிலோ 7, 10ஆம் இடங்களில் ஆட்சியாகச் சேர்ந்தோ இருந்தால் வரக்கூடிய மனைவியினால் யோகமாகும்.

சில கட்டங்களில், சொந்தபந்த உதவியின்றி, யாரிடமும் பேசாமல் தனியாக இருக்கும் நிலை ஏற்படும். முன்னூழின் வினையினால் இந்த இடைஞ்சல்கள் ஏற்படலாம். சகோதர சகோதரர்களின் கபடமான சொற்களை மதிக்காத தன்மையையும் சில கட்டங்களில் ஏற்க வேண்டியது நேரும்.

நீங்கள் நடுத்தர உயரத்தோடும், பிரகாசமான அகல நெற்றியோடும் இருப்பீர்கள்.

மத்திம வயதுகளில் நீருபாதைகள் ஏற்படும். சிரசு வலிகளும் உண்டு. இதனால் உங்கள் மனைவிக்கும் குழந்தைகளுக்கும் தொல்லைகள் ஏற்படலாம். இலாபங்கள் வந்தால் தொடர்ந்து வந்துகொண்டே இருக்கும். அந்த நேரம் சுதாரித்தல் நலம். நட்டம் வந்தால் தொடர்ந்து ஏற்படும். கடன் தொல்லைகள் அதிகம் ஏற்படலாம்.

சில கட்டங்களில் அயல் நாடுகளுக்கு அடிக்கடி செல்ல நேரலாம். இராசிக்கு 12ஆம் இடத்து அதிபதி சனி கும்பத்தில் ஆட்சியானால் இந்தப் பாக்கியம் அடிக்கடி உண்டு. உங்களுக்கு விவசாய வர்க்கங்கள், கால்நடைகள், வாகனங்கள் ஆகியன உண்டு. இந்த அனைத்துப் பலன்கள் வந்தாலும் மொத்தமாய் வரும்; இல்லையேல், மொத்தமாய்த் தொல்லைகள் வந்து சேரும்.

இந்த இராசியில் உத்திரட்டாதி நட்சத்திரத்தில் பிறந்தவர் களுக்குரிய பலன்கள்:

"உத்திரட்டை மீன்தோன்றில் பாக்கியனாய்
உள்ளில்லை மனமதுவும் செம்மையாகும் !
பித்தனுக்கு முன்வாழ்வு பின்தாழ்வாய்
பகருவேன் மத்திமம்பின் உத்தமமே"

இந்த நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் நல்ல பாக்கியசாலிகளாய் இருப்பார்கள். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் வழக்கம் இல்லை. நல்ல குணமாய் இருந்தாலும், அடுத்தவர்கள் இதனை வெறுப்பார்கள். முன் வாழக்கை நல்லதாகவும், பின்வாழ்வு துன்பமும் துயரமும் சூழ்ந்ததாகவும் இருக்கும். 40ஆம் வயதிற்கு மேல் மறுபடியும் யோகமுண்டு.

ரேவதி நட்சத்திரத்தில் பிறந்தவர்களுக்குரிய பலன்கள் :

"சாத்திரங்கள் தான்கற்ற வித்தையாளன்
சார்வான பலனதுவும் இல்லையெனில்
சூத்திரங்கள் பொய்யென்று தான்விளம்ப
சுத்ததொரு தெய்வசித்தி கிட்டும் பாரே"

நல்ல கல்வி கற்றிருந்தாலும், நல்ல பலன்களைத் தாள அறிந்திருந்தாலும், நடக்கவில்லையே என்றும் கிட்டவில்லையே என்றும் புலம்பித் திரிவார்கள்.

படித்தவை அத்தனையும் வீணென்றுகூடப் பேசுவார்கள். ஆனால், பின்வாழ்வில் தெய்வங்களின் அருளினால் வாழ்வார்கள். இவர்கள் பின்னே யோசிக்கும் திறனும், புத்தியும் உடையவர்கள். இவர்களுக்கு - அதாவது, மீன இராசிக்காரர்களுக்கு - 80 வயது வரை விதி தீர்க்கம் உண்டு.

இராசியாதிபதி குருவின் அருளைப் பெறக் கனக புஷ்ப ராகத்தைப் பஞ்ச கௌவிய சுத்தி செய்து, வளர்பிறை, குருவாரம், சூரிய உதயத்திற்கு முன் அணியச் சகல சௌபாக்கியங்களும் உண்டு என்றும், தனுர் இராசியில் குருபகவானின் கிரகாதிபத்திய மும், பலன்களும் கூறப்பட்டுள்ளது போல், மீன இராசிக்கும் உண்டு என்றும் அறிந்துகொள்ளுங்கள்.

# சூர்ய எந்திரம்




**ஸ்லோகம்**

சோணாம் போருஹ ஸம்ஸ்திதம் த்ரிணயனம்
வேதத்ரயீ விக்ரஹம்
தானாம் போஜயுகா பயானி தததம்
ஹஸ்தை ப்ரவாள ப்ரபம்
கேயூராங்க தஹார கங்கணதரம்
கர்ண்ணோல்லஸத் குண்டலம்
லோகோத்பத்தி விநாசயபாலனகரம்
ஸூர்யம் குணாப்திம் பஜே

# ஸூர்யாஷ்டோத்தர சத நாமாவளி

ஓம் அருணாய நம:
" சரண்யாய "
" கருணாரஸஸிந்தவே "
" அஸமானபலாய "
" ஆர்த்தரக்ஷகாய "
" ஆதித்யாய "
" ஆதிபூதாய "
" அகிலாகமவேதினே "
" அச்யுதாய "
" அகிலஜ்ஞாய "
" அனந்தாய "
" இனாய "
" விச்வரூபாய "
" இஜ்யாய "
" இந்த்ராய "
" பானவே "
" இந்திரா மந்திராப் தாய "
" வந்தனீயாய "
" ஈசாய "
" ஸுப்ரஸன்னாய "
" ஸுசிலாய "
" ஸுவர்ச்சஸே "
" வஸுப்ரதாய "
" வஸவே "
" வாஸுதேவாய "
" உஜ்ஜ்வலாய "
" உக்ர ரூபாய "
" ஊர்த்வகாய "
" விவஸ்வதே "
" உத்யத்கிரண ஜாலாய "
" ஹ்ருஷீகேசாய "
" ஊரஜ்ஜஸ்வலாய "

## பதஞ்சலி கதிர் நல்லைய ராஜா

| | | |
|---|---|---|
| ஓம் | வீராய | நம: |
| „ | நிர்ஜ்ஜராய | „ |
| „ | ஜயாய | „ |
| „ | ஊருத்வயா பாவரூப யுக்த ஸாரதயே | „ |
| „ | ரிஷிவந்த்யாய | „ |
| „ | ருக்ஹந்த்ரே | „ |
| „ | ரூக்ஷசக்ரசராய | „ |
| „ | ரிஜுஸ்வபாவசித்தாய | „ |
| „ | நித்ய ஸ்துத்யாய | „ |
| „ | ரிகாரமாத்ருகாவர்ண ரூபாய | „ |
| „ | உஜ்ஜவல தேஜஸே | „ |
| „ | ரிக்ஷாதி நாத ப்ரீத்ராய | „ |
| „ | புஷ்கராக்ஷாய | „ |
| „ | லுப்த தந்தாய | „ |
| „ | சாந்தாய | „ |
| „ | சாந்திதாய | „ |
| „ | கனாய | „ |
| „ | கனத்கனக பூஷாய | „ |
| „ | க்த்யோதாய | „ |
| „ | லூனிதாகில தைத்யாய | „ |
| „ | ஸத்யானந்த ஸ்வரூபினே | „ |
| „ | அபவர்க்க ப்ரதாய | „ |
| „ | ஆர்த்த சரண்யாய | „ |
| „ | ஏகாகினே | „ |
| „ | பகவதே | „ |
| „ | ஸ்ருஷ்டி ஸ்தித்யந்தாரிணே | „ |
| „ | குணாத்மனே | „ |
| „ | க்ருணிப்ருதே | „ |
| „ | ப்ருஹதே | „ |
| „ | ப்ரஹ்மணே | „ |
| „ | ஐச்வர்யதாய | „ |
| „ | சர்வாய | „ |
| „ | ஹரிதச்வாய | „ |

| | | |
|---|---|---|
| ஓம் | ஸௌரயே | நம: |
| ,, | தசதிக்ஸம்ப்ரகாசாய | ,, |
| ,, | பக்தவச்யாய | ,, |
| ,, | ஓஜஸ்கராய | ,, |
| ,, | ஜயினே | ,, |
| ,, | ஜகதானந்த ஹேதவே | ,, |
| ,, | ஜன்ம ம்ருத்யு ஜராவ்யாதி வர்ஜிதாய | ,, |
| ,, | ஔன்னத்ய பதஸஞ்சார ரதஸ்தாய | ,, |
| ,, | அஸ ுராரயே | ,, |
| ,, | கமனீயாய | ,, |
| ,, | அப்ஜ வல்லபாய | ,, |
| ,, | அந்தர் பஹி! ப்ரகாசாய | ,, |
| ,, | அசிந்த்யாய | ,, |
| ,, | ஆத்ம ரூபிணே | ,, |
| ,, | அச்யுதாய | ,, |
| ,, | அமரேசாய | ,, |
| ,, | ப்ரஸ்மை ஜ்யோதிஷே | ,, |
| ,, | ப்ரஸ்மை தாம்னே | ,, |
| ,, | அஹஸ் கராய | ,, |
| ,, | ரவயே | ,, |
| ,, | ஹரயே | ,, |
| ,, | பரமாத்மனே | ,, |
| ,, | தருணாய | ,, |
| ,, | வரேண்யாய | ,, |

## பதஞ்சலி கதிர் நல்லைய ராஜா

ஓம் க்ரஹாணாம் பதயே நம:

„ பாஸ்கராய „

„ ஆதி மத் யாந்த ரஹிதாய „

„ ஸௌக்ய ப்ரதாய „

„ ஸகல ஜகதலம் பதயே „

„ ஸூர்யாய „

„ கவயே „

„ நாராயணாய „

„ பரேசாய „

„ தேஜோ ரூபாய „

„ ஹ்ரீம் ஹிரண்ய கர்ப்பாய „

„ ஹ்ரீம் ஸம்பத் கராய „

„ ஐம் இஷ்டார்த்த தாய „

„ அம் ஸுப்ரஸன்னாய „

„ ஸ்ரீமதே „

„ ச்ரேயஸே „

„ பக்தகோடி ஸௌக்ய ப்ரதாயினே „

„ நிகிலாகம வேத்யாய „

„ நித்யானந்தாய „

# சந்திர எந்திரம்



# சந்த்ராஷ்டோத்தர சத நாமாவளி

| | | |
|---|---|---|
| ஓம் | ஸ்ரீமதே | நம: |
| ” | சசதராய | ” |
| ” | சந்த்ராய | ” |
| ” | தாராதீ சாய | ” |
| ” | நிசாக ராய | ” |
| ” | ஸுதா நிதயே | ” |
| ” | ஸதாராத்யாய | ” |
| ” | ஸத்பதயே | ” |
| ” | ஸாது பூஜிதாய | ” |
| ” | ஜிதேந்திரியாய | ” |
| ” | ஜயோத் யோகாய | ” |
| ” | ஜ்யோதிச்சக்ரப்ரவர்த்தகாய | ” |
| ” | விகர்த்தனாநுஜாய | ” |
| ” | வீராய | ” |
| ” | விச்வே சாய | ” |
| ” | விசாம்பதயே | ” |
| ” | தே ஷகராய | ” |
| ” | துஷ்டதுராய | ” |
| ” | ஓம்புஷ்டிமதே | ” |
| ” | சிஷ்ட பாலகாய | ” |
| ” | அஷ்ட மூர்த்திபிரியாய | ” |

| | | |
|---|---|---|
| ஓம் | அனந்தாய | நம: |
| ,, | அஷ்டதாரு குடாரகாய | ,, |
| ,, | ஸவப்ரகாசாய | ,, |
| ,, | ப்ரகாசாத் மனே | ,, |
| ,, | த்புசராய | ,, |
| ,, | தேவபோஜனாய | ,, |
| ,, | கலாதராய | ,, |
| ,, | காலஹேதவே | ,, |
| ,, | காமக்ருதே | ,, |
| ,, | காமதேவாய | ,, |
| ,, | ம்ருத்யுஸம்ஹாரகாய | ,, |
| ,, | அமர்த்யாய | ,, |
| ,, | நித்யானுஷ்டானாய | ,, |
| ,, | க்ஷபாகராய | ,, |
| ,, | க்ஷீணபாபாய | ,, |
| ,, | க்ஷயவ்ருத்தி ஸமன்விதாய | ,, |
| ,, | ஜைவாத்ருகாய | ,, |
| ,, | சுசயே | ,, |
| ,, | சுப்ராய | ,, |
| ,, | ஜயினே | ,, |
| ,, | ஜயபலப்ரதாய | ,, |
| ,, | ஸுதாம யாய | ,, |
| ,, | ஸுரஸ் வாமினே | ,, |
| ,, | பக்தானாமிஷ்டதாய காய | ,, |

| | | |
|---|---|---|
| ஓம் | புக்திதாய | நம: |
| ,, | முக்திதாய | ,, |
| ,, | பத்ராய | ,, |
| ,, | பக்த தாரித்ரிய பஞ்ஜனாய | ,, |
| ,, | ஸாம கானப்ரியாய | ,, |
| ,, | ஸாவ ரக்ஷகாய | ,, |
| ,, | ஸாக ரோத்பவாய | ,, |
| ,, | பயாந்த க்ருதே | ,, |
| ,, | பக்தி சம்யாய | ,, |
| ,, | பவபந்த விமோசகாய | ,, |
| ,, | ஜகத்ப்ரகாச கிரணாய | ,, |
| ,, | ?கதானந்த காரணாய | ,, |
| ,, | நிஸ்ஸபத்னாய | ,, |
| ,, | நிராஹாராய | ,, |
| ,, | நிர்விகாராய | ,, |
| ,, | நிராமயாய | ,, |
| ,, | பூச்சா யாச்சாதி தாய | ,, |
| ,, | பவ்யாய | ,, |
| ,, | புவனப்ரதிபாலகாய | ,, |
| ,, | ஸகலார்த்தி ஹராய | ,, |
| ,, | ஸௌம்யநபஞ்ஜனாய | ,, |
| ,, | ஸாது வந்திதாய | ,, |
| ,, | ஸர்வாக மக்ஞாய | ,, |
| ,, | ஸநகாதி முனிஸ்துத் யாய | ,, |

| | | |
|---|---|---|
| ஓம் | ஸிதாங்காய | நம: |
| ,, | ஸிதபூஷணாய | ,, |
| ,, | ச்வேதமால் யாம் பரதாய | ,, |
| ,, | தசாச்வரத ஸம்ரூடாய | ,, |
| ,, | தண்ட பாணயே | ,, |
| ,, | துர்த்தராய | ,, |
| ,, | குந்த புஷ்போஜ்வலாகாராய | ,, |
| ,, | நயனாபஜ ஸமுத்பவாய | ,, |
| ,, | ஆத்ரேய கோத்ரஜாய | ,, |
| ,, | அத்யந்த வினயாய | ,, |
| ,, | ப்ரிய நாயகாய | ,, |
| ,, | கருணாரஸ ஸம்பூர்ணாய | ,, |
| ,, | கர்க்கட ப்ரபவே | ,, |
| ,, | அவ்ய யாய | ,, |
| ,, | சதுரச் ராஸனா ரூடாய | ,, |
| ,, | சதுராய | ,, |
| ,, | திவ்ய வாஹனாய | ,, |
| ,, | விவஸ்மன்மண்டலக்நேய வாஸாய | ,, |
| ,, | வஸுஸம்ருத்திதாய | ,, |
| ,, | மஹேச்வரப்ரியாய | ,, |
| ,, | தரந்தாய | ,, |
| ,, | மேரூகோத்ர ப்ரதக்ஷிணாய | ,, |
| ,, | க்ரஹமண்டல மத்யகாய | ,, |
| ,, | க்ரஸிதார்க்காய | ,, |

## பதஞ்சலி கதிர் நல்லைய ராஜா

ஓம் க்ரஹாதிபாய நம:
" த்விஜ ராஜாய "
" த்யுதிலகாய "
" த்விபுஜாய "
" த்விஜ பூஜிதாய "
" ஔதும்பா நகாவாஸாய "
" உதாராய "
" ரோஹிணி பதயே "
" நித்யோதாராய "
" முனிஸ்துத் யாய "
" நித்யானந்த பலப்ரதாய "
" ஸகலாஹ்லாதகராய "
" நாநாவித மந்த்ர புஷ்பாணி ஸமர்ப்பயாமி

## செவ்வாய் எந்திரம்



# அங்காரகாஷ்டோத்தர சத நாமாவளி

| | | |
|---|---|---|
| ஓம் | மஹீஸுதாய | நம: |
| ,, | மஹாபாகாய | ,, |
| ,, | மங்களாய | ,, |
| ,, | மங்களப்ரதாய | ,, |
| ,, | மஹாவீராய | ,, |
| ,, | மஹா சூராய | ,, |
| ,, | மஹா பல பராக்ரமாய | ,, |
| ,, | மஹா ரௌத்ராய | ,, |
| ,, | மஹா பத்ராய | ,, |
| ,, | மாநீனயாய | ,, |
| ,, | தயாக ராய | ,, |
| ,, | அமர்ஷணாய | ,, |
| ,, | க்ரூராய | ,, |
| ,, | தாப பாப விவர்ஜ்ஜிதாய | ,, |
| ,, | ஸுப்ர தீபாய | ,, |
| ,, | ஸுதாம் ராக்ஷாய | ,, |
| ,, | ஸுப்ரஹ்மண்யாய | ,, |
| , | தயாநிதயே | ,, |
| ,, | வக்ரஸ்தம்பாதி கமனாய | ,, |
| ,, | வரேண் யாய | ,, |
| ,, | வரதாய | ,, |

| | | |
|---|---|---|
| ஓம் | ஸுகினே | நம: |
| ,, | வீரபத்ராய | ,, |
| ,, | விருபாஷாய | ,, |
| ,, | விதூரஸ்தாய | ,, |
| ,, | விபாவஸவே | ,, |
| ,, | நக்ஷத்ர சக்ர ஸஞ்சாரிணே | ,, |
| ,, | க்ஷாத்ர தர்ம ப்ரகாசகாய | ,, |
| ,, | நக்ஷ்த்ர ரூபாய | ,, |
| ,, | க்ஷயவ்ருத்தி விநிர்முக்தாய | ,, |
| ,, | க்ஷாத்ர வர்ஜிதாய | ,, |
| ,, | க்ஷமாயுக்தாய | ,, |
| ,, | விசக்ஷணாய | ,, |
| ,, | அக்ஷீணபலதாய | ,, |
| ,, | சதுரச்ர கோசராய | ,, |
| ,, | சுபலக்ஷ்ணாய | ,, |
| ,, | வீதராகாய | ,, |
| ,, | வீதபயாய | ,, |
| ,, | விஜ்வராய | ,, |
| ,, | விச்வகாரணாய | ,, |
| ,, | நக்ஷ்த்ர ராசிஸஞ்சாராய | ,, |
| ,, | நரநாபய நிக்ருந்தனாய | ,, |
| ,, | கமனீயாய | ,, |
| ,, | தயாஸாராய | ,, |
| ,, | கனத்கனக பூஷணாய | ,, |

## பதஞ்சலி கதிர் நல்லைய ராஜா

ஓம் பயங்கராய நம:
" பவ்யபாலாய "
" பக்தாபய வரப்ரதாய "
" சத்ரு ஹந்த்ரே "
" சமோ பேதராய "
" சரணாகத போஷணாய "
" ஸாஹ ஸாய "
" ஸத்குணாத் யக்ஷாய "
" ஸாதவே "
" ஸமர துர்ஜ்ஜயாய "
" துஷ்ட துராய "
" கிஷ்ட பூஜ்யாய "
" ஸர்வகஷ்ட நிவாரகாய "
" துஃச்சேஷ்டா பாரகாய "
" துஃக பஞ்ஜனாய "
" துர்த்த ராய "
" ஹரயே "
" துஸ்வப்னஹந்த்ரே: "
" துர்த்தர்ஷாய "
" துஷ்ட கர்வ விமோசனாய "
" பரத்வாஜ குலோத்பூதாய "
" பூஸூதாய "
" பவ்ய பூஷணாய "
" ரக்தாம் பராய "

ஓம் ரக்த வபு்ஷே நம:
" பக்தபாலன தத்பராய "
" சதுர்புஜாய "
" கதா தாரிணே "
" மேஷவாஹனாய "
" மிதா சனாய "
" சக்தி சூலத்ராய "
" சக்தாய "
" சஸ்த்ர வித்யா விசாரதாய "
" தாமஸாகா ராய "
" தபஸ்வினே "
" தாம்ரலோசனாய "
" தப்த காஞ்சன ஸங்காசாய "
" ரக்தகிஞ்ஜலக ஸந்நிபாய "
" கோத்ராதி தேவதாய "
" கோமத்ய சராய "
" குணவிபூஷணாய "
" அஸ்ருக்ஜே "
" அவந்திதேசாதீசாய "
" ஜனார்த்தனாய "
" ஸூர்யயாம்ய ப்ரதேசஸ்தாய "
" யௌவனாய "
" யாம்யதிங் முகாய "
" த்ரிகோண மண்டலாய "

## பதஞ்சலி கதிர் நல்லைய ராஜா

| | | |
|---|---|---|
| ஓம் | த்ரிதசர்திப ஸன்னுதாய | நம: |
| " | சுசயே | " |
| " | சுசிகராய | " |
| " | சூராய | " |
| " | சுசிவச்யாய | " |
| " | அசுபாபஹாய | " |
| " | மேஷவ்ருச்சிக ராசீசாய | " |
| " | மேதாவினே | " |
| " | மிதபாஷிணே | " |
| " | ஸுகப்ரதாய | " |
| " | ஸுரூபாக்ஷாய | " |
| " | ஸர்வாபீஷ்ட பலப்ரதாய | " |
| " | ஸ்ரீமதே அங்காரகாய | " |
| " | நானாவித மந்த்ர புஷ்பாணி ஸமர்ப்பயாமி | |

## புதன் எந்திரம்



# புதாஷ்டோத்தர சத நாமாவளி

ஓம் புதாய நம:
" புதார்ச்சிதாய "
" ஸௌம்யாய "
" ஸௌம்ய சித்தாய "
" சுபப்ரதாய "
" த்ருடவ்ருதாய "
" த்ருட பலாய "
" ச்ருதி ஜால ப்ரபேதோய "
" ஸத்ய வாஸாய "
" ஸத்ய வசஸே "
" ச்ரேயஸாம் பதயே "
" அவ்யயாய "
" ஸோம ஜாய "
" ஸுகதாய "
" ஸ்ரீ மதே "
" ஸோமவம்ச ப்ரதீபாய "
" வேதவிதே "
" வேத தத்வஜ்ஞாய "
" வேதாந்தஜ் ஞான பாஸ்வராய "
" வித்யா விசக்ஷணாய "
" விதுஷே "
" வித்வத் ப்ரீதிகராய "

ஓம் ரிஜவே நம:

„ விச்வானுகூல ஸஞ்சாரிணே „

„ விசேஷ வினயான்விதாய „

„ விவிதாகம ஸாரஜ்ஞாய „

„ வீர்யவதே „

„ விகதஜ் வராய „

„ த்ரிவர்க்க பலதாய „

„ அனந்தாய „

„ த்ரிதசாதிப பூஜிதாய „

„ புத்திமதே „

„ பஹு சாஸ்த்ரஜ்ஞாய „

„ பலினே „

„ பந்த விமோசனாய „

„ வக்ராதி வக்ரகமனாய „

„ வாஸ வாய „

„ வஸுதாதிபாய „

„ ப்ரஸாதவதனாய „

„ வந்த்யாய „

„ வரேண்யாய „

„ வாக்விலக்ஷணாய „

„ ஸத்யவதே „

„ ஸத்ய சங்கல்பாய „

„ ஸத்ய ஸந்தாய „

„ ஸதாத ராய „

| பதஞ்சலி கதிர் நல்லைய ராஜா |
| --- |

| | | |
| --- | --- | --- |
| ஓம் | ஸர்வரோக ப்ரசமனாய | நம: |
| ,, | ஸர்வ ம்ருத்யு நிவாரகாய | ,, |
| ,, | வாணிஜ்ய நிபுணாய | ,, |
| ,, | வச்யார்ய | ,, |
| ,, | வாதாங்கினே | ,, |
| ,, | வாதரோக ஹ்ருதே | ,, |
| ,, | ஸ்தூலாய | ,, |
| ,, | ஸ்தைர்ய குணாத்யக்ஷாய | ,, |
| ,, | ஸ்தூல ஸூக்ஷ்மாதி காரணாய | ,, |
| ,, | அப்ரகாசாய | ,, |
| ,, | ப்ரகாசாத்மனே | ,, |
| ,, | கனாய | ,, |
| ,, | ககன பூஷணாய | ,, |
| ,, | விதிஸ்துத்யாய | ,, |
| ,, | விசாலாக்ஷாய | ,, |
| ,, | வித்வஜ் ஜன மனோஹராய | ,, |
| ,, | சாரு சீலாய | ,, |
| ,, | ஸ்வப்ரகாசாய | ,, |
| ,, | சபலாய | ,, |
| ,, | சலிதேந்த்ரியாய | ,, |
| ,, | உதங்முகராய | ,, |
| ,, | மஹா ஸக்தாய | ,, |
| ,, | மகநாதி பதயே | ,, |
| ,, | ஹரயே | ,, |

| | | |
|---|---|---|
| ஓம் | ஸௌம் யவத்ஸர ஸஞ்ஜாதாய | நம: |
| ,, | ஸோமப்ரிய சராய | ,, |
| ,, | மஹாதே | ,, |
| ,, | ஸிம்ஹாதி ரூடாய | ,, |
| ,, | ஸர்வஜ்ஞாய | ,, |
| ,, | சிகிவர்ணாப | ,, |
| ,, | சிவங்கராய | ,, |
| ,, | பீதாம்ப்ராய | ,, |
| ,, | பீதவபுஷே | ,, |
| ,, | பீதச்சத்ர த்வயாஞ்சி தாய | ,, |
| ,, | கட்க சர்ம்மதராய | ,, |
| ,, | கார்ய கர்த்ரே | , |
| ,, | கலுஷ ஹராய | ,, |
| ,, | ஆத்ரேய கோத்ரஜாய | ,, |
| ,, | விச்வ பாவனாய | ,, |
| ,, | சாம்பேய புஷ்ப ஸங்கா சாய | ,, |
| ,, | சாரணாய | ,, |
| ,, | சாரு பூஷணாய | ,, |
| ,, | வீதராகாய | ,, |
| ,, | வீத பயாய | ,, |
| ,, | விசுத்த கனகப்ரபாய | ,, |
| ,, | பந்துப்ரியாய | ,, |
| ,, | பந்த முக்தாய | ,, |
| ,, | பாணமண்டல ஸம்ச்ரி தாய | ,, |

| பதஞ்சலி கதிர் நல்லைய ராஜா |
| --- |

ஓம் அர்க்கே சான ப்ரதேசஸ்தாய நம:
" ப்ரசாந்தாய "
" ப்ரீதி சம்யுக்தாய "
" ப்ரிய க்ருதே "
" ப்ரிய பூஷணாய "
" மேதாவினே "
" மாதவாஸக் தாய "
" மிதுனாதி பதயே "
" ஸுதியே "
" கன்யாராசி ப்ரியாய "
" காமப்ரதாய "
" கனபலா சயாய "
" புத்க்ர ஹாய "

# குரு எந்திரம்



# ப்ருஹஸ்பதி அஷ்டோத்தர சத நாமாவளி

ஓம் குரவே நம:
" குணகராய "
" கோப்த்ரே "
" கோசராய "
" கோபதிப்ரியாய "
" குணினே "
" குணவதாம் ச்ரேஷ்டாய "
" குரூணம் குரவே "
" அவ்ய யாய "
" ஸ்தோத்ரே "
" ஜயந்தாய "
" ஜயதாய "
" ஜீவாய "
" அனந்தாய "
" ஜயாபஹாய "
" ஆங்கிரஸாய "
" அத்வராஸக்தாய "
" விவிக்தாய "
" அத்வரக் ருதே "
" பராய "
" வாசஸ்பதயே "

| | | |
|---|---|---|
| ஓம் | வசினே | நம: |
| ,, | வச்யாய | ,, |
| ,, | வரிஷ்டாய | ,, |
| ,, | வாக்விச க்ஷணாய | ,, |
| ,, | சித்த சுத்தி கராய | ,, |
| ,, | சைத்ராய | ,, |
| ,, | சித்ர சிகண்டி ஜாய | ,, |
| ,, | ப்ருஹத்ரதாய | ,, |
| ,, | ப்ருஹத் பானவே | ,, |
| ,, | அபீஷ்டதாய | ,, |
| ,, | ஸுராசார்யாய | ,, |
| ,, | ஸுரகார்யஹிதங்கராய | ,, |
| ,, | கீர்வரண போஷகாய | ,, |
| ,, | தன்யாய | ,, |
| ,, | கீஷ்பதயே | ,, |
| ,, | கிரிசாய | ,, |
| ,, | அனகாய | ,, |
| ,, | தீவ்ராய | ,, |
| ,, | தீஷணாய | ,, |
| ,, | திவ்யபூஷணாய | ,, |
| ,, | தனுர்த்தராய | ,, |
| ,, | தைத்ய ஹந்த்ரே | ,, |
| ,, | தயாஸா ராய | ,, |
| ,, | தயாக ராய | ,, |

ஓம் தாரித்ரிய நாசாய நம:

" தக்ஷிணாயன ஸம்பவாய "

" தனுர்மீனாதிபாய "

" ஹரயே "

" தனுர் பாணதராய "

" ஹரயே "

" ஸர்வாகமஜ்ஞாய "

" ஸர்வஜ்ஞாய "

" ஸர்வ வேதாந்த விதுஷே "

" ப்ரஹ்ம புத்ராய "

" ப்ராஹ்மணேசாய "

" ப்ரஹ்ம வித்யா விசாரதாய "

" ஸமானாதிக நிர்முக்தாய "

" ஸர்வலோக வசம்வதாய "

" ஸுராஸுர கந்தர்வவந்திதாய "

" ஸத்ய பாஷணாய "

" ஸ்ரீமத் குரவே "

" ஸுரேந்த்ர வந்த்யாய "

" தேவாச்சார்யாய "

" அனந்த ஸாமர்த்யாய "

" வேத ஸித்தாந்த பராகாய "

" ஸதானந்தாய "

" பீடாஹராய "

" பீதவாஸினே "

ஓம் அத்விதீய ரூபாய நம:
" லம்ப கூர்ச்சாய "
" ப்ரஹ்ருஷ்ட நேத்ராய "
" விப்ராணாம் பதயே "
" பார்க்கவே சிஷ்யாய "
" விபன்ன ஹிதகாரகாய "
" ஸுராசார்யாய "
" தயாபதயே "
" சுபலக்ஷணாய "
" லோகத்ரய குரவே "
" ஸர்வதோ விபவே "
" ஸர்வே சாய "
" ஸர்வதா துஷ்டாய "
" ஸர்வ காய "
" ஸர்வ பூஜிதாய "
" அக்ரோ தனாய "
" முனிச்ரேஷ்டாய "
" நீதி கர்த்ரே "
" ஜகத் மித்ரே "
, ஸுரனஸன்யாய "
" விபன்ன த்ராண ஹேதவே "
" விச்வ யோனயே "
" அயோநிஜாய "
" தனதாத்ரே "

## பதஞ்சலி கதிர் நல்லைய ராஜா

| | | |
|---|---|---|
| ஓம் | பர்த்ரே | நம: |
| ,, | மஹாபலாய | ,, |
| ,, | காவ்ய ப்ரியாய | ,, |
| ,, | அபிஷ்ட பலதாய | ,, |
| ,, | விச்வாத்மனே | ,, |
| ,, | விச்வகர்த்ரே | ,, |
| ,, | ஸ்ரீமதே | ,, |
| ,, | சுபக்ரஹாய | ,, |
| ,, | தேவாய | ,, |
| ,, | ஸுராபூஜிதாய | ,, |
| ,, | ப்ரஜாபதயே | ,, |
| ,, | விஷ்வே | ,, |
| ,, | ஸுரேந்த்ர வந்த்யாய | ,, |
| ,, | குரவே | ,, |

# சுக்ர எந்திரம்



# சுக்ர அஷ்டோத்ர சத நாமாவளி

| | | |
|---|---|---|
| ஓம் | சுக்ராய | நம: |
| ,, | சுசயே | ,, |
| ,, | சுபகுணாய | ,, |
| ,, | சுபலக்ஷணாய | ,, |
| ,, | சோபனாக்ஷாய | ,, |
| ,, | ஸுப்ர வாஹனாய | ,, |
| ,, | சுத்த ஸ்படிக பாஸ்கராய | ,, |
| ,, | தீனார்த்தி ஹராய | ,, |
| ,, | தைத்ய குரவே | ,, |
| ,, | தேவாபி நந்தியாய | ,, |
| ,, | காவ்யாஸக்தாய | ,, |
| ,, | காம பாலாய | ,, |
| ,, | கவயே | ,, |
| ,, | கல்யாணதாயகாய | ,, |
| ,, | பத்ர மூர்த்தியே | ,, |
| ,, | பத்ர குணாய | ,, |
| ,, | பார்க்கவாய | ,, |
| ,, | பக்த பாலவனாய | ,, |
| ,, | போக தாய | ,, |
| ,, | புவனாத் யக்ஷாய | ,, |
| ,, | பக்திமுக்தி பலப்ரதாய | ,, |
| ,, | சாருசீலாய | ,, |

| | | |
|---|---|---|
| ஓம் | சாரு சந்த்ர நிபானனாய | நம: |
| ,, | ருநிதயே | ,, |
| ,, | நிகில சாஸ்த்ராய | ,, |
| ,, | நீதிவித்யா தூந்தராய | ,, |
| ,, | ஸர்வ லக்ஷண ஸம்பன்னாய | ,, |
| ,, | ஸர்வாவகுணா வர்ஜிதாய | ,, |
| ,, | ஸமானாதிக நிர்முக்தாய | ,, |
| ,, | ஸகலாகம பாரகாய | ,, |
| ,, | ப்ருகவே | ,, |
| ,, | போகதராய | ,, |
| ,, | பூமிஸுர பாலன தத்பராய | ,, |
| ,, | மனஸ்வினே | ,, |
| ,, | மானதாய | ,, |
| ,, | மான்யாய | ,, |
| ,, | மாயா தீதாய | ,, |
| ,, | மஹா சயாய | ,, |
| ,, | பலிப்ரஸன்னாய | ,, |
| ,, | அபயதாய | ,, |
| ,, | பவினே | ,, |
| ,, | பலபராக்ரமாய | ,, |
| ,, | பவதோஷ பரித்யாகாய | ,, |
| ,, | பலிபந்த விமோசனாய் | ,, |
| ,, | கனாத் யக்ஷாய | ,, |
| ,, | கம்பு க்ரீவாய | ,, |

## பதஞ்சலி கதிர் நல்லைய ராஜா

ஓம் களா தர்ாய நம:

" காருண்ய ரஸஸம்பூர்ணாய "

" கல்யாண குண வர்த்தனாய "

" ச்வேதாம்பராய "

" ச்வேத வபுஷே "

" சதுர்புஜாய "

" அக்ஷமாலா தராய "

" அசிந்த்யாய "

" அக்ஷீண குண பாஸுராய "

" நக்ஷத்ர கணஸஞ்சாராய "

" நயதாய "

" நீதி மார்க்கதாய "

" வர்ஷப்ரதாய "

" ஹ்ருஷீகேசாய "

" க்லேச நாசக்ராய "

" கவயே "

" சிந்திதார்த்த ப்ரதாய "

" சாந்திமதே "

" சித்தஸமாதிக்ருதே "

" ஆதிவ்யாதிஹராய "

" பூரிவிக்ரமாய "

" புண்யதாயகாய "

" புராண புருஷாய "

" பூஜ்யாய "

| | | |
|---|---|---|
| ஓம் | புருஹூகாதி ஸன்னுதாய | நம: |
| ,, | அஜேயாய | ,, |
| ,, | விஜிதாதய | ,, |
| ,, | வவிதா ப்ரணோஜ்வலாய | ,, |
| ,, | குந்தபுஷ்ப ப்ரதீகாசாய | ,, |
| ,, | மந்த ஹாஸாய | ,, |
| ,, | மஹாமதயே | ,, |
| ,, | முக்தாபல ஸமாகாராய | ,, |
| ,, | முக்திதாய | ,, |
| ,, | முனி ஸன்னுதாய | ,, |
| ,, | ரத்ன ஸிம்ஹாஸனா ரூடாய | ,, |
| ,, | ரதஸ் தாய | ,, |
| ,, | ரஜத ப்ரபாய | ,, |
| ,, | ஸூர்யப்ராக்தேச ஸஞ்சாராய | ,, |
| ,, | ஸூரசத்ரு ஸூதேச ஹ்ருத | ,, |
| ,, | கவயே | ,, |
| ,, | துலாவ் குவுப ராசீசாய | ,, |
| ,, | துர்த்தராய | ,, |
| ,, | தர்ம பாலனாய் | ,, |
| ,, | பாக்யதாய | ,, |
| ,, | பவ்ய சாரித்ராய | ,, |
| ,, | பவபாச விமோசனாய | ,, |
| ,, | கௌடதே சேச்வராய | ,, |
| ,, | கோப்த்ரே | ,, |

## பதஞ்சலி கதிர் நல்லைய ராஜா

ஓம் குணினே நம:

" குண விபூஷணாய "

" ஜ்யேஷ்டா நக்ஷத்ர ஸம்பூதாய "

" ஜ்யேஷ்டாய "

" ச்ரேஷ்டாய "

" சுசிஸ்மிதாய "

" அபவர்க்காய "

" அனந்தாய "

" ஸந்தான பலதாயகாய "

" ஸர்வைச்வர்ய ப்ரதாய "

" ஸர்வ கீர்வாண ஸன்னுதாய "

### சனிஎந்திரம்



# சனீச்வர அஷ்டோத்தர சத நாமாவளி

| | | |
|---|---|---|
| ஓம் | சனைஸ்சராய | நம: |
| ,, | சாந்தாய | ,, |
| ,, | ஸர்வா பீஷ்டப்ரதாயினே | ,, |
| ,, | சரண்யாய | ,, |
| ,, | வரேண்யாய | ,, |
| ,, | ஸர்வே சாய | ,, |
| ,, | ஸௌம்யாய | ,, |
| ,, | ஸுரவந்த்யாய | ,, |
| ,, | ஸுரலோக விஹாரினே | ,, |
| ,, | ஸுகாஸனோப விஷ்டாய | ,, |
| ,, | ஸுந்தராய | ,, |
| ,, | கனாப | ,, |
| ,, | கனரூபாய | ,, |
| ,, | கனாபாணதாரிணோ | ,, |
| ,, | கஸஸாரவிலே பனாய | ,, |
| ,, | கத்யோதாய | ,, |
| ,, | மந்தாய | ,, |
| ,, | மந்த சேஷ்டாய | ,, |
| ,, | மஹனீபா குணத்மனே | ,, |
| ,, | மர்த்ய பாவன ப்ரதாப | ,, |
| ,, | மஹேசாய | ,, |

## பதஞ்சலி கதிர் நல்லைய ராஜா

| | | |
|---|---|---|
| ஓம் | ச்சாயா புத்ராய | நம: |
| ,, | சர்வாய | ,, |
| ,, | சததூணீர தாரிணே | ,, |
| ,, | சாஸ்திர ஸ்வபாவாய | ,, |
| ,, | சஞ்சலாய | ,, |
| ,, | நீலவர்ணாய | ,, |
| ,, | நித்யாய | ,, |
| ,, | நீலாஞ்ஜன நிப்ப | ,, |
| ,, | நீலாம்பர விபூஷணாய | ,, |
| ,, | நிஸ்சலாய | ,, |
| ,, | வேத்யாய | ,, |
| ,, | விதிரூபாய | ,, |
| ,, | விரோதா தார பூமயே | ,, |
| ,, | வேதாஸ்பத ஸ்வபாவாய | ,, |
| ,, | வஜ்ர தேஹாய | ,, |
| ,, | வைராக்யதாய | ,, |
| ,, | வீராய | ,, |
| ,, | வீதரோக பயாய | ,, |
| ,, | விபத்பரம் பரேசாய | ,, |
| ,, | விச்வ வந்த்யாய | ,, |
| ,, | க்ருத்ர வாஹனாய | ,, |
| ,, | கூடாய | ,, |
| ,, | கூர்ம்மாங்காய | ,, |
| ,, | குரூபிணே | ,, |

ஓம் குத்ஸிதாய நம:
„ குணாட்பாய „
„ கோசராய „
„ கவித்வாமூல நாசனாய „
„ வித்யா, வித்யா ஸ்வரூபிணே „
„ ஆயுஷ்யகாரணாய „
„ ஆபதுத்தர்த்ரே „
„ விஷ்ணு பக்தாய „
„ வசினே „
„ விவிதாகம வேதினே „
„ விதிஸ்துத் யாப „
„ வந்த் யாய „
„ விரூபாக்ஷாய „
„ வரிஷ்டாய „
„ வஜ்ராங்கு சதராய „
„ வரதாய „
„ அபயஹஸ்தாய „
„ வாமனாய „
„ ஜ்யேஷ்டா பத்னி ஸமேதாய „
„ ச்ரேஷ்டாய „
„ மிதபாஷிணே „
„ கஷ்டௌக நாசனாய „
„ ஆர்ய புஷ்டி தாய „
„ ஸ்துத் யாய „

## பதஞ்சலி கதிர் நல்லைய ராஜா

| | | |
|---|---|---|
| ஓம் | ஸ்தோத்ர கம்யாய | நம: |
| ,, | பக்தவச்யாய | ,, |
| ,, | பானவே | ,, |
| ,, | பானுபுத்ராய | ,, |
| ,, | பவ்யாய | ,, |
| ,, | பாவனாய | ,, |
| ,, | தனுர்மண்டல ஸ்ம்ஸ்தாய | ,, |
| ,, | தனதாய | ,, |
| ,, | தனுஷ்மதே | ,, |
| ,, | தனுப்ரகாச தேஹாய | ,, |
| ,, | தாமஸாய | ,, |
| ,, | அசேஷஜன வந்த் யாய | ,, |
| ,, | விசேஷ பலதாயினே | ,, |
| ,, | வசீக்ருத ஜனேசாய | ,, |
| ,, | பசூனாம் பதயே | ,, |
| ,, | கேச ராய | ,, |
| ,, | கனநீலாம்பராய | ,, |
| ,, | காடின்ய மானஸாய | ,, |
| ,, | ஆர்யகண ஸ்துத்யாய | ,, |
| ,, | நீலச் சத்ராய | ,, |
| ,, | நித்யாய | ,, |
| ,, | நிர்க்குணாய | ,, |
| ,, | குணாத்மனே | ,, |
| ,, | நிராமயாய | ,, |

| | | |
|---|---|---|
| ஓம் | நிந்த்யாய | நம: |
| ,, | வந்தனீ யாய | ,, |
| ,, | தீராய | ,, |
| ,, | திவ்ய தேஹாய | ,, |
| ,, | தீனார்த்தி ஹரணாய | ,, |
| ,, | தைன்யநாசாய | ,, |
| ,, | ஆர்யஜன கண்பாய | ,, |
| ,, | க்ரூராய | ,, |
| ,, | க்ரூர சேஷ்டாய | ,, |
| ,, | காமக்ரோதகராய | ,, |
| ,, | களத்ர புத்ர சத்ருத்வ காரணாய | ,, |
| ,, | பரிபோஷித பக்தாய | ,, |
| ,, | பரபீதிஹராய | ,, |
| ,, | பக்த ஸங்க மனோபீஷ்ட பலதாய | ,, |
| ,, | ஸ்ரீமத் சனைஸ்சராய | ,, |

# இராகு எந்திரம்



# ராஹூ அஷ்டோத்ர
# சத நாமாவளி

| | | |
|---|---|---|
| ஓம் | ராஹவே | நம: |
| ,, | ஸைம்ஹிகேயாய | ,, |
| ,, | விதுந்து தாய | ,, |
| ,, | ஸுரசத்ரவே | ,, |
| ,, | தமஸே | ,, |
| ,, | ப்ரணயே | ,, |
| ,, | கார்க்யாயனாய | ,, |
| ,, | ஸுராஹவே | ,, |
| ,, | நீலஜீமுத ஸங்காசாய | ,, |
| ,, | சதுர்புஜாய | ,, |
| ,, | கட்க கேடக தாரிணே | ,, |
| ,, | வரதாயக ஹஸ்தாய | ,, |
| ,, | சூலாயு தாய | ,, |
| ,, | மேக வர்ணாய | ,, |
| ,, | க்ருஷ்ண த்வஜ பதாகப்ருதே | ,, |
| ,, | தக்ஷிணாசா முகரதாய | ,, |
| ,, | தீக்ஷ்ண த்ம்ஷ்ட்ர கராய | ,, |
| ,, | சூர்ப்பா காராஸனஸ் தாய | ,, |
| ,, | கோமேதாபரணப்ரியாய | ,, |
| ,, | மாஷப்ரியாய | ,, |

ஓம் காச்ய பரிஷிநந்தனாய நம:
" புஜேகேச் வராய "
" உல்கா பாதயித்ரே "
" சூலநிதிபாய "
" க்ருஷ்ண ஸர்ப்பராஜே "
" ப்ருஷத் பாலாவ்ருதாஸ்யாய "
" அர்த்த சரீராய "
" ஜாடவ ப்ரதாய "
" ரவீந்து பீகராய "
" ச்சாயா ஸ்வரூபிணே "
" கடினாங்ககாய "
" த்விசக்ர பேதகாய "
" கராளாஸ் யாய "
" பயங்கராய "
" க்ரூர கர்மனே "
" தமோரூபாய "
" ச்யாமாத்மனே "
" நீலலோஹிதரய "
" சீரிடினே "
" நீலவஸனாய "
" சனீஸாமந்த வர்த்மகாய "
" சண்டால வர்ணாய "
" அச்வர்க்ஷபவாய "
" மேஷபவாய "

## பதஞ்சலி கதிர் நல்லைய ராஜா

ஓம் சனிவத்பலதாயகாய நம:
" சூலாய "
" அபஸவ்ய கதயே "
" உபராக கராய "
" ஸூர்யச் சவிவ்ராத காரகாய "
" நீலபுஷ்ப விஹாராய "
" க்ரஹச்ரேஷ்டாய "
" அஷ்டமக்ர ஹாய "
" கபந்த மாத்ர தேஹாய "
" யாதுதான குலோத்பவாய "
" கோவிந்த வரபாத்ராய "
" தேவஜாதி ப்ரவிஷ்ட காய "
" க்ரூராய "
" கோராய "
" சனோர் மித்ராய "
" சுக்ர மித்ராயி "
" அகோசராய "
" யானே கங்காஸ்னானானுயாத்ரே "
" ஸ்த்காஹே பூபலாட் யகாய "
" ஸ்த்க்ரஹேன்ய பலத்ருதே "
" சதுர்த்தே மாத்ரு நாசகாய "
" சந்த்ரயுதே சண்டால ஜன்ம ஸூசகாய "
" ஜன்மஸிம்ஹாய "
" ராஜ்யதாத்ரே "

| | | |
|---|---|---|
| ஓம் | மஹாகாயாய | நம: |
| ,, | ஜன்மகர்த்ரே | ,, |
| ,, | ராஜ்ய தாத்ரே | ,, |
| ,, | மத்தகாஜ்ஞான தாய | ,, |
| ,, | ஜன்ம சுன்யாராஜ்ய தாத்ரே | ,, |
| ,, | ஜன்ம ஹானிதாய | ,, |
| ,, | நவமே பித்ரு நாசாய | ,, |
| ,, | பஞ்சமே சோகதாயாய | ,, |
| ,, | த்யூனே களத்ரஹந்த்ரே | ,, |
| ,, | ஸப்தமே கலஹப்ரதாய | ,, |
| ,, | ஷஷ்டே வித்ததாத்ரே | ,, |
| ,, | சதுர்த்தே வைரதாயகாய | ,, |
| ,, | நவமே பாபதாத்ரே | ,, |
| ,, | தசமே சோகதாயகாய | ,, |
| ,, | ஆதௌயந : ப்ரதாத்ரே | ,, |
| ,, | அந்தேவைர ப்ரதாய காய | ,, |
| ,, | காலாத்மனே | ,, |
| ,, | கோசர சாராய | ,, |
| ,, | தனே ஜகத் பரத்காய | ,, |
| ,, | பஞ்சமே த்ருஷ்ணாச்ருங்கதாய | ,, |
| ,, | ஸ்வர்பானவே | ,, |
| ,, | ப்லினே | ,, |
| ,, | மஹாஸௌக்ய ப்ரதாயினே | ,, |
| ,, | சந்த்ர ஸவரிணே | ,, |

## பதஞ்சலி கதிர் நல்லைய ராஜா

| | | |
|---|---|---|
| ஓம் | சாச்வதாய | நம: |
| ,, | ஸுரசத்ரவே | ,, |
| ,, | பாபக்ரஹாய | ,, |
| ,, | சாம்பவாய | ,, |
| ,, | பூஜ்யகாய | ,, |
| ,, | ராபீர பூரணதாய | ,, |
| ,, | பைபீனஸ குலோத்பவாய | ,, |
| ,, | பக்தரக்ஷாய | ,, |
| ,, | ராஹு மூர்த்தயே | ,, |
| ,, | ஸர்வாபீஷ்ட பலப்ரதாய | ,, |
| ,, | தீர்க்காய | ,, |
| ,, | க்ருஷ்ணாய | ,, |
| ,, | அசரீரிணே | ,, |
| ,, | தேவாய | ,, |
| ,, | தானவாய | ,, |

# கேது எந்திரம்




12.0

# கேது அஷ்டோத்தர சத நாமாவளி

ஓம் கேதவே நம:
„ ஸ்தூல சிரஸே „
„ சிரோ மாத்ராய „
„ த்வஜா க்ருதாயே „
„ நவக்ரஹ யுதாய „
„ ஸிம்ஹிகாஸுரி சுர்ப்ப ஸம்பவாய „
„ மஹாபீதிகராய „
„ சித்ரவர்ண்ணாய „
„ ஸ்ரீ பிங்களாக்ஷகாய „
„ பலதூம்ர ஸங்காகாய „
„ தீஷ்ண தம்ஷ்டராய „
„ மஹோரகாய „
„ ரக்த நேத்ராய „
„ சித்ர காரிணே „
„ மஹா சூராய „
„ தீவ்ர கோபாய „
„ மஹாஸுராய „
„ பாப கண்ட காய „
„ க்ரோத நிதயே „
„ ச்சாபரக்ரஹ விசேஷகர்ய „
„ அந்த்ய க்ரஹாய „

ஓம் மஹா சீர்ஷாய நம:
" ஸுர்யாரயே "
" புஷ்பவத் த்ருஹிணே "
" வரத ஹஸ்தாய "
" கதா பாணயே "
" சித்ர சுப்ரதராய "
" சித்ரத்வ்ஜ பதாகாய "
" கோராய "
" சித்ர ரதாய "
" சிகினே "
" குதபக்ஷகாய "
" வைடூர்யா பரணாய "
" உத்பாத ஜனகாய "
" சுக்ர மித்ராய "
" மந்த ஸகாய "
" சிகினே நாபகாய "
" அந்தர் வேதினே "
" ஈச்வராய "
" ஜெமினி கோத்ரஜாய "
" சித்ரகுப்தாத்மனே "
" தக்ஷிணாமுகாய "
" முகுந்த வரபாத்ராய "
" மஹாஸுர குலோத்பவாய "
" கனவர்ணாய "

| பதஞ்சலி கதிர் நல்லைய ராஜா |
| --- |

| | | |
| --- | --- | --- |
| ஓம் | லங்கா தேவாய | நம: |
| ,, | ம்ருத்யு புத்ராய. | ,, |
| ,, | உத்பாத ரூபதராய | ,, |
| ,, | அத்ருஷ்யாய | ,, |
| ,, | காலாக்னி ஸன்னிபாய | ,, |
| ,, | நரபீடகாய | ,, |
| ,, | க்ருஹ காரிணே | ,, |
| ,, | ஸர்வோ பத்ரவகாராய | ,, |
| ,, | சித்ர ப்ரஸூதாய | ,, |
| ,, | அனஸாய | ,, |
| ,, | ஸர்வவ்யாதி நாசகாய | ,, |
| ,, | அபஸவய ப்ரசாரிணே | ,, |
| ,, | நவமே பாபதாயகாய | ,, |
| ,, | பஞ்சமே சோதகாய | ,, |
| ,, | உபராக கோசராய | ,, |
| ,, | பூருஷகர்மனே | ,, |
| ,, | துரியேஸூதப்ரதாய | ,, |
| ,, | த்ருதியே வைரதாய | ,, |
| ,, | பாபக்ரஹாய | ,, |
| ,, | ஸ்போட காரகாய | ,, |
| ,, | ப்ராண நாதாய | ,, |
| ,, | பஞ்சமே ச்ரமகாரகாய | ,, |
| ,, | த்வீதியே ஸ்புடவாக்தாத்ரே | ,, |
| ,, | விஷா குபிதே வக்த்ரகாய | ,, |

ஓம் காமரூபினே நம:
" ஸிம்ஹ தந்தாய "
" ஸப்தமே ந்ருதவிதினெ "
" சதுர்த்தே மாத்ரு நாசகாய "
" நவமே பித்ரு நாசனாய "
" அந்தேவைர ப்ரதாப "
" ஸுதேநந்தன பந்தகாய "
" ஸர்ப்பாக்ஷி ஜாதாய "
" அனங்காய "
" கர்ம்மராச்யுத் பவாய "
" உபாந்தே கீர்த்தி தாய "
" ஸப்தமே கலஹப்ரதாய "
" அஷ்டமே வ்யாதிகர்த்ரே "
" தனேபஹு ஸுகப்ரதாய "
" ஜனனே ரோகதாய "
" ஊர்த்தவ மூர்த்தஜாய "
" க்ரஹ நாயகாய "
" பாபத் ருஷ்டயே "
" கோசராய "
" சாம்பவராய "
" அசேஷ பூஜிதாய "
" சாச்வதாய "
" நடாய "
" சுபாசுப பலப்ரதாப "

| | | |
|---|---|---|
| ஓம் | தூம்ராய | நம: |
| ,, | ஸுதாதா யினே | ,, |
| ,, | அஜிதாய | ,, |
| ,, | பக்தவத்ஸலாய | ,, |
| ,, | ஸிம்ஹாஸனாய | ,, |
| ,, | கேது மூர்த்தயே | ,, |
| ,, | ரவீந்துத்யுதி நாசகாய | ,, |
| ,, | அமாபீட காய | ,, |
| ,, | அமர்த்யாய | ,, |
| ,, | விஷ்ணுத் ருஷ்டாய | ,, |
| ,, | அஸுரேச் வராய | ,, |
| ,, | பக்தரக்ஷகாய | ,, |
| ,, | வைசித்ர கபோலஸ் யந்தனாய | ,, |
| ,, | விசித்ர பல்தாயினே | ,, |
| ,, | பக்தா பீஷ்ட பலப்ரதாய | ,, |

# மேஷம்
## 2ஆம் பாவ பலன்கள்

இராசிக்கு இரண்டாமிடத்ததிபதியாக அசுரகுரு சுக்கிராச்சாரியைப் பெற்ற மேஷ இராசி அன்பர்களே! கம்பீரமான பார்வையும் கோவைப்பழம் போலச் சிவப்பாகக் காணும் விழிகளும் கொண்டிருப்பீர்கள்.

எப்பொழுதும் எதையும் விட்டுக்கொடுக்காத பேச்சையும், வாக்கையும் உடையவரான உங்களுக்குப் பதஞ்சலி மகரிஷி, இராசியின் அடிப்படையில் இரண்டாம் பாவ பலன்களை விவரிக்கின்றார். இரண்டாம் பாவ பலன்களுள் முதலாவதாக நேத்திரத்தைப்பற்றிக் கூறுகின்றார். நேத்திரகாரகன் அனைவருக்கும் சுக்கிரனே. உங்கள் இராசிக்கும் நேத்திராதிபதியாகச் சுக்கிரனே வருகின்றார். சுக்கிரன் உங்கள் இராசியான மேஷ இராசிக்கு இரண்டாமிடமான ரிஷப இராசியில் ஆட்சியானால் உங்களுக்கு நேத்திர ஒளியும், கண் பார்வைகளும், தூர திருஷ்டிகளும் எப்பொழுதும் அந்திய காலம் வரை தெளிவாகவே இருக்கும். ஆனால், சுக்கிரனோடு ரிஷப இராசியில் புதன் சேர்ந்தால் நேத்திர நோய்களும், கண்ணில் நீர் வடிதல் போன்ற நோய்களும் ஏற்படுமென்று கூறுகின்றார்.

மேஷ இராசிக்கென்று பதஞ்சலி மகரிஷியின் ஜீவ நாடியில் நேத்திரப் பலன்களைப்பற்றிப் பின்வருமாறு கூறுகிறார்.

"அப்பனே நேத்திரகாரகனும் சுங்கனவன்
ஆட்சியுச்ச மேறிடினும் கண்ணொளியாம்
தப்பியே காரியவன் சேர்ந்தாலுந்தான்
தனயனுக்கு ஒன்று பழுதென்றே ஒன்றொளியாம்"

இவ்வாறாய்ச் சுக்கிரன் ரிஷப, துலாத்தில் ஆட்சியானாலும், மீனத்தில் உச்சமானாலும் நேத்திர வகையில் நல்ல பலன்களையே கொடுப்பார். மேற்சொன்ன அமிசங்களில் உங்களுக்குக் கிரகங்கள் இருந்தால், நேத்திர வகையில் இடையூறு குறைவென்றே கூறலாம். ஆனால், இந்த அமிசங்களில் சுக்கிரனோடு சனி சேர்ந்தானாயின்

கண்ணுக்குக் கெடுதியென்பதாம். இதனால் சில காலகட்டங்களில் உங்கள் வலக்கண்கள் துடிக்கும்; நோயிடரால் பாதிக்கப்படும். ஒரு கண் கூரிய பார்வையுடனும், ஒரு கண் மங்கலாகவும் இருக்க விதியுண்டு.

சுக்கிரன் மேஷ இராசிக்கு ஆறாவது இராசியான கன்னியில் நீசமடைந்ததாக வைத்துக்கொண்டால், பொதுவாகக் கண் பார்வையில் இடருண்டு. சுப கிரகங்களின் பார்வையிருந்தால் வந்த நோய் உடனே விலகவும் விதியுண்டு. சுப கிரகப் பார்வையில்லாவிட்டால் கண்ணில் பூ, புரையோடுதல் போன்ற நோய்கள் ஏற்படும். இது மட்டுமல்லாமல், சூரியன் அங்கு பகை பெற்றிருந்தால், மாலைக்கண் நோய் ஏற்படுவதற்கும் விதியுண்டு. மற்றபடி மேஷ இராசி காரர்களாகிய உங்களுக்குச் சுக்கிரன் யாதொரு பகை வீடுகளிலிருந்தாலும், பாப கிரகங்கள் சேர்ந்தாலும், காலத்தால் வந்த நோய் விலக விதியுண்டு.

இந்த இராசி அன்பர்கள் நேத்திர நோயினால் பாதிக்கப் பட்டவர்கள், சுக்கிர சாந்தி செய்வதனாலும், வெள்ளி, வைரம் போன்ற ஆபரணங்கள் அணிவதாலும், நேத்திர நோய்களிலிருந்து தப்பலாம்.

அன்பர்களே! இப்பொழுது உங்களுக்குக் கிடைக்கக்கூடிய தனத்தைப்பற்றியும், எதிர்பாராமல் கிடைக்கக்கூடிய தனத்தைப் பற்றியும் பதஞ்சலி மகரிஷி கூறுகின்றார். பொதுவாக, மேஷ இராசியில் பிறந்தவர்கள், தனத்தைப் பொறுத்தளவு தன்னிறைவு அடைந்திருந்தாலும் ஊழ்விதியாலும் கோள்விதியாலும் சில தன பலன்களைப் பெற வேண்டியிருக்கும். அதன்படி உங்களின் இரண்டாமிடமான ரிஷப இராசியில் சுக்கிரன் ஆட்சியாய் இருந்தால் ஓரளவு தன வசதிகள் இருந்தாலும், சுக்கிரனோடு சூரியன் சேர்வதால், தகப்பன் சேர்த்து வைத்த தனத்தை அடைய நேரிடும்.

சுக்கிரன் மட்டும் தனித்திருந்தால் அழகு, ஆபரணப் பொருள்கள் மூலமும், வாசனைத் திரவியங்கள், இரத்தினங்கள் போன்ற வற்றாலும் தனம் புரளக்கூடிய விதி உங்களுக்கு உண்டு.

சுக்கிரன் மீனத்தில் உச்சமானாலும், அவர் திசை மற்றும் புத்திகளில் தன பலன்களில் நன்மையே செய்வார். ஆனால், அசுர

குருவான சுக்கிரன் கன்னி இராசியில் நீசமாகி, இராகு, கேது என்ற இரு பாம்புகளுள் ஏதேனும் ஒன்று கூடச் சேர்ந்தால் கீழ்த்தரமான தொழில்களில் தனம் சம்பாதிக்க வேண்டிய நிர்ப்பந்தத்தை உண்டு செய்யும்.

இப்படிச் சாதாரணமாகத் தன வரவுகள் இருந்தாலும், திடீர்த்தன பிராப்திகள் - அதாவது, தான் எதிர்பாராமலேயே தனக்குப் பொருள் கிட்டும் விதி - சில கிரகச் சேர்க்கையாலும் ஊழ்வினைப் பயனாலும் கிட்டும். அதன்படி,

"மதிக்குத்தான் தனத்தோனு மட்டமத்தில்
(மட்டற்ற அரவு) உச்சனவன் சேர்ந்திடினும்
கதியவனும் கூடத்தானும் தனபிராப்தி
குமரனுக்கு மத்திமத்தில் வரும்பாரே"

அதாவது, மேஷ இராசிக்குத் தனாதிபதியான சுக்கிரன் இராசிக்கு எட்டாமிடமான விருச்சிக இராசியில் இருந்து இராகு, கேது என்ற இரு சாயாக் கிரகங்களுள் ஏதேனும் ஒன்று உச்சமாகிச் சூரியனும் சேர்ந்திருந்தால், திடீர்த் தன பிராப்தி யோகம் உண்டு. மீன இராசியில் சுக்கிரன் உச்சம் பெற்றும், செவ்வாயானவர் கூடச் சேர்ந்திருப்பாராகில் திடீர்த் தன வரவுகள் உண்டு.

இந்தத் திடீர்த் தனவரவுகள் என்பது புதை பொருளாகவோ பரிசுச்சீட்டு, வேறு அதிர்ஷ்டத் துறைகள் ஆகியவற்றின் மூலமாகவோ ஏற்படலாம். இதை நாடி நூல்களில் மாயா நிலைச் சம்பத்துகள் என்று கூறுகின்றார்கள். ஆனால், அப்படியே ஊழ் வினைப்படியும், கிரக விதிப்படியும் இந்தச் சம்பத்துகள் கிடைத்தாலும், உங்கள் இராசியின் தனாதிபதியான சுக்கிரன் பெரிய கலகக்காரன். பொன்னையும், பொருளையும் அள்ளிக் கொடுத்தாலும், அவை வந்த வேகத்திலேயே அவற்றைத் திரும்பிப் பிடுங்கிவிடும் நிலையையும் உண்டு செய்வார். இதனால் மகாலட்சுமிக்குப் பூஜையும், வீரபத்திர தேவருக்குப் பிரீதிகளும் செய்தால், மாயா நிலைச் சம்பத்துகள் கிட்டி, அவை தங்கும் நிலையும் உண்டு. மேற்சொன்ன கிரக அமைப்புகள் உள்ளவர்கள் இந்தப் பூஜைகளைச் செய்து தக்க வைத்துக் கொள்ளுங்கள். இப்படிக் கிரக அமிசங்கள் உள்ள அன்பர்கள் ப்லர் ஊழ்வினைப்படி தனங்கள் பெற்றுள்ளார்கள்.

மேஷ இராசி அன்பர்களே! தங்களின் வாக்கினைப்பற்றி மகரிஷி சந்திரநாடி நூல் வாயிலாகப் பின் வருமாறு கூறுகிறார்:

வாக்காதிபதி உங்களுக்குச் சுக்கிரனாக வந்த காரணத்தினால், பேச்சில் மதுரமான வார்த்தைகளும், நளினமான சொற்களும் நிறைந்திருக்கும்.

எப்பொழுதும் நெளிவு, சுளிவாகவே பேசக்கூடிய திறன் கொண்டவர்களாயிருப்பீர்கள். ஆனால், கிரகச் சேர்க்கையினால் வாக்கில் ஜெயமும் தோல்வியும் அவதூறும் உண்டு. உங்கள் இராசிக்கு வாக்காதிபதியான சுக்கிரன் வாக்கிலேயே ஆட்சியானால் - அதாவது, ரிஷப இராசியிலே ஆட்சியானால் - பேச்சு வகையில் காரிய ஜெயமும் தர்க்கங்களும் வெற்றி பெறும். சொன்ன சொல்லைக் காப்பாற்றும் வாக்குவன்மையும் இருக்கும்.

ரிஷப இராசியில் சுக்கிரன் இருந்து அவரோடு புதன் சம்பந்தப்பட்டிருந்தால், வாக்காலேயே தொழில் உண்டு. அதுவே ஜீவனத் தொழிலாகவும், அதனாலேயே தனம் புரளும் விதிகளும் உண்டு. இந்த மாதிரியான கிரக அமைப்புகள் உள்ளோர் பெரும்பாலோர் ஆசிரியர்களாகவும், வழக்குரைஞர்களாகவும் இருப்பார்கள். மேஷ இராசிக்கு வாக்காதிபதியான சுக்கிரன் மீன இராசியில் உச்சமானால் வாக்கில் முன் இலாபங்களும், பின் நட்டங்களும் உண்டு. சாபங்கள், தீய சொற்கள், கெட்ட பலன்கள் ஆகியவற்றைக் கூறினால், உடனே நடக்கும். சுக்கிரனோடு செம்பாம்பான கேது சேர்ந்தால், தீர்க்க தரிசனத்தால் வாக்குகளும், அமானுஷ்ய சக்திகளும் உண்டு. வருங்கால நடப்புகளைத் தெளிவாகக் கூறலாம்.

சுக்கிரன் கன்னி இராசியில் நீசமானால், துஷ்டத்தனமான காரியங்களைப்பற்றிப் பேசுவார்கள். அவ்வார்த்தையில் கபடமும் பொறாமையும் உண்டு. இவ்வாறாய்ப் பலன்களிருந்தாலும், இராசிக்குப் பத்து, பதினொன்றாமிடங்களில் சுக்கிரன் சனியோடு சேர்ந்திருந்தால், வாக்கே தொழிலாகும் விதியும் உண்டு. புதன் அங்கு கூடச் சேர்ந்தால் சோதிடம், வான சாஸ்திரம், எண்சோதிடம் போன்றவற்றைத் தொழிலாகவும், பொழுதுபோக்காகவும் கொண்டிருப் பார்கள். இவ்வாறாய் வாக்குவழி தொழில்களும், பேச்சுகளும்

இருந்தாலும், மேஷ இராசிக்கு வாக்காதிபதியாகச் சுக்கிரன் வருவதால் பேச்சில் எப்பொழுதும் கவனம் இருத்தல் வேண்டும்.

அதே சுக்கிரனே இராசிக்குக் குடும்பாதிபதியாக வருகின்றார். ரிஷப இராசியில் சுக்கிரன் ஆட்சியானால் குடும்பம் நல்ல சுபிட்சத்துடன் இருக்கும். வரக்கூடிய மனைவியினால் குடும்பம், சண்டை சச்சரவின்றி ஒழுங்காகச் செல்ல விதியுண்டு. ரிஷப இராசியில் சுக்கிரன் ஆட்சியாகி இராகு கேது என்னும் இருபாம்பு களுள் ஏதேனும் ஒன்று கூடி நின்றால், குடும்பத்தில் தாசிகள் புகுந்து கலகம் செய்யும் நிலை உண்டு. துஷ்ட சகவாசங்களினால் குடும்பம் பாழ்படும் நிலையுண்டாகும்.

மேஷ இராசிக்கு ஆறாவது இராசியான கன்னியில் சுக்கிரன் நீசம் பெற்றாலும், குரு சேர்ந்தாலும் பாதகமில்லை. அப்படிச் சுபகிரகங்களின் பார்வையோ சேர்க்கையோ இல்லாவிட்டால், குடும்பம் எப்போதும் சண்டை சச்சரவுகளில் ஆட்படும். பேச்சு வகையில் அடிக்கடி தொந்தரவு காணும். சில காலகட்டங்களில் தனித்திருக்கும் நிலையை ஏற்படுத்தும். மனைவியால் குடும்பம் தொல்லைப்படும் நிலையுண்டாகும்.

மேஷ இராசிக்கு ஏழாம் இராசியான துலா இராசியில் சுக்கிரனிருந்து சனி சேர்ந்தால், வரக்கூடிய மனைவியினால் தகப்பனார் விரட்டப்படுவார். வீட்டில் மனைவியின் ஆளுமை அதிகமாய் இருக்கும். உங்கள் இராசிக்கு மூன்றாம் இராசியான மிதுன இராசியில் சுக்கிரன் இருந்து புதன் ஆட்சியானால், சகோதரர்கள் குடும்பத்தில் சேர்ந்து வாழும் விதியுண்டு.

மேஷ இராசி அன்பர்களே! இவ்வாறாய்த் தன, குடும்ப, வாக்கு, நேத்திர பலன்கள் உங்களுக்குக் காண்ட நூல்களைப் பொறுத்தளவில் இப்பொழுது இராசிக்கே பலன் பேசப்பட்டுள்ளது. இதில் ஊழ்வினைப் பலன்களும் அடங்கும். "உள்ளியது தெள்ளிய தாயின் ஊழ்வினை மெல்ல நுழையும்" என்பது போல, கிரகச் சேர்க்கையினால் ஊழ்வினைப் பலன்கள், வேலை செய்கின்றன. ஊழின் அடிப்படையில் கோளானது வேலை செய்கின்றது.

மேற்சொன்ன அமிசங்களுக்கெல்லாம் சுக்கிரனே காரண மாகின்றான். அந்த அசுரகுருவான சுக்கிரனின் பலனை அடைவ

தற்குச் சுக்கிர நாமாவளிகளையும் எந்திரங்களையும் பிரயோகித்தால், சித்தர்களின் கூற்றுப்படி பலன்கள் நமக்குச் சாதகமாகின்றன. அதே போல், சுக்கிராச்சாரி, பலன்களைத் திடீரென்றே கொடுப்பார். கொடுத்தாலும் தமக்குப் பயன் தராத நிலையை உண்டு செய்வார். அதாவது, "ஆண்டிக்கெதற்குப் பொன்னும் பொருளும்" என்ற வகையில், நாம் அனுபவிக்க விரும்பாத நிலையில் அந்த யோக பலன்களைச் செய்வார். இருந்தாலும், அந்தப் பலன்களைப் பெறச் சுக்கிரனின் எந்திர மந்திரங்களையும், நாமாவளியையும் நாம் பிரயோகித்தால், அதனால் அபரிமிதமான பலன்கள் உண்டு. அவற்றைத் தக்க வைக்கும் நிலையையும் உண்டு செய்யும். அதைப் பதஞ்சலி மகரிஷியின் அருளால், நாடியில் உள்ள பிரகாரம் அன்பர்களுக்குத் தொகுத்தளிக்கப்பட்டுள்ளது. அதன் பெருமையை உணர்ந்து பலனை அனுபவிப்பீராக.

## ரிஷபம்
## இரண்டாம் பாவம்

உங்கள் இராசிக்கு வாக்காதிபதியாக அமைந்த புதனே வாக்கு காரகாதிபதியாகவும் வருகின்றார்.

ரிஷப இராசி அன்பர்களே! வாக்கு, தனம் ஆகியவற்றைப் பொறுத்தளவு நீங்கள் புண்ணியம் செய்தவர்களாவீர்கள். பொதுவாகப் பேச்சு - நவரசம் கலந்த பேச்சு - உங்களுக்குக் கை வந்த கலை!

உங்கள் ரிஷப இராசிக்கு இரண்டாம் இராசியான மிதுன இராசியில் புதன் ஆட்சி பெற்றிருந்தால், வாக்கில் உங்களை யாரும் மிஞ்ச முடியாது. வாக்கில் சாதுரியம் அதிகம் காணும்.

ரிஷப இராசியில் இருந்து மிதுனத்தில் புதன் ஆட்சி பெற்றவர்கள், பெரிய பேச்சுக்கலைஞர்களாகவே இருக்க விதியுண்டு. வாதுரைப்பது, சட்டம் பேசுவது, அரசியல், மேடைப் பேச்சு, பட்டி மன்றம் போன்ற துறைகளில் அதிகம் வாய்ப்பும் வரவேற்பும் கிடைக்கும். ஆனால், சூரியன் அங்கு சேர்ந்தால், பேச்சில் அனல் வீசும்; பார்வையும்,

சுட்டெரிக்கின்ற பார்வையாய் இருக்கும். யாரும் மறுபேச்சுப் பேச முடியாத நிலைகளை ஏற்படுத்தும்.

அன்பர்களே! உங்கள் இராசிக்கு ஐந்தாம் இராசியான கன்னியில் புதன் ஆட்சி உச்சமானால், வாக்கில் உயர்ந்த அந்தஸ்து பெற்றிருப்பார்கள். சகல மந்திரமும் கற்றவர்களாகவும், வாக்கு சித்தி பெற்றவர்களாகவும், கணிதத்திலும் பேச்சிலும் சூரர்களாகவும் இருப்பார்கள். இவர்களின் நேரே இருந்து பேச முடியாது. சொன்னது பலிக்கும். நல்லது கூறினால் உடனே நடக்கும். சங்கீதத்தில் அதிகமான ஈடுபாடும், இசை ஞானமும் பெற்றிருப்பர். அந்தப் புதனோடு இராசிக்குப் பன்னிரண்டாம் இராசியான மேஷ இராசியின் அதிபதி செவ்வாய் சேர்ந்தால், தர்க்கங்களிலும் கவி பாடுவதிலும் இவர்களை வெல்ல யாராலும் முடியாது. அந்த அளவு உயர்ந்த பலன்கள் வாக்கால் பெறுவார்கள்.

ஆனால், புதனோடு உங்கள் இராசியாதிபதியான சுக்கிரன் நீசமாகிக் கூடச் சேர்ந்தால், பெண்களிடம் பேசினாலே வம்பாக ஏற்படும். பெண்களிடம் பேச்சுக் கொடுத்து மீள முடியாது. புதன் மட்டும் தனித்திருந்தால், பேச்சில் உங்களை யாரும் வெல்ல முடியாது.

ரிஷப இராசி அன்பர்களே! உங்களின் வாக்காதிபதி புதன் இராசிக்குப் பதினொன்றாம் இராசியான மீனத்தில் நீசமானால், என்னதான் பேச்சுகளில் சூரராய் இருந்தாலும், வாக்கு இலாபம் என்பது துளியும் இல்லை. பெரும்பாலும், சுடுங்கோபமான கடுஞ்சொற்களே வரும். இதனால் மற்றவர்கள் பாதிக்கப்படுவார்கள். இந்த நீசமான புதனோடு செஞ்சேடனான கேது சேர்ந்திருந்தால், கெட்டது சொன்னால் உடனே பலிக்கும். சாபமிட்டால் அவர்கள் கெட்டே போவார்கள். புதன் நீசமாகிக் குரு அங்கு ஆட்சியானால், வாக்குப் பலன்கள் மத்திமமாகவே இருக்கும். மகரிஷி பதஞ்சலி முனிவர் எழுதிய சந்திர நாடியில் உங்களுக்குப் பலன் பின்வருமாறு:

**"அம்புலிக்கு வாக்கோனாய்ப் புங்கன் வர**
**அறுதியிட்டே சூளுரைகள் உரைப்பான்காண்!**
**(தும்பனமாய்) வாக்குக்கெலிதம் மந்திர சித்தியென்று**
**தனயனுக்குத் தரணியினிலே விளம்பினேனே!**

இவ்வாறு வாக்காதிபதியாக இராசிக்குப் புதன் வந்தாலே மந்திர சித்திகளும், மதி மயக்கும் வாதுகளும் உரைத்தாலும், அந்த வாக்காதிபதி நின்ற இராசி பலன்கள் பின்வருமாறு:

"உரைக்குமொரு மதியிடத்து தோக பாவம்
உம்மையுமாய் இடபமதி தனமைந்தோன் !
வரையுமொரு புங்கனாட்சி வாதுகெலிதம்
வுச்சனாகில் தனமதுவும் தன்னிடத்தே !
கரையாமல் தனந்தோன்றி யில்தோன்றும்
குமரனுக்குப் புங்கனவர் நீசமாகில்
உரைக்குமொரு வாதுநட்டம் தனநட்டம்
உச்சிமேல் கீழ்விழும் நிலைகள் பாரே !"

இவ்வாறாய் வாக்கு இடப் பலன்கள் இருந்தாலும், தன பலன்கள் பற்றிச் சந்திரநாடி வழியாகக் கூறுவது என்னவெனில், இராசிக்கு இரண்டாமிடத்ததிபதியான புதன் கன்னி இராசியில் ஆட்சியுச்சம் பெற்றால், தான் சம்பாதிக்கக்கூடிய தனத்தை எப்படிச் செலவழித் தாலும் திரும்ப வருமேயொழிய, செலவுடன் விரயமாகாது என்கிறார். குடும்ப வழிகளிலும் எப்போதும் சுபிட்சமாகவே இருக்கும். ஆனால், புதனானவர் ரிஷப இராசிக்குப் பதினொன்றாம் இராசியான மீன இராசியில் நீசமடைந்தால் பேசுவதும் நட்டம், தான் சம்பாதித்த தனங்களும் நட்டம் என்கிறார். அப்படியென்றால், தான் சம்பாதித்த தனங்கள் அனைத்தும் வீணே ஆகிக்கொண்டிருக்கும். அதனால் ஓர் இலாபமுமிருக்காது. ஆரம்ப காலங்களில் தனங்கள் கோபுரமாய் இருந்தாலும், புதன் நீசமான காரணத்தினால் குப்பை மேட்டிற்கு வரும் நிலையை ஏற்படுத்தும்.

இப்படிப் புதனானவர் உங்கள் இராசிக்கு எட்டாம் இராசியான தனுசு இராசியில் இருந்து, அங்கு குருவானவர் ஆட்சி பெற்றால், திடீர்த் தன யோகங்கள் ஏற்படும் எனக் கூறப்பட்டுள்ளது. இதற்கு ஊழ்வினையின் பயனும் காரணமாய் இருக்கின்றது. அப்படி இல்லா விடின் புதன் ரிஷப இராசிக்கு ஐந்தாமிடமான கன்னி இராசியில் ஆட்சியுச்சமாகிச் சூரியனும் கேதுவும் சேர்ந்திருந்தால், தம் பூர்வ புண்ணியாஸ்திகள் வழியாக உங்களுக்குத் தனங்கள் வரக்கூடிய விதியுண்டாகும். இப்பொழுது சொல்வது, எதிர்பாராத தனப்ராப்தி என்னும் வகையாகும். இது, ஒவ்வோர் இராசிக்கும் தனாதிபதி

இருக்கும் இடத்தைக்கொண்டும் ஊழ்வினைப் பயனைக் கொண்டும் கூறப்படுகின்றது. மேற்சொன்ன அமிசங்கள் உள்ளவர்கள் புத பகவானுக்கோ திருமாலுக்கோ உபாசனை செய்து, பலன்களைத் தக்க வைத்துக்கொண்டு இப்படிப்பட்ட தனங்களை அனுபவிக்கலாம்.

ரிஷப இராசி அன்பர்களே! ரிஷப இராசிக்குப் பத்தாம் இராசியான குடும்ப இராசியில் புதன் இருந்து சூரியன், சனி போன்ற கிரகங்கள் கூடினால், ஜீவனத்தினால் மட்டும் வரும் தனத்தினை - அதாவது, தொழில் செய்து அதனால் வரும் பொருளை - மட்டுமே அனுபவிக்க நேரிடும். ஆனால், பல தொழில்கள் செய்து தனங்கள் பெறும் சூழ்நிலையும் உண்டு. இந்த மாதிரியான கிரக அமிசங்கள் கால்நடைகளாலும் வாகனங்களாலும் தனம் வரும் நிலை பல செய்யும்.

உங்கள் இராசிக்குப் பன்னிரண்டாம் இராசியான மேட இராசியில் புதனிருந்து சனி அங்கு நீசமானால் தொழிலானது கீழ்த்தரமான தொழிலாகும். அதில் கிடைக்கும் தனத்தினைக்கொண்டு ஜீவனம் செய்ய நேரும். ஆனால், அப்படித் தனம் வந்தாலும் அது உடனே விரயமாகிவிடும். இருபாம்புகளான இராகு, கேதுகளுள் எவரேனும் இருந்தால், இழிந்த மாதர்களால் தனம் பெறும் நிலையுண்டாகும்.

திடீர்த் தனப்பிராப்தி யோகமுள்ளோர், தம் ஜாதக நிலையைக் கண்டறிந்து, பெரும் தனங்கள் தமக்கு வருமென்று எண்ணியெண்ணி, வராமல் போகவே விரக்தியாகி, கடைசியில் மன நோயாளியாகவே ஆகிவிடுவார்கள். என்னதான் இருந்தாலும், இலட்சத்தில் ஒருவருக்கே பரிசுச் சீட்டில் பணம் கிட்டுகிறது. அவர் பாக்கியசாலியாகின்றார். இது நடைமுறையில் கண்ட உண்மையாகும். இவற்றையெல்லாம் கூறக் காரணம், திடீர்த் தனப்பிராப்தி கிடைக்கும் என்றவொரு நிலை உண்டென்றாலும் கிடைக்கக்கூடிய காலம் கிடைக்கட்டும் என்று எண்ணி, கிரகப் பிரீதிகளை மட்டும் செய்து, அது வருங்காலத்தில் அதனைத் தக்க வைத்துக்கொள்ள வேண்டியதுதான்.

ரிஷப இராசி அன்பர்களே! தனத்தில் நல்ல பலன்களைப் பெறப் புதன் கிரகத்தையும் பெருமாளையும் வணங்குங்கள். கிரக வலு ஏற்பட்டுத் தனம் உங்களுக்குக் கிடைக்கலாகும். குடும்பத்தைப்

பொறுத்தளவு நீங்கள் பாக்கியவான்கள்தாம். பொதுவாக, இராசிக்குக் குடும்பாதிபதியாக உபயகிரகமான புதன் வருவது நலம். ஓரளவு பெரிய குடும்பங்களாகவே இருக்கும். புதனானவர் இராசிக்கு இரண்டாமிடமான மிதுனத்தில் ஆட்சியாகிச் செவ்வாய் சேர்ந்திருந்தால், வரக்கூடிய பெண்ணால் குடும்பம் சுபிட்சமடையும். இராசிக்குக் குடும்பாதிபதியான புதன், இராசிக்கு ஐந்தாமிடமாகிய கன்னி இராசியில் ஆட்சியுச்சமாகியிருந்தால், தாய்மாமன் வழியில் குடும்பம் ஒட்டுறவாய் இருக்கும். புதனோடு சூரியன் சேர்ந்தால், தகப்பனால் தாய்மாமன் விரட்டப்பட்டுச் சண்டைகள் ஏற்படும் சூழ்நிலைகள் உண்டு. இதுபற்றி மகரிஷியின் சந்திர நாடியில் கூறுவதாவது:

"மதிக்குத்தான் குடும்பாதி புங்கனாகி யாட்சியுச்சமேறு
மைந்தனுக்கு மாதுர்வகை உறவுமேலாம்
கதியுடனே புங்கனொடு தான்சேரவரின்
குமரனவன் பிதுர்வகையும் மிடரும் பாரே"

உங்கள் இராசிக்குக் குடும்பாதிபதியான புதன் மீன இராசியில் நீசமாகி அங்கு குரு ஆட்சியானால், குடும்பத்தில் மூத்த சகோதரன் தனியாக வாழ நேரும். இந்தக் கிரகங்களோடு சுக்கிரன் உச்சமாகி யிருந்தால், மூத்த சகோதரனின் மனைவியாலும் சகோதரனாலும் அடிக்கடி குடும்பத்தில் சண்டை ஏற்படும்.

ரிஷப இராசிக்கு இரண்டாமிடமான மிதுன இராசியில் செஞ்சேடனென்ற கேது இருப்பதால், குடும்பம் சதா சண்டை களுடனும், பீடை பிணிகளுடனும் இருக்கும். ஒவ்வொருவரும் ஒவ் வொரு விதமாகத் திரிவார்கள். குரு, தனுசிலிருந்து ஏழாம் பார்வை யாகப் பார்த்தால் உங்களுக்கு வரக்கூடிய மனைவியினால் உங்கள் குடும்பம் சுபிட்சமடையலாம்.

கன்னி இராசியில் புதன் ஆட்சி உச்சமாகி சுக்கிரன் கூடச் சேர்வானாகில், உங்கள் புத்திரனால் குடும்பத்தில் பீடையுண்டு. சத்துருபோல எதிர்க்கும் [illegible] ாடு செய்யும்.

இவ்வாறு கிரகங்கள் [illegible] க்கு வெவ்வேறு இடங்களில் இருந்து குடும்பப் பலன [illegible] ம், சில பாப கிரகங்களின் சேர்க்கையால் குடும்பம் கெடும் நிலைகள் உண்டு. உங்கள்

குடும்பாதிபதி புதனை எந்திர மந்திரங்கள் மூலம் வழிபட்டாலும், அவர் நாமாவளியைச் சொன்னாலும் நல்ல சுபிட்ச நிலைகள் ஏற்பட்டுப் பீடைகள் விலகும். அதைப் பின்பு கொடுக்கப்பட்டுள்ள எந்திர மந்திரங்கள் வாயிலாக அறியவும்.

ரிஷப இராசி அன்பர்களே! சுக்கிராம்சம் பெற்ற உங்களுக்குக் கண்களைப்பற்றிக் கூறவே வேண்டா. கண்கள், வசியக் கண்கள் போலக் காந்தமாய்க் கவரும். கண்விழியானது சாம்பல் நிறம் கலந்த கருப்பு வண்ணமாயிருக்கும். பொதுவாக, இந்த இலட்சணங்கள் இருந்தாலும், சில கிரகச் சேர்க்கையினால் கண்நோய், நீர் வடிதல் போன்றவை ஏற்படுவதுண்டு.

உங்கள் இராசிக்கு இரண்டாம் இராசியான மிதுனத்தில் புதன் ஆட்சியாகி நேத்திரகாரகனான சுக்கிரன் கூடி நின்றால், கண், ஒளிமிக்கதாய் விளங்கும். ஸ்திரீகள் வசியமாவார்கள். ஆனால் கன்னி இராசியில் புதன் ஆட்சியுச்சமானாலும் சுக்கிரன் அங்கு நீசமானாலும் கண் நோய்க்கு அளவேயில்லை. தூரப் பார்வை சரியாகத் தெரியாது. பார்வை மங்கலாகும். சீக்கிரமே கண்ணொளியை இழக்க வேண்டியது நேரும். புதன் கிரகத்திற்குப் பிரீதிகள் செய்வதனால் கண்ணொளியைப் பெறலாம்.

ரிஷப இராசிக்கு இரண்டாமிட நேத்திராதிபதியான புதன், சிம்ம இராசியில் சூரியனோடு கூடுவானாகில், கண்கள் எப்பொழுதும் கோவைப்பழச் சிவப்பாக இருக்கும். கூட சுக்கிரனோ, செவ்வாயோ சேர்ந்திருந்தால், கண் எரிச்சலும், அடுத்தவர் தம் கண்களைப் பார்க்கவே கூசும் நிலையும் உண்டு. மற்றபடி புதன் மற்ற சுப வீடுகளில் இருந்தால், பாதகம் ஏதுமில்லை. ஆயினும், மீன இராசியில் புதன் நீசமாகி, குரு ஆட்சியாகிக் கூடி நின்றால், மத்திமமாகவே கண்பார்வை இருக்கும். சுக்கிரன் உச்சமாகிக் கூடி நின்றால் கண் முன்வயதில் மிகுந்த ஒளியுடனும் பின்வயதில் மங்கலாகவும், பார்வை கெடவும் விதியுண்டு. பின் சொன்ன கிரகப் பிரீதிகளைச் செய்து வந்தால், கண்களைப் பொறுத்தளவும், வாக்கு, தனம், குடும்ப வகையிலும் சுபிட்சம் ஏற்பட விதியுண்டாகும்.

# மிதுனம்

## இரண்டாம் பாவம்

மென்மையான சாரீரமும் அமைதியாகப் பேசும் தன்மையும் கொண்ட மிதுன இராசி அன்பர்களே!

இப்பொழுது பதஞ்சலி மகரிஷியின் சந்திர நாடி வாயிலாக உங்களுக்கு இரண்டாம் பாவ பலன்களை உங்கள் இராசிக்கு இரண்டாம் இராசியாதிபதியான சந்திரன், உங்களுக்கு இராசியாகவே வந்து தந்துவிடுகின்றார். எனவே, குடும்பம், தனம், நேத்திரம் ஆகிய வகையில் பொதுவாகச் சந்திரனைப் போலச் சில நாள் வளர்ச்சியும், சில நாள் தேய்வும் இருத்தல் இயல்பு. இருந்தாலும், இராசிக்கு இரண்டாமிடமான கடக இராசியில் கிரகங்கள் இருந்த பலனையும், இராசிக்கு வாக்காதிபதியான சந்திரனுடன் கிரகங்கள் கூடிய பலனையும் சந்திரநாடி விளக்கத்தின் மூலம் அறிவோம்.

முதலாவதாக நேத்திர பலன்களை அறியும்போது, உங்கள் இராசிக்கு நேத்திராதிபதி சந்திரனே இராசியாக மிதுனத்தில் நின்றுவிட்டபடியால், பொதுவாகக் குளுமையான கண்கள் உண்டு. கண்கள் வெளிர் நிறமானவையாயும், பூனைக் கண்கள் போலவும் காணப்படும். உங்கள் மிதுன இராசியில் சந்திரனுடன் சூரியன் சேர்ந்திருந்தால் பார்வை மங்கல் இயற்கையிலேயே உண்டு. சந்திரனுடன் செவ்வாய் சேர்ந்திருந்தால் கண்கள் கடைசிவரை நலமாய் இருக்கும். மிதுன இராசியில் சந்திரனுடன் இராகு, கேது என்ற இரு பாம்புகளுள் ஏதேனும் ஒன்று சேர்ந்தால், கண்ணில் புரையோடுதல், பில்லம், பூ போன்ற நோய்கள் ஏற்படுவதற்கு விதியுண்டு.

இப்பொழுது உங்கள் இராசிக்கு இரண்டாம் இராசியான கடக இராசியில் கிரகங்கள் நின்ற பலனை அறிவோம். கடக இராசியில் சூரியன் இருந்தால் கண்ணில் எரிச்சல், காந்தல் போன்ற வேதனைகள் உண்டாகும். செவ்வாய் அங்கு நீசமாய் இருந்தால் மத்திம வயதில் கண்கள் இரத்தம் பாய்ந்தது போல் சிவப்பாகவே இருக்கும். குரு, கடக இராசியில் இருந்தால் கண் நோய் குறைவாகவே இருக்கும். ஆனால், சுக்கிரன் கூடச் சேர்ந்தால்

இடக்கண் பழுதாக விதியுண்டாகும். இவ்வாறாய் மிதுன இராசி அன்பர்களுக்கு நேத்திர பலன்கள் இருக்கும். வாக்குப் பலன்கள் பற்றிச் சந்திர நாடி பின்வருமாறு கூறுகிறது:

"வெண்மதிக்கு வாக்கோனும் மதியாய் வரவே
வாக்குகளும் பிரதாபம் செய்வான் பாரே!
கண்களுமே குளிர்நிலவாய்க் காணும் பாராய்!
குமரனுக்கு மதியிடத்தில் வெய்யோன் சேர
புண்களாய் ரணமாகும் வாக்கும் நேத்திரம்!
புகழமேல் வேதன்சேரின் வாக்கு கெலிதம்
பண்பட்ட துறவிபோல் பேச்சும் வாழ்வும்
பயனில்லை ஈர்பாம்பு சேர்ந்தாலும் பாழாய்ப் போச்சே!"

உங்கள் இராசியில் சந்திரனோடு சூரியன் சேர்ந்தானாகில் பேச்சுகளில் அவ்வளவு சுத்தம் இராது. பொய் பேச நேரும். கண்களும் புண்ணாகும். ஆனால், சந்திரனோடு குரு சேர்ந்தால், பேச்சில் வெற்றி கட்டாயம் உண்டு. என்னதான் இருந்தாலும் நீங்கள் அமைதியாகவே பேசும் குணம் வாய்ந்தவர்கள். பேச்சுகளில் எள்ளல்களும் இருக்கும். பண்பட்ட துறவிகள் பேசுவது போலவேயும் இருக்கும். ஆனால், முன் கூறியது போல், சந்திரனோடு இராகு கேதுகளுள் ஏதேனும் ஒன்றுசேர்ந்தால் குடும்ப, தன, வாக்கு, நேத்திர பலன்கள் கெடுவதற்கு ஏதுவாகும்.

உங்கள் இராசியில் சந்திரனோடு கேது சேர்ந்தால் தீய சாபங்கள் விடவேண்டிய சூழ்நிலையும், அப்படிச் சாபம் கொடுத்தாலும் கட்டாயம் பலிக்கும் விதியும் உண்டு. தனத்தைப் பொறுத்தமட்டில், மிதுன இராசிக்காரர்களே! உங்கள் இராசியின் தனாதிபதி, சந்தி ரனைப் போல் வாழ்வின் முன்பாதியில் தனம் வந்து குவியவும், பின்பாதியில் கரையவும் செய்யும். பெரும்பாலும், தேய்ப்பிறைச் சந்திரனில் பிறந்தவர்களுக்கு இந்தப் பலன் மிகவும் பொருந்தும்.

சந்திரனோடு குரு சேர்ந்தால், மனைவி கொண்டுவரும் தனத்தை வைத்து விருத்தி செய்ய வேண்டியது வரும். மனைவியால் குடும்பம் நல்ல நிலைமைகளை அடையும். உங்கள் குடும்பத்தில் தாய் நல்ல நிலைமில் மதிக்கப்படுவாள். தாய் சொற்படி நடக்க விதியிருக்கும்.

உங்களது இரண்டாமிடமான கடகத்தில் குரு உச்சமாய் இருந் தால் மனைவியினால் தனயோகமுண்டென்று சந்திர நாடி

கூறுகின்றது. இப்படியே உச்சமான குருவோடு எட்டாம் இராசிக்கதிபதியான சனி கூடினால், அவர்களோடு கேதுவும் சேர்ந்து நிற்க, திடீர்த் தனப் பிராப்தி நிலை உண்டு. ஆனால், அங்கு செவ்வாய் நீசமாகாமல் இருத்தல் வேண்டும்.

மேற்சொன்ன அமிசங்களுடன் கிரகங்கள் இருந்தால் உங்களுக்கு அதிர்ஷ்ட தேவதையின் அருளால் வாழ்வில் எதிர்பாராத திருப்பங் களும், தனயோகங்களும் கட்டாயம் கிட்டுமென்று கூறப்படுகின்றது.

கடக இராசியில் குரு உச்சமாய் அமையப்பெற்றவர்கள் மனைவியின் தலைமையில் குடும்பத்தை நடத்துபவர்களாய் இருப்பார்கள். செவ்வாய் நீசமாகிக் கூடச்சேர்வதால் இளைய தாரமும் கூடவே குடும்பத்தில் வாழும் விதி உண்டு. இதனால் களத்திரச் சண்டைகள் ஏற்படுவது உறுதி.

கடக இராசியில் சுக்கிரனிருந்து அவனோடு கேது சேர்ந்தால் புத்திரனால் குடும்பத்துக்கு அவப்பெயரும், தன விரயமும் உண்டாகுமென்று கூறப்படுகின்றது.

"கடகரவி மந்தன்சேர் சிகியொடுதான்
கருத்துடனே மதிகிரண்டில் கூடிநிற்கத்
திடமொத்து பிதுர்கட்டம் மாதுர்பகை
தனயனிடம் தனவாங்கி பிழைப்பார்தானே !"

கடக இராசியில் சூரியன், சனி, செவ்வாய் ஆகியன சேர்ந்திருந்தால் தந்தையால் தனம் கிடைக்காது. தாயும் சோர்ந் திருப்பான். சகோதரரும் பலமிழந்து காணப்படுவர். உங்களிடம் பொருளை வாங்கி உண்ணும் நிலையை உண்டு செய்யும். கடைசிவரை உங்களை நம்பியே உங்கள் குடும்பம் இருக்க வேண்டியது இருக்கும்.

மிதுனத்தில் சந்திரனுடன் குரு கூடியிருந்தால், கடல் பொருள்களால் தன வணிகம் நடைபெறும். அதன் மூலம் தனம் கிட்டக்கூடிய விதியும் உண்டு. சந்திரனாலும் சந்திரனால் கூடிய கிரகத்தாலும் சில அவ பலன்கள் ஏற்பட்டால் சோம சாந்தி செய்வதன் மூலம் நல்ல பலன்களைப் பெறலாம். இதனால் குடும்பப் பீடைகள் ஒழிந்து நல்லது நடக்க ஏதுவாகும்.

மிதுன இராசி அன்பர்களே! மேற்கூறிய தனப்பிராப்திகளைப் பெறவும், கிரகங்களின் பலன்களைப் பெறவும் சோம எந்திரம் தரப்பட்டுள்ளது. அதனை நியமங்களோடு பூசித்தால், இரண்டாம் பாவ பலன்களான வாக்கு, நேத்திரம், குடும்பம், தனம் போன்ற பலன்களை அடையலாம். சந்திரனுக்குப் பொங்கல் நிவேதனம் செய்து எந்திரத்திற்குப் பூ, பொட்டிட்டு, மந்திர உச்சாடனம் செய்து வர வேண்டும். தொடர்ந்து 48 சோமவாரம் பூஜை செய்து வந்தால், குடும்பப் பீடைகள் விலகித் தனங்கள் புரள்வதற்கு ஏதுவாகும்.

திடீர்த் தனங்கள் பெற பிராப்தமுள்ளவர்கள் தொடர்ந்து பூஜை செய்து வந்தால், திடீர்த்தன சம்பத்து கிட்டும்.

## கடகம்
## இரண்டாம் பாவம்

இரண்டாம் பாவாதிபதியாகச் சூரியனைப் பெற்ற கடக இராசி அன்பர்களே! இரண்டாம் பாவமென்பது நேத்திரம், ஜீவன், பெருங்குடும்பம், வாக்கு, தனம் போன்றவற்றைக் குறிப்பிடுவதாகும். கடக இராசிக்கு சூரிய பகவான் மேஷம் முதல் மீனம் வரை ஒவ்வோர் இராசியிலும் இருந்த பலனையும், மற்ற கிரகங்களோடு கூடிய பலனையும் நாடி வாயிலாக அறிந்த வகையில் தங்களுக்குக் கூறப்பட்டுள்ளது.

கடக இராசிக்கு இரண்டாமிடத்து அதிபதியான சூரியன் இரண்டாமிடமான சிம்மத்திலேயே ஆட்சியாக இருந்தால், அக்கினிப் பார்வைகளும் அனல் வீசும் பேச்சுகளும் உண்டாகும். தன வகையில் முன் இலாபங்களும் பின் நட்டங்களும் உண்டு. சூரிய பகவான் சுப பலமாய் இருக்க நன்மையுண்டு. சூரிய பகவானொடு இரண்டுக்கு மேற்பட்ட சுபகிரகங்கள் சேரத் திடீர்த் தன இலாபங்களும் பொருளாதாரத் துறையில் விருத்தியாதலும். சூரியனுடன் சுக்கிரன் சேர்ந்திருக்கக் கண்ணில் பூ விழுதல், திமிரம் போன்ற நோய்கள் ஏற்படவும் வாய்ப்புண்டு. சூரியனுடன் புதன் சேர்ந்திருக்க இளைய சகோதர இலாபங்கள் முன்வாழ்க்கையில் உண்டாகும்; பின் வாழ்க்கையில் குறைவு. சூரியன் சுபபலமாய் இருக்கத் தனப்பிராப்தி வகையில் நன்மையுண்டு. அதே போல், அதனைச் ஸ்திர நிலைப்படுத்தவும் முடியும். நிலைகள் உண்டாகும். சூரியனொடு இராகு

கேதுகளுள் ஏதேனும் ஒன்று கூடினாலும் கிரகண தோசங்கள் ஏற்பட்டு, இரண்டாம் பாவ வகையில் ஒன்றை அழித்து ஒன்றைப் பெறும் நிலை உண்டாகும். சூரிய பகவானுக்கும் சிவ பெருமானுக்கும் பிரீதிகள் செய்வதன் மூலம் தன தானிய சம்பத்துகள், குடும்ப விருத்திகள் ஆகியன ஏற்பட வாய்ப்புண்டு.

கன்னி இராசியில் சூரியனிருந்து புதன் கூடுவானாகில், இளைய சகோதர இலாபங்கள் உண்டு. அவர்கள் மூலம் தனம் பெறும் நிலைகள் உண்டாகும்.

ஆள் அடிமை வர்க்கங்களில் தனம் பெறும் வாய்ப்புகள் குறைவு. தன தானிய சம்பத்துகளும், திடீர் வகை தனபிராப்தியும் மாயா நிலை சம்பத்துகளும் அவரவர் திசை புத்திகளில் கிடைக்கலாம். சூரியன் சனியுடன் கூடினாலும், தனது பகைக் கிரகங்களுடன் கூடினாலும், இரண்டாம் பாவ வழியில் முரணான பலன்களே உண்டு. சூரியனுடன் கன்னியில் நீச கிரகமான சுக்கிரன் கூடினால் பொருளாதார ஏற்றத்தாழ்வுகளும், குடும்பச் சிக்கல்களும் உண்டாகக்கூடும். தன் களத்திரத்தினால் தனதானிய சம்பத்துகளை இழக்க நேரிடலாம். சூரியன் சுபபலமாய் இருக்க நேத்திர ஒளி பெற்றவராயும், நிரந்தரமான தனங்களைப் பெற்றவராயும், தனதானிய சம்பத்துகள் உடையவராகவும் இருப்பார். பொன், பொருள், பூஷண வகையில் பற்றுக்கொண்டு திரவிய வகையில் ஈடுபாடுண்டாகும். சூரியன் அசுப பலமாய் இருக்க, நேத்திர நோய் கொண்டவராயும், பேச்சில் நாணயம் இல்லாதவராயும் முரண்பாடு உடையவராயும் இருத்தல் கூடும். சூரியனொடு இராகு கேதுகள் கூடினாலும், மத்திமம். சூரியன் அசுப பலமாய் இருக்கப்பெற்ற கடக இராசி அன்பர்கள், சூரிய பகவானுக்கும் சூரிய பகவான் அதிதேவரான சிவபெரு மானுக்கும் பிரீதிகள் செய்வதன்மூலம் உயரிய பலனைப் பெறலாம் என்று கூறப்படுகிறது.

துலா இராசியில் சூரியன் நீசமாயிருக்கப் பிறந்த கடக இராசி அன்பர்கள், தனதானிய சம்பத்துப் பெற்றவராயும் பொருளாதார ஏற்றத்தாழ்வு உள்ளவராயும் வாக்கில் முரண்பாடுள்ளவராயும் நேத்திர ஒளியில் இடர் கொண்டவராயும் இருக்கலாம். சூரியனுடன் அங்கே ஆட்சிக்கிரகமான சுக்கிரன் சேர ஏற்படும் நீச பங்க இராஜ யோகம், சூரிய திசைப் புத்திகளிலோ சுக்கிர திசை சூரிய புத்திகளிலோ திடீர்த் தன இலாபங்களைப் பெறலாமென்றும், ஆனால், அந்தச்

சொத்துகளை நிலைப்படுத்துவது கடினமென்றும் நாடிவாயிலாக அறியப்படுகிறது. நீசமான சூரியனுடன் ஆட்சிக் கிரகம் சேர்ந்தாலோ, உச்சக்கிரகமான சனி கூடினாலோ திடீர்த் தன பிராப்தி உண்டாகக் கூடும். இரண்டாம் பாவ வகையில் ஒன்றை இழந்தே ஒன்றைப் பெற முடியும் என்றும், அதனை உரிய பிரீதிகளின் மூலம் தக்க வைக்கலாம் என்றும் கூறப்படுகிறது.

கடக இராசிக்கு இரண்டாமிடத்து அதிபதியான சூரியன் தன்னுடைய நேச வீடுகளில் இருக்க, தனதானிய சம்பத்துகளும், வாக்கில் பிரதாபங்களும், சொற்பப் பலிதங்களும், தெய்வ உபாசனைகளும் சிவ சம்பத்துகளும் பொருளாதார விருத்தியும் குடும்ப விருத்தியும் களத்திர, புத்திர பந்துக்கள் வகையில் நேசமும் உண்டாகும். பொருளாதார வகையில் நடுத்தரமான நிலையைக் கொண்டிருத்தலும் உண்டாகும். சூரியனுடன் சனி கூடுவானாயின் இரண்டாம் பாவ வகையில் முரண்பாடுகளே அதிகம். இதனால் தெய்விகப் பூசைகள் மூலமும் சூரிய யந்திரங்கள் மூலமும், சிவ வழிபாடுகள் மூலமும் உயரிய பலனை அடையலாம் என்று கூறப்படுகிறது.

சூரியனாகப்பட்டவர் தம் மகனான சனி வீட்டில் - அதாவது, மகரம் அல்லது கும்பம் ஆகிய வீடுகளில் - இருக்க இரண்டாம் பாவ வகையில் மத்திமமான பலன்களே ஏற்படும். சூரியனுடன் சனி ஆட்சி யாகிக் கூடினாலும் முரணான பலன்களே உண்டாகும். சூரியன் தன்னுடைய நேச வீடுகளில் சுப பலமாய் இருக்க, இரண்டாம் பாவ வகையில் கீர்த்தியும் செல்வாக்கும் உண்டாகும். கடக இராசிக்கு இரண்டாமிடத்து அதிபதியான சூரியன் மேஷ இராசியில் உச்சமாக, வாக்கே தொழிலாகக்கொண்டு சிவசம்பத்துகளைப் பெற்றும், பொருளாதார வகையில் பிற்பகுதியில் முன்னேற்றங்களும் ஏற்படும். செவ்வாய் அங்கு ஆட்சியாகிக் கூடத் தன் பிரதாபங்களினால் தனங்களை ஈட்டியும், திரவியங்களைச் சேர்த்தும் வாழ்க்கையில் முன்னேற விதிகள் உண்டு. சூரியனுடன் இரு பாம்புகளான இராகு கேதுகளுள் ஏதேனும் ஒன்று கூடினால், கிரகண தோஷம் உண்டாகிச் சில காலங்களில் அதம பலன்களும், சம்பத்துகள் கிடைப்பதில் தடையும் வேண்டியன சித்திக்காதிருத்தலும் உண்டாகும். இத்தகைய கிரகண தோசமுள்ளவர்கள் சிவ பூஜை

செய்வதன் மூலமும் சூரியனைக் கடுமையாகத் தியானிப்பதன் மூலமும் நல்ல விதிகளைப் பெறலாம்.

கடக இராசிக்கு இரண்டாமிடத்து அதிபதியான சூரியன் கடக இராசியிலேயே சந்திரனொடு கூடினால் அமாவாசை யோகமுண்டு. இதனால் சில பலன்கள் மேன்மையாகவும், சில பலன்கள் தீயவையாகவும் இருக்கக்கூடும். வாக்குகளில் பிரதாபம் உண்டு. ஆணி அடித்தாற்போல் பேசும் திறனும் தெய்விக உபாசனைகளும் துர் சாபங்களில் பலிதமும் உண்டாகும். ஆனால், குடும்ப வாழ்க்கையில் முன் அல்லல்களும் பின் ஆக்கங்களும் உண்டாகும். பொருளாதாரத் துறையில் சில காலம் மேன்மையும் சில காலம் தாழ்வும் உண்டு. நேத்திர ரோகங்களும், சிரசு ரோகத்தால் நேத்திரம் பாதிக்கப்படுதலும், கண்ணொளி மங்குதலும் சில காலகட்டங்களில் ஏற்படலாம். இல்வாழ்க்கையில் சில காலங்களில் திருப்தியற்றும் காணப்படலாம். தன் பிதுர்வர்க்கத் தனங்கள் குறைவாக இருக்கும். தன் சுய உழைப்பின் மூலமே உரிய பலனை அடையும் விதிகள் உண்டு என்று நாடி வாயிலாக அறியப்பெறுகிறது.

கடக இராசி அன்பர்களே! சூரியனுடன் சர்ப்பங்கள் கூடிக் கிரகண தோசத்தை ஏற்படுத்தினாலும் அல்லது சூரியன் தனது பகை வீடுகளுள் அசுப பலமாய் இருந்தாலும், கிரகச் சேர்க்கைகள் மோசமான பலனைத் தந்தாலும், திடீர்த் தனப் பிராப்திகளையும் செல்வாக் கையையும் எதிர்பார்த்துக் கிடைக்காதவர்கள் சிவ வழிபாடு, சூரிய வழிபாடு, சிவதலத்திற்குச் சென்று வருதல் ஆகியவற்றை மேற்கொண்டால் தன தானிய சம்பத்துகளையும், திடீர்த் தன பிராப்திகளையும் இரண்டாம் பாவ வகையில் நற்பலன்களையும் அடையலாமென்று நாடிவாயிலாக அறியப்படுகிறது. அன்பர்கள் சூரிய யந்திர மந்திரங்களைப் பயன்படுத்தி வழிபாடுகள் செய்து நற்பலன்களை அடைய வேண்டுமாய்க் கூறப்படுகிறது.

## சிம்மம்
## இரண்டாம் பாவம்

**திருமாலாகிய புதனை 2ஆம் இடத்ததிபதியாகப் பெற்ற சிம்ம இராசி அன்பர்களே!**

உங்கள் இராசிக்கு இரண்டாமிடத்ததிபதியான புதன், மேஷம் முதல் மீனம் வரை ஆட்சி, உச்சம், நீசம், பகை, நட்பு போன்ற வீடுகளின் பலனைக் காண்போம்.

கன்னி இராசியில் புதன் ஆட்சியுச்சம் அடைந்தால் சிம்ம இராசி அன்பர்களுக்கு, வாக்கு பிரதாபங்களும், வாக்காலேயே தொழில்களும், அவற்றால் தனங்களைச் சேர்க்கும் நிலையும் உண்டாகும். வாக்கில் பலிதங்களும், தெய்வ உபாசனைகளும் ஏற்பட்டுச் சிறப்படையும் நிலையுமுண்டாகும்.

இரண்டாம் பாவத்தில் தனம், வாக்கு, குடும்பம், நேத்திரம் போன்ற மற்ற அமிசங்களைக் காணும் பொழுது, நேத்திரங்கள் கருநீல விழிகளைக் கொண்டனவாயும், கூரிய பார்வையுள்ளன வாயும் அமைந்திருக்கும்.

கன்னி இராசியில் புதன் ஆட்சியுச்சமாகி நேத்திரக்காரகனான சுக்கிரன் அங்கு நீசமடைந்தால், நீசபங்க ராஜயோகமும், அதனால் இரண்டாம் பாவ வகையில் ஒன்றைப் பெற்று ஒன்றை இழக்கும் நிலையும் உருவாகலாம். புதனுடன் சுக்கிரன் நீமாகிக் கூட இந்த இருவர் திசை புத்திகளில், திடீர்த் தனபிராப்திகள் உண்டாக விதிகள் உண்டு. அந்தக் காலங்களில் உங்கள் இராசிக்கு தனாதி பதியாகிய புதனுக்கோ, அவர் காரக தேவரான மஹாவிஷ்ணுவுக்கோ பூஜைகள், பிரீதிகள் செய்யத் திடீர்த் தனங்களும், அதனை நிலைநிறுத்தி வைக்கக்கூடிய திறனும் உண்டாகும்.

புதனானவர் ஆட்சி உச்சமாகி அவரோடு இரண்டுக்கு மேற்பட்ட சுபகிரகங்கள் கூட குடும்ப சுபிட்சம், உயர்போக வாழ்வு, நிம்மதி ஆகியன உண்டு. புதனுடன் நீசகிரகங்களோ இரண்டுக்கு மேற்பட்ட பகைக் கிரகங்களோ கூடினாலே முன் அதம பலனுண்டு.

சிம்ம இராசிக்கு இரண்டாமிடத்ததிபதியான புதன் தன் நட்பு வீடுகளிலிருந்தால் முன் மத்திம பலன்களையும், பின் உத்தம பலன்களையும் கொடுப்பார். புதனோடு இரண்டுக்கு மேற்பட்ட பகை கிரகங்கள் கூடினால், இரண்டாம் பாவ வகை மத்திம பலன்களே உண்டு. புதன் துலா இராசியில் இருக்க, சனி உச்சனாகிக் கூடி வில்லங்க விவகாரத்தினால் தனங்கள் கிடைக்கும். புதனுடன் சுக்கிரன் ஆட்சி ஆகக் கூட வாக்கை மையமாகக்கொண்டு தொழில் நடத்துவார்கள். மதனமான வாத்தைகளைப் பேசுவதன்

மூலமும், நேத்திர ஒளியின் மூலமும் அவ்வப்போது தனங்கள் விருத்தியாகும். நிலவருவாய் ஈட்டிச் சுபிட்சமாக வாழ விதி உண்டு. புதன், துலா இராசியில் இருக்கச் சூரியனாகப்பட்டவர் நீசமாகக் கூட, இளமையிலேயே வறிய நிலையில் இருந்து, பின்பு உயர்ந்து, தனங்களைச் சேர்க்க விதியுண்டு. துலா இராசியில் புதன் இருக்க ஓர் ஆட்சிக் கிரகமும், ஓர் நீச கிரகமும் கூடினால், உயர்ந்த யோகம் உண்டு. உயர்ந்த தனங்களைத் திடீர்த் தன பிராப்தி வகையில் பெற விதி உண்டு என்று கூறப்படுகிறது. துலா இராசியில் புதன் இருக்கச் சனி உச்சனாய்க் கூடின், நேத்திர உபாதைகளும் பார்வை மங்கலும் ஏற்பட்டு விலக விதியுண்டு.

விருச்சிக இராசியில் புதன் இருக்க, தனப் பிராப்தியானது நிலம், மனை வகையிலும் வாகன வகையிலும் கிட்ட விதி உண்டு. புதனுடன் இராகு கேதுகள் கூடின், மத்திமம். புதனுடன் இரண்டுக்கு மேற்பட்ட சுபகிரகங்கள் கூடத் தன பிராப்திகளும், சனியானவர் கூட மனையிலிருந்து தனங்கள் எடுக்கக் கூடிய விதிகளும் உண்டு என்று அறியப்படுகிறது. புதன் தனுசு இராசியில் இருக்க, பூர்வ புண்ணியத் தனங்களும் வாக்கினாலும் மந்திரத் தொழிலாலும் தெய்விக உபாசனையாலும், ஏற்படக்கூடிய தனங்களும் உண்டாகும். புதனுடன் குரு ஆட்சியில் கூட, மந்திர சம்பந்தங்கள் நிலைத்து, அதன் வழியே பொன், பொருள், பூசணங்கள் சம்பாதிக்கக்கூடிய நிலை ஏற்படும்.

சனி வீடுகளாகிய மகர, கும்பங்களில் புதனுக்கு நற்பலன்கள் ஏற்படும் என்று கூறப்படுகிறது. சனி ஆட்சியாய்க் கூடினால், தனங்களையும், வாக்கு பிரதாபங்களையும், தன் மனைவி வழி தனங்களையும் பெற விதிகள் ஏற்படும். சனி வீட்டில் புதன் தனித்திருந்தாலோ சனியுடன் சேர்ந்திருந்தாலோ நன்மை உண்டாகும். இராகு, கேதுகள் கூடியும் நீச கிரகங்களுடன் சேர்ந்தும் இருக்க, அதம பலன்களே உண்டாகும். அதற்குரிய பிரீதிகள் செய்து, பூசை நடத்தி, வாக்கு பலன்களையும், தனப் பலன்களையும் குடும்ப விருத்திகளையும் நல்ல முறையில் பெற வேண்டியது.

மீன இராசியில் புதன் நீசமாக வாக்குப் பலிதங்கள் குறைவு. நேத்திர உபாதைகளும், குடும்ப விருத்தியின்மையும், தன விருத்தியின்மையும், பொருளாதார இடர்ப்பாடுகளும் உண்டு. புதனுடன் ஆட்சிக் கிரகமாகிய குரு கூடினாலும் அல்லது உச்ச கிரகமாகிய சுக்கிரன் கூடினாலும், பலன்கள் முரண்பாடாகவே

இருக்கும். துர்பலிதங்களும், சாபங்களும் பலிக்கும் விதி உண்டு. வாக்கில் நீசத்தனமான பேச்சுகளும், கொடூரப் பேச்சுகளும் ஏற்படும் நிலை இருக்கும். புதனுக்குக் கடுமையான பிரீதிகள் செய்வதன் மூலமும், மகாவிஷ்ணுவையும், சுதர்சன சக்கரத்தையும் வழிபடுவதன் மூலமும் துன்பங்கள் நீங்கி இன்பங்கள் ஏற்பட நல்ல உபாயங்கள் ஏற்படும் என்று நாடி வாயிலாக அறியப்படுகிறது. புதனாகியவர் மேஷ இராசியில் இருக்க, பிதுர்த்தனங்களும், அந்த பாக்கியத்தை அனுபவிக்கும் நிலைகளும் உண்டு. புதனுடன் நீச கிரகம் கூட மத்திம் பலனே உண்டாகும். மலை வளங்களில் சொத்துகள் ஏற்பட்டு, அவற்றின் வழி தனங்கள் ஏற்பட விதிகள் உண்டு.

நேத்திரங்களில் சிவப்பு நிறமும், நேத்திர உபாதைகளும் அவ்வப்போது வந்து விலகும். புதனுடன் செவ்வாய் ஆட்சியாகி கூட, முரண்பாடுகள் இரண்டாம் பாவ வகையில் ஏற்படும். சிம்ம இராசிக்கு இரண்டாமிடத்ததிபதியாகிய புதன் ரிஷப இராசியில் இருக்க, வாக்கால் தனங்களும், தம் பேச்சினால் மகிழ்விக்கக்கூடிய நிலைகளும், அதனால் விருத்தியும் உண்டாகும். வாக்குப் பிரதாபங்களும் உண்டு. குடும்பம் தன் உயர்வினாலேயே சிறக்கும். மிதுன இராசியில் புதன் இருக்க வாக்கு இலாபங்களும், மூத்த சகோதர பற்றுகளும் பாசங்களும் உண்டு. நேத்திரங்கள் நல்ல ஒளியுடனும் ஜீவனுடனும் காணப்படும். புதன் இரண்டுக்கு மேற்பட்ட நட்புக் கிரகங்களுடன் கூட, தன பிராப்திகள் என்றும் நிலைத்திருக்கும். குடும்பம் சுபிட்.சத்துடன் இருக்கும்.

கடக இராசியில் புதன் இருக்க மத்திம பலன்களே உண்டு. புதனுடன் அங்கு நீசக்கிரகமான செவ்வாயோ, பகைக் கிரகங்களோ கூடினால் தன விரயமும் தன தானிய சம்பத்துகள் குறைவுபடுதலும், வாக்கில் மகிமை இல்லாதிருத்தலும், தரித்திர நிலையும் ஏற்பட வசதி உண்டு. புதனுக்கும் மகா விஷ்ணுவுக்கும் உரிய பிரீதிகள் செய்ய உயர் பலன்கள் கிட்டும் என்றும் நாடி வகையால் அறியப்படுகிறது.

## கன்னி
## இரண்டாம் பாவம்

அசுர குரு சுக்கிராச்சாரியை இரண்டாமிடத்து அதிபதியாகப் பெற்ற கன்னி இராசி அன்பர்களே!

பேச்சில் ஆவேசமும், நல்ல நேத்திர ஒளியுடனும் குடும்ப விருத்தியுடனும், தன தானிய சம்பத்துகளுடனும் இருக்க விதி உண்டு. அசுர குரு சுக்கிராச்சாரி கன்னி இராசிக்கு இரண்டாமிடமான துலா இராசியான தம் வீட்டிலேயே இருக்க வாக்குப் பிரதாபங்களும், பேச்சில் மகிமையும், வசீகர நேத்திரமும் தனங்களை நல்ல நிலையில் வைத்திருக்கும் விதியும் அமையும்.

சுக்கிரனுடன் துலா இராசியில் உச்ச கிரகமான சனி கூட, மந்திர சம்பந்தங்களினால் தனங்கள் சம்பாதிக்கக்கூடிய நிலையில் வில்லங்க விவகாரத்தினால் சொத்துகள் ஏற்பட விதியும் உண்டு. சுக்கிரனுடன் சூரியன் நீசமாய்க் கூடச் சில மத்திம பலன்கள் ஏற்படும். அவற்றைத் தவிர்க்க மகாலட்சுமிக்கும், இந்திரனுக்கும் உரிய பூசைகள் செய்யத் தனதானிய சம்பத்துகளில் விருத்தியும், பசு விருத்தியும் ஏற்படும்.

அசுர குரு சுக்கிராச்சாரி தம் பகை வீடுகளில் மத்திம பலன்களையும், ஆட்சி வீடுகளில் உத்தம பலன்களையும், நீச வீட்டில் அதம பலன்களையும் கொடுப்பார். கன்னி இராசிக்கு இரண்டாமிடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு ஒன்பதாமிடமான ரிஷபத்தில் ஆட்சியாய் இருக்க, பிதுர்ச் சொத்துகளையும் அதன் வழி தனங்களையும் அடையும் விதி உண்டாகும். சுக்கிரனுடன் செவ்வாய் சேர்ந்திருக்கச் சில முரணான பலன்கள் ஏற்படும். எந்திர மந்திர பூசைகள் மூலம் அவற்றை நிவர்த்தித்துக்கொள்ளல் வேண்டும். சுக்கிரன் தனது உச்ச வீடான மீனத்தில் இருக்க, தனக்கு வரும் மனைவியினால் யோகமும் அவள் வழியிலான தனங்களும் பெரும் நிலையை ஏற்படுத்தும். சுக்கிரன் மீனத்தில் உச்சமாகி குரு அங்கு ஆட்சியாகக் கூட, சில முரணான பலன்களைக் கொடுக்கும். அதன் பின்பு விருத்தி பலன்களைக் கொடுக்கும். சுக்கிரனுடன் புதன் நீசமாய்க் கூடச் சில விபரீத யோகங்களும், திடீர்த் தனப்பிராப்தியும் ஏற்படும் நிலையும் உண்டாகும்.

அசுர குரு சுக்கிராச்சாரி கன்னி இராசியில் நீசமாக, இரண்டாம் பாவ வகையில் சில அதம பலன்களைச் சந்திக்க வேண்டி இருக்கும். புதன் அங்கு கூடினால் அதமபலன்களுக்குப் பின்பு உத்தம பலன்கள் ஏற்பட விதி உண்டு. சுக்கிராச்சாரி தம் நட்பு வீடுகளில் சுப பலமாய் இருக்க, இரண்டாம் பாவ வகையில் நற்பலன்கள் ஏற்படும். தன் பகை வீடுகளில் இருக்க, அங்கு இரண்டிற்கு மேற்பட்ட பகை

கிரகங்கள் கூடினாலோ, நீசக் கிரகங்கள் கூடினாலோ அதம பலன்களே ஏற்படும். இரண்டாம் பாவ வகையில் நல்ல பலன்களைப் பெறக் கன்னி இராசி அன்பர்கள் இலட்சுமி தேவிக்கும், இந்திர பகவானுக்கும் அல்லது இரண்டு பேருக்குமே உரிய எந்திர மந்திர பிரீதிகள் செய்வதன் மூலமும், உயர்வான பலன்களை அடையலாம்.

அசுர குரு சுக்கிராச்சாரி செவ்வாய், புதன், குரு, சனி ஆகியவர்களின் வீடுகளில் பொதுவாக நற்பலன்களே செய்வார். அச்சமயம் உரிய பூசைகளைச் செய்து, உயர் பலன்களை அடைய வேண்டும். சுக்கிரனுக்கு நட்பு இராசிகளான மேஷம், மிதுனம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம் போன்ற இராசிகளில் உத்தமமான பலன்களையே செய்வார். இரண்டுக்கு மேற்பட்ட சுபகிரகங்கள் கூடினாலும், பார்வை பட்டாலும் இரண்டாம் பாவம் நல்ல மேன்மையுடன் விளங்கும்.

நாடி வகையில் சுக்கிரனுடைய கோட்சாரப் பலன்களைக் காணும் பொழுது, கன்னி இராசியில் சுக்கிரன் சஞ்சரிக்கும் போது தன தானிய இலாபங்களும், மந்திர சித்திகளும் தன இலாபங்களும், அந்நிய மாதரோடு சுகங்களும் ஏற்படும். ஐஸ்வர்யங்களும், பொன், பொருள், பூசணங்களும் சஞ்சரிக்கும் காலத்தே உண்டாகும். கன்னி இராசியில் சுக்கிரன் நீசமான காரணத்தால், உயர் பலன்களை முரணாகவே கொடுப்பார். அந்தக் கால கட்டத்தில் அசுர குரு சுக்கிராச்சாரிக்கு எந்திர மந்திர பிரீதிகள் செய்து உயர்பலன்களை அடைய வேண்டும்.

கோட்சாரத்தில் கன்னி இராசிக்கு இரண்டாம் இடமான துலா இராசியில் சுக்கிரன் சஞ்சரிக்கும் போது தன இலாபங்களும், வாக்கில் மேன்மையும் வெண்மையான ஆடைகளில் இஷ்டமும், சுகங்களைத் தேடிச் செல்லுதலில் இஷ்டமும் உண்டாகும். வாக்கில் மேன்மையும், வாக்குப் பலிதமும் குடும்ப இலாபமும் விருத்தியும் ஏற்படும்.

கன்னி இராசிக்கு மூன்றாம் இடமான விருச்சிக இராசியில் சுக்கிரன் சஞ்சரிக்கும் போது, முன் அல்லலும் பின் ஆக்கங்களும் உண்டாகும். தான் தேடிச் சம்பாதித்த பொருளை நாசம் பண்ணுதலும் இளைய சகோதரர்களால் தன பயன்களும், ஜீவனத்திற்குப் பங்கமும், எதிரிகளினால் திரவிய நாசமும் ஏற்படும். பின்பு சரியாகும். இந்தக் கால கட்டங்களில் நேத்திர உபாதையும் ஏற்பட்டு விலகும்.

கன்னி இராசிக்கு நாலாம் இடமான தனுசு இராசியில் சுக்கிரன் சஞ்சரிக்கும் போது, சினேகித இலாபமும், வாக்குப் பலிதங்களும், நில மனைகளில் தன இலாபங்களும் வாகன இலாபங்களும், அவற்றை ஒட்டித் தனங்கள் சேர்த்தலும் ஏற்படும். அந்தக் காலகட்டங்களில் குடும்பம் ஒற்றுமையாக இருக்க விதி உண்டு.

சுக்கிரன் இராசிக்கு ஐந்தாம் இடமான மகர இராசியில் சஞ்சரிக்கும் போது, புத்திர இலாபமும் புத்திரர்களால் தன சம்பாத்தியமும் மந்திர சம்பந்தங்களில் ஈடுபாடும், தான் விரும்பியதைத் தேடுதலும், பொன், பொருளில் இஷ்டமும், தனதானிய விருத்தியும் உண்டாகும். சுக்கிரன் இராசிக்கு ஆறாமிடமான கும்ப இராசியில் சஞ்சரிக்கும் போது, விரோதிகளால் தன விரயமும் பங்காளிகளால் தொல்லையும், பிதுர் சொத்துகள் விரயமாதலும், அந்தக் காலத்தே ஜீவன பங்கமும் பலரிடம் விரோதமும் ஏற்படும்.

சுக்கிரன் இராசிக்கு ஏழாமிடமான மீன இராசியில் சஞ்சரிக்கும் போது, தனங்கள் ஈட்டுதலில் ஆர்வமும், தன் மனைவி இடத்தே பற்றுதலும், பெண்களிடம் அதிக மோகமும் ஈடுபாடும் உண்டாகும். அக்காலத்தே கவனமாய் இருத்தல் வேண்டும்.

கன்னி இராசிக்கு எட்டாமிடமான மேஷ இராசியில் சுக்கிரன் சஞ்சரிக்கும் போது, அசுபச் செலவுகளும் தன தானிய விரயங்களும் பெண்களினால் மோசம் போதலும் மலை ஏறுதலும், அதனால் பெரியோர் தரிசனங்களும் உண்டாகும் என்று கூறப்படுகிறது.

கன்னி இராசிக்கு ஒன்பதாம் இடத்தில் சுக்கிரன் சஞ்சரிக்கும் போது, தன்னுடைய வீட்டிலேயே சஞ்சரிப்பதால், தான் விரும்பிய பொருளைத் தேடுதலும் வாக்கு சித்திகளும், தேவதா சித்திகளும் நேத்திர ஒளியும் சிறந்து விளங்கும்.

சுக்கிரன் மிதுன இராசியில் சஞ்சரிக்கும் பொழுது, சத்துருக் களால் தன விரயங்களும், சதா காலமும் சஞ்சலத்துடனும், போகத்தில் ஈடுபாடு இன்மையும் பெண்களிடம் ஆசைக் குறைவுகளும், வியா கூலத்துடனே இருக்க விதி உண்டாகும். சுக்கிரனுக்கு எந்திர மந்திர பிரீதிகள் செய்ய நல்ல பலன்கள் கிட்டும்.

இராசிக்குப் பதினோராமிடத்தில் சுக்கிரன் சஞ்சரிக்கப் பசு விருத்தியும், பால் விருத்தியும் நவரத்தின வகையில் ஈடுபாடும்

அதன் வழிச் சம்பாத்தியங்களும், தேடிய சொத்துகளை நிலை நிறுத்துதலும், இலாகிரி வஸ்துகளில் ஈடுபாடும் பரிமள, சுகந்த வாசனை திரவியங்களில் ஈடுபாடும் உண்டாகும். காரிய சித்தி உண்டாகும்.

சுக்கிரன் இராசிக்கு பன்னிரண்டாமிடமான சிம்ம இராசியில் சஞ்சரிக்க, முன் நட்டங்களும் பின் இலாபங்களும் உண்டு. நவரத்தின விரயங்களும், வெண்மையான பொருள்களினால் தன விரயமும், விரோதிகளால் தனவிரயமும், அயல் தேசம் செல்லுதலில் ஈடுபாடு குறைவும் சில காலம் வியாகூலத்துடனேயே இருக்க விதி உண்டு. சுக்கிர பகவானுக்கு உரிய பிரீதிகள் செய்வதன் மூலம் உயர் பலன்களை அடையலாம்.

## துலாம்
## இரண்டாம் பாவம்

செவ்வாய் பகவானை இரண்டாமிடத்ததிபதியாகப் பெற்ற துலா இராசி அன்பர்களே!

மூர்க்கம், கோபம், எதிரியை வெல்லுதல், சிவப்பு வண்ணத்தில் ஈடுபாடு போன்றவற்றுக்குச் செவ்வாய்க்குக் காரகம், அதன் குணங்களின்படி உங்களின் இரண்டாம் பாவ பலன்களும் அமையும் என்று கூறப்படுகிறது. பேச்சில் மூர்க்கமும், கபட வார்த்தைகளும், அதிலே ஹாஸ்யம் கலந்து உணர்வும், விகட உணர்வும் உண்டு. துலா இராசிக்கு இாண்டாம் இடத்ததிபதியான செவ்வாயின் இராசி பலன்களைக் காணும்போது துலா இராசியிலேயே செவ்வாய் சஞ்சரித்தால், மூர்க்கத்தனமான செயல்மூலம் தனங்கள் சம்பாதிப்பார்கள். குடும்பத்தில் கலகமும் சுபிட்சமின்மையும் காணப்படும். தான் வேண்டும் தெய்வம் அக்காலத்தே உதவிக்கு வாராது. அதனால் மனச்சஞ்சலங்களும் வாக்கினால் பலனும் பயமும் உண்டாகும். செவ்வாயானவர் இராசிக்கு இரண்டாமிடமான விருச்சிக இராசியில் சஞ்சரிக்கும் போது, சகவாச தோஷங்களும் நேத்திர உபாதைகளும் தனவரவில் இடர்ப்பாடும் மலைவனங்களில் இலாபமும் உண்டாகும். தைரியக் குறைவும் கூட்டாளிகளால் தைரியம் ஏற்படலும், விகடப் பேச்சுகளும் அதன்பின்பு பயமும் ஏற்பட விதி உண்டு. இக்காலத்தே முன் அல்லலும், பின் ஆக்கமும் ஏற்படும்.

துலா இராசிக்கு இரண்டாமிடத்ததிபதியான செவ்வாய் இராசிக்கு மூன்றாமிடமான தனுசு இராசியில் சஞ்சரிக்கும் போது, தெய்வப் பிரம்மையும், தேவ சித்தியும், வாக்கு சித்தியும் சுப்பிரமணிய தேவர் ஆராதனையும், மூர்க்கதேவ ஆராதனையும் மாமிசத்தில் ஈடுபாடும், சிவப்பு வண்ணங்களில் பிரியமும் பொன், பொருள், பூசண வர்க்கங்களில் ஈடுபாடும், சம்பாதிக்கும் திறனும் ஏற்படும். இளைய சகோதரர்கள் தனம் பெறக்கூடிய விதியும் ஏற்படும். நேத்திரம் இரத்த மயமாய் இருக்கும்.

துலா இராசிக்கு இரண்டாமிடத்ததிபதியான செவ்வாய் இராசிக்கு நாலாமிடமான மகர இராசியில் சஞ்சரிக்கும் போது, வாகன இலாபங்களும், அதனை இட்டுப் பின் நட்டங்களும் ஏற்படும். மனை வகையில் தனங்கள் சம்பாதித்தலும், அதன் பின்பு விரயம் ஆதலும் நேரும்.

செவ்வாயானவர் துலா இராசிக்கு ஐந்தாம் இடமான கும்ப இராசியில் சஞ்சரிக்க வியாதியினால் விரயமும், மனம் கலக்கத் துடனேயே இருத்தலும், அதன் பின்பு தெளிவாதலும் நேத்திர வியாதியும் உண்டாகும். பார்வை மங்கல் ஏற்பட்டு அதன் பின்பு தெளிவு உண்டாகும். குடும்பங்களில் சரீர, அசௌகரியங்கள் ஏற்பட்டு விலகும்.

செவ்வாயானவர் இராசிக்கு ஆறாமிடமான மீன இராசியில் இருக்க, சத்துரு உபாதையும், அதன் பின்பு வெற்றி நன்னிலையும் உண்டு. மூர்க்க குணங்களால் இலாப நட்டங்கள் கலந்துவரும். புண்ணிய காரியங்களும் அவற்றால் சுப விரயமும் ஏற்படும்.

செவ்வாயானவர் துலா இராசிக்கு ஏழாமிடமான மேஷ இராசியில், தன்னுடைய வீட்டிலேயே சஞ்சரிக்கும் போது, மனைவி வழி தனங்களும், மலை வளங்களினால் இலாபமும், உடன்பிறந்தவர் களினால் விரோதமும், நேத்திரப் பீடையும் திரவியங்கள் சேர்த்தலில் கவனக் குறைவும் பின்பு சுபிட்சமும் உண்டாகும்.

செவ்வாயானவர் துலா இராசிக்கு எட்டாமிடமான ரிஷப இராசி யில் சஞ்சரிக்கும் பொழுது, நேத்திரப் பீடையும் வாக்கு நட்டமும், இஷ்டப்படி வேண்டியதைச் செய்யாதிருத்தலும் சதா காலமும் வியா கூலத்துடன் இருத்தலும், நோய் இடரினால் விரயமும் மனச் சஞ்சலங் களும் உண்டு.

செவ்வாயானவர் துலா இராசிக்கு ஒன்பதாமிடமான மிதுன இராசியில் சஞ்சரிக்கும் போது, பிதுர் வர்க்க சம்பாத்தியங்களும் தானிய தன இலாபங்களும் கிட்டும். அதே போல், அவ்வகையில் நட்டங்களையும் சந்திக்க வேண்டிவரும். வாக்கில் பிரதாபங்கள் இரா. தன் சம்பாத்தியத்தில் ஈடுபாடு குறைந்து காணப்படும்.

செவ்வாயானவர் துலா இராசிக்கு பத்தாமிடமான கடக இராசியில் சஞ்சரிக்கும் போது, திருப்தியில்லாத தனவரவும், மன உளைச்சலும், நேத்திரப் பார்வையில் முரண்பாடும், கண்ணில் நீர் வடிதலும், அகால போஜனமும் ஏற்படும். அதிக அலைச்சல் உண் டாகும். தொழிலில் தனக்குறைவும் விரயமும் ஏற்படும். பின்பு சுபிட்சம் உண்டு. செவ்வாய்க்குப் பிரீதிகள் செய்ய உயர் பலன்கள் உண்டு.

செவ்வாயானவர் துலா இராசிக்குப் பதினோராமிடமான சிம்ம இராசியில் சஞ்சரிக்க நேத்திர ஆரோக்கியமும், சுபச் செலவுகளும் அதன் பின்பு இலாபங்களும் உண்டாகும். சிவப்பு வஸ்திர வகையிலும், சிவப்பு தானிய வகையிலும் சிவப்பு வர்ணப் பொருள்கள் மீது ஈடுபாடும், அதன் வகையில் இலாபம் ஈட்டலும் உண்டாகும். தன வகையில் மேன்மை உண்டு.

செவ்வாயானவர் துலா இராசிக்குப் பன்னிரண்டாமிடமான கன்னி இராசியில் சஞ்சரிக்கும் போது, தூர தேசம் ஏகித் தனங்கள் சம்பாதித்தலும், வாக்கில் பிரதாபங்களும், அங்கும் இங்கும் அலைச்சலும், குறிக்கோள்கள் இல்லாமல் அலைதலும் சில கால கட்டங்களில் தன நட்டமும் ஏற்படும்.

செவ்வாயானவர் தம் நட்புக் கோள்களான புதன். சுக்கிரன் போன்றோருடன் சேரும் பொழுதும் நட்பு இராசிகளான ரிஷபம், மிதுனம், கன்னி, துலாம் போன்ற இராசிகளில் சஞ்சரிக்கும் காலத்தேயும் நற்பலன்களைக் கொடுக்கும். அதே போல், தன்னுடைய வீடுகளான மேஷம், விருச்சிகத்தில் இருக்கும் பொழுது உச்ச வீடான மகரத்தில் இரண்டிற்கு மேற்பட்ட நற்கிரகங்கள் கூட உயர்வான பலன்களை இரண்டாம் பாவ வகையில் கொடுக்கும். துலா இராசிக்காரர்களுக்கு அதம, மத்திம பலன்களைக் குறைத்து உத்தம பலன்களைப் பெற, செவ்வாய்க்கும் அதற்கு அதிதேவரான

சுப்பிரமணிய தேவர்க்கும் பூஜைகள் செய்து உயர் பலனைப் பெறலாம்.

## விருச்சிகம்
## இரண்டாம் பாவம்

தேவகுருவாகிய வியாழ பகவானை இரண்டாம் இடத்ததி பதியாகப் பெற்ற விருச்சிக இராசி அன்பர்களே!

வியாழ பகவான் சூரியன், சந்திரன், புதன் போன்ற கோள்களோடு சேர்ந்தால், உத்தமமான பலன்களைக் கொடுப்பார். அதே போல், நட்பு இராசிகளான ரிஷபம், மிதுனம், சிம்மம், கன்னி, துலாம், கும்பம் போன்றவற்றின் இரண்டுக்கு மேற்பட்ட நட்புக் கிரகங்கள் கூட அல்லது தனித்திருக்க உயர்வான பலனைக் கொடுக்கும். தனது ஆட்சி வீடுகளிலும் உச்ச வீட்டிலும் சுப கிரகங்கள் பார்த்தாலும் அல்லது குருவுடன் சேர்ந்திருந்தாலும் உயர் வான பலன் உண்டாகும்.

குருவானவர் செவ்வாயுடனும், சனியுடனும் கூடினாலும் அல்லது அவர்களது வீடுகளான மேஷம், விருச்சிகம், மகரம் போன்ற வீடுகளில் இருந்தாலும் தன்னுடைய பலன்களைக் குறைத்தே செய்வர்; அல்லது அசுபமான பலன்களே ஏற்படும். விருச்சிக இராசிக்கு இரண்டாமிடத்ததிபதியான குரு விருச்சிக இராசியில் சஞ்சரிக்க, வாக்கு பிரதாபங்கள் குறைந்து காணும். தேவதா சித்திகளிலும் இறை பக்திகளிலும், பேச்சு வன்மையிலும் பலன்கள் குறைந்து காணப்படும். ஐஸ்வர்யங்களும், பொன், பொருள், பூசணாதி திரவியங்களிலும் ஈடுபாடு குறைந்து காணப்படும். நேத்திர நோயால் இடருண்டாகும். தன தானிய சம்பத்துகளும் குறைந்து காண விதி உண்டாகும். விருச்சிக இராசிக்கு இரண்டாமிடத்ததிபதியான குரு தனுசு இராசியான தனது சுய வீட்டிலேயே இருக்க, ஆச்சாரமும் அனுஷ்டானமும் நிறைந்து காணப்படுவதுடன் வாக்குச் சித்திகளும், தீர்க்க தரிசனங்களும், சொற்பலிதங்களும் உண்டாகும். நேத்திரம் நல்ல ஒளியுடன் இருப்பதோடு, நோயிடர்க் குறைவாய் இருக்கும். தன தானிய சம்பத்துகள் நிறைந்து குடும்ப விருத்தியும் நன்மையாகக் காணப்படும்.

விருச்சிக இராசிக்கு இரண்டாமிடத்ததிபதியான குரு இராசிக்கு மூன்றாமிடமான மகரத்தில் சஞ்சரிக்க, பந்துக்கள் விரோதமும், அவர்களால் தன நட்டமும், குடும்பத்தில் பீடைகளும் மந்தமான சூழ்நிலையும் உண்டாகும். வழக்குகளினால் தன விரயமும், அதனால் ஜீவன பங்கமும் ஏற்பட விதி உண்டு.

குருவானவர் இராசிக்கு நாலாம் இடமான கும்பத்தில் சஞ்சரிக்க, திரவியம் தேடுதலில் ஈடுபாடு இராது. தனங்களை வெளியே கொடுத்துத் திருப்பி வாங்குதலும், வீடு மற்றும் மனை, வாகனம் போன்றவற்றில் தனத்தை ஈடு செய்தலிலும் விருத்தி காணும். அதனால் நட்டத்தையும் அனுபவிக்க நேரும். குடும்பங்களில் இன ஜன பந்துக்களும் அக்கால கட்டத்தில் மந்தச் சூழ்நிலையுடன் காணப்பட விதிகள் உண்டு.

குருவானவர் இராசிக்கு ஐந்தாமிடமான மிதுன இராசியில் சஞ்சரிக்க, தன தானிய இலாபம் கிட்டவும், இஷ்ட தேவதையை வணங்கவும், தெய்வ சித்திகள் பெறவும், புத்திரர்களால் தன இலாபங்கள் வாய்க்கவும் நேத்திரங்கள் நல்ல ஒளியுடன் அமையவும், ஜீவனங்கள் நன்கு நடக்கவும் விதி உண்டு.

குருவானவர் விருச்சிக இராசிக்கு ஆறாம் இடமான மேஷ இராசியில் சஞ்சரிக்க, குடும்பங்களில் கலகம், இன ஜன பந்துக்கள் விரோதம், வில்லங்க விவகாரங்களால் தன விரயம், ஐஸ்வரியங்கள் குறைதல், நேத்திரங்கள் நோயால் பாதிக்கப்படுதல், மலை ஏறி வாசம் செய்தல் ஆகியன அக்காலத்தில் நடைபெறும் என்று கூறப்படுகிறது.

குருவானவர் இராசிக்கு ஏழாமிடமான ரிஷப இராசியில் சஞ்சரிக்க, மனைவியினால் தனம் வாய்க்கும். பெண்கள்மீது மோகமுண்டாகும். பரிமள, கந்த, புஷ்பங்கள்மீது ஈடுபாடுண்டாகும். நேத்திரம் நல்ல ஒளியுடன் அக்காலத்தில் காணப்படும். தன தானியமும் பசு மற்றும் பாலும் விருத்தியாகும். குடும்பம் நல் நிலையில் காணப்படும்.

விருச்சிக இராசிக்கு இரண்டாமிடத்ததிபதியான குரு, இராசிக்கு எட்டாமிடமான மிதுன இராசியில் சஞ்சரிக்க, வாக்குவன்மை குறையும். குடும்பங்களில் பய சிந்தனை ஏற்படும். தன தானிய விருத்தி குறையும். சதா சஞ்சலத்துடன் காணப்படுவர். பேச்சில் பிதற்றலும் முரண்பாடும் மாற்றமும் உண்டாகும். அக்காலங்களில்

குரு பகவானுக்கோ, தட்சிணாமூர்த்தி தேவருக்கோ பிரீதிகள் செய்ய உயர்பலன்களை அடையலாம் என்று அறியப்படுகிறது.

விருச்சிக இராசிக்கு இரண்டாமிடத்ததிபதியான குருவானவர் இராசிக்கு ஒன்பதாம் இடமான கடக இராசியில் சஞ்சரிக்க, தாய் வழியில் ஒட்டுறவும் ஈடுபாடு கொண்டிருத்தலும் உண்டாகும். தன தானிய விருத்திகளும் திரவியம் தேடுதலில் ஈடுபாடும் அக்காலங்களில் உண்டு. நேத்திரத்தில் நல்ல ஒளி இருப்பதோடு, சிறிது காலம் நோயற்றுக் காணப்படும். பெண்கள் வகையில் ஈடுபாடும் சுக போகங்களில் திளைத்திருத்தலும் உண்டாகும்.

குருவானவர் இராசிக்குப் பத்தாம் இடமான சிம்ம இராசியில் சஞ்சரிக்க, முன் அல்லல் பின் ஆக்கம் பெறும். தன தானிய விருத்திகள் ஏற்பட்டிருந்தாலும், அவை அழிந்து பின்பு மீண்டும் பெற விதி உண்டாகும். தன்னுடன் நெருங்கி இருப்பவர் உறவாடிக் கெடுப்பர். அதனால் மனக்கிலேசமும் தொழில் இலாபங்களும் குறைந்து காணப்படும்.

குருவானவர் இராசிக்குப் பதினோராம் இடமான கன்னி இராசியில் சஞ்சரிக்க, தனதானிய விருத்திகள் உண்டு. வாக்கு இலாபங்களும், சொன்ன சொல்லைக் காப்பாற்றுதலில் ஈடுபாடும் அதிகம் காணப்படும். நேத்திரத்தில் நோய் ஏற்பட்டு விலகும். இரண்டாம் பாவ வகையில் பொதுவாக நற்பலன்கள் உண்டு.

குருவானவர் இராசிக்கு பன்னிரண்டாமிடமான துலா இராசியில் சஞ்சரித்தால், திரவிய விரயங்கள், இன ஜன பந்துக்கள் விரோதம், தன தானிய சம்பத்தை இழத்தல், நேத்திரத்தில் நோய், குடும்ப வாழ்க்கையில் இடரும் அதனால் வீண் விரயங்களும் ஆகியன ஏற்படும். திடீர்த் தன பிராப்தி கிடைக்க விதிகள் குறைவு.

குருவானவர் சுப வீடுகளிலோ சுப கிரகங்களோடு கூடிப் பலன் செய்தாலோ, பொதுவாக உத்தம பலன்கள் நடக்கும். பகை வீடுகளிலோ, பகை கிரகங்களுடனோ கூடி துர் பலன்களைச் செய்தால் குருபகவானுக்கு எந்திர மந்திர பிரீதிகள் செய்வதன் மூலமோ குரு பகவானுக்கு அதி தேவராகிய தட்சிணாமூர்த்தி தேவருக்குப் பூசை நைவேத்தியங்கள் செய்வதன் மூலமோ இரண்டாம் பாவப் பலன்கள் சிறப்பாக அமையச் செய்யலாம்.

# தனுசு
# இரண்டாம் பாவம்

சனீஸ்வர பகவானை இரண்டாமிடத்ததிபதியாகக் கொண்ட தனுசு இராசி அன்பர்களே!

சனீஸ்வர பகவான் தமது நட்புக் கோள்களான புதன், குரு சுக்கிரன் போன்றவர்களுடன் சேரச் சுபமான பலன் உண்டு. தமது நட்பு இராசிகளான ரிஷபம், மிதுனம், கன்னி, தனுசு, மீனம் போன்ற இராசிகளில் இருந்தாலும், மற்ற சுப் கிரகங்களுடன் சேர்ந்தாலும் உயர்வான பலன்களைக் கொடுக்கும். அப்படி இரண்டாம் பாவ பலன்களைப் பார்க்கும் போது, சனியானவர் சூரியன், சந்திரன், செவ்வாய் ஆகிய மூவரின் வீடுகளில் சேர்ந்தாலும் அல்லது இருந்தாலும், பொதுவாக, மத்திம பலன்களையே கொடுப்பார். சனியும் செவ்வாயும் சேர்ந்தால் முரணான பலன்களே உண்டு.

சனியானவர் தமது ஆட்சி வீட்டிலும் உச்ச வீட்டிலும் சிறப்பான பலன்களைச் செய்வார்.

சனியானவர் மேஷத்தில் நீசமாக, அங்கு உச்சக் கிரகமான சூரியன் கூடினால், முரணான பலன்களே ஏற்படும். அப்படிச் சனிக் கோட்சாரப் பலன்களைப் பார்க்கும் போது, சனியானவர் ஜென்ம இராசியில் சஞ்சரிக்க மந்தமான பேச்சுகளும் மனச்சங்கடமும் வியாதியால் தொந்தரவும், நேத்திர உபாதைகளும், இன ஜன பந்துக்கள் விரோதமும் தன இலாபங்கள் குறைதலும் குடும்பத்தில் சதா சஞ்சலங்களும் ஏற்படும். அந்தக் காலகட்டங்களில் சனீஸ்வர பகவானுக்கு எந்திர மந்திர பிரீதிகள் செய்வதன் மூலம் உயர்வான பலன்களை அடையலாம் என்று கூறப்படுகிறது.

சனியானவர் இராசிக்கு இரண்டாம் இடத்தில் சஞ்சரிக்க, தன இலாபங்கள் குறைதலும், தன தானிய விருத்திகளில் ஈடுபாடு இருத்தலும், பாவ காரியங்களில் ஈடுபடுதலும், குடும்பத்தில்

ஒற்றுமை குறைதலும், வாக்கில் பிரதாபங்கள் ஏற்பட்டுப் பின்பு மங்குதலும் உண்டாகும். மந்தமான சூழ்நிலைகளில் இருந்தாலும், ஒரே சீராகச் செல்லும் விதி உண்டு.

சனியானவர் இராசிக்கு மூன்றாமிடத்தில் சஞ்சரிக்க, இளைய சகோதர இலாபங்களும், சில பிரதாபங்களைச் செய்தலும், அயல் நாடு செல்லுதலும், ஜீவனத்திற்கு வழி செய்தலும், சிவ சம்பத்துகளில் ஈடுபாடும் பயமும் உண்டு. தீர்த்த யாத்திரை செய்ய வாய்ப்பும் வாக்குப் பலிதங்களும் ஏற்படும். பொதுவாக நன்மையான பலன் உண்டு.

சனியானவர் இராசிக்கு நான்காமிடத்தில் சஞ்சரிக்க முன் இடரும் பிற்பலனும் உண்டு. வாகன இலாபம், மனையில் இலாபம், தாய்வழிச் சம்பத்துகளை அடைதல், திடீர்ப் பிரவேசம் போன்றவை நிகழும். நேத்திர உபாதைகள் ஏற்பட்டு விலகும். திடீர்த் தன பிராப்திக்குரிய பலன்கள் கிட்டும்.

சனியானவர் இராசிக்கு ஐந்தாமிடத்தில் சஞ்சரிக்க, பூர்வ புண்ணிய பலன்கள் கிட்டும். அந்தத் தனத்தைக்கொண்டு செலவு செய்ய அதிகாரமும், பிற்பலன்களும் உண்டாகும். மோசமான பெண்களோடு தொடர்பு கொள்ளவும், கீழ்த்தர நடத்தைகளைப் பின்பற்றவும், தனக்குப் பொருத்தமில்லாத செயலைச் செய்யவும் நேரும். தனப்பிராப்திக்கு வழிகள் குறைவு. சனீஸ்வர பகவானுக்கு உரிய பிரீதிகள் செய்வதன் மூலம் உயரிய பலன்களை அடையலாம்.

சனியானவர் இராசிக்கு ஆறாமிடத்தில் சஞ்சரிக்கத் தன தானிய விருத்திகளும் திரவியங்களும் சேரும்; பின்பு அழியும் நிலை ஏற்படும். எதிரிகளால் பயமும், தனத்திற்குக் கேடும், குடும்பத்தில் பலவித இன்னலும் நேரிடும். இந்தக் கால கட்டங்களில் சனீஸ்வர பக வானுக்குப் பூசை செய்து நல்ல பலனை அடைய முடியும்.

சனியானவர் இராசிக்கு ஏழாமிடத்தில் சஞ்சரிக்கும் பொழுது, சொல்லவொண்ணா மனக்கஷ்டங்களும், வாக்கில் முரண்பாடும்,

களத்திரத்தால் குடும்பத்தில் ஒற்றுமைக்குறைவும் பெண்களால் தொல்லையும் உண்டு. தன தானிய சம்பத்துகளில் குறைவும் ஏற்படும்.

சனியானவர் இராசிக்கு எட்டாமிடத்தில் சஞ்சரிக்கும் பொழுது, தன வகையில் இடர்ப்பாடு உண்டு. பொருளாதார ரீதியான மனக்கஷ்டங்களும், நேத்திர உபாதைகளும், திடீர்த் தனப் பிராப்திக்கு வழியின்மையும் உண்டு. சதா சஞ்சலத்துடன் இருக்க விதி உண்டாகும். சிவ பூஜைகள் மேற்கொள்ளுதல் நல்லது.

சனியானவர் இராசிக்கு ஒன்பதாமிடத்தில் சஞ்சரிக்கத் தகப்பன் வழி சம்பத்துகளை அடைதலில் ஈடுபாடும் அதனால் சில முன்னேற்றங்களும் காணப்படும். நேத்திரங்கள் நல் ஒளியுடன் காணப்படும். வாக்குகளில் வித்தைகள் முன்னேற்றம் உண்டு. திடீர்த் தன வரவுக்கு வழிகள் ஏற்படும்.

சனியானவர் இராசிக்குப் பத்தாமிடத்தில் சஞ்சரிக்கப் பயிர், பால், பசு ஆகியவற்றில் நட்டம் ஏற்படும். இதனால் தனங்கள் குறைய வழி உண்டு. தொழில் ஸ்திரமின்மையால் தன வரவுக்குப் பிரச்சினை ஏற்படும். குடும்பங்களில் பொருளாதார ரீதியான சிக்கல்கள் ஏற்படும். சனி பகவானுக்குப் பிரீதிகள் செய்வதன் மூலம் நிவர்த்திக்கலாம்.

சனியானவர் இராசிக்குப் பதினோராமிடத்தில் சஞ்சரிக்கத் தன தானிய விருத்திகள் உண்டு. பசுபாக்கியம், பால் பாக்கியம் ஆகியன உண்டு. திடீர்த் தனக் குறைவுகள் ஏற்பட விதி உண்டு. பொதுவாக, உத்தம பலன்களே உண்டு. தேக ஆரோக்கியமும் நேத்திரங்களும் நல்ல ஒளிர்வுடன் காணப்படும். வாக்கினால் பிரதாபங்களும் ஏற்படும்.

சனியானவர் இராசிக்குப் பன்னிரண்டாமிடத்தில் சஞ்சரிக்க, சதா அலைச்சலும் தனத்தைப்பற்றிய சிந்தனையும், வீண் விரயமும் ஏற்பட்டுத் தொல்லைகளுக்கு வழி வகுக்கும். குடும்பங்களில்

நிம்மதிக் குறைவு ஏற்படும். திடீர்த் தன வரவு வந்தாலும் மறைய விதி உண்டாகும். சனி பிரீதிகள் செய்ய நன்மை உண்டு.

## மகரம்
## இரண்டாம் பாவம்

சனீஸ்வர பகவானை இரண்டாமிடத்து அதிபதியாகப் பெற்ற மகர இராசி அன்பர்களே! இரண்டாம் பாவத்தில் நேத்திரம், வாக்கு, தனம், குடும்பம் போன்ற அமிசங்கள் குறிப்பிடப்படுகின்றன. சனி பகவான் ஜென்ம இராசியில் சஞ்சரிக்க, வாக்கு பிரதாபங்கள் இருந்தாலும் சில விளைவுகளைச் சந்திக்க வேண்டியிருக்கும். பொருளாதாரத் துறையில் மத்திமம் ஏற்பட்டுப் பின்பு உத்தம நிலை உண்டு. குடும்ப வகையில் பயமும், பிரச்சினையில் மாட்டிக் கொள்ளும் நிலையும் ஜென்மச்சனியில் ஏற்படும். சனியானவர் இராசிக்கு இரண்டாமிடத்தில் சஞ்சரிக்க, வாக்கில் சனிப்போக்கை, கெடுக்கக்கூடிய நிலை பேச்சில் முரண்பாடும், செய்கையில் மாறுதலும் உண்டாகும். குடும்ப வகையில் கஷ்டங்களும் முன் அல்லல்களும் பின் ஆக்கங்களும் உண்டாகும். காரண காரிய மில்லாமல் ஆவேசப்படுதலும் தன தானிய சம்பத்துகள் குறைதலும் அக்காலங்களில் ஏற்படும். சனிபகவானுக்கு உரிய முறையில் பிரீதிகள் செய்ய நற்பலன்கள் கிட்டும்.

சனிபகவான் ஜென்ம இராசிக்கு மூன்றாம் இடத்தில் மீன இராசியில் சஞ்சரிக்க, இளைய சகோதர இலாபங்கள், அவர் வழித் தனங்கள் போன்றவை கிட்டும். தன தானிய சம்பத்துகளும் பிற்பலன் களைத் தரும். குருவோ செவ்வாயோ சனியோடு கூடினால், மத்திமம். திடீர்த் தனப்பிராப்திக்குப் பின் கால கட்டங்களில் வழி உண்டு. சனிபகவான் மேஷ இராசியில் சஞ்சரிக்க, வாக்குகள் மத்திம மாகவும் சில சமயம் அதம பலன்களைத் தந்தும் மனக்கஷ்டங்களை ஏற்படுத்தும். சனி பகவான் மேஷ இராசியில் சஞ்சரிக்க, செவ்வாய் அங்கு கூடினால், முரணான பலன்களே உண்டு. அக்கால கட்டங் களில் சனி பகவானுக்கு உரிய பிரீதிகள் செய்ய நற்பலன்கள் உண்டாகும்.

சனிபகவான் இராசிக்கு 5ஆம் இடத்தில் ரிஷப இராசியில் இருக்கப் புத்திரர்களால் பீடை உண்டாகும். மந்திர சம்பந்தங்கள் நிலைத்து நில்லா. நேத்திர ரோகம் ஏற்படும். பூர்வ புண்ணிய தனங் கள் பாதிக்கப்படும். அந்நிய மாதர் தொடர்புண்டாகும். அக்காலங் களில் மாதர் சுகம் தேடித் திரிய விதியுண்டு. சனிபகவானுக்குப் பூசைகள் மேற்கொள்ளல் நலம்.

மகர இராசிக்கு 2ஆம் இடத்து அதிபதியான கும்பச்சனி இராசிக்கு ஆறாமிடமான மிதுனத்தில் சஞ்சரிக்க, சத்துரு பங்கங் களிருந்தாலும் தம் பேச்சால் தப்பித்துக்கொள்ளுவார்கள். தம் தனங்களைக் காப்பாற்றிக்கொள்ளுவார்கள். நேத்திரப் பீடைகளும் நோய் இடர்களும் வந்து செல்லும்.

சனிபகவான் மகர இராசிக்கு ஏழாம் இடத்தில் சஞ்சரிக்க, களத்திர வகையில் மனக்கிலேசமும், வாக்கால் தொந்தரவும், மன நிம்மதியற்ற நிலையும் அக்காலங்களில் ஏற்படும். பெண்கள் வகையில் கவனமாயிருத்தல் வேண்டும்.

சனிபகவான் மகர இராசிக்கு எட்டாமிடமான சிம்ம இராசியில் சஞ்சரிக்க, வாக்கால் தொல்லையும், பல விதமான கேடுகளும், மன நிம்மதியற்ற நிலையும், இரண்டாம் பாவ வகையில் தனமும் குடும்ப வகையில் பலவிதத் தொல்லைகளும் ஏற்படும். அக்காலகட்டங்களில் சனீஸ்வர பகவானுக்கு நைவேத்தியமும் அர்ச்சனைகளும் செய்வதால் நல்ல பலன்களைப் பெறலாம்.

சனிபகவான் மகர இராசிக்கு 9ஆம் இடமான கன்னி இராசியில் சஞ்சரிக்க, பிதுர்வர்க்கச் சொத்துகளும் அவர் வழித் தனங்களும் தனக்குக் கிட்டா. மந்திர சம்பந்தங்கள், வாக்கு சம்பந்தங்கள் இடர்ப்பாட்டோடு இருக்கும். தன தானிய சம்பத்துகள் முன் குறைந்து பின் இலாபத்தை ஏற்படுத்தும்.

மகர, இராசிக்கு இரண்டாமிடத்து அதிபதியான சனிபகவான் இராசிக்கு 10ஆம் இடமான துலா இராசியில் சஞ்சரிக்க, தொழில்

வழித் தனங்களும் தன தானிய விருத்திகளும் குறையும், இதன் வழியாகவும் தனங்கள் பாதிக்கப்பட்டுப் பின்பு உயர விதி உண்டாகும்.

மகர இராசிக்கு 11ஆம் இடமான விருச்சிக இராசியில் சனிபகவான் சஞ்சரிக்கத் தனங்கள், இலாபங்கள் ஈட்டாமலும் சுப விரயமாகிக்கொண்டும் முரணான பலன்களைக் கொடுக்கும். விருச்சிக இராசியில் சனியுடன் செவ்வாய் சேர்ந்திருந்தால், 2ஆம் பாவ வகையில், முரணான பலன்களே ஏற்படும். சனி பகவானுக்கு உரிய பிரீதிகள் செய்வதன் மூலம் உயரிய பலனை அடையலாம்.

மகர இராசிக்கு 12ஆம் இடமான தனுசு இராசியில் சனிபகவான் இருக்க, முன் ஆக்கப் பலன்கள் உண்டு. தூரதேசம் ஏகி மீள்தல், திரவியம் தேடுதல், தனம் சம்பாதித்தலையே குறியாகக் கொள்ளுதல், தனங்களை வீண் விரயம் செய்தல், சிறிது வீண் அலைச்சல் ஆகிய பலன்களைக் கொடுக்கும். உடல் மற்றும் நேத்திர உபாதைகளால் விரயமும் ஏற்படும். சனீஸ்வர பகவானை வழிபட்டு அவருக்குப் படையல்கள் செய்தால் நற்பலன்களை அடையலாம். எள்ளுச்சாதம் படைத்தோ, கருப்பு வஸ்திரம் சாத்தியோ வன்னி விறகால் ஹோமம் செய்தோ சனீஸ்வர பகவானை வழிபட்டால் அதம பலன்களை நீக்கி உத்தம பலன்களை அடையலாம்.

# கும்பம்
## இரண்டாம் பாவம்

கும்ப இராசிக்கு இரண்டாம் பாவாதிபதியான குரு, சூரியன், சந்திரன், புதன் ஆகியவர்களுடன் சேர்ந்து பலன் கொடுத்தாரானால் சுபமான பலன்களைச் செய்வார். ரிஷபம், மிதுனம், சிம்மம், கன்னி, துலாம். கும்பம் ஆகிய வீடுகளில் சுபகிரகங்களுடன் சேர்ந்திருந்தால் இரண்டாம் பாவ பலன்களை நல்லபடியாகச் செய்ய விதிகள் உண்டு. குருவுக்குத் தனது ஆட்சி வீட்டிலும் உச்ச வீட்டிலும் உயர் பலன்கள் உண்டு. குருவானவர் செவ்வாய், சனி ஆகிய இருவரோடு சேர்ந்தாலும், அவர் வீட்டில் இருந்தாலும் பொதுவாக மத்திம அதம பலன்களே கொடுப்பார். கும்ப வீட்டில் குருவுக்குப் பலன் உண்டு.

குருபகவான் சிறப்பான பலன்களைச் செய்ய, அவருக்குரிய கடலைச் சாதத்தைப் படையலாகப் படைத்து, அரசமர விறகால் ஹோமம் செய்து, முல்லை மலரால் அர்ச்சித்து சிறப்பான பலன்களை அடையலாம். குருவானவர் நீசமானாலும், பகை வீடுகளில் இருந்தாலும், இரண்டுக்கு மேற்பட்ட நீச, பகை கிரகங்களுடன் சேர்ந்தாலும், எந்தப் பாவாதிபதியாக இருக்கிறாரோ அந்தப் பலன்களை முரணாகவே செய்வார்.

மேற்சொன்ன பிரீதிகள் மூலமும் அல்லது குரு யந்திரம் வரைந்து வழிபடுவதன் மூலமும் திருச்செந்தூர் சென்று வணங்குவதன் மூலமும், தட்சிணாமூர்த்தி தேவரை பூஜித்து வருவதன் மூலமும் உயர் பலன்களை அடையலாம்.

# மீனம்
# இரண்டாம் பாவம்

செவ்வாயானவர் புதன், சுக்கிரன் ஆகியவர்களுடன் சேரும் பொழுது தம் பாவ பலன்களை உயர்த்திச் செய்வார். அதே போல், ரிஷபம், மிதுனம், கன்னி, துலாம் போன்ற வீடுகளில் தம் நட்புக் கிரகங்களுடன் கூடியிருக்க, உத்தமமான பலன்கள் உண்டு.

செவ்வாயானவர் சூரியன், சந்திரன், குரு, சனி போன்ற கிரகங் களுடன் சேர்ந்தாலும், அவர் வீட்டிலிருந்தாலும், மத்திம அதம பலன்களே கொடுப்பார். செவ்வாயானவர் பகை வீடுகளிலிருந்தோ நீச வீட்டிலிருந்தோ துர்பலன்களைச் செய்ய நேர்ந்தால் சுப்பிரமணிய தேவருக்கு ஆராதனைகள் செய்வதன் மூலமும், செவ்வாய் பகவானுக்குத் துவரையால் படையல்கள் செய்வதன் மூலமும், கருங்காலி விறகால் ஹோமம் செய்வதன் மூலமும் உயர்ந்த பலன்களை அடையலாம்.

செவ்வாய்க்குச் சிவப்பு வஸ்திரங்கள் சாத்துவதன் மூலமும், சாதுகளுக்குத் தானம் செய்வதன் மூலமும், பழனிக்குச் சென்று வழிபடுவதன் மூலமும் நற்பலன்களை அடையலாம்.

எதிர்பாரா தனப் பிராப்தி யோகமுள்ளவர்களும் நேத்திர ரோகமுள்ளவர்களும் இந்தப் பூசைகள் செய்வதன் மூலம் உயர்பலன்களை அடைவார்கள் என்று கூறப்படுகிறது.

# மேஷம்
## மூன்றாம் பாவம்

தைரியம், வீரியம், இளைய சகோதரர், ஆளடிமை, பட்டம், பதவி, புகழ் ஆகியன மூன்றாம் பாவ பலன்கள்.

திருமால் ஆகிய புதனைத் தைரிய, வீரிய ஸ்தான அதிபதியாகப் பெற்ற மேஷ இராசி அன்பர்களே! மகரிஷி பதஞ்சலி சந்திர நாடியில் கூறியபடி உங்கள் இராசிக்கு மூன்றாம் பாவ பலன்களைக் கூறுவோமாகில், புதன் இருந்த வீட்டை வைத்தும், மூன்றாம் இடமான மிதுன இராசியை வைத்தும், அதில் கூடியுள்ள கிரகங்களை வைத்தும், மகரிஷியின் சந்திர நாடியில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது:

'மதிக்குத்தான் மூன்றோனாய்ப் புங்கன்வர
மங்காது யாட்சியுச்ச மேறிடினும்
கதியுடனே கோணகேந்திரம் கூடிடினும்
குறைவில்லை பட்டம்மேல் பதவிகாணுமென்று
சதியில்லை இளையோரும் கூடிநிற்பர்
சந்தனத் தேகமென்றே வீரிய பிரதாபம்
உதிக்குமென்ற ஆளடிச் சேவகங்கள்'
குவலயத்தில் பொன்னின்மேல் வாழ்வுதானே !

இவ்வாறு உங்கள் இராசியின் மூன்றாமிடத்து அதிபதி புதன் இராசிக்கு, ஆட்சியான மிதுனத்தில் இருந்தாலும், உச்ச வீடான கன்னியில் இருந்தாலும், இராசிக்குக் கோணமான 1, 5, 9 என்ற இடங்களில் சூரியனோடு சேர்ந்திருந்தாலும், கேந்திரமென்ற 1, 4, 7, 10ஆம் இடங்களில் சூரியனோடு கூடியிருந்தாலும், குறைவில்லாமல் பட்டம், பதவி, புகழ், ஆளடிமை,. கைகட்டிச் சேவகங்கள் உங்களுக்கு இருக்குமென்று கூறப்படுகிறது.

இந்த மாதிரியான கிரக அமைப்புகளில், உங்கள் இளைய சகோதரர்கள், உங்களுடன் சிநேகமாகவும், அவர்கள் வாழ்வில் தன்னிறைவு அடைந்தும் இருப்பார்கள். உங்கள் உடலில் வீரியங்கள் குறையா: பெண், போக பாக்கியங்கள் மிகுதியாக உண்டு. பொன்,

பொருள், ஆபரணங்கள் போன்ற துறைகளில் இலயப்பட்டுச் சுகித்திருக்க விதியுண்டு.

பொதுவாக இந்த அமைப்புகள் இப்படி இருந்தாலும், மூன்றாம் பாவ பலன்களில் மற்ற அமைப்புகள் எப்படி இருக்கும் என்று சந்திர நாடியின் வழியாகப் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது:

"மதிக்கு மூன்றோன் யாட்சியுச்ச மேறிடில்
மைந்தனுக்குத் தனக்கிளையோன் லாபந் தானே!
சதியுடனே நீசமொத்து மறைவு காணச்
சஞ்சலங்கள் இளையோனால் வருகும் பாரே."

இவ்வாறாய், இராசிக்கு மூன்றாமிடத்து அதிபதியான புதன், மிதுனம், கன்னியென்று ஆட்சியுச்ச இடங்களில் இருந்தால், உங்களின் இளைய சகோதரரும் உங்களுக்கு இலாபமான பலன்களைத் தருவார். ஆனால், கன்னியில் புதன் ஆட்சியுச்சமாகிக் கூடவே சுக்கிரன் நீசமானால், தன் இளைய சகோதரரால் பெரும்பாலும் கெடுதலான பலன்களே விளையும் என்பதாகும்.

அதே போல், புதன் மீன இராசியில் நீசமடைந்தால் தமக்கு இளையோனுக்குத் தொந்தரவும், பண விரயமும், கல்விப் பட்டங்கள் வாங்குவதில் தகுதியின்மையும், புகழ் மங்குதலும் நேரும். அதுவும் இராசிக்கு 12ஆம் இடமாகிப் புதன் அங்கு மறைவாகிய காரணத்தினால் மத்திமமான பலன்களே நடக்கும்.

வீரியத்தைப் பொறுத்தளவு, செவ்வாயின் ஆதிக்கத்தைப் பெற்ற உங்களிடம் தைரிய வீரியங்கள் அதிகமாகவே இருக்கும். இரத்த அணுக்கள் வீரியப்பட்டே இருக்கும். அதிகமாகப் பெண் மோகத்தில் ஈடுபடச் செய்யும். மூர்க்கத்தனமான கோபங்களும், மிதமிஞ்சிய தைரியங்களும், புதன் உங்கள் இராசிக்கு மூன்றாம் இடத்தில் ஆட்சியானால் இவ்வாறான பலன்களே வாய்க்கும். புதன் ஆட்சி யுச்சம் அடைந்து, சுக்கிரன் கூடச் சேருவானாகில் அதிகமாகப் பெண் போகமும், சுக்கில வீரியமும் வாய்க்கும். இவர்களோடு செவ்வாய் கூடச்சேர்ந்தால், இழந்த பலத்தை மீண்டும் பெறுவது கடினம். தைரியமும் வீரியமுங்கூடப் போய்விடும்.

புதன் நல்ல பலன்களைச் செய்தாலும், பாப கிரகச் சேர்க்கையால் தீய பலன்களைச் செய்தாலும், மூன்றாம் பாவ பலன்களை அடையப் 'புதன் கிரக வழிபாடு' உங்களுக்கு நல்ல பலன்களைக் கொடுக்கும்.

பதஞ்சலி மகரிஷி நாடிக் காண்டங்களின் வழியாக எடுத்த எந்திர மந்திரங்கள் பின்பு கொடுக்கப்பட்டுள்ளன. மேஷ இராசி அன்பர்கள் அவற்றைக் கடைப்பிடித்து நல்ல பலன்களை அடைய வேண்டுகிறோம். இப்பொழுது இராசிக்கு மூன்றாம் இட அதிபதியான புதன், 12 இராசிகளிலும் ஒவ்வோர் இடங்களில் நின்று, மூன்றாம் பாவ பலன்களை எப்படிச் செய்வார் என்று மகரிஷி பதஞ்சலியின் சந்திர நாடி வழியாக அறிந்து, அதன் சாராம்சத்தை விளக்கமாகத் தருகிறோம்.

மிதுன இராசியில் புதன் ஆட்சியானால் இளைய சகோதரனால் நன்மைகளும், அவர்களினால் பின்வாழ்க்கையில் நட்டமும் பண விரயமும் உண்டு. எனினும், இளைய சகோதரர் தம் வாழ்வில் தன்னிறைவு அடைந்தே இருப்பார்கள். அவர்களின் உதவியும் உங்களுக்குச் சில சமயம் உண்டு.

கல்வி, பட்டம் ஆகியவற்றை மிகவும் கடினப்பட்டு வாங்க வேண்டியது இருக்கும். புதனொடு இராகு, கேதுகளுள் ஏதேனும் ஒரு கிரகம் கூடினால், கல்வி தடைப்படும். கேது அங்கு உச்சமானால், ஞான வழியில் வித்தை மேலோங்கி இருக்கும். தைரிய வீரியங்களில் குறைவு இருக்காது. புஜபல பராக்கிரமங்களால் எதிரியை எதிர்த்து நிற்பர். தைரிய, வீரியம் எப்போதும் உண்டு. ஆனால், ஆபரணச் சேர்க்கைகள் குறைவாகவே உண்டு. புகழுக்குக் குறைவில்லை. ஆனால், பதவிகள் அவ்வளவு நல்ல பலன்களைத் தாரா. வாழ்க்கையில் இதனை ஒட்டிப் பிற்கால யோகம் உண்டு. சுக போக பாக்கியங்களுக்குக் குறைவில்லை.

இராசிக்கு மூன்றாம் இட அதிபதியான புதன், கடக இராசி இருந்தால் கல்விப் பட்டங்கள் உண்டு. பதவி, புகழ், ஆகியன ஓங்கி இருக்கும். குரு அங்கு உச்சமாகிப் புதனொடு சேர்ந்தால் ஆளடிமை வகைகள் உங்களுக்கு உண்டு. இளைய சகோதரர்கள் உங்கள் எண்ணப்படி நடப்பார்கள். போக பாக்கியங்களுக்குக் குறைவில்லை. செவ்வாய் அங்கு நீசமாகிப் புதனுடன் சேர்ந்தால் உடல் வீரியங்கள்

குறையும். இளைய சகோதரரின் உதவி கிட்டாது. அவர்களும் வாழ்வில் பலம் இழந்தே காணப்படுவர்.

முன்பு இருந்த வீரியமும் வீரமும் பின்னாளில் இரா. ஆபரணச் சேர்க்கை குறைந்தே காணப்படும். பதவிகள், மத்திமமான பலன் களைத் தரும். புகழானது வந்து வந்து போகும். உங்களுகுக் தாய் வழி ஆதரவும், அவர்கள் பேச்சினால் தைரியமும் வர விதியுண்டு.

மேஷ இராசிக்கு மூன்றாம் இட அதிபதி புதன் சிம்ம இராசியில் இருந்தால், குல தெய்வ அருளால் வீரம் நிறைந்து காணப்படுவர். சூரியன் அங்கு ஆட்சியாகிப் புதனுடன் சேர்ந்தால் இளைய சகோதரர் வசம் பூர்வ புண்ணியச் சொத்துகள் அதிகம் சேர வாய்ப்புண்டு. உங்களுக்குத் தைரிய வீரியங்கள் அதிகமாக உண்டு. ஆனால், இளைய சகோதரர் வசம் போன உங்கள் பொருள் திரும்பி வாராது.

கல்விப் பட்டங்கள் வாங்க இடரில்லை. பதவி, புகழ், ஆளடிமை, ஆபரணச் சேர்க்கைகள், ஆளுமைகள் உங்கள் கைவசம் இருக்க வேண்டும். கொஞ்சம் இடம் மாறினாலும் போனது திரும்பாது. புதனொடு குரு சேர்ந்தால், பலனைத் தக்க வைக்கும் விதியுண்டு. துஷ்டப் பெண்களோடு போகம் அனுபவிப்பர். அதனால் வீரியம் மட்டுப்படும். அவப்பெயர் உண்டாக விதியுண்டு. இதனைக் கருத்தில் கொண்டு கவனமாய் இருப்பது நல்லது. பதவி வந்தால் உயர்ந்த அந்தஸ்தில் இருப்பீர். அது போனபின் யாரும் உங்களை மதிக்காதிருப்பர்.

மேஷ இராசிக்குத் தைரிய வீரிய ஸ்தான அதிபதியான புதன், உங்கள் இராசிக்கு ஆறாம் இராசியான கன்னியில், இருந்தால், இளைய சகோதரர்கள் உங்களுக்குப் பகையாக வர விதியுண்டு. உங்களுக்கு எதிரியாகச் செயல்படுவார்கள். செயல்கள் முரண் பாடாகவே இருக்கும். சுக்கிரனும் அங்கு நீசமடைந்து புதனொடு கூடி நின்றால் உங்களுக்கு வீரியங்கள் குறையும். துஷ்ட ஸ்திரீகளோடு போகமும் அனுபவிப்பர். அதனால் வீரியக் குறைவும், மனப்பயமும் உண்டு.

இளைய சகோதரர்கள் தம் விரோதிகளால் அல்லல்படுவார்கள்.; உங்களுக்கும் தொல்லை கொடுப்பார்கள். அவர்களால் பொன்,

பொருள் சேர்க்கைகளும், பதவியும், புகழும் உங்களுக்கு இல்லாமல் போகும். புகழ் மங்க விதியுண்டு. இருபாம்புகளான இராகு, கேதுகளுள் ஏதேனும் ஒன்று புதனுடன் சேர்ந்தால் தைரிய, வீரியம் குறைந்து எதிரிக்கு அஞ்சும் நிலைமை உண்டு.

ஆளடிமைச் சேவகம் இருந்தாலும், அவர்கள் நம்பிக்கை யானவர்களாக இருக்க மாட்டார்கள். கல்விப் பட்டங்கள் வாங்கு வதற்குக் கடினமாகப் பாடுபட வேண்டும். பொதுவாக, இளைய சகோதரர்களைப் பொறுத்தமட்டில், மத்திம பலன்களே உண்டு.

உங்கள் இராசிக்கு மூன்றாம் இடத்து அதிபதியான புதன், துலா இராசியில் இருந்தால், மூன்றாம் பாவங்களைப் பொறுத்த அளவு நல்ல பலன் உண்டு. வரக்கூடிய மனைவியால் புகழும், போக பாக்கியமும் உண்டு. அழகு, ஆபரணச் சேர்க்கை உண்டு. புதனுடன் சுக்கிரன் சேர்ந்து கூடினால் இளைய சகோதரரின் களஸ்திரங்கள் நல்ல படியாக வாய்க்கும். இளைய சகோதரர்கள் தங்களின் மனைவி பேச்சையே கேட்க வேண்டிய நிர்ப்பந்தம் வரும். புதனொடு சூரியனும் சனியும் சேர்ந்தால் பலன்கள் முரண்பட்டு நடக்கும்.

இளைய சகோதரர்கள் உங்களுக்குச் சாதகமாகச் செயல்பட மாட்டார்கள். பதவியும், புகழும் ஒரு காலகட்டத்தில் வருவதும், அப்படியே திரும்பிவிடுவதும் உண்டு. சூரியனும், சனியும் புதனின் பலனை அவ்வளவாகப் பெறவிட மாட்டார்கள். உங்களுக்கு ஆளடிமைச் சேவகம் சுமுகமான பலன்களைத் தரும்.

உங்களுக்குக் கீழ் பல பணியாள்கள் வேலை செய்யும் நிலை உண்டு. ஆபரணச் சேர்க்கைகளும், பாக்கியங்களும் மனைவியால் கிட்டும்.

உங்கள் இராசியின் மூன்றாமிட அதிபதி புதன் விருச்சிக இராசியில் இருந்தால், இளைய சகோதரர் வழியாகப் பலன்கள் இல்லை. இளைய சகோதரர்கள் வீரியமாய் இருப்பார்கள். அந்தத் தைரிய, வீரியமே அவர்களுக்கு ஆபத்தாக முடியும். அவர்களால் உங்களுக்குத் தொல்லைகள் ஏற்படும். பதவிகள் குப்பை மேட்டிலிருந்து கோபுர உச்சிக்குக் கொண்டுபோய்விடும். அதே வேகத்தில் கீழே தள்ளிவிடும். பதவி உங்களுக்கு யோகமாகவே அமையும்.

புதனொடு செவ்வாய் சேர்ந்தால், உங்களுக்குத் தைரிய, வீரியம் அதிகம் உண்டு. முன்பிருந்த வீரம் பின்னாளில் இராது. அசட்டுத் தைரியமாகவே இருக்கும். இதனால் ஆபத்து உண்டு. பெரும்பாலும், தமக்குக் கீழே மற்றவர்கள் சேவகம் புரிவதை விரும்புவது இல்லை.

அவ்வாறு இருந்தாலும் அவ்வளவு நம்பிக்கையானவர்களாக இருக்க மாட்டார்கள். பொன், பொருள் சேர்க்கைகள், ஆளுமைப் பீடங்கள் ஒரு யோகமாகவே வரும். எதிர்பார்த்து வருவது இல்லை. முரட்டுத்தனமான பேச்சும், தைரியச் செயல்களும், அதனால் பின் விளைவுகளும் அதிகமாகவே இருக்கும்.

உங்கள் இராசிக்கு மூன்றாமிட அதிபதியான புதன் தனுசு இராசியில் இருந்தால் தைரிய, வீரியங்களுக்குக் குறைவில்லை. கல்விப் பட்டங்கள் வாங்க விதி உண்டு. புதனொடு குரு சேர்ந்தால், இளைய சகோதரரால் இலாபமும் நட்டமும் கலந்து வரும். உங்கள் தைரிய, வீரியங்களில் நிதானம் நிறைந்து இருக்கும். போக பாக்கியங்களுக்குக் குறைவில்லை. பொன், பொருள் சேர்க்கைகளும், ஆபரணங்கள் சேர்க்கும் விதியும் உண்டு.

உங்களுக்குக் கீழ் பல பேர் கை கட்டிப் பணிபுரிகின்ற நிலைமை வரும். அப்பேர்ப்பட்ட பீடங்களிலும், பதவிகளிலும் முதன்மை ஸ்தானம் வகிப்பீர்கள். பேச்சில் தைரியமும் கலந்தே இருக்கும். மனத் துணிவும், யாருக்கும் அஞ்சாத செயலும், புதனுடன் குரு கூடினால் உண்டு. இவர்களுடன் செவ்வாய் இணைந்தால் உடல் வீரியங்கள் அதிகப்பட்டு, அதே வேகத்தில் குறைந்து போய்விடும்.

உங்கள் இளைய சகோதரர்கள் எல்லாச் சமயமும் ஒரே மாதிரி இருக்க மாட்டார்கள். இருந்தாலும், மூன்றாமிடப் பலன்களைப் பொறுத்தவரை உத்தமமான பலன்களே அதிகம் உண்டு.

உங்கள் இராசிக்கு மூன்றாமிட அதிபதியான புதன் மகர இராசியில் இருந்தால் இளைய சகோதரர்களின் ஜீவனம் உங்கள் உதவியால் நடக்கும். ஆனால், பின்னாளில் சுய தொழில் செய்து நன்கு முன்னேற்றம் அடைவார்கள். குரு அங்கு நீசமாகிப் புதனுடன் சேர்ந்து இருந்தால், இளைய சகோதரர்களை முன்னிட்டுப் பொன், பொருள் வீணாகும். தமக்கு அவப்பெயரை ஏற்படுத்தும் நிலையுண்டு.

இதனால் புகழ் மங்கும். புதனுடன் செவ்வாய் உச்சமாகிச் சேர்ந்தால், வீரமான தொழில்கள் உங்களுக்குக் கிட்டும்.

தைரிய, வீரியத்தினால் ஜீவனம் நடக்க விதி உண்டு. இருந்தாலும், அதிகமான தைரிய குணங்கள் ஆபத்தாக முடியும். இதனால் தனக்குக் கீழே மூர்க்க குணமுள்ள ஆளடிமைச் சேவகர்களை வைத்திருக்கும் விதியுண்டு. உங்கள் தைரியத்தினால் இரத்தக் காயங்களும் ஏற்படலாம். மற்றபடி உடல் வீரியங்களி லிருந்தாலும் உங்களுக்குப் பின்வாழ்க்கை தொய்ந்து காணப்படும். பொன், பொருள், ஆபரணச் சேர்க்கைகள் குருவுடன் புதன் நீசமானால் குறுக்கு வழியில் கிட்ட விதியுண்டு. அதனால் புகழுக்கு இழுக்கு ஏற்படும். பொன், பொருள்கள் நிலையாக இரா. மற்றவர்கள் பயப்படும் அளவிற்கு உயர்ந்த உத்தியோகத்தில் கர்வத்தோடு இருப்பீர்கள். செவ்வாய் புதனுடன் சேர்ந்து சூரியனும் மகரத்தில் இருந்தால், உங்களுக்கெனத் தனி ராஜ்ஜியம் படைக்க விரும்புவீர்கள்.

உங்கள் இராசிக்கு மூன்றாமிட அதிபதியான புகன் கும்ப இராசியில் இருக்க இளைய சகோதரரால் இலாபம் உண்டு. அவர்களால் தொழில் வகையில் சில நன்மைகள் ஏற்படும். புகழ், செல்வம், அந்தஸ்து ஆகியன உங்கள் தொழிலைக்கொண்டே வர விதியுண்டு. உங்கள் தொழிலில் இளைய சகோதரரின் பங்கு உண்டு. தொழில் ரீதியான சேவகர்கள், பணியாள்கள் உங்களுக்குக் கீழ் அதிகம் பேர் இருப்பார்கள். புதனுடன் செவ்வாய் சேர்ந்து இருந்தால் இளைய சகோதரர் முற்பகுதியில் இலாபத்தையும், பிற்பகுதியில் நட்டத்தையும் கொடுப்பார்கள்.

அதுபோல், புதனுடன் இரு பாம்புகளான இராகு, கேதுகளுள் யாராவது ஒருவர் சேர்ந்தால், பேச்சில் வீரமும், தீரமும் இருக்கும். செய்கையில் அவ்வளவு வீரம் இராது. பொன், பொருள் சேர்க்கைகள் உங்கள் தொழிலின் காரணமாக வர வாய்ப்புண்டு. நீங்கள் பெறும் பட்டங்களும் தொழில் சார்ந்தவையாகவே இருக்கும். புதனுடன் சனி குடும்பத்தில் ஆட்சியானால், தொழில் முறையிலான புகழும், அந்தஸ் தும் பெற வேண்டிவரும். ஆளுமைகளும் தொழில் சம்பந்தமாய் இருக்கும்.

உங்கள் இராசிக்கு மூன்றாமிடத்து அதிபதியான புதன் மேஷ இராசிக்கு 12ஆம் இடமான மீன இராசியில் இருந்தால் அவ்வளவு உத்தமமான பலன்கள் இல்லை. புதன் மீனத்தில் நீசம் பெற்ற காரணத்தாலும், இராசிக்கு 12ஆம் இடத்தில் மறைந்த காரணத் தினாலும், தம் இளைய சகோதரர் மூலம் நட்டமே அதிகமுண்டு. அவர் களாலேயே செல்வம் குறைதலும், அவப்பெயரும், புகழ் மங்குதலும் ஏற்படும்.

புதனுடன் சுக்கிரன் சேர்ந்து உச்சமாகிக் கூடினால் சுக்கில வீரியங்கள் அதிகமாகும். பெண் போகத்தினால் சுக்கில நட்டமும், ஆதனால் வீரியக் குறைவும், அந்தக் காரணத்தால் மனத்தைரியம் குறைந்து தாழ்வு மனப்பான்மை உண்டாகும். பட்டங்கள் வாங்கியிருந் தாலும் அவற்றால் ஏற்படும் பலன் குறைவு. படித்த பட்டமே பயனில் லாது போக விதியுண்டு. புதனுடன் சேர்ந்து குரு ஆட்சியானால் மத்திம பலன்கள் நடைபெறும். அவ்வாறு குரு ஆட்சியாய் இருந்தால் பொன், பொருள், சேர்க்கைகள் உண்டு.

ஆனால், அத்தனையும் கண்காணாது விரயமாகிவிடும். பொதுவாகப் புதன் எந்திர மந்திரங்களைப் பயன்படுத்திப் புதன் கிரகத்தின் மூன்றாம் பாவ பலன்களைப் பெறுமாறு வேண்டுகிறோம்.

உங்கள் இராசிக்கு மூன்றாமிட அதிபதியான புதன் மேஷ இராசியில் இருந்தால் தைரிய, வீரியம் எப்போதும் இருக்கும். ஆனால், இளைய சகோதரப்பலன் மத்திமமாகவே இருக்கும். செவ்வாய் ஆட்சியாகிப் புதனுடன் சேர்ந்தால், இளைய சகோதரர் களின் கை ஓங்கியே இருக்கும். உங்களுக்குத் தைரிய வீரியம் அதிகம். மூர்க்கத்தனத்தினால் இரத்தக் காயங்கள் ஏற்படலாம். உடல், வீரியத்தோடு இருக்கும். கல்வி வகையில் பட்டங்கள் கஷ்டப்பட்டே வாங்க வேண்டிவரும். பட்டம் வாங்குவதற்குள் மனம் சலித்துவிடும். வல்லமைகள், அதிகாரங்கள், பதவிகள் ஆகியன இருந்தாலும், உங்கள் ஆளடிமை வர்க்கங்கள் மூர்க்கத்தனமாக இருக்கும். அவ்வளவு நம்பிக்கையாக இருக்க மாட்டார்கள்.

# ரிஷபம்
# மூன்றாம் பாவம்

உலகுக்கெல்லாம் இரவில் ஒளி கொடுக்கும் சந்திரனை மூன்றாமிட அதிபதியாகப் பெற்ற ரிஷப இராசி அன்பர்களே! தங்களின் இராசியிலே சந்திரன் ஜென்மமாய் இருந்தால், மூன்றாம் பாவ பலன்களில் இளைய சகோதரர், தைரியம், வீரியம், பட்டம், பதவி, ஆளடிமை, பெண் போக வீரியங்கள், பொன் ஆபரணங்கள், அணிகலன் போன்றவை அடங்கும். இவற்றைப் பதஞ்சலி மகிரிஷியின் சந்திர நாடிப்படி சில பாடல்களையும், அவற்றின் சாரத்துகளையும் இதில் கொடுத்திருக்கின்றோம்.

உங்கள் இராசிக்கு மூன்றாமிடத்து அதிபதி சந்திரன் ரிஷபத்தில் உச்சம் பெற்று இராசியாக ஆனபடியால், 3ஆம் இடமான கடகத்தில் கிரகங்கள் நின்ற பலனையும், சந்திரனுடன் கிரகங்கள் கூடின பலனையும் சந்திர நாடியின் வாயிலாக அறிந்து கூறப்பட்டுள்ளது.

அடிப்படையில் தைரிய வீரியங்கள் பராக்கிரமங்கள் இருந்தாலும், ஒரு நேரம் இருப்பது போல் ஒரு நேரம் இராது. அதனால் சில செயல்களில் பின்வாங்க வேண்டியது வரும். இருப்பினும், 3ஆம் இடத்து அதிபதி சந்திரன் இராசியாகவே உச்சம் பெற்றுவிட்ட படியால் பலன்கள் உத்தம பலன்களாகவே இருக்கும்.

"அம்புலியும் மூன்றோனாய்த் தானுமாகி
இடபமதில் உச்சமது ஏறிடினும்
வம்பனுக்கு வீரியங்கள் மெத்த மேலாம்
விட்டுப்பின் தொடர்ந்தேதான் பின்வருவாய்!
கும்பிட்டே தாயிடத்தில் பக்தியென்றே
குமரனுக்குப் பின் சோதரமும் சேர்ந்தே வாழ
அம்மனை வெய்சேர பலனைக் கேளாய்
அறுதியிட்டே யிவ்வகையில் தொந்தந்தானே!"

உங்கள் இராசியின் 3ஆம் இடத்து அதிபதியான சந்திரன் உங்களுக்கு ஜென்மமாகவே இருந்து உச்சம் பெறுவதால் தைரியங்கள், வீரியங்கள் குறைவில்லாமல் இருக்கும். ஆனால், விட்டுவிட்டு வரும் இயல்புடையனவாகவே இருக்கும். உங்கள்

தாயை உங்கள் குடும்பத்தில் மிக மதிக்கும் நிலையில் வைத்திருப்பீர்கள். இளைய சகோதரர்கள் சேர்ந்து இருக்க விதி உண்டு. பட்டம், பதவி, ஆளடிமை போன்றவற்றிற்கு எப்பொழுதும் குறைவில்லை.

சில காலங்களுக்குப் புகழ் தொடர்ந்து வரும். பின்பு, சில காலம் மங்கி, மறுபடியும் ஏற்றம் காணும். ஆனால், ரிஷப இராசியில் சந்திரனுடன் சூரியன் சேர்ந்தால் இந்த வகையான பலன்கள் மட்டுப்பட ஏதுவாகும். தைரிய வீரியங்கள் இருந்தாலும் அவற்றை உடனே பயன்படுத்த முடியாது. இளைய சகோதரர்கள் உங்கள் தகப்பன் பேச்சையோ, மற்றவர்கள் பேச்சையோ கேட்டு உங்களை அவமதிக்கலாம். உங்களுக்கு எதிராக நடப்பதற்கு முயல்வார்கள். இதனால் புகழும் கௌரவமும் பாதிக்கப்படும் என்பதில் ஐயமில்லை. ஆனால், தாயின் ஆதரவினால் கல்வியும் பட்டமும் பெறுவதற்கு விதி உண்டு.

சந்திரனுடன் கூடிய செவ்வாய் இருந்தால் வீர தீரங்களுக்குக் குறைவிருக்காது. தைரியங்கள் மிகுந்து காணப்படும். இளைய சகோதரர்கள் சற்று விலகியே இருப்பார்கள். ஆளுமைகள் நிறைந்து காணப்படும். உடல் வீரியங்கள் அடிக்கடி பாதிக்கப்படும். உடலிலிருந்து சுக்கிலத்தின் வழியாகவோ வேறு சக்தியின் மூலமாகவோ இரத்தம் வெளியேறும். பாதி நாள்கள் நோவுடனேயே இருக்க வேண்டியது வரலாம். ஆனால், புகழ் குறையாது. தனக்குக் கீழ் பணியாள்கள் அதிகம் பேர் இருக்கும் நிலையுண்டாகும். சந்திரமங்கள யோகம் வாழ்வில் சில கால கட்டத்தில் புகழ், செல்வாக்கு ஓங்கக் காரணமாகும். அதுவும், உச்சம் பெற்ற சந்திரனுடன் செவ்வாய் கூடுவது மிகவும் சிறப்பாகும்.

உங்கள் இராசிக்கு மூன்றாமிடத்து அதிபதி சந்திரனுடன் புதன் கூடியிருந்தால், இளைய சகோதரரால் இலாபம் உண்டாகும். கடைசிவரை, அடித்தாலும் பிடித்தாலும் துணையுடனிருக்கும் விதியுண்டாம். கல்விப் பட்டங்கள் எப்படியும் வாங்க பிராப்த நிலைகள் கூடி நிற்கும்.

சந்திரன் ரிஷபத்தில் இருந்து குரு கூடிப் பிறந்தவர்கள் இளைய சகோதரரால் முன்னாளில் இடைஞ்சல்களும், பின்னாள்களில்

யோகமும் பெற வாய்ப்பாகும். கல்வியின் மூலம் எப்படியும் பட்டம் வாங்கியே தீரவேண்டுமென்ற ஆர்வமும் வெறியும் உண்டாகும். தைரிய வீரியங்களுக்குக் குறைவிருக்காது. ஆனால், அவற்றில் எப்பொழுதும் நிதானமாகவே இருக்க வேண்டும். பகைவர் மூலமாக இடர்கள் ஏற்படலாம். ஆனாலும், நீங்கள் வெற்றி பெறுவீர்கள்.

பொன், பொருள், ஆபரணங்கள் வாங்குவதில் ஆர்வமும் விதியும் உண்டாகும். தனக்குக் கீழ் பணியாள்கள் இருந்து ஆளுமை செய்யும் யோகமுண்டாகும்.

உச்சம் பெற்ற சந்திரனுடன் சுக்கிரன் ஆட்சியாகிக் கூடினால் இளைய சகோதரர்களிடையே மனக்கிலேசமும், கோபமும் உண்டாகும். பெண் போகத்தினால் சுக்கில வீரியம் பாதிக்கப்படும். புகழ் ஓங்கியே இருக்கும். பெண்கள் வகையில் நிலை குலைவு ஏற்படும். அவர்கள் வ்கையில் அபகீர்த்தியும், புகழ் மங்குதலும் ஏற்படலாம். ரிஷப இராசியில் இரண்டுக்கு மேற்பட்ட கிரகங்கள் சந்திரனோடு கூடினால் உயர்பதவிகளும், செல்வாக்கும் பெற்ற சீமானாய் வாழ விதியுண்டாம்.

உங்கள் வாழ்வில் யோகங்கள் தேடிவரும். குப்பை மேட்டில் இருந்து கோபுரத்தின் உச்சிக்கே செல்லும் விதியை ஏற்படுத்துகின்ற கிரக அமிசங்கள் உள்ளன. கைகட்டிச் சேவகம் செய்ய ஆயிரமாயிரம் பேர்கள் காத்து நிற்பார்கள். சந்திரனுடன் புதன், சுக்கிரன், செவ்வாய், குரு போன்ற கிரகங்கள் சேர்ந்திருந்தால் இந்த மாதிரியான யோகம் கட்டாயம் உண்டாகும்.

"இடபவிட மூன்றோன் மதியிடப மிருக்க
அவனுடனே சுங்கன், புங்கன், சேய்வேதன் கூடிநிற்க
திடமான யோகங்கள் மெத்த மேலாம்
தனயனுக்குகீழ் அரசனுமே சேவகம் தானே !"

இராசிக்கு மூன்றாமிடத்து அதிபதி சந்திரன் இராசியிலேயே இருக்க - அதாவது, சந்திரன் உச்சமாயிருக்க - புதன், சுக்கிரன், செவ்வாய், குரு போன்ற கிரகங்கள் கூடிநின்றால், அரசனே தனக்குப் பணிவிடைகள் செய்யுமாறு பதவியும், புகழும் ஓங்கியிருக்கும் என்று மகரிஷி பதஞ்சலியின் சந்திர நாடியின்

வழியாக அறியப்படுகிறது. இந்த அமிசங்கள் திடீர் யோகங்களாகவே வரும்.

சந்திரன் உச்சமாயிருக்கச் சனி சேர்ந்தால் இளைய சகோதரரால் தொழில் மேன்மைகளும் புகழும், தைரியமும் கிட்டும். ஆனால், சனியுடன் சூரியன் சேராதிருத்தல் வேண்டும். சூரியன் சேர்ந்திருந்தால் புகழ் ஓங்கி மங்கும். இளைய சகோதரர் வழியில் முன் நன்மைகளும், பின் தீமைகளும் உண்டாகும். கல்வியினால் பட்டங்கள் வாங்க மிகுந்த சிரமம் ஏற்படும் எனச் சந்திர நாடியின் வாயிலாக அறியப்படுகிறது.

உச்சம் பெற்ற சந்திரனுடன் இராகு சேர்ந்தால் உடல் வீரியங்கள் மட்டுப்படும். இரத்தத்தில் கிருமிகள் அதிகமாயிருந்து நோய் சேரும். இளைய சகோதரர் முன் நாளில் பகையும், பின்னாளில் நன்மையும் புரிவார்.

திடீர்ப் புகழ் வந்து, அது வந்த வேகத்திலேயே திரும்பிச் செல்லும் நிலையுண்டாம். கீழ்த்தரமான நோயுள்ள ஸ்திரீகளின் போகத்தினால் வீரியங்கள் பாதிக்கப்படும் நிலை உண்டாகும்.

இது விஷயத்தில் சர்வ ஜாக்கிரதையாக இருத்தல் நல்லதாகும். உச்சம் பெற்ற சந்திரனுடன் இராகு நீசமாகிக் கூடுவதால் புகழ் ஏற்பட்டு, அப்படியே மங்கும் நிலையை ஏற்படுத்தும்.

உச்சம் பெற்ற சந்திரனுடன் கேது சேர்ந்தாலும், ரிஷப இராசிக்காரர்களுக்கு மூன்றாம் பாவ பலன்கள் அவ்வளவு எளிதாகக் கிடைக்கா. இருந்தாலும், ஞான மார்க்கங்களிலும், ஆன் மிக விஷயத்திலும் ஈடுபாடு அதிகமாகும். சன்னியாசி நிலைகளே அதிகம் மிஞ்சும். இளைய சகோதரர்கள் ஒட்டியிருந்தாலும், வெட்டிப் போகின்ற நிலையை உண்டுபண்ணும். அவர்கள் வாழ்வில் கஷ்ட ஜீவனத்தை நடத்துவார்கள். உங்களுக்குப் பொன், பொருள் ஆபரணங்கள், அணிகலன் ஆகியவற்றைச் சேர்க்கும் பாக்கியங்கள் குறைவாகவே காணப்படும்.

முன் சொன்ன அமைப்பின்படி கிரகங்கள் இருந்தாலும், கூடினாலும் பலன்கள் இருக்க, சந்திர வீடான கடக இராசியில் கிரகங்கள் நின்ற பலனை அறியும்போது, மூன்றாமிடமான கடக

இராசியில் சூரியன் இருந்தால், தைரியம், வீரியம், பட்டம், பதவி, புகழ், ஆளடிமை மார்க்கங்கள் அதன் பலன்கள் குறைவாக இருக்கும்.

ரிஷப இராசிக்கு மூன்றாமிடமான கடக இராசியில் செவ்வாய் நீசமானால் மூன்றாம் பாவ பலன்கள் சற்றுக் குறைய விதியுண்டாம். செவ்வாய் நீசமாகி நின்ற இடத்தின் அதிபதி சந்திரன் ரிஷபத்தில் உச்சமானால் நீச பங்க ராஜயோகம் ஏற்படும். அதனால் இளைய சகோதரர்களினால் திடீர் நன்மைகளும் பட்டம், பதவி, புகழ், ஆளடிமை, வந்துபோகும் விதியும் ஏற்படும். அவற்றைத் தக்க வைக்கச் சந்திரனுக்கும், செவ்வாய்க்கும் தக்க பிரீதிகள் செய்ய வேண்டும்.

மற்றபடி கடக இராசியில் புதன், சுக்கிரன், சனி போன்ற கிரகங்கள் கூடி நின்றாலும், தனித்து நின்றாலும் உத்தம, மத்திம பலன்கள் கலந்துவரும். ஆனால், உயர்வான பலன்களைக் கொடுக்காது.

கடக இராசியில் குரு உச்சமானால், அங்கு செவ்வாய் இல்லாது போனால், ஆளுமை வகைகள் கட்டாயம் ஏற்படும். பதவி, புகழ், தன்னைத் தேடி வரும் விதி ஆகியன உண்டாகும். தனக்குக் கீழ் பணியாள்கள் வேலை செய்வார்கள்.

ஆடை, ஆபரணங்கள், பொன்மணிகள், அணிகலன்கள் ஆகியன தேடிவரும். உச்சம் பெற்ற குருவானால் அவர் திசை புத்திகளில் யோக பலன்களைச் செய்வார். குருவுக்கும், சந்திரனுக்கும் தக்க பிரீதிகள், எந்திர, மந்திர பூஜைகள் செய்து பலன்களைத் தக்க வைக்க வேண்டும். இல்லையெனில் "காத்திருந்த பொருளை நேற்று வந்தவன் எடுத்துப் போன" கதையாகிவிடும். கடக இராசியில் இராகு இருந்தால் மத்திம பலன்களாக இருக்கும். முன் கொடுத்துப் பின் பிடுங்கும் நிலையை உண்டுபண்ணும். பதவி, ஆபரணச் சேர்க்கை, பெண் போகம் போன்றவை தொடர்ந்து இரா.

கடக இராசியில் கேது இருந்தால் தைரியங்களும், வீரியங்களும் அதிகம் இருக்கும். ஆனால், இளைய சகோதர பலன்கள் இரா. ஆன்மிக நாட்டங்களிலும், ஞான விஷயங்களிலும் தெளிவுண்டாகும். அவற்றில் அதிகமாக ஈடுபாடு இருக்கும். கடகத்தில் கேது இருக்கப்

பிறந்தவர்கள் அட்டமாசித்திகள் கைவரப்பெற்று யோகிகளாக உயர்ந்த பீடத்தில், அரசனும் கை தொழும் நிலைகளுடன் இருப் பார்கள். கேதுவுடன் குரு உச்சமாகிக் கூடி நின்றால் வாழ்வில் சொல்லவொண்ணா உயர்ந்த பலன்கள் உண்டாகும். ஆனால், இல்லறத்தில் ஈடுபாடுகள் அதிகம் இராது. யோக சித்திகள் அடைய மனம் நாடும். ரிஷப இராசியைப் பொறுத்தமட்டில் மூன்றாம் பாவ பலன்களில் நல்ல பலன்கள் இருந்தாலும், அதம பலன்கள் இருந்தாலும், பின் கூறிய சந்திர எந்திரத்தை வழிபட்டு, மந்திரத்தை ஜெபித்துப் பலனைத் தக்க வைத்தும், துர்பலன்கள் ஏற்படாவண்ணம் தங்களைப் பாதுகாத்துக்கொள்ளுங்கள்.

## மிதுனம்
## மூன்றாம் பாவம்

உலகுக்கெல்லாம் ஒளி வீசி இருளை அகற்றும் குணம் படைத்த சூரியனை, மூன்றாம் இடத்ததிபதியாகக் கொண்ட மிதுன இராசி அன்பர்களே!

உங்களின் மூன்றாமிடப் பலன்களைப் பதஞ்சலி மகரிஷியின் சந்திர நாடியின் மூலமாகக் காண்கையில் சூரிய வீடான சிம்ம இராசியில் கிரகங்கள் இருப்பதை வைத்தும், சூரியன் 12 இராசிகளில் ஒவ்வோர் இடத்திலும் இருந்தால் மூன்றாம் பாவ பலன்களைப் எப்படிச் செய்வார் என்றும் கூறப்பட்டுள்ளது. முதலில் சூரியன் நின்றவிடப் பலன்களை உங்களின் மூன்றாம் பாவத்திற்காகக் காணும் பொழுது, இளைய சகோதர பலன்கள், தைரியம், வீரியம், பட்டம், பதவி, புகழ், ஆளடிமை, ஆபரணச் சேர்க்கை, அணிகலன், பெண்போகம் போன்றவற்றினைப்பற்றிக் குறிப்பிடுகின்றார்.

**"மார்த்தாண்டன வனாட்சி யுச்ச மேறிடினும்**
**மதிக்குத்தான் கேந்திரமா யிருந்தாலும்**
**சோர்வில்லை வீரியங்கள் பெறுவானென்றே**
**சொப்பனத்தில் கலிதநிலை பெண்மோக மென்றும்**
**போர்பலவும் செய்யவனாய்த் தைரியத்தோன் பலமும்**
**பொங்கியே தனக்கிளைய சோதரத்தின் பலம்பெற்றே**

சார்வுடனே நீசகிரகங்கள் சேர்ந்தாலு மிருந்தாலுந்தான்
சடுதியிலே வந்தபலன் போகுமென்று விளம்பினேனே."

இதன்படி சூரியன் ஆட்சி, உச்சம் பெற்றாலும், இராசிக்கு 1, 4, 7, 10ஆம் இடங்களில் இருந்தாலும், நல்ல பலன்கள் கிடைக்கு மென்றும், நீச கிரக வீடுகளிலும், நீச கிரகங்களுடன் கூடினாலும் அதமமான பலன்களே உண்டு என்றும் கூறுகின்றார்.

உங்கள் இராசிக்கு மூன்றாமிடத்ததிபதியான சூரியன் சிம்ம இராசியிலேயே ஆட்சியானால் தைரியம் அதிகமாயிருக்கும். வீரியத்திற்குக் குறைவில்லை. படைக்கே தலைமை தாங்கும் நிலையுண்டு. அரசில் உயரிய பதவிகள் கிடைக்கும். இளைய சகோதரர்கள் உங்களுக்குச் சாதகமாகவே இருப்பார்கள். ஆடை, ஆபரணச் சேர்க்கைகளும், பொன், பொருள், திரவியங்களில் மிகுந்த ஈடுபாடும் உண்டாகும்:

எப்படியேனும் அரசின் ஓர் உயர்ந்த பதவி உங்களுக்கென உண்டு. உங்களுக்குக் கீழ் ஆளடிச் சேவகங்களும், பணியாள்களும், பலர் இருப்பார்கள். புகழ் ஓங்கியிருக்க விதி உண்டு. கல்விப் பட்டங்கள் கணிதத்திலும், நுட்பத் துறையிலும் கிடைக்கும். சூரியனோடு சனி, மற்றும் இராகு கேதுகள் சேர்ந்தால் பலன்கள் மத்திமமாகவே இருக்கும். மற்ற கிரகங்கள் கூடினால் பலன்கள் உத்தமமாகவே உண்டாகும். துர்பலன்களைத் தவிர்க்கச் சூரியனுக்குப் பிரீதிகளும், யந்திர, மந்திர வழிபாடுகளும் நடத்தினால் நல்ல பலன்களைப் பெறலாம்.

மிதுன இராசிக்கு மூன்றாமிடத்ததிபதியான சூரியன், இராசிக்கு 4ஆம் இடமான கன்னி இராசியில் இருந்தால் சூரியன் பகை பெற்றிருப்பார். இருந்தாலும், இளைய சகோதரப் பலன்கள் நமக்கு ஓரளவு கிட்டும். ஆனால், நமக்குச் சாதகமாக அவர்கள் இருக்க மாட்டார்கள். ஆனால், அவர்கள் வாழ்வில் தன்னிறைவு அடைந்து காணுவார்கள். சூரியனோடு புதன் கூடி ஆட்சியுச்சமாயிருந்தால் தைரிய, வீரியங்கள் உண்டாம். ஆனால், உடலில் உஷ்ணங்கள் ஏற்பட்டு, உடல் வீரியங்கள் குறைய ஏதுவாகும். தாயின் ஆதரவும், அவர்களினால் தைரியங்களும் உண்டாகும். மற்றபடி ஆளுமைகள், ஆபரணச் சேர்க்கைகள் குறைந்தே காணப்படும். ஆனால், கல்விப்

பட்டங்கள் வாங்க விதியுண்டாகும். புகழுக்காகவும், செல்வாக்குக் காகவும் மிகவும் கஷ்டப்பட வேண்டியதிருக்கும். சூரியனோடு சுக்கிரன் நீசமாகிச் சேர்ந்தால் பெண் போகத்தில் அதிக ஈடுபாடும், அதனால் அபகீர்த்தியும் வீரியம் குறைதலும் உண்டாகும். சூரியனோடு மற்ற கிரகங்கள் சேர்ந்தாலும் மத்திமமான பலன்களே ஏற்படும். சூரிய தேவனுக்கும், சிவனாருக்கும் பிரீதிகள் செய்தாலும், சூரிய யந்திர, மந்திரங்களை அனுஷ்டித்தாலும் நல்ல பலன்கள் உண்டாகும்.

மிதுன இராசிக்கு 3ஆம் இடத்ததிபதியான சூரியன் இராசிக்கு 5ஆம் இடமான துலாத்தில் நீசமானால் பலன்கள் துர்பலன்களாகவே இருக்கும். ஐப்பசி மாதம் பிறந்திருப்பீர்கள். உங்கள் இராசிக்கு தைரிய, வீரிய, இளைய சகோதர ஸ்தானாதிபதியான சூரியன் நீசமடைந்தால் பலன் மிகவும் குறைவாகவே இருக்கும். வீரியங்கள் மட்டுப்படும். தைரியங்கள் பொதுவாய் இருந்தாலும், எதிரியைக் கண்டு பின்வாங்கும் நிலையே உண்டு. இளைய சகோதரர்கள் குறைந்த பலங்களுடன் மத்திமமான வாழ்வினை நடத்துவார்கள். சூரியன் நீசமாகி, சனி அங்கு உச்சமானால் இவர்களின் தொல்லையைப்பற்றிக் கேட்கவே வேண்டா. உள்ள பலன்களும் போய்விடும். வாழ்வில் மூன்றாம் பாவ வழியில் திடீர் யோகங்கள் வந்தாலும் அவற்றைத் தக்க வைக்கும் பலன் குறைவாகவே இருக்கும். ஆளடிமைகள், வேலையாள்கள் ஆகியோரை நம்ப முடியாது. அவர்களும் நம்பிக்கையற்றவர்களாய் இருப்பார்கள். இந்த அமைப்பில் உள்ளவர்கள் சூரிய வழிபாட்டைக் கடுமையாகக் கொள்ள வேண்டும். யந்திர, மந்திரங்கள் மூலமாகச் சூரியனின் நல்ல பலன்களை அடைய வேண்டும்.

மிதுன இராசிக்கு ஆறாமிடமான விருச்சிக இராசியில் சூரியன் பகை பெற்றால் இளைய சகோதரப் பலன்கள் குறைவாகவே உண்டு. சில சமயம் அவர்களுடன் சண்டையிட வேண்டிய நிர்ப்பந்தங்கள் வரலாம். உடல் வெப்பமாக இருக்கும். இதனால் உடல் நோய்கள் ஏற்பட்டு வீரியங்கள் மட்டுப்படலாம். கார்த்திகை மாதம் ஜெனித்த உங்களுக்குப் புகழ் மெதுவாக வந்தாலும் அதனைத் தக்க வைக்கும் திறன் குறைவாகவே காணப்படும். இளமையில் பட்டம் வாங்குவது கடினம்; பெரும் தடையாக இருக்கும். அதனால் கடன் பெற

வேண்டிய நிலைகள் ஏற்படலாம். பெண்களைத் தீண்டியதால் பகைகளும், அவர்களை எதிர்த்ததனால் உடல் காயங்களும் ஏற்படும். சூரியனோடு புதன் கூடி நின்றால் எவ்வாறேனும் கல்விப்பட்டங்கள் வாங்கலாம். சூரியனோடு செவ்வாய் சேர்ந்திருந் தால் ஒரளவு ஆளுமையையும், பதவிகளையும், அடையலாம். ஆனால், இளைய சகோதரர்கள் பலன்கள் கிடைக்காது. தைரிய, வீரியங்களுக்குப் பங்கம் வராது. சூரியனுடன் குரு சேர்ந்தால் சொற்ப அளவில் பொன்னாபரண அணிகலன்கள் சேர்க்கும் விதியுண்டு. ஆளடிமைகள் குறைவாகும். திரவியங்கள் இருந்தாலும், அவை கடனைத் தீர்க்கவே சரியாக இருக்கும். பொதுவாக, சூரியன் விருச்சிகத்திலிருந்தால், மத்திமமான பலன்களே செய்வார். சூரியப் பிரீதிகளும், எந்திர மந்திர வழிபாடுகளும் செய்தால் நல்ல பலன்களை அடையலாம்.

உங்கள் இராசிக்கு மூன்றாமிடத்ததிபதியான சூரியன், இராசிக்கு ஏழாமிடமான தனுசு இராசியில் அந்த வீட்டுடன் நட்புக் கொண்டிருந்தால் மூன்றாம் பாவ பலன்களைக் கூட்டிக் குறைத்துத் தருவார். மார்கழி மாதக் குளிரில் பிறந்திருக்க வேண்டும். தேகத்தில் வெப்பம் அதிகமாக இருந்தாலும், குளுமையாகவே காணப்படுவீர்கள். தைரியங்கள், வீரியங்கள் இருந்தாலும், அற்றில் நிதானமான போக்கே அதிகம் இருக்கும். இதனால் யாருக்கும் பாதகமில்லை. இளைய சகோதரர்கள் தமக்குத் தேவையான போது உங்களுடன் ஒட்டிக்கொள்ளுவார்கள். ஆனாலும், அவர்கள் வாழ்விலும், பொருள் சேர்க்கைகளிலும் தன்னிறைவடைந்தே காணப் படுவார்கள்.

ஆளுமைகளும், அதிகார பீடங்களும் இருக்கும். மத்திம வயதிற்கு மேல், பதவி உயர்வு கண்டிப்பாகக் கிட்டும். உங்களுக்குச் கீழ் பணியாள்கள் அதிகம் பேர் வேலை பார்க்க விதியுண்டாகும். பொன், பொருள், ஆபரணச் சேர்க்கைகள் கண்டிப்பாக உண்டு. கற்ற வித்தையால் பெருமையும், புகழும் உண்டாகும். கல்விப் பட்டங்கள் தாராளமாகப் பெறலாம். புகழுக்குப் பஞ்சமில்லை. தனுசு இராசியில் சூரியனிருந்தால் பலன்கள் உத்தமமாகவே இருக்கும். மற்ற கிரகங்கள் கூடினாலும் நன்மையையே தரும். சூரிய யந்திர, மந்திர வழிபாடுகள் இருப்பின் இன்னும் உயர்ந்த பலன்களை அடையலாம்.

மிதுன இராசிக்கு 3ஆம் இடத்ததிபதியான சூரியன் இராசிக்கு 8ஆம் இடமான மகரத்தில் பகை பெற்றால் மூன்றாம் பாவ பலன்களான தைரியம், வீரியம், பட்டம், பதவி, புகழ், ஆளடிமை, ஆபரணச் சேர்க்கை ஆகியவை மத்திமமாகவே இருக்கும். அசட்டுத் தனமான தைரியங்களும், அதனால் கொடும் விளைவுகளும் உண்டாகும். சூரியனோடு சகோதரகாரகளான செவ்வாய் உச்சமாகிக் கூடினால் தைரிய, வீரியங்களுக்குப் பஞ்சமில்லை. இருந்தாலும், எதிராளியுடன் மோதி இரத்தக் காயங்களையும், உறுப்புச் சேதங் களையும் பெறவேண்டியதிருக்கும். உங்களுக்கும் உங்கள் இளைய சகோதரருக்கும் எப்போதும் ஆகாது. சில கால கட்டங்களில் தனியே இருக்க வேண்டிய நிர்ப்பந்தங்கள் உண்டு. மகர இராசியில் சூரியனுடன் குரு நீசமாகிக் கூடினால், பொன், பொருள், திரவியச் சேர்க்கைகள் இருந்தாலும், வில்லங்க விவகாரங்களுக்குச் செலவிட நேரும். உங்களுக்குப் பயன்படாத நிலையில் அவை இருக்கும்.

புகழ் மங்கக்கூடிய நிலைகளும் உண்டு. சூரியனுடன் குரு நீசமாகிக் கூடினால் கல்விப்பட்டம் வாங்குவதில் கடினத்தடை யுண்டாம். பொதுவாக, அதம பலன்களே அதிகமாக நடக்கும். உங்கள் பணியாள்கள் உங்களுக்குப் பயந்து நடப்பார்கள். ஆனால், உண்மையான விசுவாசிகள் என்று கூற முடியாது. சூரியன் அட்டமத்தில் - அதுவும், சனி வீட்டில் - இருந்தால் துர்பலன்களைப் பெறவேண்டியது இருக்கும். இதனை முற்றிலும் தடுக்கச் சூரிய பிரீதிகள் யந்திர, மந்திர வழிபாடுகள் கடுமையான முறையில் செய்தால் நல்ல பலன்களைப் பெறலாம்.

உங்கள் இராசிக்கு மூன்றாமிடத்ததிபதியான சூரியன், இராசிக்கு 9ஆம் இடமான கும்பத்தில் இருந்து பகை பெற்றால், மூன்றாம் பாவ பலன்கள் நல்லதும், கெட்டதும் கலந்தே நடக்கும். இளைய சகோதரர்கள், வாழ்வின் முற்பகுதியில் நற்பலன்களையும், பிற்பகுதிகளில் உங்களுக்குத் தொல்லைகளையும் கொடுப்பார்கள். அவர்களும் பிற்பகுதியில் கஷ்டங்களை அனுபவிப்பார்கள். நீங்கள் கல்விப்பட்டங்கள் வாங்குவதற்கு உங்கள் தந்தையை எதிர்நோக்க வேண்டியதிருக்கும். ஆனால், தந்தை இயலாதவராய் இருப்பார். இதனால் பட்டங்கள் வாங்குவதில் தடை ஏற்படும். சூரியனுடன் சனி

ஆட்சியாகிக் கூடினால், உள்ள பலன்களே மோசமாகிட விதியுண்டு. தைரிய, விரியங்கள் தடைப்படும்.

தைரியங்கள் தடைப்பட்டு எதிராளி முன் நிற்கக் கூச வேண்டியிருக்கும். ஆனாலும், கெட்டதில் ஒரு நல்லது நடக்கும் விதி உண்டாகும். மூன்றாமிடத்ததிபதி சூரியனுடன் வேறு சுப கிரகம் கூடி நின்றாலும், வாழ்வில் பிற்பலன்களே ஏற்படும். எப்படியிருந்தாலும், நல்லது, கெட்டது என்ற விதத்திலேயே பலன்கள் நடக்கும் என்று சந்திர நாடியில் அறியப்படுகிறது. சூரியனுடன் இராகுவானவரோ, கேதுவோ கூடினாலும் துர்பலனை அனுபவிக்க நேரிடும். 40 வயதிற்கு மேல் பதவி, புகழ், ஆளடிமை, ஆபரணம் போன்ற மார்க்கத்தில் உயர்வும் அந்தஸ்தும் உண்டாகும். சூரிய பிரீதிகளும், யந்திர, மந்திர வழிபாடுகளும் செய்தால் நல்ல பலன்களை அடையலாம்.

மிதுன இராசிக்கு மூன்றாமிடத்ததிபதியான சூரியன் இராசிக்கு 10ஆம் இடத்தில் மீன இராசியில் இருந்தால் மூன்றாம் பாவ பலன்களில் சுப பலன்களே அதிகமாக நடைபெற விதி யுண்டாம். கல்விப் பட்டங்கள் எவ்வாறேனும் முயன்று வாங்கச் சூழ்நிலைகள் உண்டாகும். வித்தையும் மற்றவர் மதிக்கும் அளவுக்கு உண்டாகும். உங்கள் இளைய சகோதரர்கள் உங்களுடனேயே இருப்பார்கள். தனியாக இருந்தாலும், பாசம் பற்றுகள் உண்டாகும். உங்களுக்குக் கீழ் உள்ள பணியாள்கள் உங்களுக்கு விசுவாசமாகவே இருப்பார்கள். தைரிய, வீரியங்கள் இருந்தாலும் எதிராளியின் குணத்திற்கேற்ப வெளிப்படும். சூரியனோடு சேர்ந்து குருவும் ஆட்சியாகிச் சேர்ந்தால் உயர்ந்த பீடங்களுக்கும், தனத்திற்கும் அதிபதியாகவும், தலைமையில் உயர்வும் உண்டாம். பதவியில் உயர்வு பெற்று வாழ விதியுண்டாம். சூரியனோடு புதன் நீசமாகிக் கூடினால், குருவும் சேர்ந்திருந்தால் பதவியில் திடீர் உயர்வும், யோகமும் நிச்சயமாக உண்டு. தலைமை களையும் எதிர்பாராத விதமாக எட்டலாம். ஆனால், அதே வேகத்தில் திரும்பிக் கீழே கொண்டுவந்து விட்டுவிடும் நிலையுமுண்டு. மீனத்தில் சூரியனிருந்தால் மிதுன இராசிக்காரர்களுக்கு நல்ல பலன்களே ஏற்படும். பொன், பொருள்கள், ஆபரணச் சேர்க்கைகள் ஆகியன கட்டாயம் உண்டாகும். ஆனால், 40 வயதிற்கு மேலேதான் இந்த மாதிரியான

அமைப்புகள் உண்டாகின்றன. சூரியனோடு சுக்கிரன் உச்சமானால் பெண் போகத்தில் அதிக ஈடுபாடும் உண்டாகும். புகழ், செல்வாக்கு ஆகியன இருந்தாலும், பெண்பித்தன் என்ற ஏச்சுக்கு மட்டும் இடம் தரக்கூடாது. சூரியப் பிரீதிகள், யந்திர, மந்திர வழிபாடுகள் செய்தால் பலன்களை நல்லபடியாக அடையலாம்.

மிதுன இராசிக்கு 3ஆம் இடத்ததிபதியான சூரியன் இராசிக்கு 11ஆம் இடமான மேஷத்தில் செவ்வாய் வீட்டிலிருந்தால் உச்சமடைந்து உயர்வான பலன்களைச் செய்வார். பெரும்பாலும் உத்தமமான உச்ச பலன்களே உண்டு. பேச்சிலும் தைரியத்திலும் அனல் பறக்கும். எதிரே நின்று பேசுவதற்குக்கூட அடுத்தவர்கள் தயங்குவார்கள். அந்த அளவு வலிமையும், கம்பீரமும், செல்வாக்கும் பேச்சுவன்மையும் உண்டாம். சித்திரை மாதச் சூரியன் உச்சத்திற்குத் தனிப்பலன்களே உண்டு. அதுவும் சூரியன் வீரியாதிபதியாக உங்கள் இராசிக்கு வருவதனால் மற்றவர்கள் உங்கள் பேச்சினை மதிப்பார்கள்.

பொன், பொருள், ஆபரணச் சேர்க்கைகள், சொர்ண மார்க்கங்கள் போன்றவற்றில் ஈடுபாடும் சேகரிக்கக்கூடிய அமிசங்களும் உண்டாகும். சூரியனோடு செவ்வாய் ஆட்சியாகிக் கூடச் சேர்ந்தால் அந்தத் தைரியத்தினாலே பேரும் புகழும் உண்டாகும். ஆனால், சூரியனுடன் செவ்வாய் சேர்வதனால் சகோதர இலாபங்கள் குறைவு. அவர்கள் நீங்கள் உச்ச நிலையிலிருந்தாலும் மதிக்க மாட்டார்கள். அது உங்களுக்கு வேதனையைத் தரும். சூரியன் மேஷத்தில் உச்சமாகிச் சனி அங்கு நீசமானால் கல்விப் பட்டங்கள் வாங்குவதற்குத் தடைகள் ஏற்படும். அப்படிக் கூடுவதால் மூன்றாம் பாவ வழியில் குழப்பமே மிஞ்சும். சனி மட்டும் சேராமல் மற்ற கிரகங்கள் கூடினால் யோக பலன்களேயுண்டு. சூரிய பிரீதிகளும், யந்திர, மந்திர வழிபாடுகளும் செய்துவந்தால் பலனைத் தக்க வைக்கலாம்.

மிதுன இராசிக்கு 3ஆம் இடத்ததிபதியான சூரியன் இராசிக்கு 12ஆம் இடமான விரய ஸ்தானத்தில் இருந்தால் மத்திமமான பலன்களே நடைபெறும். ரிஷபத்தில் சூரியன் பகை அது மட்டுமன்றி இராசிக்கு 12ஆம் இடத்தில் மறைவு பெற்றுள்ளார். இளைய சகோதரர் ஒட்டியும், ஒட்டாமலும் பழகிக்கொண்டிருப்பார். சில கால

கட்டங்களில் அவர்களால் உங்களுக்குப் பண விரயங்கள் உண்டாகும். மற்றபடி கல்விப்பட்டங்கள் வாங்குவதில் தடையும், முயற்சியால் வெற்றியும் கிட்டும். அதனால் பண விரயங்களும் அலைச்சல் நிலைகளும் உண்டாகும். சூரியனுடன் புதன், சுக்கிரன் ஆகியவர் சேர்ந்தாராகில் மூன்றாம் பாவத்தைப் பொறுத்தமட்டில் நன்மையான பலன்கள் உண்டு. தைரிய, வீரியங்கள் அளவுடனேயே இருக்கும். உடல் உஷ்ணங்களினாலும், அதிக போகத்தினாலும் இந்திரிய நட்டங்கள் ஏற்பட்டு வீரியங்கள் குறையும். அழகிய பெண்களைக் கண்டு மோகித்தலும் அதனால் பண விரயங்களும் உண்டாகும். சூரியனுடன் சுக்கிரன் ஆட்சியாகிச் சேர்ந்தால் இந்த நிகழ்வுகள் கட்டாயம் உண்டாகும். பதவி, புகழ், செல்வாக்கு போன்றவற்றில் ஆசை வைத்துப் பண விரயமும், கால விரயமும் உண்டு. பதவி, புகழ், செல்வாக்கு, கீர்த்திகள் இருந்தாலும் சூரியனுடன் இரு பாம்புகளான இராகு, கேதுகள் கூடுவதால் குழப்பம் மிஞ்சி மன நோவுகள் ஏற்படும். ஆபரணச் சேர்க்கைகள் இருந்தாலும் அழிவுறும் விதி உண்டு. சூரியனுக்கு யந்திர, மந்திர பிரீதிகள் செய்தால் நலம் பெறலாம்.

மிதுன இராசிக்கு மூன்றாமிடத்ததிபதியான சூரியன் மிதுன இராசியிலேயே பகைபெற்றிருந்தால் பலன் மத்திமமாகவே இருக்கும். இருந்தாலும், சுபகிரகங்கள் சேர்ந்தால் பலன்கள்கூட விதியுண்டாம். இயற்கையிலேயே தைரிய, வீரியங்களோடு உடல் வீரியங்களைக் காப்பாற்ற வேண்டுமென்ற அக்கறை உணர்வுகளும் உண்டு. ஆனால், உடல் உஷ்ண மிகுதியால் இந்திரிய ஸ்கலிதம் உண்டாகி மனநோயை ஏற்படுத்தும். சூரியனுடன் புதன் கூடினால் கல்விப் பட்டங்கள் வாங்குவதற்கான சூழ்நிலைகள் உண்டாகும்.

பொதுவாக, சூரியனோடு மிதுனத்தில் எந்தக் கிரகங்களும் கூடினாலும், மத்திம பலன்களையே மூன்றாம் பாவ வழியில் ஏற்படுத்தும். இளைய சகோதர நன்மைகளும் இளமையில் தன்னுடன் ஒன்றாகக் கூடியிருத்தலும் வாலிபத்திற்குப் பின் வெட்டிச் செல்லுதலும் உண்டு. இருந்தாலும், மதிப்பும், விசுவாசமும் உண்டாகும். அவர்களால் கிட்டும் பலன்களே குறைவாகவே இருக்கும். மற்றபடி பட்டம், பதவி, புகழ், ஆளடிமை போன்ற அமிசங்கள் மத்திமமாகவே இருக்கும். இளமையிலேயே

அனைத்தையும் முடித்துவிட்டது போன்ற உணர்வுகள் உண்டாகும். மிதுனத்தில் சூரியனுடன் கேது உச்சமாகிக் கூடினால் ஞானவழியிலும் ஆன்மிக வழியிலும் நாட்டங்களும், ஈடுபாடும் அதிகம் உண்டாகும். அவ்வழியிலேயே புகழ், கீர்த்திகள் உண்டாகும். பொன், பொருள் சேர்க்கைகள் மத்திமமாகவே தேவைக்கேற்ப இருக்கும். சூரியப் பிரீதிகள் யந்தி மந்திர வழிபாடுகள் செய்தால் நல்ல பலன்கள் உண்டாகும்.

மிதுன இராசிக்கு மூன்றாமிடத்ததிபதியான சூரியன் இராசிக்கு 2ஆம் இடமான கடகத்தில் பகைபெற்றால் மத்திமமான பலன்களே மூன்றாம் பாவ வழியில் உண்டு. இளைய சகோதரர்கள் உங்களைக் கண்டுகொள்ளும் நிலையில் இருக்கமாட்டார்கள். உங்களுக்குக் கீழே உள்ள பணியாள்களும் உங்களை மதிக்கும் குணம் குறை வாகவே இருக்கும். சூரியனுடன் குரு உச்சமாகிக் கூடினால் பொன், பொருள், ஆபரணச் சேர்க்கைகள் உண்டாகும். சூரியனுடன் செவ்வாய் நீசமாகிக் கூடினால் இளைய சகோதரப் பலன் முற்றிலும் குறைவு. தைரியங்கள் இருந்தும் எதிராளியைக் கண்டு அஞ்சும் நிலையிலிருக்கும். சூரியனுடன் குரு மட்டும் கூடியிருந்தால் உயர்வான பலன்கள் உண்டு. உயர்ந்த அந்தஸ்தும், உயர்ந்த படத்தில் பதவிகளும் உண்டாகும்.

மிதுன இராசி அன்பர்களே! சூரியன் நல்ல பலனைச் செய்தாலும் துர்பலனைச் செய்தாலும், மூன்றாம் பாவ பலனை அடைய வேண்டுமெனில் பின்கூறப்பட்ட சூரிய, யந்திர, மந்திரங்களைக் கடைப்பிடித்து வாழ்வில் உய்ய வேண்டும்.

## கடகம்

## மூன்றாம் பாவம்

இராசிக்கு மூன்றாம் இடத்து அதிபதியாகப் புதபகவானைக் கொண்டுள்ள கடக இராசி அன்பர்களே!

மூன்றாம் பாவ பலன்கள்பற்றி மகரிஷி பதஞ்சலி மகா முனிவர் எழுதிய சந்திர நாடியின் வழியாகக் காணும் பொழுது அன்பர்களின் தெளிவுக்கிணங்க மூன்றாமிடக் கிரகம் இருக்கும் வீட்டை வைத்தும்

மூன்றாமிடத்திலுள்ள கிரகங்களை வைத்தும் பலன் கூறப்பட்டுள்ளது. அதன்படி, சுந்திர நாடியில் உள்ள பாட்டுகள் விளக்கமாகவும், சில பாட்டுகள் உதாரணமாகவும் கொடுக்கப்பட்டுள்ளன.

"கடகமதில் மூன்றில் புங்கன் ஆட்சி உச்சம் ஏறிடில்
குருவுசேய்காரி புங்கனொடு கூடிடினும்
திடமுடனே சகோதரர்கள் பலமென்றாச்சு
திரவியமும் பொன்னும் பொருளும் சேர்க்கையதாய்"

இவ்வாறாய் இராசிக்கு மூன்றாமிடமாகிய கன்னி புதன் ஆட்சியுச்சம் ஏறிக் குரு, செவ்வாய், சனி முதலானோர் புதனுடன் கூடினால், இளைய சகோதரர்களினால் நன்மையும், பொன், பொருள் சேர்க்கையும் உண்டாம். பட்டம், பதவி, புகழ், ஆளடிமை வகைகள் யாவும் நன்மையாக அமையுமென்று கூறப்படுகிறது.

"பாலுமதிக்கு மூன்றாறு எட்டு விரயத்தில் புங்கனிருக்கப்
பங்கமுண்டு பலனும் கேட்கின் மட்டமாகும்
நாலேலு ஒன்றுபத்தில் உச்சனொடு கூடிடவே
நாயகனும் உத்தம பலன் பெறுவானென்று
விளம்பினேனே."

இராசிக்கு 3, 6, 8, 12இல் புதனிருந்தால் எப்படித்தான் 3ஆம் பாவ பலனைப் பெற்றாலும் அந்தப் பலனை முழுமையாக அடைய முடியாது. ஆனால், கேந்திர ஸ்தானங்களான 1, 4, 7, 10ஆம் இடங்களில் புதனிருந்தால் அந்தப் பாவ பலன்களை முழுமையாகப் பெறலாம் என்று கூறுகிறார். இப்படிப் பலன்கள் இருக்கையில் கடக இராசிக்கு புதன் 12 இராசிகளில் இருந்த பலன், மற்ற கிரகங்களோடு கூடிய பலனையும் மூன்றாம் பாவமாக உங்களுக்கு அளிக்கப் படுகிறது.

கடக இராசிக்கு மூன்றாமிடத்து அதிபதியான புதன் கன்னி இராசியிலே ஆட்சியுச்சமானால் தைரிய வீரியங்களை உயிரெனப் பெற்றிருப்பீர்கள். இளைய சகோதரர்களின் உதவியுமுண்டு. அவர்களும் வாழ்க்கையில் நலமாய் இருப்பார்கள். கணித வகையிலான பட்டங்களும் உயர் பட்டங்களும் பெற விதி உண்டு. உங்களுக்கு உயர்பதவிகள் கிட்டும். உங்களுக்குக் கீழ் பல பேர் வேலை பார்க்கக்கூடிய நிலை உண்டு. புகழும், செல்வாக்கும்

உங்கள் பதவிகளாலே ஏற்படும். புதனுடனே குரு கூடியிருந்தால் சாஸ்திர ஞானங்களில் தேர்ச்சி பெற்று, அவை சம்பந்தப்பட்ட பீடங்களில் ஆளுமைகள் இருக்கும். சுக்கில வீரியங்களுக்கும், உடல் வீரியங்களுக்கும் குறைவிருக்காது.

பெண் போகங்கள் அதிகமாக இருந்து வீரியங்கள் மட்டுப்படும் நிலையுண்டு. எனவே, இந்த விஷயங்களில் கவனமாய் இருததல் வேண்டும். புதன், குரு ஆகியவற்றுடன் சுக்கிரனும் சேர்ந்திருந்தால் பொன், பொருள் சேர்க்கைகளும், ஆபரண அணிகலன் சேர்க்கை களும், அவற்றின்மீது நாட்டமும் உண்டு. ஆனால், தக்கவைக்கும் பலன் குறைவாக இருக்கும். அதற்குரிய பிரீதிகள் செய்து பலனைத் தக்க வைத்தல் வேண்டும். புதனுடன் செவ்வாய் கூடி இருந்தால் சகோதர இலாபம் குறைவு. ஆனால், தனத்து ஆளுமைகளும் அதிபதியாக இருக்கும் விதியும் உண்டாகும். இப்படிப் பல உயரிய அமிசங்கள் இருந்தாலும் புதனானவர் சந்திர இராசிக்கு மூன்றாமிடத்தில் மறைந்த காரணத்தினால் பலன்கள் முன்பின் நடக்கவும் மட்டுப்படவும் விதிகளுண்டு. புதனுக்கு எந்திர மந்திர வழிபாடு செய்தாலும், மகா விஷ்ணுக்குச் சுதர்ஷன ஹோமங்கள் செய்தாலும் நல்ல பலன்கள் உண்டாகுமென்று சந்திர நாடியின் வழியாக அறியப்படுகிறது.

கடக இராசிக்கு மூன்றாமிடத்து அதிபதியான புதன் இராசிக்கு நான்காம் இடமான துலாத்தில் நட்பு பலமாகவே இருந்தாலும் ஓரளவு நற்பலன்கள் ஏற்படும். இளைய சகோதரர் உதவியுண்டு. அவர்களால் மனை, வாகனங்கள், கட்டடங்கள் போன்றவற்றை அடைய உதவி யுண்டு. தைரிய வீரியங்களுக்குக் குறைவில்லை. இருந்தாலும், எதிராளிக்குத் தக்கவே பலன் வெளிப்படும். புதனானவர் இராசிக்கு நாலாமிடமான கேந்திர ஸ்தானத்தில் நட்பொடு இருப்பதால் பலன்கள் சுமுகமாகவே உண்டு.

புதனொடு சுக்கிரன் ஆட்சியாகிச் சேர்ந்தால் சுக்கில வீரியங்களும் பெண் போகப் பாக்கியங்களும் அதிகம் ஏற்படும். போக பலன்களும் உண்டாம். தலைமை, புகழ் ஆகியன ஒரு குறுகிய வட்டத்திற்குள்ளே இருக்கும். உங்களுக்குக் கீழ் சிலர் பணி செய்யவும், சுய தொழிலாக இருந்தால் ஆளடிமைகள் நம்பிக்கை யாகவும் இருக்கும். ஆனால், புதனுடன் சூரியன் நீசமாகிக் கூடினால்,

சுக்கிலங்கள், வெப்பத்தினால் நீர்த்துப்போகும். உஷ்ண நோயால் உடல் குறுகி வீரியங்கள் குறையும்.

தங்கம், வெள்ளி போன்ற உலோகச் சேர்க்கைகளும், ஆபரண அணிகலச் சேர்க்கைகளும் சில கால கட்டங்களில் வந்துபோகும். புதனுடன் சனி உச்சமாகக் கூடினால் மனைவியினால் போக பாக்கியங்களும் ஆபரணச் சேர்க்கைகளும் உண்டாகும். புதனுடன் சூரியன் சனி போன்ற கிரகங்கள் உச்ச நீசமடைந்திருந்து வேறு சுப கிரகங்கள் கூடவில்லை எனின், திடீர் யோகங்கள் கொடுத்து, பின்பு பிடுங்கிக்கொள்ளும் நிலை ஏற்படும். இருந்தாலும், பொதுப்பலனாக உத்தம பலன்களே நடக்கும். யோகங்களையும், ஆபரணச் சேர்க்கை களையும் தைரிய வீரியங்களையும் தக்க வைக்க புதனுக்கு எந்திர மந்திர வழிபாடுகள் செய்வதால் நல்ல பலன்கள் நடக்குமென்று சந்திர நாடியின் வாயிலாக அறியப்படுகிறது. கடக இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 5ஆம் இடமான விருச்சிகத்தில் இருந்தால், இளைய சகோதரர்கள் வலுவாய் இருப்பார்கள். இருந்தாலும், உங்களை மதிக்க மாட்டார்கள். அவர்களினால் உதவிகள் குறைவாக இருக்கும். புதனுடன் செவ்வாய் ஆட்சியாகிக் கூடினால் இளைய சகோதரர்களின் கை ஓங்கி இருக்கும்.

உங்களுக்குத் தைரிய வீரியங்கள் குறையா. புதனுடன் செவ்வாய் கூடுவதால் முரட்டுத்தனமான குணங்களுடன் வீரியங்கள் அதிகப்பட்டிருக்கும். இதனால் சண்டைகள் ஏற்பட்டு இரத்தக் காயங்கள் ஏற்படலாம். கல்விப் பட்டங்கள் வாங்குவது கடினமாய் இருக்கும். ஆனால், கேள்வி ஞானங்கள் உண்டு. உங்களின் தைரிய குணங்களை வைத்துப் பெயரும், புகழும் உண்டாகும். பேச்சுகள் காரசாரமாய் இருக்கும்.

புதனுடன் செவ்வாய் சேர்ந்திருந்தால் அரசியல் பிரவேசம் உண்டாகும். உடல் வீரியங்களில் இரத்த பலங்களும் சுறுசுறுப்பும் உண்டு. பொன், பொருள் சேர்க்கைகள் குறைந்தே காணப்படும். இருந்தாலும், புகழ் மங்காது. புதனுடன் இருபாம்புகளான இராகு, கேதுகள் உச்சமாய்க் கூடினாலும், முன்கோபங்களும் பின் இரக்கங்களும் உண்டாகும். இக்கிரகங்கள் கூடினால் பலன்கள் தடைப்படும். வீரிய நட்டமும் ஏற்படும். கேது கூடினால் ஞான

வித்தைகள் உண்டு. மற்ற கிரகங்கள் புதனுடன் எவர் கூடினாலும் சுமுகமான பலன்களே செய்யும். 3ஆம் இடத்தைப் பொறுத்தவரை அதமப் பலன்கள் குறைவு. இருப்பினும், திருமாலுக்குப் பூஜைகளும் புதனுக்கு எந்திர மந்திர பிரீதிகளும் செய்து வந்தால் நல்ல பலன்கள் உண்டாகும்.

கடக இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 6ஆம் இடத்தில் தனுசு இராசியில் நட்புப் பலத்துடன் இருந்தாலும் நல்ல தீய பலன்கள் கலந்தே நடக்கும். இளைய சகோதர பலன்கள் குறைவாகவே இருக்கும். இராசிக்கு ஆறில் புதன் மறைவான காரணத்தினால் பலன்கள் மட்டுப்பட விதியுண்டு. குரு பார்த்தால் சில பலன்கள் கிட்டும். தைரிய வீரியங்கள் இருந்தாலும் தேவையான சமயங்கள் பிரயோகிக்க முடியாமல் தடைப்படும். புதனோடு குரு கூடி ஆட்சியாகப் பொன், பொருள் ஆபரணச் சேர்க்கையுடன் கல்வியுமுண்டு. பட்டங்களும் பெறலாம்; ஆனால், தக்க வைக்கும் திறன் குறைவாக இருக்கும். கல்விப் பட்டங்கள் வாங்குவதற்குக் கஷ்டங்கள் உண்டு. புதனுடன் செவ்வாய் கூடினால் வீரியக் குறைவும் தைரியமில்லாமல் சோர்ந்து போய் இருத்தலும் உண்டாகும். பொன், பொருள் ஆபரணச் சேர்க்கை போன்றவை இருந்தால் கடனை இட்டுப் போக விதியுண்டு.

கடனினால் அபகீர்த்திகளும் புகழ் மங்குதலும் உண்டு. வாழ்வில் நாற்பது வயதுக்கு மேலேயே யோகங்களும் பலன்களும் பொருள் சேர்க்கைகளும் உண்டாம். புதன் இராசிக்கு 6ஆம் இடத்தில் மறைந்த காரணத்தினால் பலன்களும் மட்டுப்படும். புதனுக்குத் தக்க பிரீதிகள் செய்வதனாலும் எந்திர மந்திர உபாசனைகளாலும் நல்ல பலன்களைப் பெறலாம். புதனுடன் மற்ற கிரகங்கள் கூடினாலும் அளவான பலன்களையே தரும். குரு கூடினாலும் மற்ற நட்புக் கிரகங்கள் கூடினாலும் நல்ல பலன்களாம். செவ்வாய் கூடினால் பலன் குறைவாம் என்று சந்திர நாடியின் வழியாக அறியப்படுகிறது.

கடக இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 7ஆம் இடமான மகரத்தில் இருந்தால் நல்ல பலன்களுண்டாம். புதனானவர் சந்திர இராசிக்கு 7ஆம் இடத்தில் கேந்திரத்தில் இருப்பதால் பெரும்பாலும் உத்தம பலன்கள் கிட்டுமென்று கூறப்படுகிறது. இளைய சகோதரர் உதவிகள் உண்டு. புதனுடன்

குரு நீசமாகிக் கூடினால், பொன், பொருள் சேர்க்கையும் புகழ் குறைவுபடுதலும் ஏற்படும். செவ்வாய் உச்சமாய் வலுத்து நின்றால் சகோதரர்களால் முன் நன்மைகளும் பின் தீமைகளும் உண்டு. ஆனால், தைரிய வீரியங்களுக்கும் மூர்க்கத்தனங்களுக்கும் குறைவில்லை. இளைய சகோதரர்களின் களத்திரங்கள் அவ்வளவு நல்லவர்களாக இருக்கமாட்டார்கள். அவர்களால் உங்களுக்கும் இளைய சகோதரர்களுக்கும் பகை ஏற்பட விதியுண்டு. புதனுடன் சனி ஆட்சியாகிக் கூடினால் மனைவியினால் தைரியங்களும் போக பாக்கியங்களும் உண்டு. மனைவியினால் பொன், பொருள், ஆபரணச் சேர்க்கையுண்டு. அதை அவர்கள் சுட்டிக்காட்ட வேண்டியதுவரும்.

மகரத்தில் குருவுடன் புதன் சேர்ந்திருந்தால், பெண் தொடர்பும் பாக்கியமும் கிட்டித் தொல்லைகளும் அபகீர்த்திகளும் ஏற்படும். இவர்களுடன் செவ்வாயும் உச்சமாகிக் கூடினால் அசட்டுத் தைரியமும் அதனால் ஆபத்தும் உண்டாம். கல்வித்தடைகளும், பின் முயற்சியால் பட்டங்களும் உண்டாம். புகழ், செல்வாக்கு, கீர்த்தி ஆகியன இருந்தாலும், அற்ப விஷயத்தால் அபகீர்த்திகளும் மரணம் வரை புகழ்க்குறைவும் உண்டாம்.

ஆளடிமை வகைகள் குறைவாக உண்டு. இருந்தாலுய பாதகமில்லை. பெண்களைவிட ஆண்களே நம்பிக்கை உடையவர் களாக இருப்பார்கள். புதனுடன் இராகு கூடினால் சில பலன்கள் யோக பலன்களாக அமையும். மற்ற கிரகங்கள் கூடினால் மத்திம மான பலன்களே உண்டு. 3ஆம் பாவத்தைப் பொறுத்தமட்டில் நல்ல பலன்களரனாலும் தீய பலன்களானாலும் புதன் கிரக வழிபாட்டையும் திருமால் பூஜையும் செய்து வந்தால் உயர்வான பயனைப் பெறலாம் என்று சந்திர நாடியின் வாயிலாக அறியப்படுகிறது.

கடக இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 8ஆம் இடத்தில் கும்பத்தில் நட்புப் பலத்துடன் இருந்தாலும் அட்டமத்தில் மறைவானதால் சுப பலன்கள் குறைவு. சிறப்பான பலன்களைத் தராது. இளைய சகோதரரின் தொல்லைகள் உண்டு. அவர்களால் எதிரிகளைச் சந்திக்க வேண்டி இருக்கும். இதனால் புகழுக்குப் பாதிப்பும் அபகீர்த்திகளும் உண்டாகும். பெரும்பாலும் 3ஆம் பாவ பலன்களைப் பொறுத்தவரை துஷ்டப் பலன்களே அதிகம்.

அசட்டுத் தைரியங்கள் அதிகமாய் இருக்கும். துஷ்டர்களின் சகவாச மும் தொல்லைகளும் உண்டாம். புதனுடன் சனி கூடி ஆட்சியானால் திடீர் ஆபரணச் சேர்க்கையும் புகழுமுண்டு. அவை வந்த விதத்தில் திரும்பிப் போய்விடும். ஆளடிமை வர்க்கங்களும் நீசத்தனமாகவே இருக்கும். கல்விப்பட்டங்கள் வாங்குவதற்குத் தடை உண்டாம். யோகங்களும், புகழும் வந்து திரும்பிப் போய்விடும் நிலைகளிலேயே இருக்கும். நீசத்தனமான பேச்சுகளாலும் தைரியங்களாலும் கண்டங் களும் உயிர்க்கு ஆபத்தும் என்ற நிலையுண்டு.

சனியுடன் மற்ற கிரகங்கள் கூடினால் மத்திமமான பலன்களே உண்டாம். சனியுடன் இராகு ஆட்சியாகிக் கூடினால், தன் இடத்தில் தனக்குப் பலன் என்ற அளவில். உங்களிடத்தில் ராஜ்ஜியம் கொடிகட்டிப் பறக்கலாம். இதனால் துஷ்டத்தனமான புகழும் உண்டு. இப்படிப் பல்வாறாய் அதம பலனிருந்தாலும், மதிக்குப் புதன் அட்டமத்திலிருந்தால் இப்படிப் பலன்களே அதிகமுண்டு. விதிக்கும் கதிக்கும் ஊழ்வினையாலும் பலன்கள் முன்பின் மாறலாம். ஆனால், பொதுவாக அதம பலன்களே உண்டு. புதனுக்கு எந்திர மந்திரப் பிரீதிகள் கடுமையாகச் செய்தால், திருமாலை ஆசார அனுஷ்டானங்களோடு வணங்கினால் நல்ல பலன்களைப் பெறலாம் என்று சந்திர நாடியின் வழியாக அறியப்படுகிறது.

கடக இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 9ஆம் இடமான மீனத்தில் நீசமாய் இருந்தால், 3ஆம் பாவ பலன்களைப் பொறுத்தமட்டில் பலன் குறைவே. புதன் மீனத்தில் நீசமாகின், அங்கு சுக்கிரன் உச்சமாய் இருந்திருந்தால் பலன்கள் முரணாகவே இருக்கும். புதனுடன் சுக்கிரன் சேர்ந்தால், சுக்கில நட்டமுண்டாகும். ஸ்திரீகளால் வீரிய நட்டங்களும் அபகீர்த்திகளும் உண்டு.

பெண்கள் விஷயங்களில் நாட்டம் அதிகமாய் இருக்கும். உங்களுக்கு இளைய சகோதர வகைப் பலன்கள் குறைவாகவே இருக்கும். புதனுடன் குரு ஆட்சியாகிக் கூடினால் பலன்கள் முதலில் நன்றாகவும், பின்பு பிடுங்கும் நிலையிலும் இருக்கும். புதன் நீசமானதால் தன் பலங்கள் குறைவாகவே இருக்கும். குரு கூடினாலும் சுக்கிரன் கூடினாலும் நீச பங்க ராஜயோகம் ஏற்பட்டு,

கெட்டதில் ஒரு நல்லது என்ற வகையில் நடக்கும். குறுக்கு வழியில் ஓர் ஆபரணச் சேர்க்கையும், புகழும் செல்வாக்கும் உண்டாகும்.

முன்வயதில் கல்வி பெறத் தடையிருந்தாலும் பின்வயதில் பட்டங்கள் வாங்கக்கூடிய விதியுண்டு. அவை திடீர் யோகமாகக் கிட்டுமே தவிர தொடர்ந்து முயற்சியால் கிட்டாது. கல்வித்தடைகள் ஏற்படும். தைரியம் மனத்திற்குள்ளேதான் இருக்கும். அதைச் செயலில் காட்டுவது கடினமாகும்.

உங்கள் இராசிக்குத் தைரிய வீரிய ஸ்தானாதிபதி வலுவிழந்த காரணத்தினால், புதனுக்கு எந்திர மந்திரப் பிரீதிகளைக் கடுமை யாகச் செய்வதனாலும் திருமாலுக்குப் படையல், அர்ச்சனை, பூஜைகள் முதலியவற்றை மேற்கொள்ளுவதனாலும் நல்ல பலன்களை அடைய லாம். கிரகப் பிரீதிகளால் மட்டுமே யோகங்கள் அமையும். பலன்கள் இருந்தால் அவற்றைத் தக்கவைக்கும் விதி ஏற்படும் என்று பதஞ்சலி மகரிஷியின் சந்திர நாடியின் வாயிலாகக் கூறப்படுகிறது.

கடக இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 10ஆம் இடமான மேஷத்தில் இருந்தால் சுமுகமான நல்ல பலன்கள் ஏற்படும். இளைய சகோதரரால் தொழில் இலாபங்களும் குடும்ப இலாபங்களும் சில காலகட்டத்தில் உண்டு. ஆனால், இளைய சகோதரர்களுடன் கூடி வாழ விதி குறைவு. தைரியங்களும் வீரியங்களும் அதிகமாகவே உண்டு. அவை நிதானமாகத் தேவைக் கேற்றபடி செயலில் இருக்கும். சூரியன் உச்சமாகிப் புதன் சேர்ந்திருந் தால் உங்கள் தைரியங்களினால் தொழில் வலுத்து, அதனால் செல் வாக்கு, புகழ் ஆகியன ஏற்படும். உயர்ந்த அரசுப் பதவிகளில் இருந்து தமக்குக் கீழ் ஆளடிமை வர்க்கங்களைக் கொண்டிருக்கவும் விதிகள் ஏற்படும். உங்களுக்குக் கீழ் பணியாள்கள் வேலை செய்வார்கள்.

புதனுடன் சூரியனும் சனியும் சேர்ந்திருந்தால் செயல்களும் பலன்களும் முரண்பட்டவைபாய் இருக்கும். இதனால் உங்களை மற்றவர்களால் புரிந்துகொள்ள முடியாமையும், அதனால் அபகீர்த்தியும் ஏற்படும். தொழிலில் சில அற்பர்களை எதிர்த்து நிற்கும் துணிவு குறைவாக இருக்கும். இராசிக்குக் கேந்திரத்தில் தொழில் ஸ்தானத்தில் புதன் இருப்பதால் தொழிலினாலேயே செல்வாக்கு, கீர்த்தி, புகழ் போன்றவை ஓங்கி இருக்கும். கல்வி

பெறத் தடை ஏற்படும். பட்டம் வாங்குவதில் ஆர்வம் இருந்தாலும், அதை அடைவதற்கான திறன் குறைவாகவே உண்டு. நீங்கள் செய்யும் தொழில் உங்கள் கல்விக்குத் தொடர்பில்லாததாக இருக்கும்.

பொதுவாக 3ஆம் பாவ பலன்கள் சனி நீசமில்லையாயின் சுமுகமாகவே இருக்கும். அப்படிச் சனி, நீசமாகிச் செவ்வாய், சூரியன் புதன் ஆகியவற்றோடு கூடினால் ராஜ யோகங்களும் செல்வாக்கு, கீர்த்தி, புகழ் ஆகியனவும் உண்டாகும். ஆனால், அற்ப விஷயங்களில் அபகீர்த்தியும், தலைக்குனிவும் உண்டாகும். ஆனால், புதனுக்கு எந்திர, மந்திர பிரீதிகள் கடுமையாகச் செய்து வந்தால் சுப பலன்களை அடையலாம். புதனுடன் சனியைத் தவிர மற்ற கிரகங்கள் கூடினாலும் நல்ல பலன்களே உண்டாகுமென்று பதஞ்சலி மகரிஷியின் சந்திர நாடியின் வாயிலாக அறியப்படுகிறது.

கடக இராசிக்கு 3ஆம் அதிபதி புதன் இராசிக்கு 11ஆம் இடமான ரிஷபத்தில் இருந்தால் சுமுகமான பலன்கள் உண்டு. இளைய சகோதரர்கள் கண்டும் காணா நிலையிலிருப்பார்கள். ஆனால், அவர்களால் உபத்திரமில்லை. பலன்கள் குறைவாகவே இருக்கும். புதனுடன் சுக்கிரன் சேர்ந்து ஆட்சியானால் சுக்கில வீரியங்களும் போக பாக்கியங்களும் உண்டாகும். உடல் வீரியங்கள் ஏற்பட்டுத் திடமாகவும் தைரியமாகவும் இருப்பார்கள். கஷ்டப்பட்டுக் கல்விப் பட்டங்கள் வாங்கலாம். அதனால் பொருள் இலாபமும் பதவி இலாபமும் உண்டு. அதனால், புகழ், கீர்த்தி, செல்வாக்கு, ஆளடிமை போன்றவை உண்டாகும். கடக இராசியைப் பொறுத்தமட்டில் மூன்றாம் பாவ பலனுங்கூடக் குறைவாக இல்லாமல் நிதானமாகவே இருக்கும்; ஆனால், ஸ்திரமான பலன்களுண்டு. அவை நிலைத்து நிற்கும். சுக்கிரனுடன் சூரியனைத் தவிர்த்து மற்ற கிரகங்கள் சேர்வதால் நல்ல பலன்களே உண்டாகும்.

புதனுடன் செவ்வாய் சேர்ந்திருந்தால் மனத்துணிவும் செயலில் வீர தீரங்களும் உண்டு. புதனுடன் குருகூட பொன், பொருள், ஆபரணங்கள், அணிகலன்கள் போன்றவற்றைச் சேர்க்கும் பாக்கியம் ஏற்படும். அவை நிலையானவையாய் இருக்கும். புதனோடு 2 சுபகிரகங்களுக்குமேல் கூடினால் தைரியம், வீரியம், பட்டம், பதவி, புகழ், ஆளடிமை, ஆபரணச் சேர்க்கை, போக பாக்கியம் ஆகிய

அனைத்தும் கிட்டும். இந்தப் பலன்கள் அனைத்தும் வந்தாலும் நிதானமாகவும், நிலையானவையாகவும் இருக்கும். புதனுக்கு எந்திர மந்திர பிரீதிகளையும் திருமாலுக்கு அர்ச்சனையும் பூஜையும் செய்து வந்தால் பராக்கிரமங்களும் உடல்வலிவும் பாக்கியங்களும் நிறைந்து காணப்படும் என்று பதஞ்சலி மகரிஷி, சந்திர்நாடி வழியாகக் கூறுகிறார்.

கடக இராசிக்கு 3ஆம் இடத்ததிபதி புதன் இராசிக்கு 12ஆம் இடமான மிதுனத்தில் புதன் ஆட்சியாகி மறைவானால் பலன்கள் பெரும்பாலும் விரய, அதம பலனாக இருக்கும். இளைய சகோதரர்கள் தம்மை மதிக்கும் நிலை இராது. அவர்கள் வேறு வழியில் போய்க்கொண்டிருப்பார்கள். அவர்களைக் கட்டுப்படுத்த முடியாது. அவர்களால் வீண் விரயமும், பொருள் நட்டமும் அபகீர்த்தியும் உண்டாகும். கல்விப்பட்டங்கள் வாங்குவது கடினம். அதன் முயற்சியால் பொருள் விரயமும் பண விரயமும், கால விரயமும் உண்டாகும்.

ஆன்மிக விஷயங்களில் பின்வாழ்க்கையில் நாட்டம் இருக்கும். ஞான சித்தியும், அதனால் ஞான பீடங்களை எட்டும் நிலையும் உண்டு. இல்லறப் பலன்கள் குறைவுபடும். சுப விரயங்கள் அடிக்கடி உண்டாம். தனக்குக் கீழ் உள்ள ஆளடிமை வர்க்கங்களும் நம்பிக்கைக் குறைவுடன் இருப்பார்கள். இராசிக்கு மூன்றாம் இடத்து அதிபதி புதன் இராசிக்குப் பன்னிரண்டில் ஆட்சியானால் மறைவுப் பலன்கள் அதிகமுண்டு. வியாழன் தனுசிலிருந்து 7ஆம் பார்வையாகப் பார்த்தாலும், கும்பத்திலிருந்து 5ஆம் பார்வையாகவும் துலாத்திலிருந்து 9ஆம் பார்வையாகவும் புதனைப் பார்த்தாலும், மறைவுப் பலன்கள் குறைந்து நல்ல பலன்கள் ஏற்பட விதியுண்டு என்று பதஞ்சலி மகரிஷியின் சந்திர நாடியின் வாயிலாக அறியப்படுகிறது. புதனுக்கு எந்திர மந்திரப் பிரீதிகள் செய்வதாலும் மகா விஷ்ணுவுக்குச் துளசி அர்ச்சனை செய்வதாலும், சுதர்சன ஹோமங்கள் செய்வதாலும் நல்ல பலன்களை அடையலாம்.

கடக இராசிக்கு 3ஆம் இடத்ததிபதி புதன் இராசியிலேயே இருந்தால் நலமுண்டு. தைரிய வீரியங்களை இளமையிலேயே பெற்றிருப்பீர்கள். புதனுடன் செவ்வாய் சேர்ந்தால் இளைய சகோதரருக்கும் உங்களுக்கும் ஆகாது. அடிக்கடி சண்டைதான்

ஏற்படும். புதனுடன் குரு உச்சமாகிச் சேர்ந்தால், பொன், பொருள், ஆபரணச் சேர்க்கைகள் அதிகமாகும். அவற்றுள் சில கடனுக்காக அடைபடும். அங்குமிங்கும் போய்க்கொண்டுமிருக்கும். ஆனால், உங்கள் வசமே உண்டு. பேச்சுகள் இளமையிலிருந்தே 'வழவழ' என்று தர்க்கங்களுடனும் இருக்கும். புதனுடன் கேது சேர்ந்தால் இளமைதொட்டே ஞான விஷயங்களில் ஈடுபாடு உண்டு. புதனுடன் குரு செவ்வாய் சேர்ந்திருந்தால் சந்திர மங்கள யோகமும் குரு மங்கள யோகமும் நீசபங்க ராஜயோகமும் அதனால் பல உயர்வுகளும் உண்டு.

யோகங்கள் பதவிகளாகவோ பொன், பொருள் சேர்க்கை களாகவோ வரலாம். அவற்றைத் தக்க கிரகப் பிரீதி செய்து நிலைத் திருக்குமாறு செய்தல் வேண்டும்.

கல்விப்பட்டங்கள் வாங்கச் சூழ்நிலை ஏதுவாக இருக்கும். கடக இலக்கினம், கடக இராசி, சூரியன் ஆகியன அங்கு இருந்தால் பேச்சு சாமர்த்தியத்தினால் மற்றவர்களை வீழ்த்துவார்கள். பேச்சில் மற்றவர்கள் மீள்வது கடினம். இப்படிப்பட்ட அமிசங்களுக்குத் தனிப்பலன்கள் உண்டு. மேலும், நற்பலன்களைப் பெறப் புதனுக்கு எந்திர மந்திரப் பிரீதிகளும் பூஜைகளும் செய்து வந்தால் நல்ல பலன்களைப் பெறலாம் என்று மகரிஷி பதஞ்சலி முனிவரின் சந்திர நாடியின் வாயிலாகப் பேசப்படுகிறது.

கடக இராசிக்கு 3ஆம் இட அதிபதி புதன் இராசிக்கு 2ஆம் இடமான சிம்மத்தில் இருந்தால் மத்திமமான பலன்கள் உண்டு. இளைய சகோதரராலும் முன் இலாபமும் பின் நட்டமும் உண்டாம். புதனுடன் சூரியன் ஆட்சியாகிச் சேர்ந்தால் உயர்ந்த பதவிகளும் அதனால் தனமும், பொன், பொருள் சேர்க்கைகளும் திரவிய இலாபமும் உண்டாம். ஆளுமைப் பதவிகள் போன்றவை அரசின் வாயிலாகக் கிட்டும். புதனுடன் 2-க்கும் மேற்பட்ட பகைக் கிரகங்கள் கூடினால் மத்திம பலனுண்டாம். புதனுடன் குரு, சூரியன் ஆகியன சேர நன்மைப் பலனுண்டு.

ஆளுமைகளும் அதனால் ஆளடிமைகளும் ஏற்படும். புதனுடன் பகைக் கிரகங்கள் கூடி இருக்க - முக்கியமாய்ச் சனி கூடியிருக்க

- பதவி இடைஞ்சல்களும் அபகீர்த்திகளும் செல்வாக்கு குறைதலும் உண்டு.

புதனுடன் சூரியன், குரு ஆகியவற்றைத் தவிர வேறு கிரகங்கள் சேர்ந்தால் மத்திமமான பலன்களே உண்டு. பகைக் கிரகங்கள் சேர்வதால் இளைய சகோதரப் பகையும் கல்விக்கு இடையூறுகளும் பொருளாதார வீழ்ச்சியும் அபகீர்த்திகளும் உண்டாகும்.

புதன் கிரகத்திற்கு எந்திர மந்திர வழிபாடுகளையும், மகா விஷ்ணுவிற்குத் துளசியால் அர்ச்சனையும் பூஜைகளும் ஜெபங்களும் செய்வதால் 3ஆம் பாவ பலன்களைத் தடையின்றிப் பெறலாம் என்று சந்திர நாடியின் வாயிலாக அறியப்படுகிறது.

## சிம்மம்
## மூன்றாம் பாவம்

அசுர குரு சுக்ராச்சாரியை 3ஆம் இட அதிபதியாகப் பெற்ற சிம்ம இராசி அன்பர்களே!

பதஞ்சலி மகரிஷி அருளிய சந்திர நாடியின் வழியாக உங்களின் 3ஆம் பாவ பலன்களை அறியும்போது தைரியம், வீரியம், பட்டம், பதவி, புகழ், ஆளடிமை, பெண் போகம், ஆடை, ஆபரணம் போன்றவற்றை உங்கள் இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் 12இராசிகளுள் ஒவ்வோர் இடங்களிலும் இருந்தால் 3ஆம் பாவ பலன்களை எப்படிக் கொடுப்பார் என்று கூறுகிறார். அதன்படி உங்கள் இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் எந்த இராசியில் இருக்கிறார் என்று அறிந்து தங்களுடைய பலன்களைப் பார்த்துக்கொள்ளவும்:

**"அரியுமதி மூன்றோன் திரகேந்திரங்களில் கூடி நிற்க**
**ஆனைமேல் அம்பாரி அள்ளக் குறையாச் செல்வமென்றே**
**திரிசடையின் அருளும்பெற்றே இந்திர போகம் செய்வான்**
**தனத்தினிலே நீசர்கூட பலனும் மத்திமமாமே."**

சிம்ம இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான சுக்ராச்சாரி ஸ்திர கேந்திரங்களிலிருந்தால் நல்ல பலன்கள்ளக் கொடுப்பார். தைரிய

வீரியங்களும், பிரதாபங்களும் பராக்கிரமங்களும் உண்டு. இதனால் மூன்றாம் பாவ பலன்கள் வலுவடையும். சிவனுடைய அருளும் உபாசனையும் ஏற்படும். இந்திரனைப் போல் சுக போகங்களில் திளைத்திருக்க விதி ஏற்படும். ஆனால், கேந்திரங்களில் நீசக் கிரகங்கள் கூடினாலும் பகைக் கிரகங்கள் கூடினாலும், சுக்கிரனை சுபர் பார்க்காதிருந்தாலும் பலன்கள் சற்றுக் குறையும்.

"செப்புவேன் அம்புலிக்கு மூன்றோன் சரத்தினிலிருக்க
மத்திம பலனு மென்றே
சுசினத் திறனுடன் ஆளடிமை யோக போக
பாக்கியங்கள் முன்னிடத்தே பலனாகும்
ஒப்புவேன் அறிவாயே திரத்திலிருக்க உத்தம பலனே
காட்டு பீமனும் மதனும் போலேதான்
அங்கங்கள் வீரியமாய் ஆளடிமை சுகமும் பெற்று
முக்காலும் உத்தம பலன்பெறுவானே
தப்புமே உபயத்திலிருந்தால் வீரிய நட்டமென்று
சோதரங்கள் பயமுமேதான் தனயனுக்கு
இடந்தானே."

சிம்ம இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் துலா இராசியிலே ஆட்சியானால், இளைய சகோதரர்கள் பலத்துடன் இருப்பார்கள். அவர்களை முன்னிட்டு உங்களுக்கு உதவியும் பலமும் உண்டாம்.

சூரியன் நீசமாகிச் சுக்கிரனுடன் கூடுவதால் பதவிக்கு இடைஞ்சல் களும் அபகீர்த்திகளும் உண்டாகும். இதனால் செல்வாக்கு, புகழ் ஆகியன குறைவதில் ஐயமில்லை. சுக்கிரனுடன் சனி உச்சமாகிக் கூடினால் இளைய சகோதரர்கள் சத்ருக்களாக இருப்பார்கள். அவர்களால் உபத்திரமும் பணவிரயமும் உண்டாம். சுக்கிரனுடன் செவ்வாய் சேர்ந்திருக்கச் சுக்கிர மங்கள யோகம் ஏற்பட்டுச் சில சுபமான பலனுமுண்டு. இராசிக்குத் தர்ம கர்மாதிபதிகள் சேர்ந்திருப்பதால், தைரிய வீரியங்களால் தொழிலும், தொழிலினால் செல்வாக்கும், கீர்த்தி, புகழ், ஆளடிமைகள் போன்றவை ஏற்படும். சுக்கிரனுடன் குருகூட ஆபரணச் சேர்க்கைகளும் பொன், பொருள் சேர்க்கைகளும் உண்டாகும். கல்விப்பட்டங்களை எவ்வாறேனும் வாங்கலாம். சுக்கிரன் தனித்திருந்தாலும் மற்ற சுபகிரகங்கள்

கூடினாலும் உத்தமமான பலன்களே உண்டு. நீச கிரகங்கள் கூடுவதால், சுக்கிரனுக்கே பலமின்மையும் பலன் செய்வதில் தடையு மேற்படும். சுக்கிரனுடன் பகை கிரகங்கள் கூடி நிற்க, மத்திமமான பலன்களே உண்டாகும். சுக்கிரனுக்கு எந்திர, மந்திர பிரீதிகள் செய்தும் நாமாவளிகளை உச்சரித்தும் வந்தால் 3ஆம் பாவ பலன்களைப் பூரணமாகப் பெறலாம் என்று சந்திரநாடி வழியாக அறியப்படுகிறது.

சிம்ம இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 4ஆம் இடமான விருச்சிகத்திலிருந்தால் உத்தமமான பலன்களே உண்டு. இளைய சகோதரர்களால் மனை இலாபம், வாகன இலாபம் ஆகியன உண்டாகும் ஆனால், சேர்ந்திருக்க விதி குறைவாம். சுக்கிரனுடன் செவ்வாய் ஆட்சியாகிக் கூட சுக்கிர மங்கள யோகம் ஏற்பட்டும். சகோதர பலன்களைத் தவிர மற்ற பலன்கள் நல்லபடியாக இருக்கும். தைரிய வீரியங்களும் அதிகாரமும், அதனால் புகழும், ஆபூரணச் சேர்க்கையுமுண்டு.

சுக்கிரனுடன் கேது உச்சமாகிக் கூடப் பலன்கள் மத்திமமாகவே நடைபெறும். வாழ்வின் மத்திம வயதிற்குமேல் அபகீர்த்தி உண்டு. அற்ப விஷயங்களால் சங்கடமும் உண்டு. சுக்கில வீரியங்களும் உடல் வீரியங்களும் ஆரம்ப காலத்தில் அதிகமாகும். மத்திம வயதில் சோர்ந்தும் காணப்படும்.

சுக்கிரனுடன் கேது கூடுவதால் ஆளடிமை வர்க்கங்கள் நம்பிக்கை அற்றவர்களாகவே இருப்பார்கள். வாழ்வில் பின் வாழ்க்கையில் ஆன்மிக நாட்டங்களும் ஞான சித்திகளும் உண்டு. சுக்கிரன் இராசிக்குக் கேந்திரமான விருச்சிகமான ஸ்திர இராசியிலிருக்கச் சுபகிரகங்கள் கூடினால் நன்மையான பலன்கள் உண்டு. தனித்திருந்தால் பிற்பலன்களே ஏற்படும். பகை கிரகங்களோடும், நீச கிரகத்தோடும் சேர்ந்திருந்தால் பலன்கள் இருந்தாலும் மத்திமமாய் இருக்கும். சுக்கிரனுக்கு எந்திர மந்திர பிரீதி செய்துவந்தால் நல்ல பலன்களை அடையலாம் என்று மகரிஷி பதஞ்சலி முனிவரின் சந்திர நாடியின் வாயிலாக அறியப்படுகிறது. சிம்ம இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 5ஆம் இடமான தனுசில் இருந்தால், 3ஆம் பாவ பலன்களைப் பொறுத்த மட்டில், குழப்பங்கள் அதிகமாய் இருக்கும். இளைய

சகோதரர்கள் சிறிது நாள் சேர்ந்தும் சிறிது நாள் பிரிந்தும் இருப்பார்கள். பதவி, புகழ், எடிமை போன்ற வகைகளிலும், ஒரே சீரான பலன்களைக் கொடுத்து, கல்விப் பட்டங்கள் வாங்குவதில் தடையும் பின் நன்மையும் செய்யும். பொன், பொருள், ஆபரணச் சேர்க்கைகளும், உயர்ந்த பீடங்களும், சில நாள் இருந்து போய்விட்டு மறுபடியும் வர விதியுண்டு. அசுர குரு, தேவகுரு வீட்டிலிருந்தால் மத்திம பலன் செய்வாரென்று சுருதிகள் கூறுகின்றன. தமக்குக் கீழ் உள்ள வேலையாள்களும் நிரந்தரமாய் இருக்கமாட்டார்கள். ஆனால் புகழ் குறையாது. சுக்கிரனுடன் புதன் சேர்ந்து தன் சொந்த நட்சத்திர பாதத்திலிருந்தால் லாட்டரி, ரேஸ் பந்தயம் போன்றவற்றின் மூலம் கிடைக்கக்கூடிய இலாபங்கள் உண்டாம். சுக்கிரன் சூரியனுடன் சேர்ந்தால், தெய்விக வழிபாடும், மகான்களின் அருளும் பரோபகாரச் சிந்தனையும் பிரதாபங்களும் விசால புத்தியும் உண்டுமாம்.

சுக்கிரன், இராகு, கேது ஆகியவர்களுடன் கூடி இருந்தால் அபகீர்த்தியும், புத்திர தோஷமும் ஏற்படும். பின் சில நன்மைப் பலன்கள் உண்டாகும். சுக்கிரனுடன் குரு கூடி இருக்கப் பொன் பொருள், ஆபரணச் சேர்க்கைகள், அணிகலன்கள் ஆகியன வாழ்க்கையில் முற்பலன்களாகவும் கிட்டும்; பின்னால் இழக்கக்கூடியதாகவும் இருக்கும். சுக்கிரனுடன் செவ்வாய் கூடி இருக்கத் தைரிய வீரியங்கள் இருந்தாலும், செயலில் பின்வாங்கும் நிலைகளே உண்டு. பொதுவாக, மத்திமமான பலன்களே இருக்க சுக்கிரப் பிரீதிகளே செய்தால் மேலும் நல்ல பலன்களை அடையலாம்.

சிம்ம இராசி 3ஆம் இட அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 6ஆம் இடமான மகரத்தில் இருந்தால் இளைய சகோதரர்களினால் தொல்லை களும் கடன்களும் சேரும். அவர்களும் வாழ்வில் தொல்லைகளை அனுபவிப்பர். உங்களுக்குத் தைரிய வீரியங்கள் பலமுடனிருந்தாலும், சத்ருக்களும், வில்லங்கங்களும் உண்டு. சுக்கிரனும் அங்கிருந்து குரு நீசமானால், பொன், பொருள் சேர்க்கைகள் இருந்தாலும் அவற்றைக் கொண்டு அடைக்கவே சரியாக இருக்கும். சுக்கிரனுடன் செவ்வாயும் உச்சமாகக் கூடினால், அசட்டுத் தைரியமும், மூர்க்கத்தனமும் நிறைந்திருக்கும். இதனால் இரத்தக் காயங்களும் சத்துரு உபாதைகளும் உண்டு. இளைய சகோதரர்கள் பலனகள் குறைவாகவே இருக்கும்.

சுக்கிரனுடன் செவ்வாய் உச்சமாய்க் கூடினால், அதிகாரங்களும் ஆளடிமைகளும் இருக்கும். சுக்கிர மங்கள யோகம் இருந்தாலும் பலன்கள் முன் பின்னாய் வரும். குரு அங்கு நீசமாக, நீச பங்க ராஜயோகங்களும், அதனால் வாழ்வில் பிற்பலன்களும் உண்டு. அதைத் தக்க வைக்கும் திறன் குறைவாகவே இருக்கும். அசுர குருவான சுக்கிரனுடன் தேவ குரு சேர்ந்து நீசமாகிச் சகோதர காரகனான செவ்வாயும் கூடி இருக்கும் யோகமும் உண்டாகும். அதைப் போல் அதன் காரணமாக அபகீர்த்திகளும் உண்டு. ஆனால் கல்வித் தடைகளை ஏற்படுத்தும்; பட்டங்கள் வாங்குவதில் சிரமமே உண்டு. சுக்கிரனுடன் மற்ற கிரகங்கள் கூடினால் மத்திமமான பலன்களே உண்டு. சுக்கிரனுடன் இராகு கூட, எதிரிகளைச் சமாளிக்கும் திறனும் சில துஷ்ட வீரியங்களும் உண்டு. சுக்கிரனுக்கு தக்க பிரீதிகள் செய்துவந்தால் நற்பலன்கள் கிடைக்கும்.

சிம்ம இராசிக்கு 3ஆம் இட அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 7ஆம் இடமான கும்பத்தில் இருந்தால், உத்தமமான பலனுண்டு. இளைய சகோதர இலாபமும் இளைய சகோதர களத்திரங்களினால் சில நன்மையுமுண்டு. கல்விப்பட்டங்கள் வாங்கலாம். வரும் மனைவியால் புகழ், கீர்த்தி ஆகியன ஏற்பட விதியுண்டு. சுக்கிரனுடன் சனி ஆட்சியாகக் கூடினால் மனைவியால் சுகபோக பாக்கியங்கள் ஆபரண அணிகலன்கள் சேர்க்கையுண்டாம். முன் கோபங்களும் பின் இரக்கங்களும் உண்டாகும். தைரியமும், மந்தத் தன்மையும் இருக்கும். சுக்கிரனுடன் சனி கூடிச் சூரியன் சேர் வானாகில் பலன்கள் முரணாகவே நடக்கும். ஆளடிமைச் சேவகங்கள் குறைவாகவே உண்டு.

இராசிக்கு 7ஆம் இட கேந்திர பலன்கள் பொதுவாக நன்மையாக இருந்தால், பகை கிரகங்கள்கூட மத்திம பலனே உண்டு. ஆபரணச் சேர்க்கைகள், பொன் மணிகள், திரவியங்கள் ஆகியன வரும். மனைவியின் யோகத்தாலும் சேர்க்க விதியுண்டு. சனியுடன் சூரியன் சேர்வானாகில் சுக்கிரன் அங்கிருக்கப் பலன்கள் முரணாகவே நடக்கும். இதனால் மனைவி வகையிலும் வில்லங்கங்களும் விவகாரங்களும் வர ஏதுவாகும். சுக்கிரனுக்கு எந்திர மந்திர பிரீதிகள் செய்துவந்தால் 3ஆம் பாவ வழியில் சுப பலன்களே கிட்டுமென்று சந்திர நாடியின் வாயிலாக அறியப்படுகிறது.

சிம்ம இராசி 3ஆம் இட அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 8ஆம் இடமான மீனத்தில் உச்சமாக இருந்தால், இளைய சகோதர பலன்கள் குறைவாகவே இருக்கும். அவருக்கு ஆயுள்பலம் அதிகரிக்கும். இயற்கையிலேயே தைரிய வீரியங்கள் அதிகமாய் இருந்தாலும் அதனால் ஆபத்துகள் அதிகம். வீரிய நட்டங்களும் போக ஈடுபாடு அதிகமாகவும், அதனால் உடல் வீரியங்கள் குன்றுதலும் உண்டாம். பட்டம், பதவி, புகழ், ஆளடிமை, செல்வாக்கு, கீர்த்தி போன்றவை 40 வயதிற்கு மேலேயே நல்லபடியாக அமையும். ஆளடிமை வர்க்கங்கள் நம்பிக்கையாக இரா.

சுக்கிரனுடன் புதன் நீசமாகிக் கூடினால் நீச பங்க ராஜயோகமும், அதனால் நன்மைகளும் தீமைகளும் கலந்தே இருக்கும். இந்த யோகத்தால் குறுகிய காலப் பெரும்பலன்களும், அவற்றைத் தக்க வைக்கும் திறன் குறைவாகவே இருக்கும். சுக்கிரன் நீசனோடு கூடி ஒரு யோகத்தைக் கொடுப்பானாகில், அதனால் பின் கலகங்கள் ஏற்படும்.

"ஆமப்பா சுக்ரனும் கலகக்காரன்
அழகான படகளித்து துடுப்பளியான்"

என்ற நிலைகளோடு யோகங்களைக் கொடுத்தாலும் அவற்றை அனுபவிக்க அமிசங்கள் குறைவாகவே கொடுப்பார். அப்படிப் பலன் பெற்றாலும் விரக்தியாகத் தோன்றும். சுக்கிரனுக்கு எந்திர மந்திர பிரீதிகளும், இந்திரனுக்குப் பூஜைகளும் லக்ஷ்மிக்கு பூஜையும் செய்தால் அந்தப் பலன்களைத் தக்க வைத்து அனுபவிக்கலாம். வந்தால் மொத்தமாக வரும்; போனால் மொத்தமாகப் போகும். மேற்கண்ட பிரீதிகளைச் செய்து 3ஆம் பாவ பலன்களைத் தக்க வைக்குமாறு சந்திர நாடியின் வாயிலாக அறியப்படுகிறது.

சிம்ம இராசிக்கு 3ஆம் இட அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 9ஆம் இடமான மேஷத்திலிருந்தால், இளைய சகோதரப் பலன்களைத் தவிர்த்து மற்ற பலன்கள் சுமுகமாக இருக்கும். இளைய சகோதரர் களின் பேச்சு, செயல்கள் ஆகியன முரண்பாடாக இருக்கும். மற்றபடி பதவி, ஆளுமை போன்றவற்றில் நல்ல பலன்களுண்டு. இரசாயன சம்பந்தமான பட்டங்கள் வாங்கலாம். கல்விப் பட்டங்கள் வாங்கு வதற்கு முன்தடையும் பின் நன்மையும் உண்டாம். சுக்கிரனுடன் செவ்வாய் ஆட்சியாகிக் கூடினால் மூர்க்கமான செயல்களும்

வீரதிரங்களும் அதிகமுண்டாகும். அவற்றினால் பெரும்பாலும் பாதகப் பலன்களே உண்டு.

இப்படிப்பட்ட சுக்கிர மங்கள யோகத்தினால் அதிகாரங்கள் கொடிகட்டிப் பறக்கும். தமக்குக் கீழ் ஆளடிமை வகைகளும் உண்டு. அவர்களும் பயந்தே நடப்பார்கள். தந்தை வழியிலே தொழிலும் அவர் வழியிலே புகழடையும் பாக்கியமும் உண்டு. ஆடை, ஆபரணச் சேர்க்கைகளும் குறைவாக உண்டு.

சுக்கிரனுடன் சனி நீசமாகிக் கூடினால் உங்கள் தைரிய வீரியங் களால் புகழுக்குப் பங்கமும், அதனால் தகப்பன் வழியில் கவலை களும் உண்டாகும். சுக்கிரனுடன் மற்ற கிரகங்கள் கூட மத்திமமான பலன்களே உண்டு. சுக்கிரனுக்குத் தக்க பிரீதிகள் செய்வதாலும் மகா லக்ஷ்மிக்குத் தீப தூபங்கள் பூஜைகள் நடத்து வதாலும் நல்ல பலன்களைப் பெறலாம் என்று ஸ்ரீ பதஞ்சலி மகரிஷி அருளிய சந்திர நாடியில் கூறப்படுகிறது.

சிம்ம இராசிக்கு 3ஆம் இடஅதிபதி சுக்கிரன் இராசிக்கு 10ஆம் இடத்தில் ரிஷபத்தில் ஆட்சியாகி இருந்தால், உத்தமமான பலன்கள் உண்டு. இளைய சகோதரர்களால் நன்மையாகும். தொழிலில் உதவியும் இருக்கும். நீங்கள் செய்யும் தொழிலினாலேயே ஆபரணச் சேர்க்கைகள், பொன், பொருள், செல்வாக்கு, கீர்த்தி, புகழ் போன்றவை அமையும். இவற்றினால் தைரிய வீரியங்களும் உண்டாம். இராசிக்கு 10ஆம் இடமான ரிஷபத்தில் சுக்கிரன் ஆட்சியாகி 2க்கும் மேற்பட்ட சுபகிரகங்கள் கூடச் சகல வித்தை களும் கற்றுப் பெரும் செல்வத்தையும் புகழையும் அடைவார்கள். இப்படிப் பெரும் அமைப்புகளால் உங்கள் தொழிலில் உங்களுக்குக் கீழ் பல ஆளடிமை வர்க்கம் இருக்க விதி உண்டு.

பெரும்பாலும் மூன்றாமிடத்து அதிபதியான சுக்கிரனுடன் தேவ குரு சேர்ந்தால் பலன்கள் சில மத்திமமாக உண்டு. மற்றபடி நல்ல படியான பலன்களே உண்டு. கல்விப்பட்டங்களால் தொழிலும், தொழிலி னால் கீர்த்தி, புகழ், பகட்டு போன்றவையும் ஏற்படும். வல்லமை களுக்குக் குறைவில்லை. மற்றவரைக் கவரும் வகையில் பேச்சுச் சாதுரியம் உண்டாகும்.

தைரியங்களிருந்தாலும் எதிராளியின் மனப்பக்குவத்திற்குத் தக்கவாறு வெளிப்படும். பொதுவாக, ரிஷபச் சுக்கிரன் 3ஆம் இடத்தைப் பொறுத்தவரை நல்ல பலன்களைச் செய்யும். மேலும் பலன்களைப் பெறுவதற்கு சுக்கிரப் பிரீதி செய்யவும்.

சிம்ம இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 11ஆம் இடமான மிதுனத்திலிருந்தால், இளைய சகோதர இலாபங்களும் அவர்களால் பெருமையும் உண்டாகும். தைரிய வீரியங்களிலிருந்தால் அவை நிதானமாகவே இருக்கும். சுக்கிர னோடு புதன் கூடி ஆட்சியாக இருந்தால், கல்விப் பட்டங்களில் தேர்ச்சியும் கணிதக்கல்வியால் இலாபமுண்டாம். ஆளடிமை வர்க்கங்கள் குறைந்தே காணப்படும். பேச்சுகளில் காரியம் சாதிக்கும் உணர்வுகளும் வல்லமைகளும் இருக்கும்.

சுக்கிரனோடு மற்ற மித்ரு கிரகங்கள் சேர்வதால் நல்ல இலாபப் பலன்களே உண்டு. ஆரம்பக் கட்டத்தில் பொன், பொருள் சேர்க்கை ஏற்படும். பின்பு போய் மறுபடியும் வரும் நிலையும் உண்டு. சுக்கிரனோடு இராகு கேதுகளுள் ஏதாவது ஒன்று கூடினால் முன் இலாபங்களும் பின் நட்டங்களும் உண்டாம். நல்ல பலன்களும், தீய பலன்களும் கலந்து நடக்கும். புகழ் ஒரு வட்டத்துக்குள்ளே இருக்கும். பொதுவாக, மிதுனத்தில் எந்தக் கிரகமும் சுக்கிரனோடு கூடினாலும் அளவான பலன்களே உண்டாம். அதமமான பலன்கள் குறைவு.

பொதுவாகத் தைரியம் இருந்தாலும் அதைச் செயலுக்குக் கொண்டுவருவதில் நிதானம் அதிகமாய் இருக்கும். முரட்டுத் தைரியம் குறைவாக இருக்கும். இதனால் மென்மேலும் அதிகப் பலன்களைக் காட்டும் விதிகளும் வலிமைகளும் ஏற்படும். சுக்கிரனுக்குத் தக்க பிரீதிகளும் எந்திர மந்திர பூஜைகளும் செய்து வந்தால் நன்மையான பலன்களைத் தரலாம் என்று சந்திரநாடி கூறுகிறது.

சிம்ம இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 12ஆம் இடமான கடக இராசியில் இருந்தால் பலன்கள் மத்திமமாகவே உண்டு. இளைய சகோதரர்களின் பலன் குறைவாகவே இருக்கும். அவர்களினால் தன விரயமும் கால விரயமும், புகழ் மங்குதலும் உண்டாகும். சுக்கிரனுடன் குரு உச்சமாய்க் கூடினால் பொன், பொருள் சேர்க்கைகளும் ஆசார அனுஷ்டானங்களும் தெய்வ பக்திகளும் இருந்து விலகும்.

சுக்கிரனுடன் செவ்வாய் நீசமாய்க் கூடினால் துர்பலன்களே உண்டு. முரட்டுத் தைரியத்தினால் வில்லங்கமும் ஏற்பட்டு அதனால் விரயமும் உண்டாகும். இளைய சகோதரர்களினால் விரயங்களே அதிகமாக உண்டாகும். சுக்கிரனுடன் செவ்வாய், குரு முதலானோர் சேர்ந்தால் நீச பங்க இராஜ யோகமும், அதனால் பலன்களும், அதனை முன்னிட்டு அபகீர்த்திகளும் விரயங்களும் உண்டாகும். பெண்போக பாக்கியங்களும் உண்டாகும்.

தைரிய வீரிய ஸ்தானாதிபதி சுக்கிரன் இராசிக்குப் பன்னிரண்டில் மறைவினால் அவயோகம் ஏற்படும். சுக்கிரனுடன் கேதுவும் கூடி இருந்தால் முன் வாழ்க்கையில் பெண்போகம், பகட்டு, ஆளடிமை போன்ற சுகங்கள் ஏற்படும். பின் வாழ்க்கையில் ஆன்ம நாட்டங்களும், வழிபாடுகளும், தீர்த்த யாத்திரைகளும் நடைபெறும். கல்விப்பட்டங்கள் வாங்க வேண்டிய நிர்ப்பந்தமும் முயற்சியுமிருந் தாலும் அளவு கடந்த விரயத்தின் மேலேயே பயனளிக்கும். சுக்கிரனுக்குக் கடுமையான எந்திரமந்திர பிரீதிகளும் பூஜைகளும் செய்துவந்தால் நல்ல பலன்களைப் பெறலாம்.

சிம்ம இராசிக்கு 3ஆம் இட அதிபதியான சுக்கிரன் சிம்ம இராசியிலே இருந்தால் பிறப்பிலே தைரிய வீரியங்கள் இருக்கும். அந்தத் தைரியங்கள் எதிரிகளுக்குச் சிம்ம சொப்பனமாய் இருக்கும். கல்விப்பட்டங்களும் வாங்க விதியுண்டு. தனக்குக்கீழ் பணியாள் கள் வேலை செய்வார்கள். சுக்கிரனுடன் குரு சேர்ந்தால் பொன், பொருள், ஆபரணச் சேர்க்கைகள், அணிகலன்கள் உண்டு. இளைய சகோதரர்கள் தமக்குப் பயந்தும் ஆனால் முரண்பட்டும் இருப்பார்கள். சுக்கிரனுடன் சூரியனும் ஆட்சியாக இருந்தால் உயர்ந்த பதவிகளும் செல்வாக்கும் அரசுத் தொடர்புகளும் உண்டாகும்.

சுக்கிரனுடன் சூரியன், குருவைத் தவிர மற்ற கிரகங்கள் சேர்ந்தால் மத்திம பலனே உண்டு. புகழ், செல்வாக்கு, கீர்த்தி ஆகியன இருந்தாலும் அவை ஒரு குறுகிய வட்டத்திற்குள்ளே சிறப்பாக இருக்கும். இளமையிலே உஷ்ணமாய் இருக்கும் உடலைப் பெற்றவர். அதனால் வெள்ளை, வெட்டை நோய்கள் ஏற்படவும்

அதனால் சுக்கிலக் கழிவும் தன்னையும் அறியாமல் வீரியக் கழிவும் உண்டாகும். அதனால் உடல் வீரியங்கள் பாதிக்கப்படும். வல்லமைகளுக்குக் குறைவில்லை.

அரசுப் பதவிகள் கிடைத்தால் அவை ஸ்திரமாக இருக்க விதியுண்டு. சுக்கிரனுடன் மற்ற பகை கிரகங்கள் கூடினால் மத்திமமான பலன்களே ஏற்படும். சுக்கிரனும் செவ்வாயும கூடிப் பகையாக இளைய சகோதரர்களுக்கு நன்மையில்லை. சுக்கிரனுக்குத் தக்க எந்திர மந்திர பிரீதிகள் செய்தால் நல்ல யோக பலன்களை அடையலாம் என்று சந்திரநாடி கூறுகிறது.

சிம்ம இராசிக்கு 3ஆம் இட அதிபதி சுக்கிரன் இராசிக்கு 2ஆம் இடமான கன்னி இராசியில் சுக்கிரன் நீசமாய் இருப்பது அவ்வளவு நல்லதல்ல. உத்தமயான பலன்கள் கிடைக்கா.

இளைய சகோதரர்களால் தன உதவியும் கிடைக்காது. அவர்களும் பொருளாதாரத்தில் மிகவும் கஷ்டப்படுவார்கள். சுக்கில வீரியங்களும், உடல் வீரியங்களும் தடைப்படும். அதிகாரங்கள், பதவிகள் ஆகியன இருந்தாலும் பேச்சினால் அவர்களைக் கவர முடியாது. அவப்பேச்சினால் தொந்தரவுகள் வரும்.

சுக்கிரனுடன் புதன் சேர்ந்தால் ஓரளவு நல்ல பலன்களும், மூன்றாம் பாவத்தைப் பொறுத்தமட்டில் திடீர் யோகங்களும் கிடைக்கும். கல்விப்பட்டங்கள் வாங்குவதில் தடை ஏற்படும். சுக்கிரனும் புதனும் கன்னியில் சேர்ந்திருப்பதால் உங்களுக்கு நீசபங்க ராஜயோகத்தைச் சுக்கிர திசை புதன் புத்தியிலும், புதன் திசை சுக்கிர புத்தியிலும் அதிகமான இலாபங்களையும் யோகங்களையும் கொடுப்பார்கள்.

சுக்கிரனுடன் கேது சேர்ந்தால் மர்ம ஸ்தானங்களில் நோய்கள் ஏற்படும். இந்திரியக் கழிவும் ஏற்படும். சுக்கிர சாந்திகள், யந்திர மந்திர பிரீதிகள் கடுமையாகச் செய்தால் துர்பலன்களிலிருந்து தப்பலாம். இந்த யந்திர, மந்திர பிரீதிகளைச் செய்து, வாழ்வில் மூன்றாம் பாவ பலன்களைப் பூரணமாகப் பெறலாம்.

# கன்னி
## மூன்றாம் பாவம்

வீரதீர பராக்கிரம, தைரிய சகோதர காரகனாகிய செவ்வாயையே இராசிக்கு மூன்றாமிடத்து அதிபதியாக அடைந்த கன்னி இராசி அன்பர்களே!

மூன்றாம் பாவ பலன்களாக இளைய சகோதர நன்மை, தீமைகள், பொன்னாபரணங்களை அணிதல், பாக்கியங்கள், பொன், பொருள் சேர்க்கும் யோகம், பட்ட பதவி நிலைகளைத் தக்க வைக்கும் நிலை, புகழ், யோகம். வல்லமை, வீரியம் போன்ற அமிசங்கள் இருந்தாலும், பதஞ்சலி மகிரிஷியின் சந்திர நாடிப்படி மூன்றாம் பாவ பொதுப் பலன்களை உங்களுக்கு மேலோட்டமாகக் கூறியிருக்கிறோம்.

உங்கள் இராசிக்கு மூன்றாமிடத்து அதிபதியான செவ்வாய் 12 இராசிகளில் இருந்த இடத்தினை வைத்துப் பலன் கூறப்பட்டிருக்கிறது. அன்பர்கள் எந்த விதச் சிரமும்மின்றி எந்த இராசியில் செவ்வாய் உள்ளார், அதற்கு 3ஆம் பலன் என்னவென்று அறிந்துகொள்ளவும்.

துர்பலன்கள் இருப்பின் செவ்வாய்ச் சாந்திகளும், யந்திர மந்திர பிரீதிகளும் செய்து மூன்றாம் பாவ பலன்களை அடைய வேண்டுகிறோம். கன்னி இராசிக்கு செவ்வாய், 3, 8-க்குடைய ஸ்தானாதிபதியாக இருந்தாலும் 3ஆம் பாவ பலன்களை மட்டுமே இங்குக் கூறியுள்ளோம். அதன்படி சந்திர நாடியில் கூறப்பட்டுள்ள பலன்கள் பின்வருமாறு:

"குசனவனும் மூன்றோனாயின் உச்சத்தில் வலியனாவான்
குருதியவன் பெண்ணிடத் துடலில்சேர அதிபலமென்பேன்!
முசங்கினா புங்கனுட தலகமற்றே சேர்ந்தாலு மிருந்தாலுந்தான்
மங்கான் மத்திமமாய் பலனுஞ்செய்வா னென்றுவிளம்பினேனே!

அதாவது, இராசிக்கு 3-க்குடையவராய்ச் செவ்வாய் வந்து விட்டால் உச்ச ஸ்தானத்தில் வலிமையான பலன்களைச் செய்வார். புதனின் இராசிகளை விட்டு மற்ற பெண் இராசிகளில் குருவுடனும், சந்திரன்

சூரியனோடு கூடினாலும் நன்மையான பலன்களைத் தருவார். மிதுனம், கன்னியில் மத்திமமான பலன்களே உண்டு. பலன்கள் குறையும் போது பிரீதிகள் செய்தால் செவ்வாய் செய்த நற்பலன்கள் உண்டென்று பதஞ்சலி மகரிஷி சந்திர நாடியின் வழியாகக் கூறுகின்றார்.

கன்னி இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு 3ஆம் இடமான விருச்சிகத்தில் ஆட்சியாக இருந்தால் இளமையிலே தைரியம் இருக்கும். மூர்க்கத்தனமான சுபாவங்கள் இருக்கும். எதிரியுடன் மோதியதில் இரத்தக் காயங்களிருக்கும். இளைய சகோதரர்கள் தம்முடனேயே இருந்தாலும் நன்மையில்லை. அவர்களினால தொல்லைகள் அதிகம் உண்டு.

எதிரிகள் பயப்படும் அளவுக்கு உங்களுக்குத் தைரிய வீரியங்கள் மிதமிஞ்சி இருக்கும். உங்களுக்குக் கீழ் உள்ள ஆளடிமை வகைகள் பயப்படும் அளவிற்கும் ஆளுமைகளைப் பெற்றிருக்க விதியுண்டாம்.

விருச்சிக இராசியில் செவ்வாய் ஆட்சியாகிச் சுக்கிரன் சேர்ந்தால், சுக்கிர மங்கள யோகமும், அதனால் பெருவாரியான பலன்களும் உண்டு. காரிய ஜெயங்களும் எதிரியை வெல்லும் பராக்கிரமங்களும் மற்றும் சுப பலன்களும் உண்டாம். உடல் வீரியங்கள் குறையாதிருத் தல் உங்களுக்கு நன்மை தரும். இரத்தமானது வலுப்பெற்றிருக்கும் செவ்வாயுடன் குரு சேர்ந்திருந்தால் ஆபரணச் சேர்க்கைகளும் பொன், பொருள் சேர்க்கைகளும் தக்க வைக்கும் ஆர்வமும் ஏற்படும். செவ்வாய்க்குப் பகைக் கிரகமான புதன் சேர்ந்தால் உங்களுக்கும் உங்கள் சகோதரர்களுக்கும் ஆகாது. இராசிக்கு 3ஆம் இடஅதிபதி செவ்வாய் மூன்றிலேயே ஆட்சியாகச் சுபக் கிரகங்களுடன் வலுத்திருந்தால், ஆயுதமேந்தக்கூடிய பணிகளிலும் சண்டைகள் மற்றும் மூர்க்கத்தனமான பணிகளிலும் நல்ல பதவியும் புகழும் செல்வாக்கும் ஏற்படும். செவ்வாயோடு கேது உச்சமாகிக் கூடினால் அவர் திசை புத்திகளிலும் உயர்வான பலன்களுண்டு. மேலும், அதிகமான பலன்களைப் பெறச் செவ்வாய்க்கு எந்திர மந்திர

பிரீதிகளும் சுப்பிரமணிய தேவருக்கு அர்ச்சனைகளும், பூஜையும் செய்து வந்தால் உயர்வான பலன்கள் உண்டாகும்.

கன்னி இராசிக்கு 3ஆம் இட அதிபதியான செவ்வாய் இராசிக்கு 4ஆம் இடமான தனுசு இராசியிலிருந்தால் இளைய சகோதர இலாபங்கள் உண்டு. மனை மற்றும் வாகனங்கள், உழவு வகைகள் ஆகியவற்றைச் செய்ய விதி ஏற்படும். தைரிய வீரியங்கள் குறையாமல் இருந்தாலும் அவற்றில் நிதானம் இருக்கும்.

செவ்வாயோடு குரு சேர்ந்தால் பொன், பொருள், ஆபரணச் சேர்க்கைகள் உண்டாகும். மனை மற்றும் உழவு இலாபங்களினால் பெயரும் புகழும் ஏற்படும் சுய தொழிலின் ஆளுமையும் தன் கீழ் பணியாள்கள் அதிகம் பேர் இருக்கின்ற நிலையுமுண்டு.

செவ்வாய் புதனுடன் சேர்ந்திருந்தால் புகழையும் கொடுத்து அதை அழிக்கும் வகையில் துர்ப்பலனையும் ஏற்படுத்துவார். செவ்வாய் தனுசு இராசியில் தனித்து இருந்தால் மத்திமமான பலன்களே செய்வார். சூரியன், குரு ஆகியன கூடினால் யோக பலன்களும் புகழும் உண்டாகும். செவ்வாயுடன் குரு கூடினால் உயர்ந்த பட்டங்களும், அவர்களுடன் சூரியன் கூட உயர்ந்த பதவிகளும் உண்டாம்.

மேலும் பலன்களைப் பெறச் செவ்வாய்க்கு எந்திர, மந்திர பிரீதிகளைக் கடுமையாகச் செய்துவந்தால் நல்ல பலன்களை அடையலாம். தனுசு இராசியில் செவ்வாயிருக்கப் பொதுவாக நல்ல பலன்களே அமையும் என்று சந்திர நாடியின் வழியாக அறியப்படுகிறது.

கன்னி இராசிக்கு 3ஆம் இடஅதிபதியான செவ்வாய் இராசிக்கு 5ஆம் இடமான மகரத்தில் இருந்தால் உச்ச பலன்கள் உண்டு. அதிக வலிவுள்ள பலன்கள் உண்டாகும். பூர்வ புண்ணியத்தினால் புகழும் கீர்த்தியும் செல்வாக்கும் உண்டாகும். இதனால் பிறப்பிலேயே வீரதீர பராக்கிரமங்களும் தைரியங்களும் நிறைந்து காணப்படும். இளைய சகோதரர்கள் கூடியே இருந்தாலும், தேவையான சமயம் உதவி கிட்டாது. குல தெய்வப் பலன்களால் வல்லமை கிட்டும். குமரக் கடவுள் உபாசனையும் உண்டாகும். செவ்வாயுடன் சனி

ஆட்சியாய்க்கூட குலதெய்வ அருள் பூரணமாகவும் அதனாலேயே தைரியம் நிலைத்தும் நிற்கும்.

செவ்வாயுடன் குரு நீசமாகிக் கூடினால் ஆசார அனுஷ்டானங் களில் நம்பிக்கையின்மையும், பின் யோகங்களும் உண்டாகும். நீசபங்க ராஜயோகமானது 40 வயதிற்குமேல் பொதுவாகவும், செவ் வாய், குரு திசை புத்திகளில் யோக பலன்களையும் கொடுப்பார்கள்.

கல்விப்பட்டங்கள் வாங்குவதற்குத் தடையுண்டு. செவ்வாயோடு மகரத்தில் குரு சேர்ந்தால் பட்டங்கள் வாங்குவதற்குக் கடினத் தடையுண்டு.

செவ்வாயோடு குரு நீசயாகிக் கூடுவதால் பதவிகள், பீட ஆளுமைகள் போன்றவை இருந்தாலும் அவற்றிற்குப் பங்கம் ஏற்படும் நிலையுண்டு. பொன், பொருள், ஆபரணச் சேர்க்கை இருந்தாலும், அவற்றிற்கும் பங்கங்கள் உண்டு. மகரத்தில் செவ்வாயுடன் ஆட்சிக் கிரகங்கள் கூடினால் நன்மையும், பகை கிரகங்கள் கூடினால் மத்திமமான பலன்களும், நீசக் கிரகங்கள் கூடினால் அதமமான பலன்களும், சில யோகங்களும் உண்டு. மேலும் பலனை அடைய, எந்திர மந்திர பூஜை செய்து வழிபட்டு வந்தால் நன்மையுண்டு.

கன்னி இராசிக்கு 3ஆம் இட அதிபதியான செவ்வாய் இராசிக்கு 6ஆம் இடமான கும்ப இராசியில் பகை பெற்று இருந்தால் 3ஆம் பாவத்தைப் பொறுத்தமட்டில் மத்திமமான பலன்களே ஏற்படும். கல்விப் பட்டங்கள் வாங்குவதற்குத் தடையுண்டு. தைரியங்களும் வீரியங் களுமிருந்தாலும், எதிரியிடத்தில் மன பயமும் சஞ்சலமும் உண்டு. சில சண்டைகளால் உடல் காயங்களும், இரத்தம் கொட்டுதலும் உண்டாகும்.

செவ்வாயோடு சனி கூடினால், வாழ்க்கையில் பதவி, புகழ், ஆபரணச் சேர்க்கைகள், பொன், பொருள், ஆளடிமை ஆகிய வற்றோடு வாழ்வார்கள். பின்வாழ்க்கையில் அவையின்றி ஏமாற்றம் காணப்படும்.

செவ்வாயோடு சூரியன், சனி கூடியிருந்தால் மனைவியிடத்தில் சண்டை சச்சரவுகளும் மன அமைதியில்லா நிலைமையும்

ருவாகும். நீசத்தனமான பெண்ணை நேசித்து, அதன்மூலம் _ன்களும், வம்பு வழக்கு போன்றவையும் வந்து விலகும்.

செவ்வாயோடு கேது, புதன் போன்றோர் கூடினால் பலன்கள் ஆம் பாவத்தைப் பொறுத்தமட்டில் துர்பலன்களாகவே நடக்கும். தற்குச் செவ்வாய் காரகச் சாந்திகளும் மந்திர, எந்திர பிரீதி களும் சய்தால் நல்ல பலன்கள் கிடைக்கும். சுப்பிரமணியரை வழிபட்டு ரவும்.

கன்னி இராசிக்கு 3ஆம் இட அதிபதியான செவ்வாய் இராசிக்கு ஆம் இடமான மீனத்திலிருந்தால் நல்ல பலன்கள் நடக்கும். இளைய கோதர உதவிகளும், கூடி வாழும் நிலைகளும் உண்டு. தைரிய ர்ரியங்கள் அளவாகவே எதிலுட நிதானமாகவே இருக்கும். னத்தில் செவ்வாய் பகையாக இருந்தாலும், குரு கூடி இருந்தாலும் ல்விப்பட்டங்களும் நல்ல பதவிகளும் கிடைக்கும். பொன், பொருள், பூபரணச் சேர்க்கைகளும், மனைவியினால் தைரியங்களும், போக ாக்கியமும் உண்டாகும்.

செவ்வாயுடன் புதன் கூடினாலும் மத்திமமான பலன்களைக் கொடுக்குமே தவிர அதம பலன்கள் உண்டாகா.

செவ்வாய் மீனத்திலிருக்கப் புதன் நீசமாகிச் சுக்கிரன் உச்சமானால் 3ஆம் பாவத்தில் திடீர் யோகங்களும் பதவிகளும் வந்து விலகும். சுக்கிரன் உச்சம் பெற்று இருப்பதால் சுக்கிரதிசை புதன் புத்தியிலும், புதன் திசை சுக்கிர புத்தியிலும் வாகன யோகமும், பட்டுமெத்தையில் துயிலும் பாக்கியமும் மற்ற சுகபோக பாக்கியங்களும் கிட்டும்.

3ஆம் பாவத்தில் திடீர் யோகங்களும் பதவிகளும் வந்து விலகினாலும், ஏதாவது ஒரு பதவி வகிக்க வேண்டிய நிலையும் அதனால் சிறு சிறு பிரச்சினைகளும் இருக்கும். ஆளடிமைகள் நிலையாக இருக்க மாட்டார்கள். பொதுவாக உத்தம பலன்களே நடக்குமென்று சந்திரநாடி கூறுகிறது.

கன்னி இராசிக்கு 3ஆம் இட அதிபதியான செவ்வாய் இராசிக்கு 8ஆம் இடமான மேஷத்தில் ஆட்சியாயிருந்தால் அசட்டுத் தைரியம் உண்டு. ஏதாவது விபரீதம் செய்துவிட்டு யோசிக்கும்

நிலையும், அதனால் பாதகமான விபரீதங்களும் உண்டு. இளைய சகோதர நன்மைகள் அவ்வளவாக இல்லை. சகோதரர்களின் வாழ்க்கையில் முன்னேற்றம் காண முடியாது. முரட்டுத் தைரியங்களினால் முன்யோசிக்கும் திறன் குறையும். அதனால் இரத்தப் பலி, காயங்கள் ஆகியன ஏற்படலாம்.

செவ்வாயோடு சனி கூடி சனி நீசமானதால் வாதம் போன்ற நோய்களினால் கால்கள் மரத்து நடக்க முடியாமல் அவதிப்பட நேரிடும். சில கண்டங்கள் வந்து விலகும். சனி, செவ்வாய் சேர்க்கையினால் முதலில் வீரியங்களும், பின்பு மந்த குணமும் உண்டு. அங்குச் சூரியன் உச்சமாயிருந்தால் பதவிகள் நிலை யில்லாமல் மாறிக்கொண்டே இருக்கும். பொன், பொருள் சேர்க்கை கள் இருந்தாலும் அனுபவிக்க முடியாது. பெண் சேர்க்கைகளும் அப்படியே.

கல்விப்பட்டங்கள் வாங்குவதில் தடை உண்டு. யோகமான பதவி உயர்வுகள், ஆளுமைகள் கிட்டும்.

அதம பலன்கள் வராமலிருக்கச் செவ்வாய்க்குக் காரகச் சாந்தி கள் செய்தாலும் மந்திர, யந்திர பிரீதிகள் செய்தாலும் நல்ல பலன்கள் கிட்டும்.

கன்னி இராசிக்கு 3ஆம் இட அதிபதியான செவ்வாய் இராசிக்கு 9ஆம் இடம் கோணமான ரிஷபத்தில் இருந்தால் நல்ல பலன்கள் உண்டு. பெண் வீடான ரிஷபத்திலிருந்தால் பெரும்பாலும் சுப பலன் களையே செவ்வாய் செய்வார். இளைய சகோதர இலாபமுண்டு. பின் சகோதரிகள் இருந்தால் சில கால கட்டங்களில் உதவுவார்கள். தைரியங்கள் ஓர் அளவாகவே இருக்கும்.

நிதானமான போக்குகளையே விரும்புவீர்கள். ஆனால், பெண் போகத்தில் அதிகம் விருப்பமுண்டு. பதவிகள் பொதுவாக நிலையாகவே இருக்கும். சில உயர்வுகளும், உயர் பதவிகளும் கிட்டும். செவ்வாயோடு சுக்கிரன் சேர்ந்தால் சில யோகபலன்களும் மூன்றாம் பாவ வழியில் கிட்டும். ஆனால், செவ்வாய் புதனுடன் சேர்ந்திருந்தால், பலன்களை நடக்கவிடாமல் தடை செய்வார். கல்விப்பட்டங்கள் வாங்குவதில் தடை இருந்தாலும் கடின முயற்சியால் வாங்க விதியுண்டு.

உங்களுக்குக் கீழ் பெண் வேலையாள்களும் ஆளடிமைகளும் இருக்கும் நிலைகள் வரும். பொதுவாக, ரிஷபத்தில் செவ்வாய் நல்ல பலன்களைச் செய்வார். இராசிக்குக் கோணங்களில் செவ்வாய் இருந்தால் நல்ல பலன்களைச் செய்வார் என்று ஸ்ரீ பதஞ்சலி மகரிஷி சந்திர நாடியின் வாயிலாகக் கூறுகிறார்.

கன்னி இராசிக்கு 3ஆம் இட அதிபதியான செவ்வாய் இராசிக்கு 10ஆம் இடமான மிதுனத்தில் கேந்திரத்தில் நட்புப் பலம் பெற்றேயிருந்தாலும், புதன் வீடு பெண் வீடாகவே இருந்தாலும், சத்துரு வீட்டில் பலன்களைக் கூட்டிக் குறைத்தே செய்வார். அதன்படி இளைய சகோதரர்கள் அவ்வப்போது சேர்தலும், பிரிதலுமாக இருப்பார்கள். சேரும்போது நல்ல பலன்கள் கிட்டும்; பிரியும் போது நட்டமில்லை. தைரியங்கள் காரியமாகவே இருக்கும். மற்ற சமயத்தில் சாதுவாகவே இருக்கத் தோன்றும். போகங்களும் அளவுடனேயே இருக்கும்.

செவ்வாயுடன் புதன் ஆட்சியாகிக் கூடச் சேர்ந்தால் கல்வி பட்டங்கள் வாங்குவதில் முன்தடைகளும், வாங்கிப் பின் யோகங் களும் உண்டு. முதலில் அடுத்தவரிடம் கைகட்டி வேலை செய்யவும், பின் சுயமாகத் தனக்குக் கீழ் ஆளடிமை வர்க்கங்களுடனும் இருக்க வேண்டியது வரும்.

பொன், பொருள் சேர்க்கை குறைவாகவே இருக்கும். தொழிலினால் புகழும், பதவியும், ஆபரணச் சேர்க்கையும் வர விதியுண்டு. செவ்வாயுடன் கேது கூடினால் ஆன்மிக ஞான நாட்டமும், வித்தைகள் கற்க நாட்டமும், பதவியும் உண்டாம். பொதுவாகப் பலன்கள் மாறி, மாறி நடக்கும். செவ்வாய்க்கு மந்திர, யந்திர, பிரீதிகள் பூஜைகள் செய்தால் நல்ல பலன்கள் கிட்டும்.

கன்னி இராசிக்கு 3ஆம் இட அதிபதியான செவ்வாய் இராசிக்கு 11ஆம் இடமான கடகத்திலிருந்தால், நீசம் பெற்ற காரணத்தினால், அவ்வளவு உத்தமமான பலன்கள் 3ஆம் பாவ வழியில் கிடைக்காது. இளைய சகோதர இலாபங்கள் இல்லை. முன்பிருந்த தைரிய வீரியம் பின்பு இராது. தைரியப்பட்டுச் செயல்கள் செய்து பதுங்கிக் கொள்ள நேரும்.

செவ்வாய் கடக இராசியில் நீசமாகி குரு அங்கு உச்சமானால், ஆடை, ஆபரணங்கள், பொன் மணிகள் முதலியன முதலில் சேரும்; பின்பு அழியும். காதில் நோய் ஏற்படும். ஆனால், திமிர் யோகங்கள் ஏற்பட்டு மறையும் நிலையுண்டு. செவ்வாயோடு கேது கூடினால் ஞான மார்க்கங்களிலேயே மனம் இலயப்படும். சில விரக்திகளும் உண்டு.

பதவிகள் வந்து வந்து போகும்; நிலையாக இருக்கும் என்று கூற முடியாது. எந்தச் சுபகிரகங்களும் செவ்வாயோடு சேர்ந்தாலும் பார்த்தாலும் மத்திமமான பலன்களையே ஏற்படுத்தும்.

இத்தகைய அமிசங்களிருந்தால் செவ்வாய்க்குப் பிரீதிகள் செய்தும், எந்திர, மந்திர பூஜைகள் செய்தும் வந்தால், செவ்வாய் பிரீதி அடைந்து நன்மையான பலன்களைச் செய்வார் என்று சந்திர நாடியின் வாயிலாக அறியப்படுகிறது.

கன்னி இராசிக்கு 3ஆம் இட அதிபதியான செவ்வாய் இராசிக்கு 12ஆம் இடமான சிம்மத்திலிருந்தால், பலன்கள் மத்திமமாகவே இருக்கும். இளைய சகோதரர்கள் ஒட்டியும் ஒட்டாமலும் இருப்பார் கள். செவ்வாய் இராசிக்கு 12ஆம் இடத்தில் மறைந்ததால் பலன்கள் இருந்தாலும், மத்திம பலன்களே இருக்கும்.

செவ்வாயுடன் சூரியன் ஆட்சியாகிக் கூடினால் உயர்ந்த பதவிகள் கிட்டும். அவற்றைப் பிரீதிகள் செய்து தக்க வைக்க வேண்டும். தைரிய வீரியங்கள் இருந்தாலும் செயலில் வெளிப்படா. உடல் வீரியங்களும் மத்திமமாகவே இருக்கும். செவ்வாயுடன் சூரியன், குரு ஆகியன சேர்ந்தால் ஆபரணச் சேர்க்கைகளும் பொன், பொருள் வகைகளும் உண்டு.

இவர்களுக்குக் கீழ் உள்ளவர்கள் இவர்களுடன் எப்போதும் கிலேசமாகவே இருப்பார்கள். அதிகச் சூட்டினால் சுக்கில வீரியங்கள் ஸ்கலிதமாகவும், நீர்த்துப்போகவும் விதியுண்டு. செவ்வாய் சிம்மத் திலிருந்து 4ஆம் பார்வையாகத் தன்னுடைய விருச்சிக வீட்டைப் பார்த்தால் பலன்கள் முன், பின்னே நடக்கும். செவ்வாயோடு சூரியன் சேர்ந்தால் உயர்ந்த பதவிகள் உண்டு. அவற்றை நல்ல விதமாகத் தக்க வைத்துக்கொள்ளவேண்டும். செவ்வாயுடன் சூரியன், குரு ஆகியன சேர்ந்தால் மத்திம பலன்கள் மூன்றாமிட வழியில் ஏற்படும்.

எனவே, செவ்வாய் கிரகப் பிரீதிகளும், எந்திர, மந்திர பூஜைகளும் செய்துவந்தால் நல்ல பலன்களை அடையலாம்.

கன்னி இராசிக்கு 3ஆம் இட அதிபதியான செவ்வாய் கன்னி இராசியிலே நின்றால் 3ஆம் பாவத்தைப் பொறுத்தவரையில் பிற்பலன்களாகவே அமையும். தைரியங்கள் குறைந்திருத்தலும், பின் முன்னேற்றத்தால் அதிகமாயிருத்தலும் உண்டாகும். செவ்வாயுடன் புதன் ஆட்சியாகிக் கூடி நின்றால், தன் சத்துரு வீட்டில் நட்புப் பலத்தைப் பெற்றிருந்தாலும், பலன் குறைவாகவே செய்வார். தைரிய வீரியங்கள் நிதானமாகவே இருக்கும். இளைய சகோதர வகையிலும் பலம் குறைந்தே காணப்படும்.

செவ்வாயுடன் சுக்கிரன் நீசமாகிக் கூடினால் வீரிய நட்டங்கள் ஆகும். அணிகலன்கள், போக பாக்கியங்கள், பகட்டுகள் ஆகியன குறையும். தன் மதிப்பு, கௌரவக் குறைச்சல் போன்றவை ஏற்படும். பட்டம், பதவி, புகழ் போன்றவை பெற மிகவும் கஷ்டத்திற்குள்ளாக நேரும். கல்விப்பட்டங்கள் வாங்குவதற்குத் தடை ஏற்படும். அதம பலன்களாக இல்லாமல் மத்திம பலன்களாகவே இருக்கும்.

செவ்வாயுடன் மற்ற கிரகங்கள் கூடினாலும் மத்திம பலன் களையே மூன்றாம் பாவ வழியில் செய்யும். செவ்வாயுடன் புதன் கூடியிருந்தால் வைசியப் பெண்ணை மணக்கும் யோகம் கிட்டும். செவ்வாய்க்கு எந்திர மந்திர பிரீதிகளைச் செய்தால் நல்ல பலன்களை அடையலாம்.

கன்னி இராசிக்கு 3ஆம் இட அதிபதியான செவ்வாய் இராசிக்கு 2ஆம் இடமான துலா இராசியில் இருந்தால் போக பாக்கியங்களும் உடல் வீரியங்களும் சுக்கில வீரியங்களும் உண்டு. கல்விப் பட்டங்கள் வாங்கத் தடையிருந்தாலும் வாங்கும் விதியுண்டு. பேச்சில் வல்லமை இருக்கும். இளைய சகோதரப் பலன்கள் அவ்வப்போது இருந்தாலும் அவர்களால் பாதகப்பலன் ஏதுமில்லை. மாறாக, இளைய சகோதரர்கள் குடும்பத்தை நிர்வகிக்கக்கூடியவர் களாய் இருப்பார்கள்.

செவ்வாயோடு சூரியன் நீசமாகி இருந்தால் பதவிகளும் வந்து போகும்; நிலையில்லை. செவ்வாயோடு சுக்கிரன் கூடினால் ஆபரணச் சேர்க்கைகள் உண்டாகும். சுக்கிலப் பலங்களும் உண்டாகும்.

செவ்வாயோடு சனி உச்சமாகக் கூடினால் இளைய சகோதரர்களால் பகை, குதர்க்கம், சண்டை சச்சரவுகள் ஆகியன அவ்வப்போது வந்துபோகும் நிலை உருவாகும். நீச, கீழ்க்குலப் பெண்களின் சிநேகமும், போகம், மது போன்ற பழக்கங்களுக்கு அடிமையாகும் யோகமும் உண்டாகும்.

மற்ற கிரகங்கள் செவ்வாயோடு கூடினால் மத்திம பலன்களாகவே இருக்கும். பலன்கள் மூன்றாம் பாவத்தில் குறையும் காலத்தில் செவ்வாய்க்குப் பிரீதி செய்தும் பலன்களைத் தக்க வைக்க வேண்டும்.

## துலாம்
## மூன்றாம் பாவம்

தேவகுரு வியாழ பகவானை இராசிக்கு 3ஆம் இட அதிபதியாகப் பெற்ற துலா இராசி அன்பர்களே! தங்கள் 3ஆம் பாவ பலன்களில் இளைய சகோதர நன்மைகள், பொன், பொருள், ஆபரணச் சேர்க்கைகள், பட்டம், பதவி, ஆளடிமை வகைகள், தைரியம், வீரியம் போன்ற அமிசங்களைப்பற்றி உங்களின் இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதி குரு 12 வீடுகளில் ஒவ்வொரு வீட்டிலும் 3ஆம் பாவப் பலன்களை எப்படிக் கொடுப்பாரென்று ஸ்ரீ பதஞ்சலி மகரிஷியின் சந்திர நாடியின் மூலம் அறிந்து கூறப்பட்டுள்ளது. அன்பர்கள் தங்களின் இராசிக்கு குரு எங்குள்ளார் என்று பார்த்துப் பலனை அறிந்துகொள்க.

"நிறுவையில் மதியும்நின்று குருவுமவர் மூன்றோனாகிடவே
நவின்றிடு மாட்சியுச்ச மேறிடவே யுத்தம பலனுமாமே
குருவுமவர் சுரகுரு, புங்கனுடு சேர்ந்துமிருந் தாலுமத்திம
மாமே
கதிர்மக னில்லில் நீச மடைந்தாலும் அட்டமத்தி லிருந்தாலு
மதம பலனுமே.!

குருவானவர் உங்கள் இராசிக்கு 3-க்குடையவராகி ஆட்சியானாலும் உச்சமானாலும் உத்தம பலன்கள் செய்யும். சுக்கிரன் புதனுடன் சேர்ந்தாலும் அவர்கள் வீட்டிலிருந்தாலும்

மத்திமமான பலனைச் செய்வார். குரு நீசமடைந்திருந்தாலும், இராசிக்கு அட்டமத்திலிருந்தாலும் அதம பலனைச் செய்வார். குருவுக்கு 5, 7, 9 பார்வைகள் உண்டு. அப்படி ஏதாகிலும் ஓர் இடத்திலிருந்து தன்னுடைய வீட்டினைப் பார்த்தாலும் இராசியைப் பார்த்தாலும் நன்மையுண்டாம்.

துலா இராசிக்கு 3ஆம் இடத்ததிபதியான குரு தனுசு இராசியில் ஆட்சியானால், பொன், பொருள், ஆபரணச் சேர்க்கைகளும் கல்விப் பட்டங்களும் உண்டாம். தைரிய வீரியங்கள் மனத்திலும் உடலிலும் இருந்தாலும் தேவைக்கேற்பவே பயன்படுத்த வேண்டியிருக்கும். இளைய சகோதரர்களால் நன்மையுண்டு. அவர்களின் உதவிகளும் உண்டு. குரு ஆட்சியானதால் உயர்ந்த பீடங்களின் தலைமைகளும், பதவிகளும் உண்டாகும். பல நிறுவனங்களை நிர்வகிக்கும் பொறுப்பும் அந்தஸ்தும் ஏற்படும். பட்டம், பதவி, புகழ் ஆகியவற்றில் படிப்படியாகப் புகழையும் ஆளடிமை வகைகளையும் பெறலாம். ஆசார, அனுஷ்டானங்களில் ஈடுபாடும் வல்லமைகளும் உண்டாகும். பேச்சுகள் நிதானமாகவே இருக்கும்.

குருவுடன் புதன், சுக்கிரன் போன்ற பகைக்கிரகங்கள் கூடினால் மத்திமமான பலன்களும் பலனைத் தடை செய்யும் நிலைகளும் உண்டாகும். தேவ குரு தன் வீட்டில் இருக்கும்போது அசுர குரு கூடினால் பலன்கள் கட்டாயம் தடைப்படும். தேவ குரு பிரஹஸ்பதிக்குப் பிரீதிகள் செய்தால் மூன்றாம் பாவ பலன்களை முழுமையாக அடையலாம். யந்திர, மந்திர பிரீதிகள் செய்தால் சுபபலன்கள் உண்டாகும். மற்ற கிரகங்களோடு சனி கூடினால் மூர்க்கத்தனமான துணிச்சலையும் கெட்ட செயல்களையும் முன்கோபங்களையும் அதிகமாக ஏற்பட வைக்கும். சூரியனுடன் குரு 3ஆம் இடத்தில் ஆட்சியானால் அரசாங்கத்தில் பதவி, புகழ், கீர்த்தி ஆகியவையும் உண்டாகும். மற்ற கிரகங்கள். சாதாரண பலன் களையே தரும்.

துலா இராசிக்கு 3ஆம் இட அதிபதியாகிய குரு இராசிக்கு 4ஆம் இடமான மகர இராசியில் நீசமானால் அதமமான பலன்களே பெரும்பாலும் ஏற்படும். இளைய சகோதர பலன்கள் குறைவாகவே இருக்கும். அவர்களும் உங்களைக் கண்டுகொள்ளமாட்டார்கள். கல்விப்பட்டங்கள் வாங்குவதில் கடினமான தடைகளை ஏற்படுத்தும்.

பட்டம் வாங்குவதும் கல்வி கற்பதும் குதிரைக்கொம்பாகவே இருக்கும். பொன், பொருள், ஆபரணங்கள் சேர்க்க முடியாத சூழ்நிலையையே உருவாக்கும்.

“காத்திருந்தவ னிருக்க நேற்றுவந்தவன் எடுத்துப் போன” கதையாகும். இதனால் விரக்திகள் ஏற்படுவதில் ஐயமில்லை. பேச்சிலும் விரக்தி தென்படும். தைரியம் மனத்தளவிலே இருக்கும்; வெளியில் காட்ட முடியாது. சுக்கில வீரியங்கள் தடைப்படும் நிலையும் உண்டாகும். புகழ் என்பது ஒரு குறுகிய வட்டத்திற் குள்ளேயே இருக்கும். வல்லமைகள் குறைவாகவே இருக்கும். குரு நீசமாகி சகோதரகாரகன் செவ்வாய் அங்கு உச்சமாய் இருந்தாலும், இளைய சகோதரர் வலுத்திருப்பார். ஆனாலும் உதவிகள் இரா; குருவுடன் சனி ஆட்சியாகிச் சேர்ந்து இருந்தால் மந்தமான குணங்களே இருக்கும். உடல் வீரியங்கள் தடைப்படும். அபகீர்த்தி கள் ஏற்படுமளவுக்குச் சில செயல்கள் இருக்கும். மற்ற கிரகங்கள் கூடி நின்றாலும் மத்திமமான பலன்களே ஏற்படும்.

குருவுடன் சுக்கிரன் கூடினால் உள்ள பலன்களையும் கெடுப்பார். பெண்கள் வகையில் அபகீர்த்தியை ஏற்படுத்துவார். யந்திர, மந்திர பிரீதிகளையும், குருகாரக சாந்திகளையும் செய்தாலும் நல்ல பலன்கள் உண்டாகலாம்.

துலா இராசிக்கு 3ஆம் இட அதிபதியாகிய குரு இராசிக்கு 5ஆம் இடமான கும்பத்தில் நட்புப் பலத்துடனிருந்தால் மத்திமமான பலன்களைச் செய்வார். பொன், பொருள்களைச் சம்பாதித்தலும், தேவைக்கேற்பச் செலவழித்தலுமாயிருக்கும். ஆபரணச் சேர்க்கை கள் குறைவாக உண்டு. முதலில், கல்விகள் தடைப்படும்; பின்னால் பயனுள்ளதாகவே அமையும். ஆனால், கல்விப்பட்டங்கள் வாங்கு வதற்கு விதி குறைவாகவே இருக்கும். மந்திர சம்பந்தங்கள், குலதெய்வ வழிபாடு, ஞான மார்க்கம் ஆகியவற்றிலும் மனம் இலயிக்கும். மனம் அதன் வழியிலேயே அதிகமாக நாட்டம் கொள்ளும். அடுத்தவரை அடக்கியாள்வதில் உடன்பாடு குறைவு. உடல் வீரியங்கள் மந்தமாகவே இருக்கும்.

இளைய சகோதரப் பலன்கள் குறைவாகவே இருக்கும். ஆனால், அவர்களால் பாதகம் ஏதுமில்லை. குருவுடன் சனி கூடியிருந்தால்

மந்த குணங்களும் சில நாள் சாஸ்திரத்திற்கு மாறுபட்டு நடக்கக்கூடிய குணங்களும் உண்டாகும். இராகுவுடன் கூடினால் துஷ்ட குணம், தைரிய வீரியங்களை உடையவராயிருத்தலும் கூடும்.

குருவுடன் சுக்கிரன் கூடினால் காமவீரியங்கள் அதிகமாகவும் அதனால் அபகீர்த்திகளும் உண்டாகும். எந்தக் கிரகங்கள் கூடினாலும் பார்த்தாலும் மத்திம பலன்களையே செய்யும். பிரஹஸ் பதி எந்திர, மந்திர பிரீதிகளைச் செய்வதால் நல்ல பலன்களை அடையலாம் என்று ஸ்ரீ பதஞ்சலி மகரிஷி சந்திர நாடியின் மூலம் கூறுகிறார்.

துலா இராசிக்கு 3ஆம் இட அதிபதியாகிய குரு இராசிக்கு 6ஆம் இடமான மீனத்திலிருந்தால் தேவ குருவுக்கு ஆட்சிபலம் அதிகமாகவே இருக்கும். இதனால் தைரிய வீரியங்கள் குறையா. இருந்தாலும் நிதானமாகவே இருக்கும். கல்விப்பட்டங்களைப் கடினப்பட்டுப் பின்னால் வாங்குதலும், அதனால் கடன், நொம்பலங்கள் ஆகியன நேருதலும் உண்டு. ஆனால், இளைய சகோதரப் பலன்கள் குறைவாகவே நேருதலும் உண்டு. ஆனால் இளைய சகோதரப் பலன்கள் குறைவாகவே இருக்கும். சில கால கட்டங்களில் தன்னைச் சத்துரு போலப் பாவிக்கும் குணம் இளைய சகோதரர்களுக்கு உண்டு.

பொன், பொருள், ஆபரணச் சேர்க்கைகள் இருந்தாலும் கடனினால் அவை திரும்பப் போய்விடும். மறுபடியும் வாங்க விதியுண்டு. உங்களுக்குக் கீழ் ஆளடிமை வகைகள் இருந்தாலும் பெரும்பாலும் நம்பிக்கைத் துரோகம் செய்யும் சத்துருக்களாகவே இருப்பார்கள். குரு தன்னாட்சி வீட்டில் இருந்தாலும், இராசிக்கு 6ஆம் இடத்தில் இருப்பதால் கூட்டிக் குறைத்துச் செய்வார். பேச்சில் வல்லமைகள் உண்டு. அந்த வல்லமைகளால் சத்துருக்களும் அடங்கும் நிலை இருக்கும்,

உடல் வீரியங்கள் தடைப்படலாம். தேவ குரு ஆட்சியாகி, அசுரகுருவான சுக்கிரன் அங்கு உச்சமானால் பலன்கள் புரியாத புதிர்தான். நாமொன்று நினைக்க நடக்கும் தறுவாயில் திசை மாறிப் போகும். பெண்களினால் அபகீர்த்தி ஏற்பட விதியுண்டு. புதன் நீசமாகிக் குருவுடன் சேர்ந்தால் கல்வியைத் தடை செய்வார்.

அதனால் கடன்கள் உண்டாகும். தேவகுரு வியாழ பகவானுக்கு யந்திர, மந்திர பிரீதிகள் செய்வதன் மூலமும், காரக சாந்திகள் செய்வதன் மூலமும், நல்ல பலன்களை அடையலாம் என்று ஸ்ரீ பதஞ்சலி மகரிஷியின் சந்திரநாடி கூறுகிறது.

துலா இராசிக்கு 3ஆம்இட அதிபதியான குரு இராசிக்கு 7ஆம் இடமான மேஷ இராசியில் பகைபலம் பெற்றிருந்தால் மத்திமமான பலன்களையே செய்வார். சகோதர காரகன் வீட்டில் குரு இருப்பதால், இளைய சகோதர பலன்கள் அவ்வளவு உசத்தியாகக் கூற முடியாது. அவர்களும் உங்களுக்கு உதவுவார்கள் என்று தீர்க்கமாகச் சொல்ல முடியாது. அவர்களும் மத்திமமான பலன்களை அனுபவிப்பார்கள். மூர்க்கத்தனமான தைரியங்களும், அதனால் பெரும் விளைவுகளைச் சந்திக்க நேருதலும் சகோதரர்களிடையே போராட்டமும் ஏற்படும்.

ஒரு காலத்தில் இருந்த பொன், பொருள், ஆபரணச் சேர்க்கைகள் ஒரு காலத்தில் அழிந்துவிடும். அவை மீண்டும் திரும்பா. வல்லமை கள் நிறைந்து காணப்படும். அதனால் யாதொரு பிரயோசனமு மில்லை. அதிகார குணங்களுண்டு.

குருவுடன் சூரியன் உச்சமாகிக் கூடினால் அதிகார நிலையில் உள்ள பதவிகளை அடையலாம். சில பதவி உயர்வுகளும், அரசு உயர் பதவிகளும் கிடைக்க வாய்ப்புண்டு. அரசு ஆதரவும் உண்டு. செவ்வாய் ஆட்சியாகிக் குருவுடன் கூடினால் வல்லமைகள் உண்டாகும். தைரியங்களால் பிறர்க்கு நன்மையுண்டாம். குருவுடன் சனி சேர்ந்திருந்தால் மனைவியிடத்தில் போக பாக்கியம் குறைவாகவே இருக்கும். குருவுடன் மற்ற கிரகங்கள் கூடினால் மத்திம பலன்களே யுண்டு. குரு பிரீதிகளும், மந்திர, யந்திர பூஜைகளும் செய்தால் நன்மையான பலன்களை அடையலாம் என்று ஸ்ரீ பதஞ்சலி மகரிஷி சந்திர நாடியின் வாயிலாகக் கூறுகிறார்.

துலா இராசிக்கு 3ஆம் இட அதிபதி குரு இராசிக்கு 8ஆம் இடமான ரிஷபத்திலிருந்தால், அதுவும் தேவகுரு, அசுர குரு சுக்ராச்சாரியாரின் வீட்டிலிருந்தால் முரணான பலன்களே நடக்கும். குரு பலன் செய்ய நினைத்தாலும் சுக்கிரன் அதனைத் தடுக்கப் பார்ப்பார். பகையாளி வீட்டில் என்னதான் செய்ய முடியும்? குரு

அங்கு நட்புப் பலத்துடனேயே இருக்க முன் நன்மைகளும், பின் இடர்களும் உண்டாகும். பதவிகள், புகழ், செல்வாக்கு போன்றவை வருதலும், திடீரென வந்த வேகத்தில் மறைதலும் சில கால கட்டங்களில் நடக்கும். இதனால் விரக்தியும் உண்டு. பொன், பொருள் சேர்க்கைகளே இருந்தாலும், வெள்ளி உலோகச் சேர்க்கை களே அதிகம் காணும்.

தனக்குக் கீழ் பெண்கள் வேலை பார்க்கும் நிலையுண்டு. சதா பெண் மயக்கத்தில் இந்திரியத்தை நட்டப்பட வேண்டி இருக்கும். இதனால் உயிர்க்கண்டமும் வரலாம். எதிரிகளும் உருவாகலாம். கல்விப்பட்டங்களும் தடைப்படும்.

குருவுடன் சுக்கிரன் சேர்வதால் பெண்ணால் கெடுதல் உண்டாகும். திறமைகள் பாழாக்கப்படலாம். பேச்சுகள் நளினமாகவும், சில சமயம் முரட்டுத்தனமாகவும் இருக்கும். மற்ற நட்புக் கிரகங்கள் சேர்ந்தாலும் பலன்கள் முரண்பட்டே காணப்படும். குருவுக்குப் பிரீதிகள் செய்து பலத்தைக் கூட்டுவதால் நல்ல பலன்களை அடையலாம் என்று ஸ்ரீ பதஞ்சலி மகரிஷி சந்திர நாடியின் மூலமாகக் கூடுகிறார்.

துலா இராசிக்கு 3ஆம் இட அதிபதியான குரு இராசிக்கு 9ஆம் இடமான மிதுன இராசியில் இருந்தால் அதுவும் தன் சத்துரு வீட்டில் நட்புப் பலம் பெற்றிருந்தாலும் ஓரளவு நல்ல பலன்களையே செய்வார். ஆனால், கூட்டிக் குறைச்சலாகவே செய்ய வேண்டியிருக்கும்.

குரு இராசிக்கு கோணத்திலிருந்தால் எப்பொழுதும் நன்மை யுண்டு. கல்விப்பட்டங்களை எப்படியாவது வாங்கலாம். அந்த அளவு ஞானங்கள் உண்டு. அதனாலேயே கீர்த்தி, புகழ், செல்வாக்கு ஆகியன உண்டாகும். பேச்சில் வல்லமை ஏற்படும். இளைய சகோதர, சகோதரிகளால் நன்மைகள் ஏற்படும். சகோதரர்களினால் பலன்கள் அவ்வளவாய் இராது.

தனக்குக் கீழ் ஆளடிச் சேவைகள் சில கால கட்டங்களில் வந்து செல்லும். பொன், பொருள் ஆபரணச் சேர்க்கைகள் வாழ்வில் பின் மத்திமத்திலேயே உண்டாகும். அது நிரந்தரமாய் இருக்க விதியுண்டாம்.

குருவுடன் புதன் அங்கு கூடினால் சில பலன்கள் தடைப்பட்டாலும், முன்பின்னாய் பலன்களை அடைய வேண்டியது வரும். உடல் வீரியங்கள் குறைவில்லாமல் இருக்கும். தைரியங்கள் மனத்தளவில் உண்டு. செயல்களில் யோசித்தே செயல்படும் ஆற்றல் உண்டாகும். மிதமான போகங்கள் உண்டாகும். குருவுக்கு யந்திர, மந்திர பிரீதிகள் செய்வதால் நல்ல பலன்களைப் பெறலாம் என்று ஸ்ரீ பதஞ்சலி மகரிஷியின் சந்திர நாடி கூறுகிறது.

துலா இராசிக்கு 3ஆம் இட அதிபதியான குரு இராசிக்கு 10ஆம் இடமான கேந்திரத்தில் சந்திரனுடைய வீட்டில் உச்சமாய் இருந்தால் பலன்கள் 3ஆம் பாவத்தைப் பொறுத்த மட்டில் உத்தம பலன்களாகவே இருக்கும். பொன், பொருள், ஆபரணச் சேர்க்கைகள் வாழ்வில் கட்டாயம் ஏற்படும். பொன் வகைகள் அதிகமுண்டு. கல்விப் பட்டங்கள் பெற வாய்ப்புகளும் ஆற்றல்களும் அதிகம் உண்டாகும். ஆனால், சந்திர வீட்டில் இருப்பதாலோ என்னவோ வளர்ந்து தேயும் நிலையிலேயே பலனைக் கொடுக்கும். ஆனாலும், உச்ச பலன்கள் குரு திசை புத்திகளில் கிடைக்கும்.

தைரிய வீரியங்களுக்குக் குறைவிருக்காது. வீரியமும் பலமும் பெருகிக் காணும். தனக்குக் கீழ் ஆளடிமை வகைகள் உண்டு. தன்னுடைய தொழில் திறத்தினாலேயே புகழ், கீர்த்தி, செல்வாக்கு, ஆபரணம், அணிகலன்கள், வல்லமைகள் ஆகியன ஏற்படும்.

குரு உச்சமாகிச் செவ்வாய் அங்கு நீசமாகியிருந்தால் தைரிய பலன்கள் நடைபெறும். சகோதர பலன்கள் குறைவாகவும் அவர்களால் இம்சைகளும் இருக்கும். சண்டைகளால் இரத்தக் காயங்களும் உண்டாகலாம். நீசம் பெற்ற கிரகத்தைத் தவிர குருவுடன் மற்ற கிரகங்கள் கூடினாலும் குரு தன் உச்ச பலன்களைக் குறைவின்றிக் கொடுப்பார். பிரஹஸ்பதி பூஜைகள் செய்வதால் உச்ச பலன்களை முழுமையாக அடையலாம் என்று ஸ்ரீ பதஞ்சலி மகரிஷியின் சந்திர நாடியின் மூலமாகக் கூறுகிறார்.

துலா இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 11ஆம் இடமான சிம்மத்தில் நட்புப் பலத்துடனிருந்தால் 3ஆம் பாவ வழியால் சுமுகமான பலன்கள் உண்டு. உயர்வான பலன்கள் இல்லாவிட்டாலும் சுமாரான பலன்களைச் செய்யும். இளைய

சகோதரர்களிடம் அவ்வப்போது பலன்கள் ஏற்படும். அவற்றை எதிர் பார்க்கும் நிலையில் நீங்களும் இருக்க மாட்டீர்கள். தைரிய வீரியங்கள் எப்பொழுதும் உண்டு.

தலைமையை எட்ட வேண்டுமென்ற ஆவல் அதிகமாயிருக்கும். அதனைச் செய்யும் மனத்துணிவும் உண்டாகும். உடல் வீரியங்களும் பேச்சிலே சமாளிக்கும் திறனும் உண்டாகும். நேரிடையாக மோதாமல் பேச்சிலே சமாளிக்கும் திறன் உண்டாகும். பலமுடன் உடல் இருந்தாலும் உடல் வீரியங்களும் சுக்கில வீரியங்களும் உடல் சூட்டினால் குறையும் நிலை உண்டாகும். கல்விப்பட்டங்கள் பெற்றாலும், அதன் வகையாலேயே தொழிலும் இலாபங்களும் உண்டாகும்.

குருவும் சூரியனும் ஆட்சியாகிக் கூடினால் தலைமைப் பீடங்களில் இலாபங்களும் புகழும் செல்வாக்கும் உண்டாகும். மற்ற கிரகங்கள் சிம்மத்தில் குருவுடன் கூடினாலும் மத்திம பலன்களையே உண்டுபண்ணுவார். அரசு உதவியும், கௌரவப் பதவிகளும் உங்களை வந்தடையும். மற்ற கிரகங்கள் சிம்மத்தில் குருவுடன் கூடினாலும் மத்திம பலன்களையே உண்டு பண்ணும். தக்ஷிணா மூர்த்தி பூஜையையும் பிரகஸ்பதி மந்திர, யந்திர, பிரீதிகளையும் செய்து வழிபட்டால் உயர்வான பலன்கள் உண்டாகும். சிம்மக் குரு மகாமக குருவாகையால் உங்களுக்கு ஆன்மிக நாட்டம் அதிகம் இருக்கும் என்று சந்திர நாடி கூறுகிறது. துலா இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதி குரு 12ஆம் இடமான கன்னியில் புதன் வீட்டில் நட்புடனிருந்தாலும் இராசிக்கு 12இல் மறைந்ததால், பலன்கள் இருந்தால், நடப்பிற்குவரக் கிரகத்தடைகள் உண்டாகும். இளைய சகோதரர்கள் ஒட்டியும் ஒட்டாமலும், கண்டும் காணாமலும் இருப்பார்கள். அவர்களை முன்னிட்டுச் செயல்பட்டால் விரயமே வரும். இலாபங்கள் இல்லை. கல்விப்பட்டங்கள் வாங்குவதற்கு விதி இருந்தாலும் மிகவும் கடினப்பட்டே வாங்க வேண்டியிருக்கும். ஆனால், அவற்றைக்கொண்டு புகழ், செல்வாக்கு, பதவி ஆகியவற்றைப் பெற முடியாது.

சுக்கிரன் நீசமடைந்து தேவ குரு அங்கு சேர்ந்தால் பலன்கள் முரண்பாடாகவே நடக்கும். இருந்தாலும், குரு பலன்கள் சில உண்டு. பெண்களால் நட்டமும் புகழ்க் குறைவும் உண்டாகும். ஆகவே,

கவனமாய் இருத்தல் வேண்டும். பொன், பொருள், ஆபரணச் சேர்க்கை இருந்தாலும் அனைத்தும் காரியங்களுக்காக விரயம் ஆகிவிடும். புதன் ஆட்சியோடு குரு கூடினால் சுப விரயங்களே அதிகமுண்டு. மற்ற கிரகங்கள் குருவுடன் கூடினாலும் விரய பலன்களைத் தடுக்க முடியாது. குரு பிரீதிகளையும் யந்திர, மந்திர வழிபாடுகளையும் செய்தால் மூன்றாம் பாவ வழியில் பலன்களைப் பூரணமாக அடையலாம் என்று சந்திர நாடியின் வாயிலாக ஸ்ரீ பதஞ்சலி மகரிஷி கூறுகிறார்.

துலா இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான குரு இராசியிலே இருந்தால் - அதுவும், அசுரகுரு வீட்டில் தேவகுரு பகை பெற்று அமர்ந்திருந்தால் பலன் செய்யும் நிலை மிகவும் கடினமானது. நீங்கள் குருவுக்குப் பலத்தை அதிகப்படுத்திப் பலன்களைப் பெறவேண்டும். தைரிய, வீரியங்கள் இயற்கையிலே இருந்தாலும் சுக்கிர வீட்டில் குரு சேர்ந்தால், செயல்களின் கடைசி நேரத்தில் தைரிய வீரியங்கள் மனச்சஞ்சலங்களை உண்டு செய்யும். வீரிய நட்டத்தினாலும் மனம் மிகவும் சஞ்சலப்படும். கல்வி பட்டங்கள் வாங்கினாலும் அவற்றைக்கொண்டு புகழ், பணம், பதவி ஆகியவற்றை அடைய முடியாது.

சம்பந்தமில்லாத மற்றொரு மார்க்கத்தில்தான் அந்த மாதிரி பலன்கள் உண்டாகும். குருவுடன் சனி உச்சமாகக் கூடினால் மனை இலாபங்களும் அதனால் புகழும் கீர்த்திகளும் உண்டாகும். ஒரு மனைத்தளத்திற்கு அதிபதியாகும் விதி உண்டாகும். பொன், பொருள் ஆபரணச் சேர்க்கைகளும் சில கால கட்டங்களில் தொடர்ந்து யோகமாக வரும். அதனைத் தக்க வைத்துக் கொள்ளவேண்டும்.

குருவுடன் சூரியன் நீசமானால் பதவிக்கு ஆபத்தும் அபகீர்த்தியும் உண்டாகும். பதவி இலாபம் இராது. காரியத்தைச் செயல்படுத்த முடியாது. குருவுக்கு எந்திர, மந்திர பிரீதிகள் செய்தால் நற்பலன்கள் கிட்டும் என்று சந்திர நாடி கூறுகிறது.

துலா இராசிக்கு 3ஆம் இட அதிபதியான குரு இராசிக்கு 2ஆம் இடமான விருச்சிகத்திலிருந்தால் குரு பகை பெற்று அமர்ந்த காரணத்தினால் மத்திம பலன்களே நடக்கும். செவ்வாயின் வீட்டில்

இருப்பதால் குருபலம் பெறுவார். ஆனால், பலன்களைக் கூட்டிக் குறைத்தே செய்வார். இளைய சகோதர இலாபங்கள் குறைவாகவே இருக்கும். உங்களைக் கண்டுகொள்ளாமல் தம் இஷ்டப்படியே நடப் பார்கள். தைரியங்கள் அசட்டுத் தைரியங்களாயிருக்கும். பேச்சு களும் அவ்வாறே அசட்டுத்தனமாகவும் உறுதியாகவும் இருக்கும். சுக்கிர வீரியங்களும் உடல் வீரியங்களும் குறையா.

போகங்கள் மிதமாகவே இருக்கும். இளமையில் தனக்குறைவால் கல்விப்பட்டங்கள் வாங்குவதில் கவனம் குறைவாகும். பொன், பொருள், ஆபரணச் சேர்க்கைகள் வாழ்க்கையின் முன் பகுதியில் உண்டாகும்.

குருவுடன் செவ்வாய் ஆட்சியாகிக் கூடினால் முரட்டுத் தைரியங்கள் உண்டாகும். தனக்குக் கீழ் ஆளடிமை வர்க்கங்கள் சில கால கட்டங்களில் வேலை செய்யும். அவர்களை முரட்டுத் தனமாகக் கையாள வேண்டியது வரும். குருவுடன் இருபாம்புகளான இராகு, கேதுகளுள் எவரேனும் உச்சமாகிக் கூடினால், தீர்க்கமான பேச்சுகள் உண்டாகும். குரு, பகைப்பலன்களையே செய்வார். குருவுக்கு எந்திர, மந்திர பிரீதிகள் செய்தால் நற்பலன்கள் ஏற்படும் என்று சந்திர நாடி கூறுகிறது.

## விருச்சிகம்
## மூன்றாம் பாவம்

இராசிக்கு 3ஆம் இடத்தை மகரமாகவும் 3ஆம் இடத்து அதிபதியாகச் சனியையும் அடையப்பெற்ற விருச்சிக இராசி அன்பர்களே!

உங்களின் 3ஆம் பாவ பலன்களில் இளைய சகோதரர்கள், பட்டம், பதவி, புகழ், ஆளடிமைகள், தைரியம், சுக்கில வீரியம், பெண் போகங்கள், ஆபரணச் சேர்க்கைகள், வல்லமை போன்றவை அடங்கும். உங்கள் 3ஆம் இடத்ததிபதி சனி 12 இராசிகளில் ஒவ்வோர் இடங்களிலும் இருந்த பலன்களை ஸ்ரீ பதஞ்சலி மகரிஷியின் சந்திர நாடியின் வாயிலாக அறிந்து கூறப்பட்டுள்ளது. அன்பர்கள், தங்கள் இராசிக்கு 3ஆம் இடத்ததிபதி சனி எந்த

இராசியில் இருக்கிறார் என்று பார்த்துப் பலனை அறிந்து கொள்ளவும்.

''மந்தன்சுங்கன் புங்கனொடு கூடிடினு முத்தம
பலனுமேதான்
மகனவன் பிதுர்பிறை சேயுடன் கூடிடினும் மத்திம பலன்
பந்தமின்றி மதிக்கட்டமத்தில் தந்தையுடன் கூட
அதம பலனுமேதான்
பகரவரு நிவர்த்திமேல் நன்னிலைக ளுண்டென்று
விளம்பினேனே''''

இவ்வாறு, சூரியனின் மகனுடன் சுக்கிரன், புதனொடு சேர்ந்து கூடினால் நல்ல பலன்களையும், தன் தந்தையான சூரியனோடும் சந்திரனோடும் செவ்வாயோடும் கூட மத்திமமான பலன்களையும், இராசிக்கு எட்டில் சூரியனோடு கூடினால் பெரும்பாலும் அதம பலன்களையும் செய்வார்.

விருச்சிக இராசிக்கு 3ஆம் இடத்ததிபதியான சனி மகர இராசியில் ஆட்சியானால் இளைய சகோதர பலன்கள் மந்தமாகவே இருக்கும். வாழ்வில் மந்தமாகவே இருப்பார்கள். தைரிய வீரியங்கள் இருந்தாலும் அவை அசட்டுத்தைரியங்களாய் இருக்கும். பொன், பொருள், ஆபரணச் சேர்க்கைகளில் ஆசை இருந்தாலும், அவற்றில் அவ்வளவு பிடிப்பு இராது. பதவி, புகழ் ஆகியன இருந்தாலும் நீண்ட காலத்திற்குத் தொடர்ந்து இருக்குமாறு செய்யும் சனியுடன் செவ்வாய் கூடி உச்சமானால், பலன்களில் தைரிய வீரியங்கள் அதிகரிக்கும். பின் வருத்தப்படவும் நேரும். சண்டைகளில் கால் ஊனமாகலாம். செவ்வாய் சனியுடன் கூடினால் செவ்வாய் தன் உச்ச பலன்களைச் சனி வீட்டில் செய்வார். போகத்தில் அதிக விருப்பமும், அதனால் தொல்லைகளும் உண்டாகும்.

சனியுடன் குரு நீசமாகிக் கூடினால் பொன், பொருள்களிலும் ஆசாரங்களிலும் நியமங்களிலும் ஆசைகள் தோன்றா. துஷ்டத் தனமான பேச்சுகளும், மந்தமான குணங்கள் கொண்ட ஆளடிமை வகைகளும் அமையும். கல்விப்பட்டங்களும் அவ்வாறே. வயதான

நிலையில் வாங்க வேண்டியது வரலாம். சனிக்குப் பிரீதிகள் செய்து நல்ல பலனை அடையலாம்.

விருச்சிக இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 4ஆம் இடமான கும்பத்திலிருந்தால் பலன்கள் உத்தமமாகவே இருக்கும். கல்விப்பட்டங்களைப் பொறுத்திருந்தே வாங்க வேண்டியது வரும். தைரிய வீரியங்கள் இருந்தாலும் அதிக மந்தமான குணங் களைப் பெற்றிருப்பார்கள். ஆனால், பலன்கள் வீரியங்கள் அதிகமாக உண்டு. வஞ்சம் வைத்துத் தாக்குகின்ற வீரியங்களையும், சின குணங்களையும் பெற்றிருப்பார்கள். இளைய சகோதர பலன்கள் ஒரு காலத்தில் தொடர்ந்து வரும்; இல்லாவிட்டால், அப்படியே நின்றுவிடும். பதவி, புகழ், வேலையாள்கள் போன்ற நிலைகள், தொடர்ந்து இருக்கும்; போனால் திரும்பி வாரா; தன் சேட்டை களாலேயே போகும்.

சனி செவ்வாயுடன் கூடினால் ஆண் தன்மை, வீரியங்கள் மட்டுப்பட வாய்ப்புண்டு. சனியோடு இராகு, கேது, சூரியன் ஆகியன சேர்ந்தால், பலனைத் தடை செய்வார்கள். மூன்றாம் பாவ பலன்களைத் தெளிவாக அடைவதற்குச் சனி பிரீதிகளைச் செய்தும், மந்திர, எந்திர பூஜைகளைச் செய்தும் பலன்களைத் தக்க வைக்கலாம்.

பொன், பொருள், ஆபரணங்கள், அணிகலன் போன்றவை வாழ்வில் மத்திமத்தில் வரும். வந்தாலும் நிலைத்திருக்க விதியுண்டு. கும்பத்தில் சனிக்குப் பலம் அதிகம்; எனவே, தன் இஷ்டப்படி பலன்களைச் செய்வதில் சமர்த்தர். சாதகமான பலன்களே அதிகம் உண்டு. பாதகப் பலன்கள் குறைவாகவே இருக்கும். இவ்வாறு ஸ்ரீ பதஞ்சலி மகரிஷி சந்திர நாடி என்னும் நூலின் வாயிலாகக் கூறுகிறார்.

விருச்சிக இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 5ஆம் இடமான மீனத்தில் குரு வீட்டில் நட்புப் பெற்றால் சுமுகமான நல்ல பலன்கள் உண்டு. இளைய சோதரர்கள் உதவியாயிருப்பார்கள்.

சனிக்கு மீனத்தில் மித்துரு கிரகங்கள் நல்ல நிலையிலிருக்கும். சனிக்குப் பலம் அதிகம். ஆடை, ஆபரணங்கள், பொன், பொருள்கள் போன்றவற்றில் ஈடுபாடு அதிகமாகவும், சேர்க்கும் நிலைகளும் உண்டாகும். புகழும் மரியாதையும் எப்போதும் உண்டு.

சனியுடன் புதன் நீசமாகிக் கூடினால் சில யோக பலன்கள் 3ஆம் பாவ வழியில் வந்துபோகும். பதவியில் திடீர் யோக உயர்வுகளும், அதனால் புகழும் செல்வாக்கும் உண்டாகும். அதனைச் சனி பிரீதிகள் செய்து தக்க வைக்க வேண்டும்.

ஆளடிமை வர்க்கங்கள் நம்பிக்கைக்குரியவர்களாகவும், ஆனால், மந்த குணங்களைப் பெற்றவர்களாகவும் இருப்பார்கள். சனியுடன் குரு ஆட்சியானால் பூர்வ புண்ணிய வசத்தால் தெய்வ காரியங்களை - குறிப்பாகச் சிவாலய மேம்பாடு, கும்பாபிஷேகம், திருப்பணி வேலைகளை - செய்யப் பாக்கியங்கள் கிட்டும். ரேஸ், லாட்டரி, பந்தயம் ஆகியவற்றில் சொற்ப இலாபம் கிடைக்க விதியுண்டு. மனை, வீடு, பூர்விகச் சொத்து ஆகியன உங்களுக்குக் கிடைக்க வாய்ப்புண்டு. சொன்ன சொல்லைச் செயலாக்கும் திறனும் வல்லமையும் உங்களுக்கு உண்டாகும். இவ்வாறு சந்திர நாடி கூறுகிறது.

விருச்சிக இராசிக்கு 3ஆம் இட அதிபதியான சனி இராசிக்கு 6ஆம் இடமான மேஷத்தில் நீசம் பெற்றால் பலன்கள் கெட்ட பலன்களாகவே இருக்கும். முக்கால் பகுதிப் பலன்கள் அதம பலன்களாகவே உண்டு. இளைய சகோதரர்கள் முற்றிலும் நன்மையாயிருக்க மாட்டார்கள். சில கட்டங்களில் அவர்கள் சத்துருக்களாகவும் விதி உண்டு. அவர்களால் எந்த உதவியும் இராது. உங்களை விட்டுப் பிரிந்து தனியாக வாழவே விதியுண்டு. ஒரு காரியத்திற்கு ஆயிரம் யோசனைகளும், காலதாமதமும் உண்டாகும். தைரியங்கள் இருந்தாலும் பேசிவிட்டுச் செயல்படாமல் பதுங்கும் நிலை இருக்கும். சனியுடன் சூரியன் உச்சமாகிக் கூடினால் கைக்கு எட்டி வாய்க்கு எட்டா நிலை ஏற்படும்.

சனியுடன் குரு பகையாகிக் கூடினால், பொன், பொருள், ஆபரணச் சேர்க்கைகள் ஆகியன குறைவாகவும், கடனடைக்கச் சரியாகவும் இருக்கும். கல்விப்பட்டங்கள் வாங்குவதற்குப் பெருந்

தடைகள் உண்டாகும். ஆளடிமை வர்க்கங்களில் நம்பிக்கை யற்றவர்களும், சோம்பல் உடையவர்களுமே அதிகம் இருப்பர். சனியுடன் செவ்வாய் ஆட்சியாகிச் சேர்ந்தால், அசட்டுத் தைரியங் களும் போகங்களும் ஏற்பட்டுத் தொல்லைகள் ஏற்படும். சனி மட்டும் தனித்திருந்தும், வேறு கிரகங்கள் பகையாகவும் இருந்து, அந்த இடமே கெட்டுப்போனால், கெட்டதில் நல்ல காரியங்கள் யோகமாக நடக்க விதியுண்டாம். இந்த அமைப்புகளில் சனி பிரீதியைக் கட்டாயம் செய்ய வேண்டும். கால் நோயுடன் இருக்க அதிக விதி யுண்டு. சனிக்குத் தக்க பிரீதிகள் செய்து சுபமாயிருக்கவும்.

விருச்சிகத்துக்கு 3ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 7ஆம் இட கேந்திரமான ரிஷபத்தில் நட்புப் பெற்றுக் கூடினால் உத்தம, மத்திம பலன்கள் உண்டு. அதமமான பலன்கள் குறை வாகவே இருக்கும். சனி தன் மித்துரு வீட்டிலிருப்பதால் நல்ல பலன்களைக் கொடுப்பார். இளைய சகோதரர்கள் உதவியாக இருப் பார்கள். அவர்கள் களத்திரமும் நன்றியுள்ளவராக இருக்க விதி யுண்டு. அவர்களால் சில காலங்களில் பலன்கள் இல்லா விட்டாலும் பாதகமில்லை.

சனி அசுர குரு வீட்டிலிருப்பதால் ஆடை, ஆபரணப் பகட்டுகளை அதிகமாக விரும்புவீர்கள். உங்கள் மனைவியின் தொந்தரவால் ஆடை, ஆபரணச் சேர்க்கை, பொன், பொருள்மீது ஆர்வம் ஆகியன உண்டாகும். இளமையில் பெண்மீதுள்ள மோகங்களால் கல்வி பாழாகும். ஆனால் பின்னால் பட்டம் வாங்கக்கூடிய விதிகள் உண்டு. எதிராளியின் குணத்திற்கேற்ப வெளிப்படும் வீரியங்களும் அவர்களை வெல்லும் நிலையிலேயே உண்டு.

தனக்குக் கீழ் உள்ள ஆளடிமை வகைகளை அடிக்கடி மாற்ற நேரும். மனைவியின் பேச்சுக்கிணங்கச் செயல்கள் செய்ய வேண்டியது வரும். பொதுவாக, உத்தம பலன்களே உண்டாகும். இவ்வாறு சந்திர நாடி கூறுகிறது.

விருச்சிக இராசிக்கு 3ஆம் இட அதிபதியான சனி இராசிக்கு 8ஆம் இடத்தில் மிதுனத்தில் அட்டம ஸ்தானத்தில் இருந்தாலும்,

சனி தன் தகப்பனான சூரியனொடு கூடாதவரையில் நன்மையான பலன்களைக் கொடுப்பார். அவ்வாறு கூடினால் துர்பலனையே கொடுப்பார் என்பதாகும். இளைய சகோதரர்கள் வாழ்வில் நற்பலன்கள் அமையும். அவர்களால் உங்களுக்குப் பலன்கள் குறைவாகவே இருக்கும். இதனால் மனச்சஞ்சலங்கள் ஏற்பட்டு மன அமைதியும் குறையும்.

சனி இராசிக்கு அட்டமத்தில் கோட்சாரத்திலோ, ஜெனனத்திலோ இருந்தாலும் அந்த ஸ்தானப் பலன்களைச் செய்வார். கோட்சாரத்தில் சனி அந்த இடத்திற்கு வரும்பொழுது, இளைய சகோதரருக்கு அட்டம பலன்களைச் செய்வார். தைரியத்தினால் பல விளைவுகளும் பலிகளும் உண்டாக விதியுண்டாம். இதனால் தீராத மனச் சஞ்சலங்கள் உண்டு. ஆடை, ஆபரணம், பொன், பொருள் சேர்க்கைகள் ஆகியவற்றில் ஒரு காலத்தில் விருப்பம் இருந்தாலும், பின்பு அதில் பிடிப்பற்றுக் காணப்படும்.

தனக்குக் கீழ் உள்ள ஆளடிமை வர்க்கங்களில் நம்பிக்கை, நாணயம் உள்ளவர்கள் குறைவானவர்களாகவே இருப்பார்கள். பட்டம் வாங்குவதிலும் கடினத் தடையுண்டு. கால் நோய் ஏற்படலாம்.

சனியுடன் சூரியன் சேராமல் புதன், சுக்கிரன், குரு போன்ற கிரகங்கள் கூடினால் நன்மையான பலன்களைக் கொடுத்துப் பின்பு தீமையான பலன்களைத் தரும். இதனால் கடுமையான கணபதி, வீரபத்திரர் பூஜைகள் செய்தும், சனிக்குப் பிரீதிகள் செய்தும், சனியை பாவத்திலிருந்து அகற்றி நன்மை பெறலாம். இவற்றை மிகவும் கடுமையாகச் செய்தால் தீர்க்கமான பலன்கள் உண்டாம்.

விருச்சிக இராசிக்கு 3ஆம் இட அதிபதியான சனி இராசிக்கு 9ஆம் இடமான கடகத்தில் சந்திரன் வீட்டில் பகை பெறுவதாலும், தன்னுடைய வீட்டிற்கு 7ஆம் வீட்டில் நிற்பதாலும், கடகத்திலிருந்து தன் வீட்டைப் பார்ப்பதாலும், ஜென்மத்தில் செய்யாத பலனைச் சனி கோட்சாரத்தில் மகரத்திற்கு வரும்பொழுது தீர்க்கமுடன் நல்ல பலனாகச் செய்வார்.

அப்படியெனில், சனி கடகத்திலிருந்ததற்குப் பலன் என்னவென்றால், இளைய சகோதர பலன்கள் மத்திமமாகவே இருக்கும். தாய்ப் பேச்சுக்கேட்டு உங்களுடன் சண்டையிடலாம். வாழ்வில் சில காலம் வறியவராகவும், பின்பு பணம், பொருள், செல்வம் ஆகியன சேர்த்துச் செல்வராகவும் இருக்க விதியுண்டாம். மீண்டும் வறியவராவதற்குக் கிரகங்கள் பலமாய் வேலை செய்யும்.

கடகத்தில் குரு உச்சமாகிச் சனியுடன் சேர்ந்தால், கல்விப் பட்டங்கள் வாங்குவதற்குத் தடை இருந்தாலும் கடினப்பட்டு வாங்கலாம். பொன், பொருள், ஆபரணச் சேர்க்கைகள் வாழ்வில் பிற்பகுதியிலேயே கிடைக்கும். சனியுடன் செவ்வாய் நீசமாகிச் சேர்ந்தால் சகோதர பலன்கள் கிடைக்கா. அவர்கள் தொந்தரவும் உண்டாகும். மற்ற கிரகங்கள் சனியுடன் கூடினால் மத்திம பலனாகவே இருக்கும். ஆளடிமை வர்க்கங்கள், வேலையாள்கள் போவதும் திரும்ப வருவதுமாய் இருப்பார்கள். சனிப் பிரீதிகளும் யந்திர, மந்திர பூஜைகளும் செய்ய நன்மையான பலனுண்டாகும் என்று சந்திரநாடி கூறுகிறது.

விருச்சிக இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 10ஆம் இடமாகிய சிம்மத்தில் தகப்பன் வீட்டில் பகை பெறுவதால், மத்திமமான பலன்களையே கொடுப்பார். சூரியன் சனியோடு கூடினால் முற்றிலும் 3ஆம் பாவத்தைப் பொறுத்தமட்டில் மத்திமமாகவே இருக்கும். இளைய சகோதரர்களால் முன் பலன்களும், தொழில் ஆக்கங்களும் உண்டு.

ஆனால், பின் பலன்களில் உங்களைக் கழற்றிவிடும். அரசியல் உயர்பதவிகள் கிடைத்தாலும், அவற்றால் தொல்லைகளும் இட மாற்றங்களும் அடிக்கடி உண்டாகும். ஆளடிமை வேலையாள்கள் இருந்தும் அவர்களால் பயன் கிடைக்கா. புகழின் உச்சிக்கே போய் அப்படியே அமுக்கிவிடும் நிலைகள் உண்டாகும். வீரியங்கள் நன்றாகவே இருக்கும்.

ஒரு நல்லது செய்தால் ஒரு கெட்டது என்ற அடிப்படையில் பலன்கள் இருக்கும். மற்ற கிரகங்கள் சனியோடு கூடினாலும் பார்த்தாலும் அவ்வளவு நல்ல பலன்கள் இல்லை. நீ மட்டும் தனித்திருந்தால் பலன்களைக் கூட்டிக் குறைத்துச் செய்வார்.

சூரியன், செவ்வாய் ஆகியன சனியோடு கூடினால் மத்திமமான பலன்களே உண்டாகும். சனிக்குப் பிரீதிகள் செய்தால் நல்ல பலன்கள் ஏற்பட்டுச் சுபிட்சமடைவார்கள் என்று ஸ்ரீமகரிஷி பதஞ்சலி சந்திர நாடி வாயிலாகக் கூறுகிறார்.

விருச்சிக இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 11ஆம் இடமான கன்னியில் இருந்தால் நல்ல பலன்கள் ஏற்படும். இளைய சகோதர இலாபம் உண்டாகும். இளைய சகோதரர்கள் வாழ்வில் சிறப்புடன் இலாப பலன்களை அடைவார்கள். தைரிய வீரியங்கள் அளவோடேயிருக்கும். எதிராளியின் குணத்திற்கு ஏற்றவாறு குணம் மாறும்.

சனியோடு சுக்கிரன் நீசமானால் பெண்களால் தொல்லையும் அளவு கடந்த போகத்தினால் வீரிய நட்டங்களும் உண்டாகும் ஆடை, ஆபரணச் சேர்க்கைகள், வெள்ளியாபரணங்கள், சுக்கில வீரியங்கள் ஆகியன குறையும். சனியானவர் புதனுடன் கூடக் கல்வியில் பட்டம் பெறுதலும், அதனால் செல்வாக்கு, புகழ், கீர்த்தி ஆகியன ஏற்படும்.

சனியோடு சூரியன், செவ்வாய் போன்ற சத்துரு கிரகங்கள் கூடினால் மூன்றாம் பாவ பலன்களைத் தடைசெய்யும். சனிக்குப் பிரீதிகள் செய்வதனாலும் யந்திர, மந்திர பூஜைகள் செய்வதாலும் நல்ல பலன்களைப் பூரணமாக அடையலாம் என்று சந்திரநாடி கூறுகிறது.

விருச்சிக இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதி இராசிக்கு 12ஆம் இடமான துலாத்தில் மறைந்து உச்சம் பெற்றால், உச்ச பலன்களும் இராசி 12-ம் மறைந்தால் மறைவுப் பலன்களையும் சேர்த்துத் தரும். உச்ச பலன்களாக இளைய சகோதர நன்மைகளும் தொடக்க காலத்தில் கூடியிருத்தலும் உண்டாகும். அவர்களினால் முன் இலாபங்களும், பின் அதிக விரயங்களும் உண்டு. கல்விப் பட்டங்கள் தடைப்படும். ஆனால், கேள்வி ஞானங்கள் சிறந்திருக்கும். பெண் போகங்களால் வீரிய விரயம் உண்டாகும்.

பெண்களினால் பண விரயமும் அபகீர்த்தியும் உண்டாகும். சனியோடு சுக்கிரன் ஆட்சியாகிச் சேர்ந்தால் பெண்களால் தொல்லைகளும் வீரிய நட்டங்களும் உண்டாகும். வேலையாள்கள்,

சேவகங்கள் ஒரு காலத்தில் நிரம்பி இருத்தலும், பின் அடியோடு மறைந்துவிடுவதும் உண்டு.

சனி கோட்சாரத்தில் சிம்மத்தில் நின்று துலாத்தைப் பார்த்தால் மறுபடியும் செல்வாக்கு, புகழ், கீர்த்தி ஆகியன உண்டாகும். உச்சம் பெற்ற சனியோடு நீசம் பெற்ற தகப்பன் சூரியன் கூடினால், விரயத்திலும் கொடுமையான பலன்கள் உண்டாம். ஆபரணச் சேர்க்கை, பொன், பொருள் போன்ற திரவியங்கள் இருந்தாலும் விரயமாகி மறுபடியும் கொடுக்கும். சனியின் உச்சபலனை அதிகப்படுத்தி மறைவு பலனைத் தடுக்கச் சனிப்பிரீதி செய்ய வேண்டும் என்று ஸ்ரீ பதஞ்சலி மகரிஷி கூறுகிறார்.

விருச்சிக இராசி 3ஆம் இடத்து அதிபதியான சனி இராசியிலே இருந்தால், விருச்சிகத்தில் பகை பெற்றுச் சனி இருந்தால், தன் சத்துரு சந்திரன் இராசியில் பகை பெற்றுக் கூடினால், பிறப்பிலேயே இளைய சகோதரர்கள் ஒற்றுமையில்லாதிருப்பார்கள். கல்விப் பட்டங்கள் வாங்குவதில் தடையும் ஏற்படும். வீரியங்கள் அதிகம் இருந்தாலும் அதனால் வில்லங்கமும் தடையும் ஏற்படும்.

வீரியங்கள் அதிகம் இருந்தாலும் பெண் ஆசையால் சண்டைகளும், அவற்றால் காயங்களும் ஏற்படும். உண்டாகும். சந்திரன், சனி, செவ்வாய் ஆகியன கூடி நிற்க, சில கால கட்டங்களில் யோகங்களால் பதவி, புகழ், ஆளடிமை ஆகியவை வந்து விலகும். அவற்றை உரிய பிரீதிகள் செய்து தக்க வைத்துக்கொள்ள வேண்டும். சனியுடன் இராகு கேதுக்களுள் எவரேனும் உச்சமானால் ஞான வழியில் ஈடுபாடு அதிகம் இருக்கும். அவ்வப்போது சண்டை சச்சரவுகள் மலிந்தும் இருக்கும். ஆபரணச் சேர்க்கைகள் குறைந்தே காணப்படும். யோக பலன்கள் தரும்போது சனி பிரீதிகள் செய்தும், மந்திர, யந்திர பூஜைகள் செய்தும் தக்க வைத்துக்கொள்ள வேண்டும் என்று ஸ்ரீ மகரிஷி பதஞ்சலி சந்திர நாடியின் மூலமாகக் கூறுகிறார்.

விருச்சிக இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 2ஆம் இடமான தனுர் இராசியில் இருந்தால் மத்திமமான பலன்கள் இருந்தாலும் நல்ல பலன்களாகவே இருக்கும். ஆனால், மந்தமான பலன்களைத் தரும். இளைய சகோதரர்களால் தன இலாபங்கள்

சில காலகட்டங்களில் உண்டு. பேச்சில் வீரதீரங்களும், விவரங்களும் உண்டு. இதனால் வில்லங்கங்கள், சண்டைகள் ஏற்படுவது உறுதி. "வாக்கில் சனி போக்கில் கேடு" என்றும், "வாக்குச் சனி .கோப்பைக் கலைக்கும்" என்றும் சொல்வார்கள். அதுமாதிரி, சனி வாக்கில் இருப்பது அவ்வளவு நல்லதல்ல.

வீரியங்கள் மிதமாகவும், போகங்கள் மிதமாகவும் இருக்கும். கல்விப்பட்டங்கள் வாங்கினாலும், புகழுக்கு உரியதாய் இராது. சனியுடன் குரு கூடியிருந்தால் பொன்னாபரணங்களும், சொர்ண மணிகளும் சேர்க்க விதி உண்டு. புகழ், கீர்த்தி, செல்வாக்கு ஆகியன இருந்தாலும், உங்கள் பேச்சினால் அவை குற்றப்படும்.

சனியுடன் செவ்வாய், கேது ஆகியவர்கள் கூடியிருந்தால் சகோ தரர்களிடையே மனக்கசப்பு கடைசிவரை உண்டு. சனியுடன் புதன், குரு, இராகு ஆகியன கூடினால் இளைய சகோதரர்கள் உங்களுக்கு உதவுபவர்களாகவும் உங்கள் பேச்சைக் கேட்பவர்களாகவும் இருப் பார்கள். இவற்றுக்குச் சனி பிரீதி, மந்திர எந்திர பூஜைகள் செய்து வந்தால் நற்பலன்கள் நடக்கும்.

## தனுசு
## மூன்றாம் பாவம்

இராசிக்கு 3ஆம் இடத்தைக் கும்பமாகவும், 3ஆம் இடத்து அதிபதியாகக் கும்பச்சனியையும் பெற்ற தனுர் இராசி அன்பர்களே!

உங்களின் 3ஆம் பாவ பலன்களில் இளைய சகோதரர்கள், பட்டம், பதவி, புகழ், ஆளடிமை, காது, தைரிய வீரியங்கள், பெண் போகங்கள், ஆபரணச் சேர்க்கைகள், வல்லமை போன்றவை அடங்கும். உங்கள் 3ஆம் இடத்து அதிபதி சனி, 12 இராசிகளில் ஒவ்வோர் இடங்களிலும் இருந்த பலன்களை ஸ்ரீபதஞ்சலி மகரிஷி சந்திர நாடியின் மூலமாக அறிந்து கூறப்பட்டுள்ளது. அன்பர்கள் தங்களின் 3ஆம் பாவாதிபதி எந்த இராசியில் இருக்கிறார் என்பதை அறிந்து பலனைத் தெரிந்துகொள்ளவும்.

"ஆமென்றே மந்தனவர் ஆட்சியுச்ச மேறில்
அறியக்கேள் மெத்தபலன் செய்வார் தானே !

போமென்றே நீசபகை யானாலுங் கூடி னாலும்
பொய்த்ததொரு பலன்களுமே மெத்த வாகும்
தேமென்றே தனித்தாலுஞ் சேர்ந்தா லுந்தான்
தரங்கெட்ட நங்கையரைப் புணரும் பாக்யம்
தூமென்றே தரணிதனில் பாக்கியனாய்
தனயனவன் ஆளடிமை வகையோடு வாழ்வான் பாரே"

சனியானவர் ஆட்சியுச்சமானால் நல்ல பலன்களைச் செய்வார். நீச, பகை வீடுகளிலும், கிரகங்களுடன் கூடினாலும் மத்திமமான பலன்களே உண்டாகும். மூன்றாம் பாவ வழியில் பலன்கள் தடைப்படும். சனி தனித்திருந்தாலும் உச்சமாகி நட்புக் கிரகங் களுடன் சேர்ந்தாலும் உ யர்பலன் உண்ட ாகும் என்று நாடிவாயிலாக அறியப்படுகின்றது.

தனுர் இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதி சனி இராசிக்கு 3இல் ஆட்சி பெற்றால், உத்தம பலன்கள் நடக்கும். கும்பச்சனியுடன் சூரியன் கூடினால் நல்ல பலன்களைச் செய்யமாட்டார். சந்திரன், செவ்வாய், கேது, குரு ஆகியவர்களுடன் கூடினால் மத்திமான பலன்களைத்தான் செய்வார். இராகுவுடன் சனி கும்பத்தில் ஆட்சியாகி இருந்தால் சேவக விருத்தி, பட்டம், தைரியம், துணிச்சலான செயல்கள், விவேகம், புகழ் ஆகியவை கிட்டும். பின்பு அவை நிலைத்திருக்க மாட்டா.

சனி, புதன் கூடி கும்பத்திலிருந்தால் நல்ல பலன்களைச் செய்வார். ஆகியன வியாபாரத்தினால் புகழ், பட்டம், அரசியல் பிர வேசம் ஆகியவை மூலம் ஆளடிமை, புகழ், கௌரவம் ஆகியவை கிடைக்கும் நிலையுண்டு.

சனியும் செவ்வாயும் கூடினால் கெட்ட பெயரே நிலைத்திருக்கும். பட்டம், பதவி ஆகியன இருந்தாலும் அவற்றை இழக்க வேண்டிய சந்தர்ப்பம் வரும். சனிக்குப் பிரீதிகள் செய்தால் நல்ல பலனை அடையலாம்.

கும்பச்சனியுடன் புதன், இராகு ஆகியவை கூடினால் சகோதர சகோதரிகள், அந்தஸ்து, செல்வாக்கு ஆகியவற்றுடன் கூடி இருப்பார்கள். பலசாலிகளாகவும் போகபாக்கியங்களைப் பெற்றவர் களாகவும் இருப்பார்கள். தங்கம், வெள்ளி, ஆடை, ஆபரணங்களில்

ஆசை உடையவர்களாய் இருப்பார்கள். தெய்விக, வழிபாடு, பக்தி, விசுவாசம் ஆகியவை உள்ளவர்களாய் இருப்பார்கள்.

தனுர் இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான கும்பச்சனி இராசிக்கு 4ஆம் இடமான மீனத்தில் நட்புடனிருந்தால், சுப சௌகரியங்களும் குடும்பத்தில் ஒற்றுமையும் நிலவும். இளைய சகோதரர்கள் நல்ல ஆயுள் ஆரோக்கியத்துடனிருப்பார்கள். தாய் வழி ஆதரவும் உங்களுக்கு நிறைய உண்டு. அந்தஸ்து, பட்டம், பதவி, புகழ், சௌகரியங்கள், பெண் போக சுகம் ஆகியவை உண்டு.

மீனச்சனியுடன் குரு ஆட்சி பெற்று கூடினால், நல்ல சுகபோகம் கிட்டும். ஆலயத் திருப்பணி, பக்தி, தெய்வ கைங்கர்யங்கள், இளைய சகோதர ஆதரவு ஆகியன உங்களுக்குக் கிட்டும்.

சனியுடன் சூரியன், செவ்வாய் கூடினால் தைரியம், வீரியம் கொண்டவராகவும் வெட்கப்படும் குணம் உடையவராகவும் இருப்பார். காதில் நோய் இருக்கும். சகோதரர்களுக்குக் கெடுதலை உண்டுபண்ணக்கூடியவராக இருப்பார்.

சனியுடன் புதன், இராகு ஆகியன கூடினால், ஆயுள் விருத்தி, இளைய சகோதரர்களிடத்தில் பிரியம், பட்டம், பதவி, புகழ், ஆளடிமை முதலியவை அமைய விதியுண்டு. திட புத்தியும், திட சிந்தனையும் உண்டு என்று சந்திர நாடி கூறுகிறது.

தனுர் இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான கும்பச்சனி இராசிக்கு 5ஆம் இடமான மேஷத்தில் நீசபங்கம் பெற்றபடியால், மனச்சஞ்சலம் உண்டாகும். பட்டம், பதவி, புகழ், தைரியம் ஆகியவை நிரம்பி இருந்தாலும், அவை கடைசிவரை நிலைக்கா.

சூரியனுடன் செவ்வாய் ஆட்சியானால் நீச பங்க ராஜயோகம் ஏற்பட்டு, 3ஆம் பாவ வழியாகப் பதவி, புகழ், கீர்த்தி ஆகியன யோகபலன்களாக அமையும். சனி நீசமாகிச் சூரியன் கூடினாலும் முற்பலன்கள் குறைவாகவே இருக்கும். இளைய சகோதரர்களால் முற்பகையும் பின் நன்மையும் இருக்கும்.

மேஷத்தில் சனி நீசமாகிச் செவ்வாய் கூடினால் இளைய சகோதரர்கள் தவிர மற்ற பலன்கள் பின் வகையில் நல்லபடியாக இருக்கும். பட்டம் வாங்குவதிலும் முன் தடைகள் உண்டு. கால்கள்

பின் வயதில் வீரியமற்று நோயுண்டாகலாம். பட்டம், பதவி, புகழ், கீர்த்தி, ஆளடிமை, செல்வாக்கு போன்ற பலன்கள் மேஷத்தில் சனி தனித்திருந்தால் நாற்பது வயதிற்குமேல் பலனும், சனியுடன் உச்ச ஆட்சிக்கிரகம் கூடினால் யோகபலனும் சனியுடன் பகைக் கிரகங்கள் கூடினால் அதமப்பலன்களும் உண்டு என்று சந்திர நாடியின் வழியாக அறியப்படுகிறது. மந்தனாகிய சனிக்கு எந்திர, மந்திர பிரீதிகள் செய்வதாலும், சனீஸ்வரனை வழிபடுவதாலும், சாஸ்தாவை வணங்க யாத்திரை செல்வதாலும் நல்ல பலன்கள் உண்டு என்று கூறப்படுகிறது.

தனுர் இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதி கும்பச்சனி இராசிக்கு 6ஆம் இடமான ரிஷப இராசியில் நட்புப் பெற்றிருந்தாலும் மத்திமமான பலன்களே தருவார். இளைய சகோதரப் பலன்கள் குறைவாகவே இருக்கும். தைரிய வீரியங்கள் பொதுவாகவே இருந்தாலும் எதிரியின் பலத்திற்குத் தக்க அவை வெளிப்படும் என்றே கூற வேண்டும். பட்டங்கள் வாங்குவதில் தடையும் அவற்றின் முறய்சியினால் கடனும் கவலையும் ஏற்படலாம்.

சனியுடன் சுக்கிரன் கூடி ஆட்சியானால் பொன், பொருள் சேர்க்கைகள், வெள்ளி ஆபரணங்கள், ஆடை அணிகலன்கள் ஆகியவை இருந்தாலும் கடன் காரணமாக அவற்றை இழக்க நிலையுண்டு.

பொதுவாக, ரிஷபத்தில் சூரியனைத் தவிரச் சனியுடன் மற்ற கிரகங்கள் கூடினால் சுமுகமான பலன்களுள் நல்ல பலனாக இருக்கும். சனியுடன் சூரியன் கூடினால் கடன் தொல்லைகளும் புகழ்க்குறைவும் அபகீர்த்தியும் உண்டு. தனக்குக் கீழ் ஆளடிமை வர்க்கமிருந்தாலும் தனக்கு எதிராகவே செயல்படும் நிலையுண்டு.

அபகீர்த்தி ஏற்பட்டால் மறுபடியும் புகழ் பெற மிகவும் கடினமாய் இருக்கும். சனிக்கு எந்திர, மந்திர பிரீதிகள் செய்வதாலும், எள்ளுப் படையல் படைப்பதாலும் காகத்திற்கு அன்னமிடுவதாலும் நல்ல பலன்களை அடையலாம்.

தனுர் இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான கும்பச்சனி இராசிக்கு 7ஆம் இடமான மிதுனத்தில் நட்புடனிருந்தால் நல்ல பலன்களுண்டாம். தைரியங்களும் வீரியங்களும் பராக்கிரமச்

செயல்களும் உண்டு. சனியுடன் புதன் ஆட்சியாகிக் கூடினால் கல்விப்பட்டங்கள். வாங்கலாம். வரக்கூடிய பெண்ணால் தைரியமும் புகழும் செல்வாக்கும் ஆபரணச் சேர்க்கைகளும் உண்டு. இளைய சகோதரர்கள் தன்னுடன் ஒத்துச் செல்லும் நிலை ஏற்படும்.

சனியுடன் கேது கூடினால் மனைவி வகையில் தைரிய ஆதரவுகளும் பக்கபலமும் உண்டாகும்; ஆனால், தன்னைத் தாழ்த்தும் நிலை உண்டாம். மனைவியால் போகபாக்கியங்களும் செல்வங்களும் வரலாம்.

சனியுடன் தன் தகப்பன் கிரகமாகிய சூரியனைத் தவிர மற்ற கிரகங்கள் கூடினால் நற்பலன்களே ஏற்படும். தனக்குக் கீழ் ஆளடிமை வர்க்கங்களும், கை கட்டிய சேவகங்களும் உண்டாம். சனியுடன் சூரியன் கூடினால் நிலைமை தலைகீழாக மாறும். மனைவி வகையில் அபகீர்த்திகளும் துஷ்ட ஏச்சுகளும் பேச்சுகளுமுண்டு.

பொதுவாக 40 வயதிற்குமேல் உயரிய யோகங்களும் மனைவியால் 3ஆம் இட பாக்கியங்களும் கிட்டலாகும். சனிக்குத் தக்க பிரீதிகள் செய்வதாலும், எந்திர, மந்திர பூஜைகள் செய்வதாலும் துர்பலனைத் தவிர்த்து நற்பலனை அடையலாமென்று அறியப்படுகிறது.

தனுர் இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதி கும்பச்சனி இராசிக்கு 8ஆம் இடத்தில் கடகத்தில் பகை பெற்றிருந்தால் பெரும்பாலும் அதமப் பலன்களே உண்டாம். இளைய சகோதரர்களால் துக்கமும் அபகீர்த்திகளும் ஏற்படும். சகோதர ஒற்றுமைகள் குறைவாகும்.

சனியுடன் செவ்வாய் நீசமாகிக் கூடினால் வீரதீர பராக்கிரமங்கள் இருந்தும் அவற்றால் தொல்லைகளும் மரணபயமும் உண்டாகும். இரத்தக் காயங்களும், பலிகளும் ஏற்படலாம். துஷ்ட ஸ்திரீகள் சகவாசத்தினால் சுக்கில அழிவும், நபும்சகத் தன்மையும் ஏற்படக் கூடும். தனக்குக் கீழ் ஆளடிமைகள் இருந்தாலும் அவர்கள் துரோகி களாகவும், தன் உயிர்க்கே உலை வைப்பவர்களாகவும் இருப்பர்.

சனியுடன் குரு உச்சமாய்க் கூடினால் குறுக்கு வழியில் பொருள் சேர்க்கையும் புகழும் ஏற்படும். புகழ் அவப்புகழாகவே இருக்கும்.

இவர்களுடன் செவ்வாயும் கூடினால் நீசபங்க ராஜயோகத்தையும், அதனால் சில நன்மைகளையும் பெறலாம். தன் தைரிய வீரிய குணத்தால் களங்கமும் சத்துரு பகையும் சனியுடன் செவ்வாயும் குருவும் கூடுவதால் ஏற்படும்.

சனியுடன் மற்ற கிரகங்கள் கூடினால் அதமமான பலன்களே உண்டாகும். சனியுடன் கேது கூடுவதால் ஞான மார்க்கங்களே உண்டாகும். தீயதில் ஒரு நல்லது என்ற வகையில் நடக்கும். கல்விப் பட்டங்கள் பெறுவதைத் தடுக்கவும் விதிகள் ஏற்படும். சனிக்குக் கடுமையான பிரீதிகள் செய்வதன் முலம் நல்ல பலன்களைப் பெறலாம் என்று பதஞ்சலி மகரிஷியின் சந்திர நாடியின் வாயிலாக அறியப்படுகிறது.

தனுர் இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான கும்பச்சனி இராசிக்கு 9ஆம் இடமான சிம்ம இராசியில் தகப்பன் வீட்டிலிருந்தால் பெரும்பாலும் மத்திமமான பலன்களே ஏற்படும். இளைய சகோதரர்கள் தம் தந்தையின் பேச்சை மதிக்க மாட்டார்கள். தைரிய வீரியங்கள், பதவிகள், செல்வாக்கு, கீர்த்தி போன்றவை இருந்தாலும் எப்போது ஆட்டம் காணும் என்று சொல்ல முடியாது. சனியுடன் குரு கூடுவதால் சில நன்மைகள் உண்டாகும்.

பொன், பொருள், ஆபரணச் சேர்க்கைகளும் உயர்ந்த பீடங்களில் ஆளுமைகள் கிடைத்தாலும் இங்குமங்கும் அலையும் நிலையிலேயே உண்டாம். உஷ்ணத்தால் வெள்ளை, வெட்டை ஆகிய நோய் ஏற்பட்டு உடல் வீரியம் குறைய ஏதுவாகும். கால் நோய்களும் உண்டாம்.

சனியுடன் சூரியன் ஆட்சியாகிக் கூடினால் 3ஆம் பாவ வழியில் அனைத்துச் செல்வ வழிகள் இருந்தாலும், அவை நிலையாக இருப்பது கடினமாகும்.

சனியுடன் குருவைத் தவிர மற்ற கிரகங்கள் கூடினால் மத்திம பலனே உண்டாம். கல்விக் கஷ்டங்களும் அவற்றிலிருந்து மீண்டபின் உயரிய பதவிகளும் உண்டு. சனியுடன் சூரியன் கூட பிதுர் வகையில் அபகீர்த்தி ஏற்பட நேரும். சனிக்குத் தக்க பிரீதிகள் செய்வதாலும்

அன்னதானம், படையல் ஆகியன செய்வதாலும் நற்பலன்களை அடையலாம்.

தனுர் இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான கும்பச்சனி இராசிக்கு 10ஆம் இடமான கன்னியில் நட்புப் பெற்றிருப்பதால் நல்ல பலன்களே உண்டாம். இளைய சகோதரர் உதவி கிட்டவும், தன்னுடன் சேர்ந்து தொழில் நடத்தவும், தன் தந்தைக்குத் தன்னுடன் சேர்ந்து கர்மம் செய்யவும் விதியுண்டாம். தைரியம் இருந்தாலும் அது சமயத்திற்கேற்பவே இருக்கும். சனியுடன் சுக்கிரன் நீசமாகினால் துஷ்ட ஸ்திரீ போகங்களும், அவர்களின் சகவாசங்களும், அதனால் தொழில் கெட்டு அபகீர்த்திகளும் புகழ்க்குறைவும் ஏற்பட விதியுண்டு.

சனியுடன் சூரியன் கூடினால் தன் குலத்தொழில் அல்லது வேறு மார்க்கங்களில் புகழ் பெற விதியுண்டு. தொழில் விஷயங்களில் தைரியமும் வீரியமும் பிரதாபங்களும் ஏற்படும். பேச்சு சாமர்த்தியமும் உண்டு. ஆனால், மந்தமான நிலைகளையே ஏற்படுத்தும்.

சனியுடன் அரவு கூடுவதால் சில உயர்யோகப் பலனிருக்கும். சனியுடன் புதனும் சுக்கிரனும் சேர்ந்திருந்தால் நீசபங்க ராஜயோகம் ஏற்பட்டு 40 வயதிற்குமேல் புகழும் கீர்த்தியும் செல்வாக்கும் ஏற்படும். தனக்குக் கீழ் சேவகங்களும் ஆளடிமை வர்க்கங்களும் உண்டாகும். தன் தொழிலினாலே ஆபரணச் சேர்க்கைகளும் பொன், பொருள் அணிகலன்கள் பெறவும் விதியுண்டு. கல்விப்பட்டங்களை எவ்வா றேனும் வாங்க விதி ஏற்படும். கணிதத்துறையிலும் எழுத்து வகை யிலும் ஈடுபாடும் லோக மார்க்கங்களில் கொடிகட்டிப் பறக்கும் நிலையும் ஏற்படும். சனிக்குப் பிரீதிகள் செய்வதாலும் யந்திர, மந்திர பூஜைகள் செய்வதாலும் உயர்பலன்களை அடையலாம்.

தனுர் இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான கும்பச்சனி இராசிக்கு 11ஆம் இடமான துலாத்தில் உச்சம் பெற்றிருப்பதால் நல்ல பலன்களே நடக்கும். இளைய சகோதரரால் நன்மையும், பட்டம், பதவி, புகழ், ஆளடிமை, சேவகர்கள் ஆகிய நன்மைகளும் ஏற்படும்.

இளைய சகோதரர்களால் மதிப்பு, அன்பு ஆகியவற்றைப் பெறும் பாக்கியம் கிட்டும்.

துலா இராசியில் உச்சம் பெற்ற சனியுடன் சுக்கிரன் கூடி இருந்தால், பொருள், தனம், இலாபம் ஆகியன வந்து சேரும். தைரியம், வீரியம், கல்வியில் பட்டம் பெறுதல், புகழ், கீர்த்தி ஆகியன உண்டாகும். ஆயுள், ஆரோக்கியம், சிவிகை, பல்லக்கு போன்ற சுக யோகங்களை அனுபவிக்கும் பாக்கியமும் கிட்டும்.

சனியுடன் குரு, செவ்வாய், கேது ஆகியன கூடினால் மத்திமமான பலன்கள் நடக்கும் 'பெண்களினால் வியாதிகளும் விபத்துகளும் மனச்சஞ்சலங்களும் மனக்கஷ்டங்களும் இருக்கும். பதவிகளை இழக்க நேரும் காலமாக இருக்கும். புகழ் மங்கும்.

சனியுடன் சூரியன் நீசமாகிக் கூடினால் பிதுர் வகையில் கர்மம், பிதாவுக்குப் பீடைகள் ஆகியன உண்டு. சனியுடன் இராகு, புதன் ஆகியன கூடினால், கொடுக்கல் வாங்கலில் நல்ல இலாபங்களும், இளைய சகோதரர்களினால் நன்மையும் உண்டாகும். இதற்குச் சனிக்குச் சாந்திகள், பிரீதிகள், மந்திர, எந்திர பூஜைகள் ஆகியன செய்.து வழிபட்டால் நல்ல பலன் கிடைக்கும்.

தனுர் இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான கும்பச்சனி இராசிக்கு 12ஆம் இடமான விருச்சிகத்தில் பகை பெற்று இருந்தால், மத்திமமான பலன்கள்தாம் நடக்கும். சத்துரு உபாதை, கால விரயம், பொருள் விரயம், இளைய சகோதரர்களால் விரயம் போன்றவை ஏற்படும்.

சனியுடன் ஆட்சி பெற்ற செவ்வாய் கூடினால் சகோதரர் களினால் பொன், பொருள், பூமி ஆகியவற்றில் விரயமும், செலவு களும் அதிகரித்துக் கடன் உபாதைகளால் கஷ்டப்பட நேரிடும். பட்டம், பதவி, புகழ் முதலிய எல்லாமே பிற்பகுதியில்தான் கிடைக்கும். முன்கோபம் அதிகரிக்கும். வீண் சண்டைகள்,

சச்சரவுகள் வந்து மாறும் நிலை உருவாகும். பட்டங்கள் வாங்குவது தடைப்படும்.

சனியுடன் குரு, சூரியன் ஆகியன கூடினால் கண் சம்பந்தமான நோய்களும் பிராமணத் துவேசமும் நிகழும். சூரியன் பின்னிரண்டில் சனியுடன் கூடி இருப்பதால் பிதுர் வர்க்கத்துக்கும் பீடையும் வரும். வீரிய விரயமும் உண்டாகும்.

சனியுடன் புதன், இராகு ஆகியன சேர்ந்திருந்தால் சுமாரான நல்ல பலன்களே நடக்கும். பெண் போகங்கள் நிறைந்திருக்கும். முரட்டுத்தனமான பெண்களின்மீது மோகம் அதிகரித்து வீண் வம்புகளும் செலவுகளும் வரும். சனிக்குப் பிரீதிகளும், மந்திர, எந்திர பூசை ஆகியவையும் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

தனுர் இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான கும்பச்சனி இராசியிலே இருந்தால், நட்புடன் இருப்பதால், மத்திம பலன்கள் நடந்தாலும் நல்ல பலன்களாகவே கூடியவரையில் நடக்கும். பலன்கள் மெதுவாக நடைபெறும். இளைய சகோதரர்களால் தைரியம், வீரியம், பட்டம், பதவி, புகழ், ஆளடிமை போன்றவை குறையாது இருக்கும்.

தனுர் இராசியில் உள்ள சனியுடன் குரு சேர்ந்தால் குரு சண்டாள யோகம் ஏற்படும். தெய்வபக்தி, சிவ ஆலயப் பணிகள், திருப்பணிகள் முதலியவற்றில் ஈடுபாடும் ஏற்படும். பட்டம், பதவிகளை சில நாள் அனுபவிக்கும் நிலை ஏற்படும்.

சனியுடன் சூரியன், செவ்வாய், கேது ஆகியன கூடினால் புகழைக் கெடுக்கும். கோப குணங்களும் மூர்க்கத்தனங்களும் நிறைந்திருக்கும். பதவியில் இருந்தால் பதவி விலக வேண்டிய சூழ்நிலைகள் உருவாகும்.

சனியுடன் புதன், சுக்கிரன் ஆகியன சேர்ந்தால் நல்ல பலன்களாகவே நடக்கும். பட்டம், பதவி, புகழ் போன்றவை கிடைக்கும். கல்வியில் பட்டம் கிடைக்கும். காரகப்பிரீதிகள்,

பூஜைகள், மந்திர எந்திர பூஜைகள் ஆகியன செய்தால் நற்பலன்கள் ஏற்படும்.

தனுர் இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 2ஆம் இடமான மகரத்தில் இருந்தால், மத்திமமான பலன்களே நடக்கும். இளைய சகோதரர்கள் மந்தமாகவே இருப்பார்கள். தைரிய வீரியங்கள் இருந்தாலும் சில நேரம் அவற்றைப் பயன்படுத்த முடியாதபடி இருப்பார்கள். பொன், பொருள், ஆபரணச் சேர்க்கைகள் இருந்தாலும், அவற்றின்மீதுள்ள ஆசை, வரவர இல்லாமல் போய் விடும். பாராட்டையும் பட்டங்களையும் மிகவும் கஷ்டப்பட்டே பெறவேண்டும்.

பதவி, புகழ் ஆகியவற்றை நீண்ட காலத்திற்கு இருக்குமாறு செய்யும். சனியுடன் சூரியன், செவ்வாய் ஆகியன கூடினால், முரட்டுத் தைரியங்களும் முன்கோபங்களும் நிறைந்திருக்கும். அடிக்கடி சண்டை சச்சரவுகள் ஏற்படும். போகத்தில் அதிக விருப்பம் ஏற்பட்டு அதனால் தொல்லைகள் வந்து சேரும்.

சனியுடன் குரு நீசமாகிச் சேர்ந்திருந்தால், ஆசாரங்களுக்கு மாறு பட்டு நடப்பர். துஷ்டத்தனமான பேச்சுகளும், செய்கைகளும் அதிகம் நிறைந்திருக்கும். ஆளடிமைகள் அவ்வாறே வந்து சேர்வார்கள். காலம் கடந்தே கல்வியில் பட்டம் வாங்க வேண்டியது வரும். சனியுடன் சுக்கிரன், புதன் ஆகியன கூடினால் பட்டம், பதவி, புகழ் ஆகியவற்றைக் கொடுத்துப் பிடுங்கிக்கொள்ளும் நிலை உருவாக லாம். இளைய சகோதரர்களால் உங்களுக்குத் தக்க நேரத்தில் உதவிகள் கிடைக்காது. சனி பிரீதி, மந்திர, எந்திர பூஜைகள் ஆகியன செய்தால் நற்பலன்கள் கிட்டும்.

# மகரம்
# மூன்றாம் பாவம்

இராசிக்கு 3ஆம் இடத்தை மீனமாகப் பெற்ற மகர இராசி அன்பர்களே!

உங்களின் 3ஆம் பாவ பலன்களில் இளைய சகோதரர், பட்டம், பதவி, புகழ், ஆளடிமை, தைரிய வீரியங்கள், பெண் போகங்கள், காது, வல்லமை போன்றவை அடங்கும்.

மூன்றாம் இடத்து அதிபதியான குரு, 12 இராசிகளில் ஒவ்வோர் இடங்களிலும் என்னென்ன பலன்களைச செய்வார் என்று, ஸ்ரீ பதஞ்சலி மகரிஷியின் சந்திர நாடியின் மூலமாக அறிந்து கூறப்பட்டுள்ளது. அன்பர்கள் உங்களின் இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான குரு எந்த இராசியில் இருக்கிறார் என்று பார்த்துப் பலனைத் தெரிந்துகொள்ளவும்.

"குருவுமவர் மூன்றோனாய் வந்தா லுந்தான்
குறிப்பான யாட்சியுச்ச யில்லந் தன்னில்
பிருகுமவர் புங்கனொடு கூடிடாது யிருந்தாலே
பங்கமில்லை தைரியமும், வீரி யந்தான்
கருதவரும் ஆளடிமை அணிக லன்கள்
குமரருக்குத் தரணிமேல் புகழ்வாழ்வாம்
மருவவரும் முதற்சாதி நங்கையரும்
மையலுடன் நாயகனுக் கிசைவார் தானே."

குருவானவர் ஆட்சியுச்சமானாலும், புதன், சுக்கிரன் ஆகியவற்றுடன் கூடாமல் தனிப்பலம் பெற்றாலும், நட்புக் கிரகத்துடன் கூடினாலும் மிகவும் உயர்வான பலன்களை மூன்றாம் பாவ வழியில் கொடுப்பார் என்று கருதப்படுகின்றது.

மகர இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 3-ஆம் இடமான மீனத்தில் ஆட்சி பெற்றிருந்தால் மிகவும் உத்தமமான பலன்களே நடக்கும். இளைய சகோதரர்களால் நன்மைகள் அதிகமுண்டு. அவர்களும் பொன், பொருள், பூஷணாதி, மற்றும் நல் ஒழுக்கம், பிராமணத்துவம் முதலியனவும் நிறைந்து

இருக்கும். செல்வாக்கு, கௌரவம், புகழ், கீர்த்தி, தைரியம், வீரியங்கள், கல்விப் பட்டங்கள் ஆகியவை கிடைக்க விதியுண்டு.

குருவுடன் சூரியன், செவ்வாய் ஆகியன சேர்ந்திருந்தால் இளைய சகோதரரால் இலாபங்கள் அதிகம் இருக்கும். அரசாங்கப் பதவி, அந்தஸ்து, தலைமைப் பதவி, அதிகாரம் நிறைந்த பதவி ஆகியன வாய்க்கும். அணிகலச் சேர்க்கைகளும் உண்டு. கல்வியில் பட்டம் கிடைக்கவும் விதியுண்டு.

குருவுடன் சனி, புதன் ஆகியன சேர்ந்தால் புதன் நீசமாகிப் பங்கம் பெற்றிருப்பதால் நீசபங்க ராஜயோகம் ஏற்படும். அதைத் தக்க வைக்கும் நிலையுண்டு. சனி சேர்ந்திருப்பதால் கல்விப்பட்டங்கள் வாங்குவதில் தடை ஏற்பட்டு மந்தமான நிலை உண்டாம்.

குருவுடன் சுக்கிரன் உச்சமாகிக் கூடுவதால், சுக்கில வீரியங்கள் அதிகமாகும். மதன லீலைகளில் நாட்டம் அதிகமிருக்கும். அதனால் இலாபங்களும் நட்டங்களும் கலந்தே வரும். தனக்குக் கீழ் ஆளடிமை வர்க்கங்கள் இருப்பதற்கு விதியுண்டாம். சுகபோக வாழ்க்கையை நாட வேண்டியிருக்கும். குருவுக்குத் தக்க பிரீதிகள் செய்தால் நல்ல பலன்களை அடையலாம்.

மகர இராசி 3ஆம் இடத்து அதிபதியாகிய குரு இராசிக்கு 4ஆம் இடமான மேஷ இராசியிலிருந்தால், மத்திமமான பலன்கள் உண்டாம். ஆனால், பாதகப் பலன்கள் குறைவாக இருக்கும். இளைய சகோதரப் பலன்கள் குறைவாகவே உண்டு.

குருவுடன் செவ்வாய் ஆட்சியாகிச் சேர்ந்தால் இளைய சகோதரர்கள் வீர தீரங்களிலும் பராக்கிரமங்களிலும். மேன்மையுற்று இருப்பார்கள். ஆனால், அவர்களால் உங்களுக்குப் பலன் குறைவு. குருவுடன் சூரியனானவர் உச்சமாகிக் கூடின் பதவிகளும் புகழும் உயரிய பீடங்களும் உண்டாகும். மனை மற்றும் உழவு மார்க்கங் களால் புகழ் ஏற்பட விதியுண்டு.

குருவுடன் சூரியன் சேர்ந்து சனியும் நீசமாகிக் கூடுவானாகில் நீசபங்கம் உண்டெனினும், அதனால் ஏற்படக்கூடிய இராஜயோகம் அவர்களின் திசைப்புத்தியிலே கிடைக்கும்.

குருவுடன் மற்ற கிரகங்கள் கூடின் மத்திமமான பலன்களே உண்டாகும். குருவுடன் அரவு கூடினால் நற்பலன்கள் உண்டு. கல்வியில் பட்டங்கள் வாங்குவதற்குத் தடை ஏற்பட்டுப் பின் விலகும். இதற்குக் குரு பிரீதியையும், மந்திர, எந்திர, பூஜைகளையும் செய்தால் நன்மையான பலனுண்டு.

மகர இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 5ஆம் இடமான ரிஷபத்திலிருந்தால், மத்திமமான பலன்களே நடக்கும். பட்டம், பதவி, புகழ், ஆளடிமை போன்றவை கடைசிவரை நிலைத்து நிற்கா. இளைய சகோதரர்கள்மீது அவ்வப்போது மனக்கசப்பு உண்டாகும். தெய்விக வழிபாடுகள், ஒழுக்கம், நற்பண்புகள் ஆகியன உண்டாகும். புத்திர உற்பத்தியும் உண்டாகும்.

குருவுடன் சூரியன், செவ்வாய் ஆகியன கூடி இருந்தால், மத்திமமான பலன்களே நடக்கும். கல்விப்பட்டம் வாங்குவதில் தடை ஏற்படும். இளைய சகோதரர்களுக்குத் தைரியம், வீரியம் ஆகியன ஏற்படும்.

குருவுடன், சந்திரன், சனி ஆகியன கூடி இருந்தால் நல்ல பலன்கள் முதலில் ஏற்பட்டாலும், பின் அவை மட்டுப்படும். இளைய சகோதரர்கள் குடும்பத்தில் அவ்வப்போது சண்டை சச்சர விடுவார்கள். அவர்களுக்கு மனச்சஞ்சலங்களும் உண்டாகும். குடும்பத்தில் நிம்மதி இராது.

குருவுடன் சுக்கிரன் ஆட்சி பெற்று அமர்ந்திருந்தால் பொன், வெள்ளி ஆபரணம் ஆகிய சேர்க்கைகள் ஏற்படும். சுகபோகங்களும் அதிகமிருக்கும். கலைகளில் அதிகம் பிரியம் கொண்டவர்களாய் இருப்பார்கள். இவை நிலைத்து நிற்க, குரு பிரீதியையும், மந்திர, எந்திர பூசைகளையும் செய்தால் நற்பலன்கள் ஏற்படும்.

மகர இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 6ஆம் இடத்தில் மிதுன இராசியில் நட்புடன் அமர்ந்திருப்பதால் மத்திமமான பலன்களே நடக்கும். இளைய சகோதரர்களால் சத்துருக் களாகவும், திரேக பீடை நிறைந்தவர்களாகவும், அரசாங்கத்தின் அவமதிப்பைப் பெறுபவர்களாகவும் இருப்பார்கள். அதிகாரிகளால் தொல்லைகள் ஏற்படும்.

குருவோடு புதன் ஆட்சியானால் கல்விப்பட்டங்கள், மதிப்பு, அந்தஸ்து, கௌரவம் போன்றவை ஏற்படும். தாய்மாமன் மூலம் இலாபங்களும், அதே சமயத்தில் தொல்லைகளும் வந்து சேரும். கடன்கள் அதிகம் ஏற்படும். சண்டைகள், சச்சரவுகள் ஆகியன வந்து மாறும்.

குருவோடு சூரியன், செவ்வாய் ஆகியன சேர்ந்தால் இளைய சகோதரர்கள் தைரியசாலிகளாக, வீரியம் மிக்கவர்களாக, பராக்கிரம சாலிகளாக இருப்பார்கள். எதிரிகளை வெல்லக்கூடிய தைரிய வீரியம் ஏற்படும். கடன்கள் எளிதில் அடையும். பெண்களால் உஷ்ண சம்பந்தமான நோய்களைப் பெற்று அவதியும், கஷ்டமும் அடிக்கடி வந்து மாறும்.

குருவோடு சனி, சுக்கிரன் ஆகியன சேர்ந்தால் பட்டம், பதவி, புகழ் ஆகியவற்றில் தடங்கல் ஏற்படும். குருவுக்கு எந்திர, மந்திர, பிரீதிகளையும் பூஜைகளையும் செய்து திருப்திப்படுத்தினால் நற்பலன் கள் நடக்கும் என்று சந்திரநாடி கூறுகிறது.

மகர இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 7ஆம் இடமான கடக இராசியில் உச்சம் பெற்றால் நல்ல பலமான பலன்கள் நன்மையாக நடக்கும். இளைய சகோதரர்கள் தெய்வ பக்தி, ஆலயத் திருப்பணி புரிதல், நல்லொழுக்கம், நற்பண்பு ஆகியவை கொண்டவர்களாய் இருப்பார்கள். பட்டம், பதவி, புகழ், கீர்த்தி, தலைமைப் பதவி ஆகியவை உங்களை வந்தடையும்.

சுக்கிரன் சேர்ந்திருந்தால் சதா ஸ்திரீலோலராகவும், தம் சுகங் களையும் சௌகரியங்களையும் அனுபவிப்பவராகவும் இருப்பார்கள். தைரியம், வீரியம், பட்டம், பதவிகள் ஆகியவை உண்டாகும். பெண்கள் மூலம் பொன், பொருள், ஆஸ்திகள் ஆகியன வந்தடையும். சுகவாசியாகவும், படுக்கை சுகங்களை மிகவும் அனுபவிப்பவராகவும் இருப்பார்கள்.

குருவோடு புதன், சனி, இராகு, கேது ஆகியவர்கள் சேர்ந்தால், கல்விப் பட்டங்கள் வாங்குவதில் தடை ஏற்படும். கீழ்நிலையில் உள்ள பெண்களின் சகவாசமும், பெண்களின் மூலம் பணச்செலவும், வியாதிகளும் வந்து சேரும். குரு பிரீதி செய்தாலும், மந்திர, யந்திர

பூஜைகள் செய்தாலும் நற்பலன்கள் நடக்குமென்று சந்திர நாடி கூறுகிறது.

மகர இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 8ஆம் இடத்தில் சிம்ம இராசியில் குரு நட்புப் பலத்துடன் அமர்ந்திருந்தால், மத்திமமான பலன்கள் நடக்கும். இளைய சகோதரர்களிடத்தில் மனக்கசப்பு ஏற்படும். பட்டம், பதவி, புகழ், ஆளடிமை, தைரியம் ஆகியவை குறைந்து காணப்படும்.

குருவோடு சூரியன் சிம்மத்தில் ஆட்சி பலத்துடன் இருந்தால் தைரியம், வீரியம் ஆகியன நிறைந்து காணப்படும். இளைய சகோதரர்கள் உண்டு. குடும்பத்தை நிர்வகிக்கும் பொறுப்பும் கடன் தொல்லையும் ஏற்படும்.

குருவோடு இராகு, புதன் ஆகியன கூடினால் உடலுக்கு அங்கஹீனம், அசௌக்கியம் ஆகியவை உண்டாம். பட்டம், பதவி, புகழ், ஆளடிமை போன்றவை அமையாதிருக்க விதியுண்டு. பண விரயமும், கால விரயமும் ஏற்படும்.

குருவோடு சுக்கிரன் கூடினால் பெண்களினால் வியாதிகளும் சகோதரர்களால் பொருள் இழப்பு, மனக்கசப்பு ஆகியவை உண்டாகும். இதற்கு குருகாரக பிரீதியும், யந்திர, மந்திர பூஜைகளும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும்.

மகர இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான குரு, இராசிக்கு 9ஆம் இடமான கன்னி இராசியில் நட்புடனிருந்தால், இளைய சகோதரர்களினால் நற்பலன்களும், பட்டம், பதவி, புகழ், தைரியம், வீரியம் ஆகியவையும் நிறைந்திருக்கும். வீர பராக்கிரமங்கள் பொருந்தியிருக்கும். பக்தி விசுவாசமும் உண்டு. பட்டம், பதவி, புகழ் ஆகியவற்றில் தடை ஏற்படும். கல்விப்பட்டங்கள் வாங்க முடியாது தடை ஏற்படும்.

குருவுடன் புதன் ஆட்சி உச்சம் பெற்றால் தந்தைவழிச் சொத்துகளும், தாய்மாமன்வகை ஆதரவும் கிட்டும். பட்டம், பதவி, புகழ், தைரியம், வீரியம் ஆகியன நிறைந்து இருக்கும். கல்வியில் புகழும் பட்டங்களும் கிடைக்கும். இளைய சகோதரர்களினால் நன்மையான பலன்கள் கிடைக்கும்.

குருவுடன் சுக்கிரன், இராகு ஆகியன சேர்ந்தால், பெண்களின் மேல் அதிக மோகமும், பெண்களினால் வியாதியும், பணச்செலவும், இளைய சகோதரர்களினால் கஷ்டங்களும் மனக்கசப்பும் உண்டாகும். தொழிலில் மந்தமான நிலைகளும் உண்டாகும். இதற்குக் குரு பிரீதியும் யந்திர, மந்திர பூஜைகளும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும் என்று ஸ்ரீ பதஞ்சலி மகரிஷியின் சந்திர நாடி கூறுகிறது.

மகர இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 10ஆம் இடமான துலாத்திலிருந்தால், மத்திமமான பலன்களே ஏற்படும். இளைய சகோதரர்களால் உங்களுக்கு எந்த விதமான நன்மைகளும் கிட்டா. இளைய சகோதரர்களுக்குப் பலம் குறைவாக இருக்கும். அந்தஸ்து, பட்டம், பதவி, புகழ், ஆளடிமை ஆகியவை குறைந்தே காணப்படும். தாராள மனமுள்ளவர்களாய் இருப்பார்கள். உத்தியோகம் தடைப்பட்டு மறுபடியும் கிடைக்க விதியுண்டு.

குருவோடு சுக்கிரன் ஆட்சி பெற்றிருந்தால் இளைய சகோதரர் களால் நன்மையும், பெண்களின்மீது அதிக மோகம் ஏற்படும். அதனால் வியாதியும், பணச் செலவும், அபகீர்த்தியும் ஏற்பட்டாலுங் கூட பட்டம், பதவி, புகழ், ஆளடிமை, சேவகவிருத்தி, வண்டி, வாகன யோகங்கள் ஆகியன உண்டு.

குருவோடு சனி சேர்ந்து உச்சம் பெற்றால், கல்வியில் தடையும், புகழ், கீர்த்தி, தைரியம், வீரியம் ஆகியவை வந்து விலகும் நிலையும் உண்டு. இளைய சகோதரர்கள் சத்துருக்களாகவும், பலமில்லாதவர்களாகவும் விளங்குவார்கள். இதற்குக் குருகாரக பிரீதியும், மந்திர, யந்திர பூஜைகளும் செய்தால் நற்பலன்கள் கிட்டும். இவ்வாறு ஸ்ரீ பதஞ்சலி மகரிஷியின் சந்திர நாடியில் கூறப்பட்டுள்ளது.

மகர இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 11ஆம் இடமான விருச்சிகத்திலிருந்தால், குரு பகையான காரணத்தினால் மத்திமமான பலன்களே நடக்கும். செவ்வாயின் வீட்டிலிருப்பதால் பலன்களைக் கூட்டிக் குறைத்தே செய்வார்கள். இளைய சகோதர இலாபங்கள் குறைவாகவே இருக்கும். தம் இஷ்டப்படியே நடப்பார்கள். தைரியம், வீரியம் ஆகியன அதிகம் காணப்படும். அதிகாரமான பேச்சுள்ளவர்களாகவும் சண்டைப்

பிரியர்களாகவும் இருப்பார்கள். சுக்கில வீரியங்களும், உடல் வீரியங்களும் அதிகம் காணப்படும்.

இளமையில் கவனக்குறைவால் கல்விப்பட்டங்கள் வாங்குவதில் தடை ஏற்படும். பொன், பொருள், ஆபரணச் சேர்க்கை ஆகியன வாழ்க்கையின் முன்பகுதியில் உண்டாகும்.

குருவுடன் செவ்வாய் ஆட்சியாகிக் கூடினால் முரட்டு சுபாவமும், அகந்தையும் உண்டாகும். தமக்குக் கீழ் சேவகர்களை முரட்டுத்தனமாக நடத்த வேண்டிய சூழ்நிலைகள் ஏற்படும்.

குருவுடன் இராகு, கேது ஆகியவர்கள் சேர்ந்திருந்தால் தீர்க்கமான பேச்சுகளும், நடத்தைகளும் உண்டாகும்.

குருவுடன் சூரியன் கூடினால் இளைய சகோதரர்களின் அன்பையும், மதிப்பையும் பெறுவீர்கள். மற்றும் அவர்களால் இலாபத்தையும் அடைவீர்கள். குருவுக்குப் பிரீதியும் எந்திர, மந்திர பூஜைகளும் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

மகர இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 12ஆம் இடத்தில் தனுசு இராசியில் ஆட்சி பலத்துடன் இருந்தால் மத்திம பலன்களே நடக்கும். இளைய சகோதரர்கள் நல்ல நிலையில் இருக்க மாட்டார்கள். 12ஆம் இடத்தில் மறைவான காரணத்தால் சகோதரர்கள் குடும்பத்தில் அமைதிக் குறைவும், அதிகச் செலவின் காரணமாகக் காலம் விரயமும் பொருள் விரயமும் பண விரயமும் உண்டாகும்.

குருவுடன் சூரியன், செவ்வாய் ஆகியன சேர்ந்தால் பட்டம், பதவி, புகழ், தைரியம், வீரியம், ஆளடிமைச் சேவகங்கள் ஆகியன அதிகமாய் இருக்கும். அதனால் அதிக விரயத்துக்கு நீங்கள் ஆளாக விதியும் உண்டு. கல்வியில் பட்டம் பெறுவீர்கள். பாராட்டும் பராக்கிரமமும் உங்களுக்கு ஏற்படும். அதிகக் கடன் பட நேரிடும்.

குருவுடன் சுக்கிரன், புதன் ஆகியன சேர்ந்தால் நட்புப் பலத்துடன் நற்பலனைச் செய்து பின்பு அவரே பிடுங்கிக்கொள்ளும் நிலை உண்டாகும். தலைமைப்பதவி வகித்து வந்தால் உடனே அந்தப் பதவியை விட்டுக் கீழிறங்கும் நிலை ஏற்படும்.

குருவுடன் இராகு சேர்ந்தால் நிறையப் பட்டங்கள் பெறும் விதி தாமாகவே வந்துசேரும். பட்டம் பதவியில் தடை இருந்தாலும், அது உடனே விலகும். குருவுக்குப் பிரீதியும், பூஜையும் செய்தால் நற்பலன்கள் கிட்டும்.

மகர இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு மகர இராசியிலே அமர்ந்திருப்பதால் நீசமாகிடினும் மத்திம பலன்களே ஏற்படும்.

வியாழனோடு சனி ஆட்சி பெற்றால் நீசபங்க ராஜயோகப் பலனுண்டு. குரு, புதன் ஆகியன கூடினால் நல்ல பலன்களைச் செய்யமாட்டார்கள். பட்டம், பதவி, ஆளடிமை, சேவக விருத்திகள் ஆகியன உண்டு. குருவுக்குப் காரகப்பிரீதி செய்தால் தன பிராப்திகள் ஏற்படும். கலை வளர்ச்சி ஏற்படும். இளைய சகோதரர் நல்லபடியாக இருப்பர். செல்வாக்கு, செல்வம், கீர்த்தி, புகழ், ஆளடிமை ஆகியவை உண்டாம்.

குருவோடு சேர்ந்து சனி ஆட்சி பெற்றால், ஆளடிமை, சகோதரர் ஆகிய வகைகளில் நன்மையான பலன்களே நடக்கும். தங்கம், பொன், வெள்ளி போன்ற ஆபரணங்களில் ஆசை இராது.

குருவோடு சேர்ந்து சூரியனும் செவ்வாயும் கூடினால் பட்டம், பதவி, புகழ், ஆளடிமை, தைரிய வீரியம் ஆகியன அதிகம் உண்டாகும். சயன சுகமும் போக வாய்ப்பும் உண்டு.

குருவோடு இராகு, புதன், சுக்கிரன் ஆகியன சேர்ந்தால் நல்ல பலன்களே ஏற்படும். கல்விக்குத் தடை ஏற்படும். இளைய சகோதரர்களுக்குப் பீடை நீர் சம்பந்தமான வியாதிகளும் உண்டு. இவற்றுக்குப் பிரீதிகள் செய்தால் நன்மை உண்டு. இவ்வாறு சந்திர நாடியில் ஸ்ரீ பதஞ்சலி மகரிஷி கூறுகிறார்.

மகர இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 2ஆம் இடத்தில் நட்புடன் அமர்ந்திருப்பதால், இளைய சகோதரர்களின் ஆதரவில் காலம் கழிப்பவராகவும், தைரிய வீரியங்கள் குறைந்த வராகவும் பட்டம், பதவி, புகழ், ஆளடிமை ஆகியவற்றை இழந்த வராகவும் ஆவீர்கள். ஆபரணச் சேர்க்கைகள் குறைவாகவே உண்டு. கல்விப் பட்டங்கள் வாங்குவதற்குத் தடை ஏற்படும்.

குருவோடு சனி ஆட்சி பலத்துடன் கூடியிருந்தால் கல்வியில் பட்டம் பெற வாய்ப்பும் வாக்குச் சாதுரியமும் அதனால் புகழும், அசாத்திய துணிச்சலும் அதிகம் இருக்கும். உடல் வீரியங்கள் மந்தமாகவே இருக்கும்.

குருவோடு இராகு, கேது ஆகியன கூடினால் துஷ்டத்தனங்களும் பட்டம் வாங்குதலில் தடையும், நீச ஸ்திரீ போகமும், வாக்கினால் தன் மதிப்பையும், பதவியையும் இழப்பதற்கான வாய்ப்பும் உண்டு என்று சந்திர நாடி கூறுகிறது.

## கும்பம்
## மூன்றாம் பாவம்

வீரதீர, பராக்கிரம, தைரிய, சகோதரகாரகனாகிய செவ்வாயை இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியாக அடைந்த கும்ப இராசி அன்பர்களே!

தங்களின் 3ஆம் பாவ பலன்களாக இளைய சகோதர நன்மை தீமைகள், பொன்னாபரணங்கள், பட்டம், பதவி, புகழ், ஆளடிமை, யோகம், வல்லமை, தைரியம், வீரியம் ஆகியவற்றைப்பற்றி ஸ்ரீ பதஞ்சலி மகரிஷியின் சந்திர நாடி கூறுகிறது. உங்கள் இராசிக்கு 3-ஆம் பாவாதிபதியான செவ்வாய் 12 இராசிகளில் இருந்த இடத்தினை வைத்துப் பலன் பேசப்படுகிறது. எந்த இராசியில் செவ்வாய் உள்ளார் என்று பார்த்துப் பலனைத் தெரிந்துகொள்ளவும். செவ்வாய்க்குப் பிரீதியும், எந்திர, மந்திர பூஜைகளும் செய்து அறிந்து கொள்ள வேண்டுகிறோம்.

"அரத்தனவன் மதிக்குத்தான் மூன்றோனாய்
அம்புலிக்கும் மறையாது தானிருக்க
வரங்களுடன் வையகத்தில் உயர்பலனாம்
வம்பனேதான் ஆளடிமை வல்லமையென்றே
கரத்தின்மேல் பலனாகும் பாக்கியமாகும்
கண்ணியமாய்த் தைரியங்கள் வீரியங்கள்
முரணில்லை நல்யோக கிரகங்கூட
முப்பலனுந் தீர்க்கமுடன் பெறுவான் பாராய்"

3ஆம் இடத்ததிபதியாகச் செவ்வாயிருக்க இராசிக்கு மறைவு தானங்களில் இல்லாமல் நல்ல கிரகங்களுடன் ஆட்சி உச்சமாகிக் கூடியிருந்தால் உயர்வான பலன்கள் 3ஆம் பாவ வழியில் உண்டாகும் என்று கூறப்படுகின்றது. செவ்வாய் துர்க்கிரகங்களோடு கூடி மத்திமமான பலன்களைத் தர நேரிட்டால், செவ்வாய்க்கு எந்திர, மந்திர பிரீதிகளையும், சுப்பிரமணியர் ஆராதனைகளையும் செய்வதால் உயர்பலன்கள் உண்டெனப்படுகின்றது.

கும்ப இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு 3ஆம் இடமான மேஷ இராசியில் ஆட்சி பெற்றால் வீர, தீர, பராக்கிரமங்கள் நிறைந்திருக்கும். மூர்க்க குணங்களும் முரட்டுத்தனமான செய்கைகளும் உண்டு. இளைய சகோதரர்கள் முரணாக இருக்க விதிகளுண்டு. ஆனால், அவர்களின் பக்கபலம் இருக்கும்.

சூரியன் உச்சமாகிச் செவ்வாயுடன் கூடினால் உயர்ந்த ஆட்சி பீடங்களும் காவலர் உத்தியோகமும், முரட்டுத்தனமான பணிகள், இராணுவம், மருத்துவப்பணிகள் போன்றவற்றில் உயர்ந்த அமிசங் களில் புகழும், கீர்த்தியும், செல்வாக்கும் ஏற்படும்.

செவ்வாயுடன் சூரியன் கூடிச் சனி நீசமாய் இருந்தால் மோதலில் காயங்களும் அபகீர்த்திகளும் ஏற்படும். இந்தக் கிரகங்கள் கூடுவதனால் வரக்கூடிய நீசபங்க ராஜயோகம் வாழ்வின் மத்திம வயதில் வரும். அது உத்தியோக உயர்வு, செல்வாக்கு, கீர்த்தி, புகழ் என்றளவில் திடீரென்று வரும்- நிலையாக இருக்கும்.

செவ்வாயுடன் குரு சேர்ந்தால் உயர்ந்த பதவிகளும் யோகங்களும், பொன் ஆபரணச் சேர்க்கைகளும் ஆளடிமைகளும் தனக்குக் கீழ் சேவகமும் உண்டு. செவ்வாயுடன் நீச கிரகங்கள் எவரும் கூடவில்லை எனில் பட்டம் வாங்குவதில் தடையில்லை. இயற்கையிலே மூர்க்க குணம் உள்ளவர், பல்வேறு பிரச்சினைகளைச் சந்திக்க வேண்டிவரும். செவ்வாய்க்கும், சுப்பிரமணியசாமிக்கும் பூஜைகள் செய்வதாலும், செவ்வாய்க் கிரகத்திற்கு எந்திர, மந்திர பிரீதிகள் செய்வதாலும் நற்பலன்கள் அடையலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.

கும்ப இராசிக்கு 3ஆம் இட அதிபதியான செவ்வாய் இராசிக்கு 4ஆம் இடமான இடபத்திலிருந்தால் மத்திமமான பலன்கள் உண்டு. இளைய சகோதர உதவிகள் உண்டெனினும் எதிர்பார்க்கும் நிலை குறைவு. அவர்களும் நம்பிக்கையுடன் இருக்க வேண்டியது, ஆனால், மத்திம பலன்களே உண்டு.

செவ்வாயுடன் குரு கூடினால் உயர்ந்த பட்டங்களும் பதவிகளும், புகழும் செல்வாக்கும் அடைய விதியுண்டு. செவ்வாயுடன் சுக்கிரன் ஆட்சியாகக் சுக்கிர மங்கள யோகம் ஏற்படும். அதனால் வெள்ளி ஆபரணச் சேர்க்கைகள், கலையமிச ஈடுபாடு, அழகான பெண் களுடன் சகவாசம், உடல் வீரியங்கள், சுக்கிர வீரியங்கள் ஆகியன உண்டாம். தைரிய வீரியங்கள் இருந்தாலும், ஸ்திரமாகவும், பிறப்பிலிருந்தே எதிரிகளுடன் மோதினாலும் திடமனமுடன் தைரிய குணங்களுண்டாம்.

செவ்வாயுடன் சுக்கிரன் சேர்வதால் பெண் மோக வலையில் சிக்கும் நிலை உண்டாகும். மனை யோகங்களும் பேரும் புகழும் ஏற்பட வாய்ப்புண்டு. செவ்வாயுடன் ரிஷபத்தில் எந்தக் கிரகம் கூடினாலும், பலன்கள் மத்திமமாகும்; ஆனால், பாதகம் குறைவாக இருக்கும்.

செவ்வாய் ஆட்சிக் கிரகங்களுடன் கூடினால் நிலைத்த பதவிகள், பொன் ஆபரணம், ஆடை அணிகலன்கள், ஆடம்பரங்கள் போன்றவற்றிற்குக் குறைவிருக்காது. ரிஷபத்தில் செவ்வாயுடன் சூரியன் கூடினால் பதவிக்கு அடிக்கடி நிலை குலைவு உண்டாகும். ஆளடிமைகள் அடிக்கடி மாறிக்கொண்டிருப்பர். செவ்வாய்க்குத் தக்க எந்திர, மந்திர பூஜைகள் செய்தால் நல்ல பலன்கள் கிட்டும்.

கும்ப இராசிக்கு 3ஆம் இட அதிபதியான செவ்வாய் இராசிக்கு 5ஆம் இடமான மிதுனத்தில் நட்புப் பெற்றிருந்தால் இளைய சகோதர பலன்கள் உண்டு. அவர்களால் பலமும் ஏற்படும். இளமையில் அவர்களினால் செலவுமுண்டாம். 3ஆம் பாவ வழியில் மத்திம பலன்களே ஏற்படும்.

செவ்வாயுடன் புதன் ஆட்சியாகிக் கூடினால் பூர்வ புண்ணியங் களால் பலங்களும் செல்வாக்கும், புகழும் கீர்த்திகளும் ஏற்படும். அதைப் போல், திடீரெனக் கவிழும் நிலையுமுண்டு. வீர, தீர

பராக்கிரமங்கள் தைரிய வீரியங்கள் இருந்தாலும் நிதானமாகவே இருக்கும். எதிராளியின் குணமறிந்து செயல்படும் வேகமுண்டாம். பெண் போகமுண்டு. செவ்வாயுடன் சுக்கிரன் சேர்ந்தால் சுக்கிர மங்கள யோகம் ஏற்பட்டு, அப்பலன்கள் 30 வயதிற்கு மேலேயே கிட்டும். ஆளடிமை வகைகள், கைகட்டிய சேவகங்கள் போன்றவை வாய்க்கும். எழுத்து வகையினாலும், நூலக வகையினாலும் புகழ், கீர்த்திகள், செல்வாக்கு ஆகியன கிட்டும்.

செவ்வாயுடன் கேது கூடினால் ஞான விஷயங்களிலும் ஆன்மிக நாட்டங்களிலும் ஈடுபாடு அதிகம் ஏற்படும். பொன், பொருள் சேர்க்கைகள், ஆடை, அணிகலன்கள் ஆகியன முன்வாழ்வில் மத்திமமாகவும், பின்வாழ்வில் உத்தமமாகவும் இருக்கும். ஆளடிமை வர்க்கங்களும் நம்பிக்கையான நிலையிலேயே இருக்கும் நிலையுண்டு.

இளவயதில் சுக்கில வீரியங்களும் உடல் வீரியங்களும் பலவீன மடையும். பின்வாழ்க்கையில் நிதானமாய் இருக்கும். சுப்பிரமணிய தேவருக்கும், செவ்வாய்க்கும் எந்திர, மந்திர பிரீதிகள் செய்தால் நற்பலன் கிட்டும்.

கும்ப இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு 6ஆம் இடமான கடகத்தில் நீசமாகி இருந்தால் பெரும் பாலும் அதமமான பலன்களே உண்டு. இளைய சகோதரர்கள் கொடுமைப்படுத்துவார்கள்; வில்லங்கம் புரிவார்கள்; விவகாரங் களில் தலையிடச் செய்வார்கள். முற்பலன்களைப் போலப் பிற்பலன் கள் இரா. தைரிய வீரியங்களினால் கடுமையான செயல்களில் ஈடுபட நேரும். பின்னால் அவற்றை எதிர்க்கும் திறன் குறைவாக இருக்கும். இதனால் சத்துரு பகைகளும், அவர்களின் சீண்டலும் இருக்கும். செவ்வாயுடன் குரு கூடினால் மட்டுமே நன்மையுண்டாகும். மற்ற கிரகங்கள் கூடினால் பெரும்பாலும் அதம பலன்களே ஏற்படும்.

கல்விப்பட்டங்கள் வாங்குவதில் கடினத்தடை ஏற்படும். தகுதிக்கு மீறிய முயற்சிகளினால் கடன் தொல்லையும் துயரமும் ஏற்படும்.

செவ்வாயுடன் குரு கூடி நீசபங்க ராஜயோகம் ஏற்பட்டால் பதவி, புகழ், ஆளடிமை, செல்வாக்கு, கீர்த்தி போன்றவை வந்து விலகும். அவற்றைக் கிரகப் பிரீதிகள் மூலம் தக்க வைத்துக்கொள்ளலாம்.

தமக்குக் கீழ் உள்ள அதிகாரிகள், ஆளடிமைகள், சேவகங்களே தமக்குச் சத்துருவாக இருந்து, கெடுதல் செய்யும் நிலைகளிலே இருப்பார்கள். பொதுவாக அதம பலனிருந்தாலும், செவ்வாய்க்கும் சுப்பிரமணிய சாமிக்கும் கடுமையான எந்திர, மந்திர பூஜைகள் செய்தால் நற்பலன்களை அடையலாம். செவ்வாயுடன் மற்ற கிரகங் கள் கூடினால் மத்திம பலன்களுண்டு. பலன்கள் முன்பின்னாக நடக்கும். கேது கூடினால் ஞானம், ஆன்மிக விஷயங்களில் நாட்டமிருக்கும்.

கும்ப இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதி செவ்வாய் இராசிக்கு 7ஆம் இடமான சிம்மத்தில் பகை பெற்றிருந்தால் மத்திம பலன்களே உண்டாம். இளைய சகோதரர்கள் கண்டும் காணா நிலையுடனே உங்களுக்கு உதவியற்ற நிலையிலிருப்பார்கள். வீரதீரம், தைரியம், வீரியம், பராக்கிரமங்கள் ஆகியன இருந்தாலும் மூர்க்கத்தனமாக நடந்து கொள்வீர்கள். அது மனைவியிடத்தில் பயனற்றதாகவே இருக்கும். தம் மனைவியினால் வரக்கூடிய சுகபோகமும் பாக்கியங் களும் பக்க பலன்களும் பயனற்றனவாகவே தோன்றும்.

செவ்வாய் சூரியனுடன் சேர்ந்து ஆட்சியானால் ஆளுமைகள், அரசுப் பதவித் தொடர்பு ஆகியன உண்டாம். செவ்வாயுடன் சிம்மத்தில் குரு சேர்ந்தாலும், பொன், ஆபரணச் சேர்க்கைகளும், புகழும் கீர்த்தியும் உண்டாகும். மனைவி வாயிலாக அதனைச் சுட்டிக் காட்டும் நிர்ப்பந்தமும் உண்டாகும். செவ்வாயுடன் மற்ற பகைக் கிரகங்கள் கூடினால் மத்திம பலனே ஏற்படும்.

ஆளடிமை வர்க்கங்கள், ஆளுமைகள் ஆகியன தம் கட்டுக்குள் இருப்பது கடினம். இதனால் மன வருத்தமும், சில துரோக நிலைகளால் சஞ்சலமும் உண்டாகும். கல்விப்பட்டங்கள் வாங்கலாம். செவ்வாயோடு பகைக் கிரகங்கள் கூடினால் அதற்குக் கடினத் தடையுண்டு. சில கால கட்டங்களில் மனைவியினால் புகழ்க் குறைவும் அபகீர்த்தியும் ஏற்பட விதி உண்டாகும். செவ்வாய்க்குத் தக்க பிரீதிகள் செய்தால் அந்தத் துர்பலன்களைத் தவிர்க்கலாம். சுப்பிரமணிய சாமிக்கு ஆராதனையும் சூரிய தேவர்க்குப் பூஜையும், செவ்வாய்க்கு எந்திர, மந்திர பூஜையும் செய்தால் நல்ல பலன்களை அடையலாம்.

கும்ப இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு 8ஆம் இடமான கன்னியில் நட்புடன் இருந்தால் மத்திமமான பலன்களே உண்டு. செவ்வாயுடன் புதன் சுக்கிரன் சேர்ந் தால் யோகமுண்டாகும். கன்னியில் செவ்வாயிருக்க, நீசக் கிரகம் கூடுமானால், இளைய சகோதர உபாதைகளும், ஆனால், உங்களுக்கு மூர்க்கத்தனமான செயல்களும் உண்டாகும். இளைய சகோதரர்களுக்குப் பலன்கள் குறைவு. தைரிய வீரிய, பராக்கிரமங்களிருந்தாலும் அவற்றின் செயல்களினால் மாரகத்துக்கு ஒப்பாகிய கண்டம் உண்டாகும்.

செவ்வாயுடன் புதன், சுக்கிரன் ஆகியோர் கூடுவார்களானால் யோகங்களும், அவற்றால் நன்மைகளும் பின் தீமைகளும் உண்டாகும். துஷ்ட செயல்களால் அபகீர்த்திகளால் தமக்குக் கீழ் உள்ள ஆளடிமைகளால் தமக்கு எதிரான செயல்களும் உண்டாகும்.

செவ்வாயுடன் சுக்கிரனைத் தவிர மற்ற கிரகங்கள் கூடுவார்களேயானால் 3ஆம் பாவ வழி பாதகமில்லாத நற்பலனைத் தரும். படிப்பில் நாட்டமின்மையும் அதனால் பட்டம் வாங்குவதில் தடையும் உண்டாகும். புகழ் ஒரு காலத்தில் உயர்ந்து இருந்தாலும், தம் செயல்களால் அது குறையக்கூடும். மூர்க்கக் குணங்களாலும், செயல்களாலும் புகழ்க்குறைவும், அபகீர்த்தியும் ஏற்பட வாய்ப்பிருக்கிறது. செவ்வாயுடன் குரு கூடுவதால் பொன், ஆபரணச் சேர்க்கைகளும் ஆச்சார அனுஷ்டானங்களும் மன பயனத்தினால் பக்தியும் உண்டாகும். செவ்வாய்க்கு எந்திர, மந்திர பிரீதிகள் செய்வதாலும் சுப்பிரமணிய தேவரை வணங்கி வருதலாலும், சம்காரங்களையும், கோப குணங்களையும் தணியச்செய்து அட்டமச் செவ்வாயின் துர்பலனைத் தவிர்க்கலாம்.

கும்ப இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதி செவ்வாய், இராசிக்கு 9ஆம் இடமான துலாத்திலிருந்தால் நற்பலன்கள் உண்டு. இளைய சகோதரர்கள் தம்முடன் கூடி இருப்பார்கள். அவர்களால் சில உதவிகளும் உண்டு; உபகாரம் இல்லாவிடில் உபத்திரவம் குறையும். தைரியமும் அதன் அடிப்படையில் செய்யப்படும் செயல்களால் வெற்றிகளும் உண்டாகும். பிடிவாதமான தைரியச் செயல்களும் உண்டாகும். செவ்வாய் சுக்கிரனுடன் சேர்ந்தால் சுக்ரமங்களம் ஏற்பட்டுத் தன் பிதுர் வகையிலான புகழையும், செல்வாக்கையும்

பிதுர் வகையினரை புகழையும், செல்வாக்கையும் அடைய விதியுண்டு. தன் பிதுர் சொத்துகளுக்கு அதிபதியாகும் நிலை குறைவாக உண்டாம். அதற்கு இளைய சகோதரர்கள் இடர் உண்டாக்குவர். செவ்வாயுடன் சனி உச்சமாய்க் கூடின், வீரிய குணங்களிருந்தும் செயலில் மந்த நிலை ஏற்படும்.

செவ்வாயுடன் குரு கூடினால் ஆசார அனுஷ்டானங்களிலும் தெய்வ பக்தியிலும் ஈடுபாடும் தம் பிதுர் வர்க்க செல்வாக்கைத் தக்க வைக்கவும் விதியுண்டு. செவ்வாயுடன் சூரியனைத் தவிர மற்ற கிரகங்கள் கூடினால் நன்மை உண்டாம். செவ்வாயுடன் அரவு கூடினால் ஆசாரத்தினால் புகழும், கீர்த்திகளும் உண்டாகும். கல்விகள் பெறத் தடையில்லை. அதனால் உயர்ந்த யோகங்களும், அதனையிட்டுச் செல்வாக்கும், கீர்த்திகளும் உண்டு.

தமக்குக் கீழ் உள்ள ஆளடிமை வர்க்கங்கள் தமக்கு இணங்கியே நடப்பார்கள். செவ்வாயுடன் சூரியனும் சனியும் சுக்கிரனும் கூடத் திடீர் யோகங்களும், அவற்றால் செல்வாக்கு, அந்தஸ்து, திடீர் ஆடம்பர நிலை ஆகியன ஏற்படும். இந்த நல்ல பலன்களைத் தக்க வைக்கச் செவ்வாய்க் கிரகத்திற்குப் பிரீதி செய்தால் உத்தமம்.

கும்ப இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு 10ஆம் இடமான விருச்சிகத்தில் ஆட்சியாய் இருக்கிற படியால், சுபமான பலன்கள் உண்டு. இளைய சகோதரர்கள், தைரிய வீரிய பராக்கிரமசாலிகளாகவும், தம் கர்மத்தில் தமக்கு உதவியாகவும் இருப்பார்கள். அவர்களினால் சாதக பலன்கள் உண்டு. தைரிய வீரியங்கள் உங்களுக்கு இருந்தாலும் காரியம் என்றாலே செயல்படுத்தும் திறனுண்டாம். வீணான விவகாரங்கள் குறைவு. தம் தொழில்களாலேயே செல்வாக்கு, கீர்த்தி, புகழ் ஆபரணச் சேர்க்கைகள் ஆகியன உண்டாகும்.

செவ்வாயுடன் புதன்கூட கல்விகள் தடைப்பட்டாலும் கேள்வி ஞானங்களும், தொழில் ஞானங்களும், புத்தி சாதுரியங்களும் உண்டாகும். செவ்வாயுடன் சுக்கிரன் கூடத் தொழில் ரீதியான பலன்கள் உண்டாகும். இராசிக்குத் தர்ம கர்மாதிபதிகள் கூடி இருப்பது நலம். இந்த யோகத்தினால் பதவிகளும், ஆபரணச் சேர்க்கைகளும் ஆளடிமைகளும் ஏற்படும்.

செவ்வாயுடன் குரு, சனி ஆகியோர் சேர்வார்களாயின் மத்திமமான பலன்களே இருக்கும். தொழில் வகையினால் புகழும், அதைத் தக்க வைக்கும் திறனும் உண்டு. தைரியங்களுக்குக் குறைவிருக்காது. எதிர்த்து நின்றாலும் பின்வாங்காத் திறமையுண்டாம்.

செவ்வாய்க்குக் கடுமையான எந்திர, மந்திரப் பிரீதிகளும், சுப்பிரமணிய ஆராதனையும் செய்தால், புகழும் கீர்த்தியும் உண்டாகும். அதனால் அடையும் செல்வமும், செல்வாக்கும் நிலையாக நிலைத்திருக்கக்கூடிய விதிகள் ஏற்படும். செவ்வாயுடன் சூரியன் கூடினால் பதவியை அசைத்துப் பார்க்கும் நிலை உருவாகும். பிரீதிகளால் அதைத் தடை செய்யலாம்.

கும்ப இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு 11ஆம் இடமான தனுர் இராசியில் செவ்வாயிருந்தால் உத்தம, மத்திம பலன்கள் கலந்து நடக்கும். இளைய சகோதரர்களால் முன் இலாபமும், பின் நட்டமும் உண்டு. செயல்களும் சிநேகங்களும் அவ்வாறே இருக்கும். தைரிய வீரியங்கள், பராக்கிரம செயல்கள் ஆகியன இருந்தாலும் ஆச்சாரம், அனுஷ்டானம், தெய்வ பக்தி போன்ற செயல்களால் அவை தடைப்படும். செவ்வாயுடன் குரு ஆட்சியாய்க் கூடினால் பொன் ஆபரணச் சேர்க்கைகளும் பதவிகளும் ஆச்சார பீடங்களும் கிடைக்கும்.

இளைய சகோதர இலாபங்கள் பெரும்பாலும் குறைவாகவே இருக்கும். பதவிகள், செல்வாக்கு, ஆளடிமை போன்றவை தமக்கு இருந்தாலும் அவற்றைப் பயன்படுத்தும் நிலைகளும் குறைவாகவே உண்டு. செவ்வாயுடன் குரு, சுக்கிரன் சேர்வதால், உயரிய யோகங்களும் பலன்களும் உண்டாம். கல்விப்பட்டங்கள் இலாபமாகவும், அந்தத் துறையினால் செல்வாக்கும், செவ்வாயுடன் சூரியன் கூட பதவி இலாபங்களும், அதனால் ஆபரணச் சேர்க்கைகளும் உபசரிப்பும் உண்டாகும்.

பொதுவாகச் சாகதமான பலன்களே உண்டாகும். புகழ், செல்வாக்கு, ஆகியன 40 வயதிற்குமேல் வந்தால் நிலையானவையாகவும், இலாபமுள்ளவையாகவும் இருக்கும். நல்ல குண நடத்தைகளாலும், ஆசார அனுஷ்டானங்களாலும் நல்ல தீய

காரியங்களை வேறுபடுத்தி, பாகுபாட்டுடன் இலாபமடைய எளிதில் விதியுண்டாம்.

செவ்வாய்க்குத் தக்க எந்திர, மந்திர பிரீதிகள் செய்வதாலும், ஆளடிமைகளாலும், தொழிலாளர்களாலும் அவர்கள் விசுவாசத்தையும், நற்பலன்களையும் பெறலாம். இவ்வாறு ஸ்ரீ பதஞ்சலி மகரிஷியின் சந்திர நாடி கூறுகிறது.

கும்ப இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான செவ்வாய், இராசிக்கு 12ஆம் இடமான மகரத்தில் உச்சமாக இருந்தால் இராசிக்கு மறைவு ஸ்தானப் பலனையும் உச்சஸ்தான பலனையும் கலந்தே கொடுப்பார். இளைய சகோதரர்கள் பலங்கள் இருந்தால் அவர்களின் செயல்களால் விரயம் உண்டாம். பெரும்பாலும் சுபவிரயம் ஏற்படும்.

செவ்வாயுடன் புதன்கூட நோயினால் மாரக கண்டம் ஏற்பட்டுப் பண விரயம் ஏற்படும். செவ்வாய் உச்சமாகிக் குரு அங்கு நீசமாகிக் கூடினால், நீசத்தனமான போக்குகளும், ஆச்சார அனுஷ்டானங்களில் தவறுதலும் ஏற்படும். அதனால் பலன்களையும், விரயமாக்க வேண்டியிருக்கும். தைரிய வீரியங்களுக்குக் குறைவிருக்காது. அசட்டுத் தைரியங்களினால் வில்லங்க விவகாரங்கள் ஏற்பட்டுப் - பண விரயம் ஏற்படும்.

செவ்வாயுடன் புதன் கூட வில்லங்க விவகாரமும், அதனால் தண்டனையும், நீதி வகையில் விரயமும் உண்டாகும். காரியங்கள் மந்தமாகவே செயல்படும்.

செவ்வாயுடன் குரு கூடுவதனால் பொன்னாபரணச் சேர்க்கைகள் இருந்தாலும் காலத்தால் அவை அழிய விதிகள் உண்டாம். செவ்வாயுடன் சூரியன் கூடினால் களத்திர இடரும், அதனால் செலவுகளும் உண்டாகும். பொதுவாக, மத்திம பலன்களே இருந்தாலும், குரு, செவ்வாய் ஆகியன கூடினால் நீச பங்க ராஜயோகம் ஏற்பட்டு, நாற்பது வயதிற்குமேல் மந்தமான செயல்களும் பலன்களும் தொடரும். செவ்வாயுடன் மற்ற கிரகங்கள் கூடினாலும், மத்திமமான பலன்களே உண்டு. செவ்வாயின் உச்ச பலன்கள் சுப விரயங்களாகும். செயல் மூர்க்கச் செயலாகவே

இருக்கும். சுப்பிரமணிய சாமிக்கும் செவ்வாய்க்கும் தக்க பிரீதிகள் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

கும்ப இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதி செவ்வாய் இராசியிலேயே பகையாக இருந்தால், 3ஆம் பாவ வழிகளில் மத்திம பலனே உண்டாம். குரு, சுக்கிரன், சனி போன்ற கிரகங்கள் கூடினால் நற்பலன்களும், மற்ற கிரகங்கள் கூடினால் துர்பலன்களும் உண்டாம். இளைய சகோதரர்கள் தனித்து வாழப் பிரியப்படுவார்கள். மந்தமான காரியங்களுடன் நீசப்போக்கும் உடையவர்களாக இருப்பார்கள்.

உங்களுக்குத் தைரிய வீரியங்களில் குறைவிருக்காது. அசட்டுத் தைரியமும் அதனால் சில பாதகச் செயல்களும் உண்டாம். செவ்வாயுடன் சனி கூட, இளமையிலேயே கால்களில் வீரியங்கள் குறைவாக இருக்கவும், மந்த நிலையும் பெற்றிருக்க விதி உண்டு. பதவி, புகழ், கீர்த்தி ஆகியன மந்தமான நிலையிலேயே இருக்கும். சில நீச சம்பவங்களால் அபகீர்த்திகளையும் புகழ் மங்குதலையும் சந்திக்க வேண்டி இருக்கும். பெரும்பாலும் மத்திம பலனே உண்டு.

ஆடை, ஆபரணச் சேர்க்கைகளும், ஆச்சார அனுஷ்டானங்களும், தேக ஈடுபாடுகளும் இருந்தாலும் அவற்றில் கவனம் குறைவாகவே இருக்கும். ஆளடிமை வர்க்கங்களும் உரிய நேரத்தில் உரிய செயல்களை முடிக்காமல், மந்த குணங்களைப் பெற்றிருப்பார்கள். இதனால் சஞ்சலமும் காரிய இடரும் உண்டாகும். செவ்வாயுடன் புதன் கூட இளமையிலேயே கல்விப்பட்டங்கள் வாங்கத் தடையுண்டு. குரு கூடினால் எப்படியும் வாங்க விதி ஏற்படும். புகழ் ஓர் அளவுடனேயே எப்பொழுதும் ஸ்திரமாக உண்டு. செவ்வாய்க்குத் தக்க எந்திர, மந்திர பிரீதிகள் செய்வதனால் உயரிய பலன்களை அடையலாம் என்று சந்திர நாடி வாயிலாக அறியப்படுகிறது.

கும்ப இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு 2ஆம் இடமான மீனத்திலிருந்தால் மத்திம பலன்கள் உண்டு. செவ்வாயுடன் புதன் கூடச் சில அதம பலன்கள் உண்டாம். இளைய சகோதரர்களும் தனச்சேர்க்கைகளும் குடும்ப விருத்திகளுடன் மத்திமமாக இருந்தாலும், தமக்கு உதவி இல்லாத

நிலையிலேயே இருப்பார்கள். செவ்வாயுடன் புதன் நீசமாகிக் கூடினால் கல்வித் தடை உண்டு.

குரு அங்கு ஆட்சியாய்க் கூடினால் உயரிய நற்பலன்கள் உண்டாம். செவ்வாயுடன் புதன், குரு போன்ற கிரகங்கள் கூடுவதாலும், செவ்வாயுடன் குரு, சுக்கிரன் ஆகியன சேர்வதாலும் நீசபங்க ராஜயோகம் ஏற்பட்டு 40 வயதிற்குமேல் உயரிய பலன்களை அடைய நேரும் என்று நாடி நூல் கூறுகிறது.

செவ்வாயுடன் சுக்கிரன் உச்சமாகிக் கூடினால் பதவி, புகழ், கீர்த்திகள் ஆகியன கிட்டும். அவை நிலையில்லாது திரும்புதலும் உண்டாகும். தமக்குக் கீழ் உள்ள ஆளடிமைகள் சமயத்திற்குக் நக்கபடி பேசும் தன்மையினராய் இருப்பார்கள்.

செவ்வாயுடன் புதன் நீசமாகிக் கூடினால் ஆச்சார அனுஷ்டானங்களில் நிலை இல்லாமையும், செவ்வாயுடன் குரு கூடப் பொன் ஆபரணச் சேர்க்கைகள், தெய்வபக்திகள் ஆகியவற்றில் ஆர்வமும், ஈடுபாடும் உண்டு. செவ்வாய் தனித்திருந்தால் பலன் குறைவாகவே உண்டு. நட்புக்கிரகங்கள் கூடினால் 3ஆம் பாவ வழியில் சாதகபலன் உண்டு. செவ்வாய்க்கு எந்திர, மந்திர பிரீதிகள் செய்தால் நல்ல பலன்களை அடையலாம் என்று சந்திர நாடியின் வழியாக அறியப்படுகிறது.

## மீனம்
## மூன்றாம் பாவம்

3ஆம் பாவ அதிபதியாக அசுர குரு சுக்கிராச்சாரியைப் பெற்ற மீன இராசி அன்பர்களே! தங்களில் 3ஆம் பாவமாக இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதி சுக்கிரன் மேஷம் முதல் மீனம்வரை பன்னிரண்டு இராசிகளில் இருந்த பலன்களையும், சுக்கிரனோடு மற்ற கிரகங்கள் சேர்ந்த பலனையும், 3-ஆம் பாவமாகிய தைரியம், வீரியம், பட்டம், பதவி, புகழ், ஆளடிமை, ஆபரணச் சேர்க்கை, பெண்யோகம் முதலியனவற்றையும் பதஞ்சலி மகரிஷி சந்திர நாடி வாயிலாக அறிந்து அதன் சாரத்தை உங்களுக்கு அளித்திருக் கின்றோம். அன்பர்கள், உங்கள் இராசிக்கு 3ஆம் இடத்து

அதிபதியான சுக்கிரன், எந்த இராசியில் உள்ளார் என்று அறிந்து பலனைக் கண்டுகொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

"பிருகுமவர் மூன்றோனாய்த் தானிருக்கப்
பலங்களுடன் சூரத்தனம் மெத்தவாகும்!
கருதுமோர் சத்ருக்கள் சேர்ந்தாலும்
குமரனுக்கு மூர்க்கம்மேல் மயக்கந்தானாய்
உருமேலாய் பிரீதிகளும் செய்ய மேலும்
உம்மையுமாய்க் கிரகபலன் மேவும் பாரே!
குருவில்லம் சேர்ந்தாலுங் கலந்தாலும்
கலந்தேதான் முரணான பலனுண்டே"

சுக்கிரன் இராசிக்கு மறைவிடங்களில் சேராமல், சத்துருக்களுடன் கூடாமல் இருக்க, மூன்றாம் பாவ பலன்கள் மேலோங்கும். தனுசு வீட்டில் இருக்கப் பாவியாகி மத்திமமாம். உச்ச, ஆட்சி பலன்களைத் தன் திசை புத்திகளில் திறன்படக் கொடுப்பார் என்று கூறப்படுகின்றது. சுக்கிரன் துர்கிரக சேர்க்கையால் துர் பலன்களைக் கொடுக்க நேர்ந்தால் மகாலட்சுமிக்கும், சுக்கிரனுக்கும் தக்க யந்திர, மந்திர பிரீதிகள் செய்வதன் மூலம் நல்ல பலன்களை அடையலாமெனக் கூறுகின்றார்.

மீன இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதி சுக்கிரன் இராசிக்கு 3ஆம் இடத்தில் ரிஷபத்தில் ஆட்சியாக இருந்தால், நற்பலன்கள் உண்டாம். இளைய சகோதரர்கள் கலைகளில் ஈடுபாடு கொள்வார்கள். சமயத்தில் முரட்டுத்தனமாகவும், அன்போடும் விசுவாசத்தோடும் இருப்பார்கள். தைரியம் குறைவில்லாது இருந்தாலும், அது நிதானமாகவும் நிலைத்த தன்மை உடையதாகவும் இருக்கும். பட்டங்கள் வாங்குவதில் தடையில்லாவிட்டாலும் இளமையில் காதல் லீலைகளால் பட்டங்கள் வாங்கத் தடையுண்டு.

சுக்கிரனுடன் நட்புக்கிரகங்கள் கூட மூன்றுக்கும் மேற்பட்ட சுபக்கிரகங்கள் ரிஷபத்தில் சுக்கிரனோடு கூடுமானால், பொன், பொருள் சேர்க்கைகளும் உயர்ந்த பதவியும், அவற்றால் புகழும், புகழால் செல்வமும், அந்தச் செல்வத்தால் ஆளடிமை வர்க்கமும் அமையும். சுக்கிரனும், சூரியனும் சேர்ந்தால் சில பதவிப் பலன்களைத் தடை செய்யும். பதவிகளுக்கு இடையூறு உண்டு.

பொதுவாக, ரிஷபச்சுக்கிரன் தனித்திருந்தாலும், நட்புக் கிரகங்களோடு சேர்ந்திருந்தாலும் தன் பாவ பலன்களை உயர்வாகவே செய்வார் என்று ஸ்ரீ பதஞ்சலி ரிஷியின் சந்திர நாடி கூறுகிறது.

மீன இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதி சுக்கிரன் இராசிக்கு 4ஆம் இடமான மிதுனத்தில் நட்புனிருந்தால், சுமுகமான நற்பலன் கள் உண்டாகும். இளைய சகோதரர்கள் தம்முடன் சேர்ந்திருப் பார்கள். சகோதரியும் பாசமாய் இருக்க விதியுண்டு. அவர்களை முன்னிட்டு உபத்திரவம் குறைவாகவே இருக்கும். தைரிய வீரியங் கள் பொதுவாக இருந்தால் செயலில் நிதானமே அதிகமாக இருக்கும்.

சுக்கிரனோடு புதன் கூடினாலும் கல்விகள் மேலோங்கி இருக்கும். கலை அமிசத் தொழில் மார்க்கங்களும் கணித வகையிலான ஈடுபாடும், பட்டமும், பதவியும், புகழும் உண்டு. தமக்குக் கீழ் ஆளடிமைகள் குறைவாகவே இருப்பார்கள். ஆனால், அவர்கள் நிதானமாகவே இருப்பார்கள். சுக்கிரனுடன் குரு கூடப் பொன், ஆபரணச் சேர்க்கைகளும், ஆடை அணிகலன்களும் ஆளுமைகளும் உண்டாகும்.

சுக்கிரனுடன் சூரியன் சேர பதவி இடர்கள் உண்டாகும். சில அபகீர்த்திகளையும் பெற வேண்டி இருக்கும். சுக்கிரனோடு மற்ற நட்புக் கிரகங்கள் சேர்ந்தால் உத்தமமான பலன் இருக்கும். செல்வாக்கு, கீர்த்தி, புகழ், ஆளடிமை, பொன், பொருள் சேர்க்கைகள் ஆகியவை பொதுவாக 40 வயதிற்குமேல் ஸ்திரமாக இருக்கும்.

பொதுவாகச் சாதகப் பலன்களே அதிகமாக உண்டு. சுக்கிரனும், செவ்வாயும் சேர்ந்தால், சுக்கிர மங்கள யோகம் ஏற்பட்டு, அதனால் முன் இடர்களையும் பிற்பலன்களையும் தரும் என்று பதஞ்சலி மகரிஷியின் சந்திர நாடியின் மூலமாக அறிந்து கூறப்படுகிறது.

மீன இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியாகிய சுக்கிரன் இராசிக்கு 5ஆம் இடமான கடகத்தில் பகை பெற்றால், மிகவும் மத்திமமான பலன்களே உண்டாம். இளைய சகோதரர்கள் ஒரே மாதிரி இருக்க மாட்டார்கள். முரணாகவும், பாதை மாறியும்

செல்வார்கள். தைரிய வீரிய குணங்களிருந்தாலும் செயலில் முன்பிருந்த தைரியம் பின்பு இராது. இதனால் சில அபகீர்த்திகளையும், இடர்களையும் சந்திக்க வேண்டிவரும்.

சுக்கிரனும் செவ்வாயும் நீசமாகிக் கூடினால் இளைய சகோதரர் கள் தம்முடன் இணைந்து இருக்க மாட்டார்கள். சுக்கிரனுடன் குரு உச்சமாய்க் கூடினால், பொன் ஆபரணச் சேர்க்கைகளும் ஆச்சார அனுஷ்டானங்களில் ஈடுபாடும் இருக்கும்.

இவர்களுடன் நீச கிரகங்களோ, பகை கிரகங்களோ கூடினால் ஆசாரமின்மையும், பொன், பொருள் நிலைத்திருக்க விதியும் இராது சுக்கிரனோடு பகை கிரகங்கள் கூடினால் கல்வி தடைப்படும் தனக்குக் கீழ் ஆளடிமைகள் குறைவு. புத்திரரால் அபகீர்த்தி ஏற்படும். சுக்கிரன் தனித்திருந்தாலும் பலன் மத்திமமாகவே இருக்கும். பேச்சுகளை ஒரே மாதிரியாகப் பேச முடியாது நிலையில்லாமல் குழற வேண்டிவரும். சுக்கிரனுடன் செவ்வாயும் குருவும் சேர்ந்தால் நீசபங்க ராஜயோகம் ஏற்பட்டு அதன் பலன்களை 40 வயதிற்குமேலேயே பெற முடியும். பொதுவாக, மத்திம பலன்களே உண்டு. பலன்களைத் தக்க வைக்கச் சுக்கிரனுக்கு எந்திர மந்திரப் பிரீதிகளும், மகாலட்சுமிக்கு ஆராதனைகளும் செய்தால் நல்ல பலன்கள் உண்டு என்று கூறப்படுகிறது.

மீன இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 6ஆம் இடமான சிம்ம இராசியில் பகை பெற்றால் மறைவுப் பலன் களையும் மத்திமமான பலன்களையும் உண்டு செய்வார். சுக்கிரனுடன் குரு கூடினால் மத்திம பலன்களும், தீய வகையில் நல்ல பலன்களும் உண்டாம். இளைய சகோதரர்கள் தமக்குச் சத்துருவாகிப் பல்வேறு வகைகளில் உபாதைகள் செய்வர்.

சுக்கிரனுடன் சூரியன் சேர்ந்தால் வில்லங்க விவகாரத்தினால் பதவியை எட்ட வேண்டியது வரும். இதனால் புகழ்க்குறைவும், பதவிக்கு இடருமுண்டாம். ஆனால், வலுத்த தைரியத்தினால் வில்லங்க விவகாரம் உண்டாகும். உடல் வெப்பத்தினால் சுக்கிலங்கள் நீர்த்துவிடும், வெள்ளை, வெட்டை ஆகிய நோய்களினால் இந்திரியம் கழிந்து உடல் வீரியம் குறைவாகும்.

சுக்கிரனுடன் குரு சேர்ந்தால் புத்திரர்களால் இடரும், பதவி களால் சில வில்லங்கமும், விவகாரமும் ஏற்படும். நீர் சம்பந்தமான நோய்கள் கடன் தொல்லைகள், அவமானம், அபகீர்த்தி முதலி யவை ஏற்பட்டு, தன் கௌரவத்தை இழக்க வேண்டிய சூழ்நிலை உருவாகும்.

சுக்கிரன் தனித்திருந்தாலும், பகைக் கிரகங்களுடன் கூடினாலும் மத்திம பலன்களே உண்டு. சுக்கிரனுக்கு எந்திர, மந்திர பிரீதியும், மகாலக்ஷ்மிக்கு ஆராதனையும் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

மீன இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதி சுக்கிரன் இராசிக்கு 7ஆம் இடமான கன்னியில் நீசமானால், பெரும்பாலும் அதம பலன்களே உண்டாகும். இளைய சகோதரரின் துஷ்ட சேர்க்கை தம்மை அவமானப்படுத்தும்.

சுக்கிரனுடன் குரு சேர்ந்தால் சில அதம பலன்களைத் தவிர்க்கலாம். ஆயினும், இளைய சகோதரர்களால் துர்பலன்களே உண்டாகும். நீச ஸ்திரீ போகமும், சதா மனைவியோடு சண்டையும் அதனால் வில்லங்கமும் உண்டாகும். தைரிய வீரியங்கள் உடலளவில் இருந்தாலும் மனத்தளவில் குறைவாகவே இருக்கும். புதன் ஆட்சியாகிச் சுக்கிரனோடு சேர்ந்தால், முதலில் கல்வியைத் தடை செய்து, பின் ஓரளவு முயற்சியோடு அளவான கல்வியைப் பெற வைக்கும். பட்டம், பதவி, புகழ் போன்றவை காலத்தால் கிடைத்தாலும் சில நீச சேர்க்கைகளாலும் அற்ப விஷயங்களாலும் பதவிக்கு இடரும் புகழ்க்குறைவும் உண்டாகும்.

பொன், பொருள், ஆபரணச் சேர்க்கைகள், ஆடை, அணிகலன்கள் ஆகியவற்றைப் பெறுவதில் மனத்தளவில் ஈடுபாடும் செயலில் குறைவாகவும் இருக்கும். பெண்களால் தொல்லையும் அதனால் அபகீர்த்தியும் ஏற்பட விதியுண்டு. சில கால கட்டங்களில் மனைவியிடம் கிலேசமும், அவர்களால் விவகாரமும் உண்டாகும். பொதுவாக, மத்திம பலன்களே இருந்தாலும் சுக்கிரன் நீசமாகிப் புதன் அங்கு ஆட்சியாகிக் கூடினால் நீசபங்க ராஜயோகம் ஏற்பட்டு, தம் 40 வயதுக்கு மேல் சில உயர்வான பலன்களைப் பெறலாம். சுக்கிரனுக்குக் கடுமையான பிரீதிகளும் லக்ஷ்மிக்கும் வருண

பகவானுக்கும். கடுமையான ஆராதனைகளும் பூஜைகளும் செய்தால் நற்பலன்கள் கிட்டும் என்று சந்திர நாடி கூறுகிறது.

மீன இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 8ஆம் இடமான துலாத்தில் ஆட்சி பெற்றிருந்தால், மத்திமமான பலன்களே உண்டாகும். இளைய சகோதரர்கள் அவ்வளவு நல்லவர்களாக இருக்கமாட்டார்கள். பட்டம், பதவி, புகழ், தைரிய வீரியம், ஆளடிமை ஆகியவற்றை எல்லாம் கொடுத்துப் பிடுங்கிக் கொள்ளும் நிலையை அட்டம சுக்கிரன் ஏற்படுத்தும்.

சுக்கிரனுடன் புதன் கூடினால் பெண்ணின் சேர்க்கையும், அதனால் பொருள் விரயமும், மதிப்பும் அந்தஸ்தும் மாசுபடவும் நேரிடும். சுக்கிரனுடன் இராகு சேர்ந்தால் நீச ஸ்திரீ சிநேகம் ஏற்பட்டுப் பொருளும், பணமும் விரயம் ஆகும். மந்திர, எந்திர செய்கையில் ஈடுபடுவார்கள். மது, மாது, சூது ஆகியவற்றில் அதிக ஈடுபாடு ஏற்பட்டு, சுக்கில நட்டமுண்டாகும். இராகு சேர்ந்திருப்பதால், பெண்களினால் வியாதியும் கஷ்டமும் ஏற்படும்.

சுக்கிரனுடன் சனி துலாத்தில் உச்சம் பெறுவதால் பண விரயம் ஏற்பட்டாலும் தீர்க்காயுளைக் கொடுக்கும் நிலை உண்டு. இவர்களுடன் செவ்வாய் சேர்ந்தால் அடிக்கடி விபத்துகளும், கண்டங்களும், இளைய சதோரரால் அதிக தொல்லைகளும் உண்டாகும். இதற்குச் சுக்கிரனுக்குப் பிரீதிகளும் பூஜைகளும் மந்திர, எந்திர பிரீதிகளும் மகாலக்ஷ்மிக்கு பூஜைகளும் செய்தால் நற்பலன்கள் கிடைக்கும்.

மீன இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 9ஆம் இடமான விருச்சிகத்தில் நட்புப் பெற்று அமர்ந்திருந்தால் மத்திமான பலன்களே நடக்கும். இளைய சகோதரர்கள் வாழ்க்கை அவ்வளவு சிறப்பாக அமையாது. அவர்களுக்கு வாழ்க்கையில் பற்றாக்குறை நிலைகளே உருவாகும். தகப்பனாருக்குச் செய்ய வேண்டிய கடமைகளை இளைய சகோதரர்கள் செய்வார்கள். பட்டம், பதவி, புகழ், தைரியம், வீரியம் ஆகியவை நன்றாக அமைந்தாலும் நாளடைவில் அவை இல்லாமல் போய்விடும்.

சுக்கிரன் மீன இராசிக்கு அட்டமாதிபதியாகையால் பாக்கிய விரயங்களை ஏற்படுத்தும். தகப்பனார் வழி பாக்கியங்களை

அனுபவிக்க உங்களை விடமாட்டார். தகப்பனாருக்குக் கண்டங்களை ஏற்படுத்துவார்.

சுக்கிரனுடன் செவ்வாய் ஆட்சியாக இருந்தால் தகப்பன் வழி சொத்துகளும், சகோதரர்களால் நன்மையும் உண்டாகும். பட்டம், பதவி, புகழ், ஆளடிமைகள் ஆகியன நிலைத்து நிற்கக்கூடிய வாய்ப்புகள் கடைசிவரை உண்டு. சுக்கிர மங்கள யோகமும் உண்டு.

சுக்கிரனுடன் சனி, புதன் ஆகியன சேர்ந்தால் தைரியம், வீரியம், பட்டம், பதவி, தெய்விக வழிபாடு, தெய்வப் பணிகள் போன்றவற்றில் அதிக ஈடுபாடும், சிவ சம்பத்து கிடைக்கும் நிலையையும் ஏற்படுத்தும். இதற்குச் சுக்கிரனுக்கு அர்ச்சனைகள், பிரீதிகள், எந்திர, மந்திர பூஜைகள் மகாலக்ஷ்மிக்கு ஆராதனைகள் ஆகியவற்றைச் செய்தால், நற்பலன்கள் அடையலாம் என்று ஸ்ரீ பதஞ்சலி மகரிஷி சந்திர நாடியில் கூறுகிறார்.

மீன இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 10ஆம் இடமான தனுர் இராசியில் நட்புடன் இருப்பதால் மத்திமமான பலன்களே ஏற்படும். இளைய சகோதரர்கள் நல்ல முறையில் இருப்பார்கள். நல்லொழுக்கம், நற்பண்பு, தெய்வபக்தி, செல்வாக்கு ஆகியன நிறைந்தவர்களாகக் காணப்படுவார்கள். பட்டம், பதவி, புகழ், தைரியம், வீரியம் முதலிய யோகங்கள் நிறைய உண்டு.

சுக்கிரனுடன் சனி சேர்ந்திருந்தால், அவ்வளவாக நல்ல பலன்களைச் செய்யமாட்டார். மந்தமான போக்கும், கலைகளில் அதிகமான ஈடுபாடும் இருக்கும். அதனால் பொருள்கள், காசு பண விரயம் ஏற்படும்.

சுக்கிரனுடன் செவ்வாய், சூரியன் ஆகியன சேர்ந்தால் பட்டம், பதவி, புகழ் ஆகியன நிலைத்திருக்கும். சில வில்லங்கங்கள் வந்தாலும், தைரிய, வீரிய சகோதரகாரகச் செவ்வாயுடன் கூடி இருப்பதால், வில்லங்கங்கள் நீங்கிவிடும் வாய்ப்புகளும் உண்டாகும். பெண்ணின் சிநேகமும் உண்டாகும். கல்விப்பட்டங்கள் கடுமையான முயற்சிக்குப் பின் கிடைக்கும்.

சுக்கிரனுடன் இராகு, கேது சேர்ந்தால் சகோதரர்களால் நன்மைகளை அடைய முடியாது. ஒழுக்கம் இல்லாதவர்களாய்

இருப்பார்கள். மந்தமான புத்தியும், மந்தமான நிலையும் கொண்டவர்களாய் இருப்பார்கள். பட்டம், பதவி, புகழ், தைரியம், வீரியம் ஆகியன இருந்தாலும், நாளடைவில் அவை நீங்கிவிடும். தொழிலில் நட்டமும் அதனால் பண விரயங்களும் ஏற்படும். இதற்கு சுக்கிரகாரக மகாலக்ஷ்மிக்கு அர்ச்சனையும் ஆராதனையும் செய்ய நற்பலன்கள் கிட்டும்.

மீன இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 11ஆம் இடமான மகரத்தில் நட்புடனிருந்தால் மத்திம, உத்தம பலன்களும் நடக்க விதியுண்டு. 3-க்குடையவரான சுக்கிரன், நட்புப் பலத்துடன் மகரத்தில் இருந்தால் இளைய சகோதரர்களால் இலாபமும், நன்மைகளும் உதவிகளும் கிடைக்க விதியுண்டு. பட்டங்கள், பதவிகள், புகழ், கீர்த்தி முதலியனவும் கிடைக்கும் யோகமுண்டு. தைரிய, வீரியத்துடனே இருப்பார்கள்.

சுக்கிரனும் உச்சம் பெற்ற செவ்வாயும் மகரத்தில் கூடினால் பிதுர்வழி சொத்துகளின் பாக்கியத்தை அனுபவிக்க விதியுண்டு. சகோதரர்களால் நன்மையும் உதவியும் உண்டு. கல்விப்பட்டங்கள் வாங்குவதில் தடை இருந்தாலும் பிற்பகுதியில் கிடைக்கும்.

சுக்கிரனுடன் சனி, புதன் ஆகியன கூடினால் நன்மையான புலன்களே நடக்கும். முதலில் விரயமும் பின்பு இலாபமும் கிடைக்க விதியுண்டு. பட்டம் வாங்குவதில் தடையில்லை. புகழ், கீர்த்தி, நற்பெயர் போன்றவை கிடைக்கும். தைரியம், வீரியம் ஆகியன அதிகமாக உண்டு.

சுக்கிரனுடன் சூரியன், இராகு, கேது போன்ற பகைக் கிரகங்கள் சேர்ந்தால் மத்திமமான பலன்களே நடக்கும். அதற்குச் சுக்கிர காரகப் பிரீதியான மகாலக்ஷ்மி ஆராதனையும் மந்திர, எந்திர பிரீதியும் செய்தால் நற்பலன் கிடைக்கும் என்று சந்திர நாடி கூறுகிறது.

மீன இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 12ஆம் இடத்தில் கும்பத்தில் இருந்தால் நட்புப் பெற்ற சுக்கிரன் மத்திம பலன்களையே செய்வார். இளைய சகோதரர்களால், எந்த நன்மையும் கிடைக்காது. பொதுவாக, அவர்கள் தனியாகவே

வாழ்க்கை நடத்துவார்கள். பட்டம், பதவி, புகழ், ஆளடிமை போன்ற பாக்கியங்கள் இல்லாமலே ஆக்கிவிடும்.

சுக்கிரனுடன் சனி சேர்வதால் மறைவுப் பொருள்களாலேயே அதிக இலாபம் கிடைக்கும் நிலையுண்டாம். மது, மாது, சூது போன்றவை மூலம் காசு, பண விரயங்கள் ஏற்படும். சனி ஆட்சியாகி இருப்பதால் பட்டங்கள் வாங்குவதற்குத் தடை ஏற்படும்.

சுக்கிரனும் இராகுகேதுவும் சேர்வதால் கடத்தல், பதுக்கல், மதுக்கடை ஆகியவற்றால் அதிகமான இலாபங்கள் கிடைக்கக்கூடிய வாய்ப்பு வசதிகள் அதிகமிருக்கின்றன. அந்நிய மதத்தினரால் நன்மையும், உதவியும் கிடைக்க விதியுண்டு.

சுக்கிரனுடன் பகை கிரகங்களான சூரியன், குரு, புதன் போன்ற கிரகங்கள் சேர்வதால் மத்திமமான பலன்களே உண்டாகும். சுக்கிரனை யாராவது ஒரு சுபக்கிரகம் பார்த்தால் நல்ல ஆயுள், ஆரோக்கியம் ஆகியவை இருக்க விதியுண்டு.

சுக்கிரனுக்குப் பிரீதிகள் செய்தால் நன்மையான பலன்கள் கிடைக்கும் என்று ஸ்ரீ பதஞ்சலி மகரிஷியின் சந்திரநாடி கூறுகிறது.

மீன இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசியிலேயே உச்சம் பெற்றிருந்தால் உத்தமமான பலன்கள் உண்டு. இளமை முதற்கொண்டே சகோதரர்கள் சேர்ந்திருப்பார்கள். அவர்கள் ஒத்துழைப்பும் பலமும் உண்டு. இளமையிலேயே வீரதீரமும் பராக்கிரமும், தைரியமும், செயல்களிலும் பேச்சிலும் உண்டாம். கல்விப்பட்டங்களும் வித்தைகளும் பெற விதி உண்டு. புதன் அங்கு சுக்கிரனுடன் கூடி நீசமானால், கல்வித்தடைகளும், பட்டங்கள் வாங்குவதில் இடையூறும் உண்டாம்.

ஆடை, ஆபரணங்கள், பொன், பொருள் சேர்க்கைகள் போன்றவற்றில் ஈடுபாடும், அவற்றைத் தக்க வைக்கும் குணமும் இளமையிலேயே உண்டு. சுக்கிரனுடன் செவ்வாயும் புதனும் கூடினால் சில வகையான துஷ்டப்பலன்கள் உண்டாகும். ஆளடிமையும், தனக்குக் கீழே உள்ள பணியாள்களும் துரோக நிலையில் இருப்பார்கள் என்று கூறப்படுகிறது. சுக்கிரனும் புதனும் உச்ச நீசமாகி நீசபங்க ராஜயோகத்தை ஏற்படுத்தினால், 40

வயதிற்கு மேல் திடீர் யோகமுண்டாம். பெண்களிடம் கவனமாய் இருத்தல் நல்லது என்று சந்திர நாடியின் வழியாக அறியப்படுகிறது.

மீன இராசிக்கு 3ஆம் இடத்து அதிபதியான இராசிக்கு 2ஆம் இடத்தில் மேஷ இராசியில் நட்புப் பெற்றால் பலன்கள் மத்திமமாக இருந்தாலும் சுமுகமாக இருக்கும். இளைய சகோதரர்கள் ஒட்டியும் ஒட்டாமலும் உபத்திரவமில்லாமலும் விலகியே இருப்பார்கள். அவர்களால் பலன் குறைவாகவே இருக்கும். தைரிய வீரியங்கள் குறையாது. சமயத்திற்கேற்ப அது வெளிப்பட்டு நன்மையை அளிக்கும். கல்விப் பட்டங்கள் வாங்குவதில் தடையில்லை. ஆனால், அவை தொழிலுக்கு உகந்தனவாய் இரா. சுக்கில வீரியங்கள் பலமுடன் இருத்தலும் நிதான போகமும் நன்மை தரும்.

சுக்கிரனும், சூரியனும் கூடி உச்சமானால் பதவி உயர்வும், தனம், பொருள், ஆபரணம் ஆகியவற்றைச் சேர்க்கும் ஈடுபாடும் உண்டாகும். சுக்கிரனுடன் குரு கூடினால் ஆபரணச் சேர்க்கைகள் குறையும். ஆச்சார நிலைகள், பக்திகள் ஆகியன குறையும். சுக்கிரனுடன் சனி நீசமாகிக் கூடினால் கால் கடுப்பு ரோகமுண்டாகும். அதனால் கால்வீரியம் மட்டுப்படும். நீசத்தனமான செய்கைகள் உண்டாகும்.

சுக்கிரனுடன் செவ்வாய் ஆட்சியாகக் கூடின் தைரிய வீரியங்கள் அதிகரிக்கும். சுக்கிரனுடன் செவ்வாய் கூடிச் சனி நீசமானால் நீசபங்க ராஜயோகம் ஏற்பட்டு, வாழ்வின் மத்திமத்தில் உயர்ந்த பலன்களைக் கொடுக்கும். அற்ப விஷயங்களால் அபகீர்த்திகளும், பின்பு அவற்றை நீக்கும் குணங்களுமுண்டாகும். தனக்குக் கீழ் உள்ள ஆளடிமை, வேலையாள்கள் ஆகியோர் நீசர்களாகவும் முரடர்களாகவும் இருப்பார்கள். பொதுவாக, மத்திமத்தில் சுமுகமான பலன்கள் இருந்தாலும் சனி நீசமானால் சில துர்பலன்களை அனுபவிக்க வேண்டியிருக்கும். சுக்கிரனுக்கும், மகாலக்ஷ்மிக்கும் ஆராதனையும், எந்திர, மந்திர வழிபாடும் செய்தால் நற்பலன்கள் கிடைக்கும் என்று ஸ்ரீ பதஞ்சலி மகரிஷி சந்திர நாடியின் வாயிலாகக் கூறுகிறார்.

# மேஷம்
## நான்காம் பாவம்

திங்கள் இராசிக்கு 4ஆம் பாவாதிபதியாகச் சந்திரனைப் பெற்ற மேஷ இராசி அன்பர்களே! மகரிஷி பதஞ்சலி முனிவர் சந்திர நாடியின் வழியாக அருளியபடி 4ஆம் பாவம் என்பது தாய், கட்டிய மனை, இடம், கல்வி, வாகனம், சுகம், விவசாயம், புதையல் நிலைகள் போன்றவற்றைக் குறிப்பிடும். சந்திர நாடி செய்யுளாக அமைந்து உள்ளபடியால், சில உதாரணப் பாட்டுகளை மட்டும் கொடுத்து, அவற்றின் சாராம்சத்தை உங்களுக்கு 4ஆம் பாவ பலன்களாக அளிக்கின்றோம்.

"கொண்டதோர் நாலாம்பாவச் சாரமேதான்
    கெடியான தாயொடுதான் சுகம்வித்தை
கண்டிடுமோர் மனைஒத்து பாதாள நிலை
    காட்டலாம் கிருஷிஒத்து தானிய மார்க்கம்!
விண்டுரைப்பேன் வாகனங்கள் கால்நடைகள்
    வழுத்தவரும் வியாபாரம் ஒட்டுறவு
தொண்டுசெய் பந்துக்கள் நெருக்கமொடு
    தனயனுக்கு உரைக்கும்வழி நாலாம் பாவம்."

மேஷ இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சந்திரன் மேஷ இராசியிலேயே நின்றதனால், சந்திரனுடன் கூடிய கிரகங்கள் பற்றியும், நாலாமிடமான கடகத்தில் கிரகங்கள் நின்ற பலனையும், நாலாமிடத்தை எந்தக் கிரகம் பார்த்தால் 4ஆம் பாவம் சிறக்கும் என்பதைப்பற்றியும் குறிப்பிடப்படுகின்றது. சந்திர பகவானுக்கு எல்லாக் கிரகங்களும் மித்துருக்களே. சந்திரனுடன் இராகு சேர்ந்தால் சில பலன்கள் மட்டுப்படும்; சில பலன்கள் உயர்வடையும்.

மேஷ இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சந்திரன் மேஷத்திலே இராசியாக நின்றால், அவர்மட்டும் தனித்திருக்கத் தாய் மீது பற்றும் பாசமும் இயற்கையிலே உண்டாகும். தாயும் உங்கள்மீது பாசமாய் இருப்பார்கள். அவர்களின் உதவியும், ஆதரவும் உண்டு.

அவர்களைக் கடைசிவரை காப்பாற்றும் பொறுப்பு உங்களுடையதாக இருக்கும். மாத்ரு கிரகமான சந்திரனுடன் மேஷ இராசியில் சூரியன் உச்சமாகிக் கூடினால் அமாவாசையில் பிறந்திருக்க வேண்டும். தகப்பன், தாயைவிட உயர்ந்திருப்பார். தகப்பன் கையே ஓங்கி இருக்கும். தாய் அடங்கியே நடப்பார்.

உங்களுக்குப் பூர்வ புண்ணிய கிருஷி சொத்துகள் உண்டாகும். தாய்க்குச் சூலை நோயும், அதனால் உடல் பலவீனமும், படுத்த படுக்கையாகித் திரும்ப எழுந்திருக்கும் நிலையும் உண்டாகும். உடற்சுகம் தொடர்ந்து இருக்காது. உங்கள் கல்வி பாதிப்புற்றுப் பின்பு நன்றாய் இருக்கும். வாகனங்கள், கட்டிய மனைகள் ஆகியன சுமுகமாய் இருக்கும். கட்டிய மனை கிழக்கு நோக்கி இருக்க விதியுண்டு. பூர்வ புண்ணியங்களால் புதையலிருக்க விதிகளும் உண்டாம்.

மாத்ரு கிரகமான சந்திரனுடன் செவ்வாய் ஆட்சியாகிக் கூடச் சேர்வானாகில் தாய்க்குக் கோபங்கள் அதிகமுண்டாகும். தான் பிறந்த இடத்தைக் கொண்டாடுவாள். அவளுக்கு இரத்த சம்பந்தப்பட்ட நோய்கள் உண்டாகும். பாதி நாள் உடல் நோவுடனும் பின்பு தெளிவாகவும் இருப்பாள். உங்கள் கல்வி தடைப்படும். கட்டிய மனைகள் எழும்புவதற்குக் கடினமாக இருக்கும். உழவு வகையில் மலைக்காட்டு விவசாயம் நன்மை தரும். மருத நில விவசாயத்தால் இடருமுண்டு. சந்திர மங்கள யோகம் வாழ்வில் மத்திமத்தில் ஏற்படும்; தன் தாய்வழியிலும் விவசாய வழிகளிலும் ஆலய வழிகளிலும் நன்மை கிட்டும்.

மாத்ரு கிரகமான சந்திரனுடன் புதன் கூடி இருந்தால், தாய்க்கு உடல் உபாதைகள் அடிக்கடி வரும். உங்களுக்குக் கல்விகளால் நலமுண்டு. புஞ்சைக்காடுகள் நன்மை தரும். பச்சைப்பயறு வகைகள் உயர்ந்த பலனைத் தரும். வீடு, மனை ஆகியவற்றை வாங்கினாலும், கட்டினாலும் கடன் இருக்க விதியுண்டாம். 40 வயதிற்குமேல் குடும்பச் சுகங்களும், வாகனங்களும், விவசாயங்களும் நிலைத்து நிற்கும். கடன் வாங்கி வித்தை பயிலும் நிலையுண்டு.

மாத்ரு கிரகமான சந்திரன் மேஷத்திலிருந்து குரு பகையாகிக் கூடினால், தம் வாழ்வில் தாய்க்கும், தகப்பனுக்கும் இடையே கருத்து வேறுபாடு ஏற்பட்டு, அவர்கள் ஒருவரைவிட்டு ஒருவர் விலகி, பின்பு ஒற்றுமையாக இருப்பார்கள். இது அடிக்கடி நிகழும். இதனால் மனக்கிலேசங்கள் உண்டாகும். உங்களுக்கு உயர்ந்த வித்தைகள் படிப்பதற்குத் தடையுண்டு. மனை கட்டினால் விரயமும் வாகன விரயமும் ஏற்பட்டுப் பின்பு நன்மை உண்டாகும். புஞ்சைக்காடுகள் நல்ல பலன்களைக் கொடுக்கும். இவ்வகையான சுகங்கள் வருவதும் போவதுமாய் இருக்கும். சுகங்கள் ஒரே மாதிரியாக இரா. உடல் சுகமானது பணவிரயத்தில் போய் நிற்கும்.

மாத்ரு கிரகமான சந்திரன் மேஷத்திலிருக்கச் சுக்கிரன் சேர்ந்தால் மனைவியினால் சுகங்களும் தனங்களும் ஏற்பட விதியுண்டு. கால்நடை வர்க்கங்களும் வாகனங்களும் நன்மையாக இருக்கும். அதனால் இலாபமும் வாகன சுகமும் மனை சுகமும் உண்டாகும். நன்செய் நிலங்கள் நல்ல பலன் அளிக்கும். நல்ல பொழிவும் உண்டாகும். தாய்க்கு நேத்திர ரோகம் உண்டு செய்யும். இருந்தாலும், திடமாக இருக்க விதியுண்டு. வித்தைகள் இருந்தாலும் இல்லாவிட்டாலும் சுகங்கள் உண்டாகும். கட்டிய மனைகள் அலங்காரமாகவும் ஆடம்பரமாகவும் இருக்க விதியுண்டு.

மாத்ரு கிரகமான சந்திரன் மேஷத்திலிருக்கச் சனி நீசமாய்க் கூடினால் தாய்க்கு வாத ரோகங்களும் நடக்க முடியாமையும் ஏற்படும். கிருஷி என்ற உழவு மார்க்கம் குறைவான பலனை அளிக்கும். விவசாயம் வறட்சியாகவும், பொழிவில்லாமலும் காணப்படும். விதைத்த நெல்லும் சாவியாகும் நிலையுண்டு. தாய் வழியில் இலாபங்கள் இல்லை. இரும்பாலான வாகனங்களால் நன்மை இராது. வியாபாரங்கள் மந்தமாய் இருக்கும். எருமைகளை வளர்த்தாலும் அவை நிற்கா; தோஷமாகும் அல்லது இறந்துவிடும்.

பொதுவாகச் சந்திரனுடன் சனி நீசமாய்க் கூடினால் பலன் குறைவு. செவ்வாயோ, சூரியனோ கூடினால் நீசபங்க ராஜயோகம்

ஏற்பட்டு, சில கால கட்டங்களில் உயர்வான பலன் அளிக்கும். அதனை உரிய பிரீதிகள் மூலம் தக்க வைக்கலாம்.

மாத்ரு கிரகமான சந்திரனுடன் இராகு கூடினால் மிகவும் அதமமான பலன்களே நடக்கும். தாய்க்கு விஷ ரோகம், குன்மம், வலிப்பு, சரும நோய் ஆகியன உண்டாகும். உங்களுக்குச் சுகம் குறைவாகவே இருக்கும். வாகன இலாபங்கள் குறைவு. வீடுகள் கட்டினாலும் தோஷமுண்டாம். சந்திரனுடன் கேது கூடினால், பலன் மத்திமமாகவே இருக்கும்; கிரகண தோஷமுண்டாகும். இதற்குத் தக்க பிரீதிகள் மூலம் தோஷ நிவர்த்தி செய்து நாலாம் பாவ பலன்களைப் பூரணமாகப் பெறலாம்.

மேஷ இராசிக்கு நான்காமிடமான கடகத்தில் கிரகங்கள் நின்ற பலனை உரைத்தோமானால், மேஷ இராசிக்கு 4ஆம் இடமான கடகத்தில் சூரியனிருந்தால் தகப்பனாரால் தாயாருக்குத் தொல்லைகளும், அசௌகரியங்களும் உண்டாகும். விவசாய நிலங்களும், மனைகளும் உஷ்ண பூமியாக இருக்கும். வீடுகள் கிழக்கு நோக்கியே அமைந்திருக்க விதியுண்டாம். தாயாருக்குச் சிரரோகம் உண்டு செய்யும். குறைவான சுகங்களையே உண்டு செய்யும். கல்வி தடைப்பட்டு, பின்பு விளங்கும். மனை இலாபம் குறைவாகவே இருக்கும்.

மேஷ இராசிக்கு 4ஆம் இடமான கடகத்தில் செவ்வாய் நீசமானால் தாய் உடற்பலம் குன்றி இருப்பார்; ஆவேசம் குறைவாகவே இருக்கும். பூர்வ சொத்துகள், பொருள் ஆகியன நாசமாகும். அவர்களையிட்டுச் செய்த தொழில்கள் சிறப்புறா. இரத்த பலம் குறைவாக, சோக நிலை பூண்டிருப்பார். உங்களுக்கு வாகன யோகங்கள் இருந்தாலும், பழுதுடனே இருக்கும். உழவுகள் நன்செய் நிலமாய் இருந்தால் இடரும், காட்டுவிளைச்சலானால் நன்மையுமுண்டாம்.

செவ்வாய் நீசமாகிக் குரு அங்கு உச்சமாக இருந்தால், நீசபங்க ராஜயோகம் ஏற்பட்டு, மனை மற்றும் வாகன வழியில் ஏற்பட்டு,

உயர்வான பலன்கள் ஏற்படும். ஆனால், கல்வியைத் தடை செய்யும். சுகங்கள் குறைவாகவே இருக்கும்.

மேஷ இராசிக்கு 4ஆம் இடமான கடகத்தில் புதன் நட்புப் பெற்றிருந்தால் தாயின் இளைய சகோதரர்கள் - அதாவது, தாய் மாமன்கள் - தாய்க்கு உதவி செய்து சிநேகமாக இருப்பார்கள். உங்களுக்கு வியாபார வெற்றிகள் உண்டாகும். சுகம் அளவோடும், நிதானத்தோடும் இருக்கும். மத்திம வாழ்க்கையே நடத்த வேண்டி இருக்கும். வாகன இலாபங்கள் உண்டாகும். உழவுத்தொழில் மத்திம பலனைத் தரும். கல்வியில் பட்டம் பெற முடியாது. இதர வகைகள் செழிப்புற்று விளங்கும்.

மேஷ இராசிக்கு 4ஆம் இடமான கடகத்தில் குரு உச்சமாய் இருந்தால் தாய்க்குத் தந்தையால் முன் இலாபமும், பின் நட்டமுமுண்டு. தாய்க்கு உடல் சௌக்கியங்களிருந்தாலும், அந்திம காலத்தில் நோய் போக்க விரயச் செலவுகள் உண்டாகும். உங்களுக்குப் புத்தக இலாபங்கள் இருக்கும். பசு இலாபங்கள், வாகன இலாபங்கள் கடன்பேரில் இலாபத்தைத் தழுவி நிற்கும். சுகங்கள் குறையாமல் உத்தமமான பலன்களைக் கொடுக்கும். நெருங்கிய வியாபார இரகசியங்கள் காக்கப்படும் விதத்தில் இருக்கும். மேஷ இராசிக்கு 4ஆம் இடப் பலன்கள் உச்சக் கிரகமான குரு திசையில் நல்ல மேன்மைகளைத் தரும்.

மேஷ இராசிக்கு 4ஆம் இடமான கடகத்தில் சுக்கிரன் பகையாகி இருந்தால் தாய்க்கு நேத்திர நோய்களுண்டாம். உடல் வீரியங்கள் குறைந்தாலும் மனத்தைரியங்கள் குறையா. உங்களுக்கு வாகன யோகங்கள் இருந்தாலும், இலாபம் நட்டம் என்ற நிலையிலே இருக்கும். புன்செய்ப் பூமிகளில் நல்ல விளைச்சலுண்டு. கல்வி தடைப்படும். பூமி, மனை ஆகிய சுகங்கள் மத்திம வயதிலுண்டாம். வீடு கட்டவும் மத்திம வயதில் யோகமுண்டாம்.

மேஷ இராசிக்கு 4ஆம் இடமான கடகத்தில் சனி இருந்தால் தாயின் உடல் நலத்திற்குக் கேடாம். பாத நோய்களும் வாதங்களும் உண்டாகும். ஆனால், உங்களுக்கு மனை மார்க்கமும், உழவு மார்க்கமும் நன்மையளிக்கும். இரும்பாலான வாகன மார்க்கங்கள் மத்திம வயதில் உயர்ந்த பலனைத் தரும். கால்நடை மார்க்கங்களின்

மூலம் ஏற்படும் இலாபங்கள் குறைந்தே காணப்படும். கால்நடைகள், நொண்டியாகவோ, முடமாகவோ இருக்கலாம். வாகனச் சக்கரங்களில் அடிக்கடி பழுதுண்டாம்.

மேஷ இராசிக்கு 4ஆம் இடமான கடகத்தில் இராகு இருந்தால், பலன் குறைவு. தாய்க்கு எப்போதும் விஷ நோய்களிருக்கும். விஷகரங்களும் வந்து போகும். உங்களுக்குச் சுகம் பங்கமாகும். உழவுத்தொழில் இலாபங்கள், வாகன இலாபங்கள் ஆகியன குறைவாகவே இருக்கும். குரு உச்சமாய்க் கூடினால் நன்மையுண்டு

மேஷ இராசிக்கு 4ஆம் இடமான கடகத்தில் கேது இருந்தா ஞான வித்தைகளை உண்டு செய்யும். ஆன்மிக நாட்டமும் அத சம்பந்தப்பட்ட கல்விகளில் ஈடுபாடும் அதிகம் உண்டு. இல்லற சுக குறைவாக இருக்கும்.

மேஷ இராசிக்கு 4ஆம் இடமான கடகத்தில் 2-க்கும் மேற்பட்ட பகை கிரகங்கள் கூட மனை இலாபம், வாகன இலாபம், குடும்ப சுகம் ஆகியன குறைந்தே காணப்படும். உச்ச கிரகம் கூடினால் நன்மையுண்டு. செவ்வாய் நீசமாகித் தனித்திருந்தால் அதம பலன்கள் உண்டாகும். குருவோடு சேர்ந்து நீசபங்க ராஜயோக மானால், உயர்வான பலன்கள் பின்வாழ்க்கையில் உண்டாகும். துர்பலன்களைத் தடுக்கச் சந்திரனுக்கு எந்திர, மந்திர பிரீதிகள் செய்தால் நன்மை உண்டாகும்.

## ரிஷபம்

## நான்காம் பாவம்

உலகுக்கெல்லாம் ஒளியைக் கொடுக்கும் சூரியனை 4ஆம் இட அதிபதியாய்ப் பெற்ற ரிஷப இராசி அன்பர்களே!

4ஆம் பாவம் என்பது, தாய், கட்டிய மனை, இடம், கல்வி, சொத்து, சுகம், விவசாயம், புதையல் நிலைகள், நெருங்கிய வியாபாரம் போன்ற பலன்களைக் கொண்டதாகும்.

மகரிஷி பதஞ்சலி மகாமுனிவர் அருளிய சந்திர நாடியின் வழியாக, 12 இராசிகளிலும் உங்களின் நாலாமிடத்து அதிபதியான

சூரியன் நின்ற பலன்களும், சூரியனொடு மற்ற கிரகங்கள் சேர்ந்த பலனும் உங்களுக்கு 4ஆம் பாவப் பலன்களாக அளிக்கப்படுகின்றன.

"காணவரும் மதிக்குத்தான் நாலோனாய்க்
கருத்தான வெய்யோனும் தானிருக்கப்
பேணவரும் மதிக்குத்தான் கேந்திரமேற்
பெருமைமேல் நற்பலன்கள் காட்டலாகும்!
தோணவரும் சுங்கன்காரி கூடிடினும்
தனயனுக்கு மத்திம பலனுமென்றே
பூணவரும் நாலாம்பாவ பலன்களொத்துப்
பெருமையுடன் ஆட்சியுச்சமேற நன்மைதானே."

இராசிக்கு 4-க்கு உடையவரான சூரியன், இராசிக்குக் கேந்திரங்களில் இருந்தால் நல்ல பலன்கள் உண்டாகும். சூரியனோடு, சுக்கிரன், சனி ஆகியன கூடினால் மத்திம பலன்கள் உண்டாகும். சூரியன் ஆட்சியுச்சமேற நல்ல பலன்கள் உண்டாகும்.

"ஆகுமென்றே நாலோனும் ஆட்சியுச்சமேறி
அறிவான நங்கையரைக் கூடும்சுகம்,
வாகுடனே தன்தாய்க்கும் போசனசுகம்,
வழுத்தக்கேள் வாகனமும் சுகமென்றே
போகுமது நீசர்கள் சேர்ந்தாலே
பொய்யான சுகங்களதும் வீணாய்ப் போகும்
தேகசுகம், மனைசுகமும், மக்கள்சுகம்
தனயனுக்கு யோகமேல் போச்சுதானே!"

ரிஷப இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சூரியன் 4ஆம் இடமான சிம்ம இராசியில் ஆட்சியானால் நற்பலன்கள் உண்டாம். தாய்க்குத் தன் வழியில் உதவியும், பயபக்தியும் உண்டாகும். தாய்க்கு உஷ்ண நோய்களும் சிரசு பாரங்களும், நோய்களும் உண்டாகும். மனையானது கிழக்கு நோக்கி அமைந்திருக்க விதியுண்டு. உழவுப் பூமி, மனை ஆகியன உஷ்ண பூமிகளாக இருக்கும். நீர் வற்றியிருக்கும். இதனால் உழவுத்தொழில் பாதிக்கப்படும். தேக சுகங்கள் இருந்தாலும் உடல் வெப்பத்தினால் அசதி, சோர்வு ஆகியன உண்டாகும்.

சூரியனொடு சுக்கிரன் சேர்ந்து பகையானால் வாகன இலாபங்கள் குறைந்தே காணப்படும். கல்விகளும் தடைப்படும். கட்டிய மனை ஆடம்பரமில்லாமல் அமைதியாக இருக்கும். சூரியனொடு கூட உழவு மார்க்கங்கள் பெருத்த இடர் செய்யும். உழவில் நம்பினது நடக்காது. ஆனால், சம்பந்தப்பட்ட வாகனங்கள் ஸ்திரமாகும்; ஆனால், சக்கர உபாதைகளோடு இருக்கும். சூரியன் தனித்திருந்தால் நன்மை உண்டு; பகைக் கிரகங்களோடு கூடினால் மத்திமமான பலன்களே ஏற்படும்.

சூரியனொடு இராகு கேதுக்கள் கூடி கிரகணதோஷம் ஏற்படும். அதனால் தாய்க்கு உபாதையும், மனை, வாகனம், கல்வி ஆகிய விஷயங்களில் தடைகளும் ஏற்படும். சூரியனொடு குரு கூட நன்மையுண்டாம். பூர்வ புண்ணிய சொத்துகளால் மனை இலாபமும் உழவு இலாபமும் நன்செய் இலாபமும் உண்டாகும்.

சூரியன் குருவுடன் கூடினாலும், தனித்திருந்தாலும் நன்மையுண்டு. பகைக் கிரகங்களுடன் கூடுவதாலும் துர்பலன் கள் ஏற்படும். 4ஆம் பாவ வழியில் பலன் குறைவு. அதனால், சூரிய தேவனுக்கும் ஆதி சிவனுக்கும் பிரீதிகள் செய்வதன் மூலம் நன்மை பெறலாம்.

ரிஷப இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சூரியன் இராசிக்கு 5ஆம் இடமான கன்னியில் பகை பெற்றால் மத்திமமான பலன்களே உண்டாம். தாய்க்கு உடல் உபாதைகளும் தனக்கும் தன் தாய்க்கும் மனக்கிலேசங்களும் உண்டாகும். தாய்வழித்தனம் தனக்குக் குறைவாகவே இருக்கும். சூரியனுடன் புதன் ஆட்சியுச்சமேறச் சில நன்மையான பலனுண்டாம். கல்வியில் மீடேற விதியுண்டாம். புஞ்சை நிலங்களில் நல்ல பலனுண்டு. வாகன இலாபங்களும் உண்டாகும்.

சூரியனுடன் செவ்வாய் சேர மலைத்தோட்டங்களில் நல்ல இலாபம் கிடைக்க விதி உண்டாகும். ஆனால், தாய்க்கு உயிர்க் கண்டங்கள் அடிக்கடி வந்து போகும். சூரியனுடன் சுக்கிரன்

நீசமாகிக் கூட வாகன இலாபங்கள் குறைவு. வீடு, அலங்காரங்கள் இல்லாமல் மத்திம்மாகவே இருக்கும். குடும்ப சுகங்களும், ஆடை ஆபரணங்களால் ஏற்படக்கூடிய சுகங்களும் குறைவாகவே இருக்கும்.

சூரியனுடன் சனி கூடத் தாய்வழிப் பூர்வ புண்ணியங்கள் நாசமாகும். சூரியனுடன் இராகு, கேது கூடினால் கிரகண தோஷமாகும்; நாலாம் பாவ பலன்களைத் தடை செய்யும். சூரியனுடன் குரு கூடத் தாய்வழி இலாபமும், விவசாய இலாபமும் உண்டாகும். புத்திரர்களால் சுகமும், கீர்த்தியும் உண்டாகும். சூரியனுடன் நீசமான கிரகங்கள் கூடினாலும் பெரும்பாலும் முன்நட்டப் பலன்களே உருவாகும். ஸ்திரீ சுகங்களும், ஆடை ஆபரணச் சுகமும் குறைவுடனே உண்டாகும். சூரியனொடு ஆட்சியுச்சக் கிரகங்கள் கூடினால் அவர்களின் திசை புத்தியில் மனை இலாபமும், உழவு இலாபமும், குடும்ப சுகங்களும் உண்டாகும். நீசபகைக் கிரகங்களின் சேர்க்கையால் துர்பலன்கள் விளையுமானால் சூரியனுக்குத் தக்க பிரீதிகள் செய்து நல்ல பலன்களை அடையலாம் என்று நாடி நூல் கூறுகிறது.

ரிஷப இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சூரியன் இராசிக்கு 6ஆம் இடமான துலாத்தில் நீசமடைந்தால் 4ஆம் பாவ வழியில் துர்பலன்களையே கொடுப்பார். தாய்க்குச் சதா பீடைகளும் நோயும் தொல்லைகளும் உண்டாகும். மனைகள் அவ்வளவு சிறப்புடன் இரா. இதனால் மனை இலாபங்களும் உழவுத்தொழில் இலாபங்களும் குறைவுடனேயே இருக்கும்.

சூரியன் நீசமாகிச் சுக்கிரன் ஆட்சியாகிக் கூடினால் வாகன இலாபங்களும், உழவுத்தொழில் இலாபங்களும், வீடு, மனை அலங்காரங்களும் கட்டாயம் குறையும். சரியான பலன்களைத் தாரா. மனை கட்டினாலும், எழும்புவது கடினமாக இருக்கும். மீறிக் கட்டினாலும் கடன் தொல்லைகள் உண்டாகும். சூரியனுடன் புதன் கூட பூர்வ புண்ணியச் சொத்துகள் தன் கைக்குக் கிடைக்கா. மனை

வகையில் வில்லங்க விவகாரத்தை ஏற்படுத்தும். புத்திர சுகத்தில் குறைவு உண்டாம்.

சூரியன் நீசமாகிச் சனி உச்சமாகிக் கூடினால் உழவுத்தொழில் நட்டப்படும். முன்னுக்குப்பின் முரணான பலன்களைத் தரும். கல்வியில் தடை உண்டாகும். சூரியன் நீசமாகி சுக்கிரனோ சனியோ சேர்ந்து நீசபங்க ராஜயோகம் உண்டானாலும் அதன் பலன்களை நாலாம் பாவ வகையில் முழுமையாகப் பெற முடியாது.

சூரியனுடன் செவ்வாய், புதன், குரு ஆகியன கூடினால் நன்மையான பலன்கள் அமையும். இவ்வாறு சந்திர நாடியின் வாயிலாக ஸ்ரீ பதஞ்சலி மகரிஷி கூறுகிறார்.

ரிஷப இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சூரியன் இராசிக்கு 6ஆம் இடத்தில் நீசமான காரணத்தினால் மனை, சாபம் பெற்று விளங்கும். அல்லது கடன், விவகாரம், வில்லங்கம் என்று தொல்லை களைக் கொண்டிருக்கும். சூரியனுக்கு எந்திர, மந்திர பிரீதிகளும், சிவ பூஜையும் செய்தால் மனைக்கும், வாகனங் களுக்கும் ஏற்பட்டு உள்ள தடைகள் குறையும் என்று சந்திர நாடியின் வாயிலாக முனிவர் குறிப்பிடுகிறார்.

ரிஷப இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சூரியன் 7ஆம் இடமான விருச்சிகத்தில் பகை பெற்றால் மத்திமமான பலன்களே உண்டு. தாய்க்கு இரத்த சம்பந்தமான நோய்களையும், பீடைகளையும் ஏற்படுத்தும். உங்கள் மனைவிக்கும் உங்கள் தாய்க்கும் ஒத்துப் போகாது. அடிக்கடி சண்டை சச்சரவுகள் ஏற் பட விதியுண்டு.

சூரியனுடன் செவ்வாய் ஆட்சியாகிக் கூடினால் பூமி இலாபங்கள் மனைவியால் உண்டாகும். மனைவியின் ஆளுமையிலேயே சொத்து, சுகம், வீடு, மனை, வாகனம் போன்றவை இருக்கும். சூரியனுடன் புதன் கூடினால் கல்வியில் தேர்ச்சியுண்டாம். புன்செய்க்காடுகள் நன்மையளிக்கும். மனைவியின் சொற்படியே மனை கட்ட

வேண்டியது வரும். மனைவி சுகங்கள் குறைவாகவே இருக்கும். அவர்களின் ஆளுமைகள் அதிகமாக இருக்கும். சூரியனுடன் குரு கூடினால் வியாபாரத் தந்திரங்கள் ஜெயிக்கும். அதனால் இலாபங்கள் உண்டாம். சூரியனுடன் சுக்கிரன் கூடினால் கலையமிசம் கொண்ட வாகனங்கள் அமையும். கால்நடைகள் தம் மனைவியின் ஆளுமையின் கீழ் நடக்கும். வண்டி வாகனங்கள் தம் மனைவியின் பெயராலேயே நடக்கும்.

சூரியனுடன் சனி பகையோடு கூடினால் தாய்க்கும் தகப்பனுக்கும் இடையே உள்ள உறவுகள் மோசமாகும். தான் தலையிட்டுத் தீர்க்க வேண்டியதாயிருக்கும். பெரும்பாலும் மனைவியின் போக்கின்படி செய்ய விதியுண்டு.

சூரியனோடு இராகு கேதுக்கள் கூடினால் கிரகண தோஷமும், அதனால் மனை, வீடுகளில் சாபங்களும், பீடைகளும் உண்டாகும். சூரியனுடன் செவ்வாய் கூடினாலும் குரு கூடினாலும் நன்மை உண்டாம். அதனால் பூமி வகையில் முன் இலாபங்களும் உண்டாகும். சூரியனுக்குத் தக்க பிரீதிகள் செய்தால் நல்ல பலன்கள் உண்டென்று நாடி நூலின் வாயிலாக அறியப்படுகிறது.

ரிஷப இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சூரியன் இராசிக்கு 8ஆம் இடமான தனுர் இராசியில் நட்பு பலம் பெற்றிருப்பதால் மத்திமமான பலன்களே ஏற்படும். தாய்க்குச் சதா நோய்க் கண்டங்கள் வந்துபோகும்; ஆனால், உயிருக்குக் கேடில்லை. ஆனால், அவர் தம்மை நொம்பலப்படுத்திக்கொண்டு இருப்பார். தாய்வழிச் சுகம் குறைவாகவே உண்டாம்.

சூரியனுடன் செவ்வாய் பகை பெற்றுக் கூடினால் உங்கள் தாய்க்கும் உங்கள் மனைவிக்கும் இடையே அடிக்கடி சண்டைகள் வரும். அதனால் குழப்பங்கள் உண்டாம். தாயார் வறிய குடும்பத்தில் ஜெனித்திருக்க விதிகளுண்டு. சூரியனுடன் இராசிக்கு அட்டமாதிபதி குரு ஆட்சியாகிக் கூடினால் தாய்க்குக் கடுமையான கண்டங்கள் வந்தும் சாகாதிருப்பாள்.

சூரியனுடன் செவ்வாய் கூடினால் பூமி வகைகளில் பலன்கள் இருந்தும், அவ்வகையில் விரயமே அதிகம் உண்டாகும். இதனால் மனக்குழப்பம் அதிகம் உண்டாம். வண்ட வாகன நிலைகள் குறைவாக உண்டு. கண்டம் ஏற்படுத்தக்கூடிய பிராப்திகள் இருந்தாலும் சூரியனுடன் சுக்கிரன் கூடினால் வாகன வகையில் முன் நட்டங்களும், பின் இலாபங்களும் உண்டாம். கால்நடை வர்க்கத்தால் பால் பாக்கியங்கள் குறைவாகவே கிட்டும். கால் நடைகள் காரணமில்லாமல் மரணத்தைத் தழுவும். இதனால் பண விரயமும் தொல்லைகளும் உண்டாம். மனைகள் கட்டுவது கடினம். அப்படியே கட்டினாலும் மனக்குழப்பத்துடனே கட்ட வேண்டியது இருக்கும்.

இராசிக்கு அட்டமத்தில் சூரியனிருக்கச் செவ்வாய், புதன், குரு ஆகியன கூட நன்மைகள். பூமி இலாபங்கள் ஆகியன உண்டாகும். மற்ற கிரகங்கள் சேர வியாபார இரகசியங்கள் வெளியாகியும், மனை இலாபங்கள் குறைந்தும், கட்டடங்கள் கட்டக்கூடிய பிராப்தியில்லாமல் வாடகை வீட்டிலும் குடிசையிலும் குடியிருக்கும் நிலையும் உண்டாகும்.

சூரியனுடன் இராகு கேதுக்கள் சேர்ந்தால் பலன் முற்றிலும் குறைவு. சர்ப்ப ஊடுருவலும் மனைச்சாபமும் பெற்றிருக்கும். இம்மாதிரியான துர்பலன்களைத் தவிர்க்கச் சூரியனுக்கு எந்திர, மந்திர பிரீதிகளும் சிவபெருமானுக்கு ஆராதனைகளும் செய்தால் நல்ல பலனை அடைவார்கள்.

ரிஷப இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சூரியன் இராசிக்கு 9ஆம் இடமான மகரத்தில் பகை பெற்றிருப்பதால் பலன் குறைவாக ஏற்படும். தாய்க்கும் தகப்பனுக்கும் இடையே எப்போதும் சண்டைகள் வரும். தாய்க்கு வாதரோகங்கள் ஏற்படும். நடக்க முடியாமல் வேதனைகளை உண்டு பண்ணும். உங்களுக்கு மனை வகையான பலன்கள் ஒரே மாதிரியாக நடவா.

சூரியனுடன் செவ்வாய் உச்சமாகிக் கூடினால் பூமிவழியில் சுகபோக பாக்கியங்கள் உண்டாகும். தன் தந்தை வழியில் ஆதரவு

குறைவாகவே இருக்கும். விவசாய நிலங்களாயின் நன்மையுண்டாம். மலைத்தோட்டங்கள் பெருநன்மையை அளிக்கும்.

சூரியனுடன் புதன் நட்புடன் கூடினால் பூர்வ புண்ணிய சொத்துகளால் மனை கட்டவும், உழவு செய்யவும் விதி ஏற்படும். சூரியனுக்குக் குரு நீசமாகிக் கூடினால் மனை இலாபங்கள் குறைவுண்டாம். சுகக் குறைவும் அடிக்கடி உடல் நோயை ஏற்படுத்தும். பொன் வகையிலான சுகங்கள் குறைவாகவும் மத்திமமாகவும் இருக்கும். சூரியனுடன் சுக்கிரன் கூடினால் வாகன யோகங்களும், அதனால் பாக்கியங்களும் உண்டாகும்; ஆனால், கவனமாயிருத்தல் வேண்டும். சுக்கிரன் கூடினால் உயர்வான பலன்களைக் கொடுத்துக் கவிழ்த்தும் நிலையினை உண்டு செய்வார். அழகிய மனைகள் கட்டவும் பிராப்தி உண்டாகும்.

இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சூரியன் சனியோடு கூடினால் கிருஷி என்ற உழவு வகையில் தொழிலமைந்து அதனோடு போராட வேண்டியிருக்கும். விட்டு விலக முடியாது. சூரியனோடு சனி சேர்ந்திருந்து வாகன யோகங்கள் உண்டானால் சக்கரங்கள் அடிக்கடி பழுதாகியும், வெப்பத்தால் பழுதாகியும் தொல்லைகள் ஏற்படுத்தும். சூரியனுக்குக் கடுமையான பிரீதிகள் செய்வதன் மூலம் நாலாம் பாவ பலன்களைப் பூரணமாகப் பெறலாம் என்று நாடி நூலின் வாயிலாக அறியப்படுகிறது.

ரிஷப இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சூரியன் இராசிக்கு 10ஆம் இடமான கும்பத்தில் பகை பெற்றால், மத்திமமான பலன்கள் உண்டாகும். தாய்க்கு வாதரோகங்கள் உண்டாகும். நீசத்தனமான போக்குகளை உடையவளாயிருப்பாள். தொழில் வகையிலான ஆதரவு குறைவாக இருக்கும். உங்களுக்கு உழவு வகையிலான தொழில்களே அமையும். இரும்பு, அனல் சம்பந்தப்பட்ட வாகனங்களும் அமையலாம். பொதுவாக, கிருஷி என்ற உழவு வகையிலான தொழிலில் இலாபங்கள் உண்டாகும். விவசாயத்தால் நன்மையுண்டாம். ஆனாலும், அதில் திருப்தியிராது. மழை பொழிந்தாலும், பூமி நீரைக் குடித்துவிட்டுக் கட்டாந்தரையாகக்

காணப்படும். வெப்பமான பூமியாக இருக்கும். இளமையிலேயே கல்வி தடைப்படும். கேள்வி ஞானங்கள் அதிகம் உண்டாகும்.

சூரியனுடன் செவ்வாய் பகையுடன் கூடினால், பூமி மார்க்கங்களில் விரயமே அதிகம் உண்டாகும்; இருந்தாலும் விலக முடியாது. கட்டடங்கள் கட்ட நினைத்தாலும் உடனே முடியாது; காலம் கடந்துகொண்டே செல்லும்.

சூரியனுடன் சுக்கிரன் சேர்ந்தால்தான் தொழிலில் சம்பாதித்த பணத்தைக்கொண்டு கலையமிச வீடுகள் கட்ட விதியிருக்கும்; இருந்தாலும் காலம் கடந்து செல்லும். இருப்புக்கு மேற்கில் மனை அமைந்தால் நலமுண்டாகும்.

சூரியனொடு சனி கூடினால் மேற்கில் மனை கிடைக்கும். பெரும்பாலும் அகமென்பது ஓர் அளவுடனேயே திருப்தியில்லாதிருக்கும். சூரியனொடு இராகு, கேதுக்கள் கூடினால் 4ஆம் பாவ வகையில் அதம பலன்களையே கொடுக்கும் என்று கூறப்படுகிறது. கருப்பு, பழுப்பு வகையிலான தானியங்களை விதைத்தால் நன்மை உண்டாம். அதம பலன்களைத் தவிர்க்கச் சூரியனுக்கு யந்திர, மந்திர பிரீதிகள் செய்தால் நன்மையுண்டாகும்.

ரிஷப இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சூரியன் இராசிக்கு 11ஆம் இடமான மீனத்தில் நட்புப் பெற்றிருந்தால் 4ஆம் பாவ பலன்கள் சிறக்கும். தாய் ஆச்சார, அனுஷ்டானங்களோடும், தெய்வ பக்தியோடும் இருப்பார். தாய்வழி இலாபங்கள் உண்டாகும். தாய்க்கு இதய வகையிலான நோய்கள் ஏற்படும். கடுமையாக இல்லாமல் அமைதியாக இருப்பாள். கட்டக்கூடிய மனை, இருப்புக்கு வடகிழக்கில் அமையக்கூடிய விதி உண்டாகும்.

சூரியனுடன் குரு கூடி ஆட்சியானால் மனை கட்டும் விதியுண்டாகும். பொன், பொருள், ஆபரண வகையிலான சுகங்கள் ஏற்படும். உழவில் நாட்டம் குறைந்தே காணப்படும். கல்வியை

எப்படியும் பெறலாம். உங்களுக்கு கல்வி, நல்ல இலாபங்களை அளிக்கும்.

சூரியனுடன் செவ்வாய் கூடினால் மனைவி சுகங்களும் பூமி சுகங்களும் அவற்றினால் இலாபங்களும் குறையும். சூரியனுடன் சுக்கிரன் உச்சமாகிக் கூட வாகன யோகங்கள் உண்டாகும். கடன், வில்லங்கம் போன்றவை அவை வழியாக வந்தாலும், அவை ஒரு பொருட்டாகத் தெரியா.

சூரியனுடன் இராகுகேதுக்கள் கூடினாலும் பலன் குறைவு. கிரகண தோஷமுண்டாகும். வாழ்வில் 40 வயதிற்குமேல் மனை கட்டும் யோகம் உண்டாகும். மனை மங்களகரமாய் இருக்கும். சூரியனுடன் பாவ கிரகங்களோ, நீசக் கிரகங்களோ கூடினால் 4ஆம் பாவ வகையிலான நற்பலன்கள் குறைவாக அமையும். சூரியனுக்கு எந்திர, மந்திர பிரீதிகள் செய்வதால், நற்பலன்களை அடையலாம் என்று சந்திர நாடியின் வாயிலாகக் கூறப்படுகிறது.

ரிஷப இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சூரியன் இராசிக்கு 12ஆம் இடமான மேஷ இராசியில் உச்சம் பெற்றால், மறைவுப் பலன்களையும் உச்ச பலன்களையும் சேர்த்துச் செய்வார். தாய்க்கு உடல் வீரியமாயிருந்தாலும், இரத்த அழுத்தம் காரணமாக நோயுண்டாகும். அதனால் விரயங்கள் உண்டாகும். பூமி, மனை வகையிலான சுப விரயங்களும், அதனால் உயரிய பலன்களும் உண்டாகும்.

சூரியன் உச்சமாகிச் செவ்வாய் ஆட்சியாகிக் கூடினால் பூமி வகையில் உயரிய பலன்கள் உண்டாகும். விரயமானாலும் அது ஒரு பொருட்டாகத் தெரியாது. சுப விரயங்களால் சுகம் அடைய விதியுண்டாம். பணத்தைச் செலவு செய்து பொருள்களை வாங்கி, அவற்றின் மூலம் அடையும் சுகமே அதிகமுண்டாகும். விரயத்தினால் இலாபமும் உயர்வும் உண்டாகும். இருப்புக்குத் தெற்கில் மனை கட்டக்கூடிய விதி உண்டாகும். அது பலமான மனையாக இருக்கும்.

சூரியன் உச்சமாகி, சனி நீசமானால், பலன் முரணாகவே இருக்கும். கட்டிய வீடுகள் பாதியில் நிற்கும். உழவுத்தொழிலைத் தொடர்ந்து நடத்த முடியாது. இதனால் சுகங்கள் பாதிக்கப்படும். இந்த மந்த கதியானது சிறிது காலத்திற்கு நிலவி, பின்பு நீசபங்க ராஜயோகத்தில் உயர்வான பலன்களை அடையும் நிலை ஏற்படும்.

சூரியனொடு சுக்கிரன் கூடினால் அழகான ரதம் போன்ற வாகனங்கள் வாங்க விதியுண்டாம். இப்படி மனத்தில் ஆசையைத் தாண்டி விரயங்களையும். அதனால் இலாபங்களையும் ஏற்படுத்தும். சூரியனோடு இராகு கேதுக்கள் கூடினால் துர்பலன்களே ஏற்படும். பொதுவாக, சூரியன் இராசிக்கு மறைவில் 12ஆம் இடத்தில் இருந்தாலும், உச்சப் பலன்களைச் செய்வார். சனி சேர்ந்தால் தடையாகும். சூரியனுக்கு எந்திர, மந்திர பிரீதிகள் செய்தால் நல்ல பலன்கள் உண்டாகுமென்று நாடி நூல் கூறுகிறது.

ரிஷப இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியாகிய சூரியன் இராசியிலே இருந்தால் பகையானபடியால் மத்திமமான பலன்களே உண்டாகும். தாய் ஆடம்பர நிலை வேண்டியிருப்பாள். பணக்காரத்தனமான நிலையிலிருந்து மாறுபட மாட்டாள். தனக்கும் தன் தாய்க்கும் மனக்கிலேசங்கள் உண்டாகும். இருந்தாலும், சுமுகமான உறவுகள் உண்டாகும். சூரியனுடன் சுக்கிரன் ஆட்சியாகக் கூடினால் இளமையிலேயே ஆடம்பரமான மனைகளிலும் வாகனத்திலும் சென்றுவரும் நிலையிருக்கும். ஆனால், அதிகக் காலம் இருக்காது. இருப்புக்குத் தென்கிழக்கில் மனை கட்ட விதியுண்டு. சூரியன் மட்டும் தனித்திருந்தால், அதற்குத் தடையுண்டாம்.

சூரியனுடன் செவ்வாய் கூடினால் இளமையிலேயே பூமியை உடையவனாய் இருக்க விதிகள் உண்டாகும். சுகங்கள் ஆடம்பர நிலையை அண்டியே இருக்கும். வாகனங்கள் வாங்கினாலும் அவை நிலையாக இருக்கும். போனால் திரும்பி வருவது கடினமாக இருக்கும். உழவு, மனைகள் குறைந்தே காணப்படும். அப்படியே இருந்தாலும், அதில் ஆர்வம் குறைவாகவே இருக்கும். சூரியன் பகையாகி யாதொரு நட்புக்கிரகம் கூடினாலும் 4ஆம் பாவாதி

வழியில் மத்திமமான பலன்களையே ஏற்படுத்தும். சூரியனும் சந்திரனும் சேர்ந்திருப்பதால் அமாவாசை யோகம் ஏற்படும். இரகசியங்கள் பாதுகாக்கப்பட்டுப் பலப்பட்டு இருக்கும். இதற்குச் சில பலன்கள் ஏற்படும். தாயின் கையைவிடத் தகப்பன் கையே ஓங்கி இருக்கும். சூரியனுக்குத் தக்க பிரீதிகள் செய்தால் நன்மை உண்டாகும்.

ரிஷப இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சூரியன் இராசிக்கு 2ஆம் இடமான மிதுனத்தில் பகை பெற்றால் மத்திமமான பலன்களே உண்டாம். தாய்க்கு 40 வயதிற்குமேல் கடினமான பித்த நோய்களை ஏற்படுத்தும். இருந்தாலும், தாய்வழி ஆதரவு உண்டாம். தாய்வழித் தனங்களும் ஏற்படும். இருப்புக்கு வடக்கில் மனை கட்டும் விதியுண்டாகும். இருந்தாலும் 40 வயதிற்கு மேலேதான், அந்த மாதிரியான மனை யோகங்கள் உண்டாகும். கல்விகள், வித்தை ஆகியன மேன்மையுற்றிருக்கும். கணித வகையிலான கல்விகள் மேன்மையைத் தரும்.

சூரியனுடன் புதன் கூடினால் பேச்சு வகையிலான கல்வியும். வித்தையும் உண்டாம். குடும்ப சுகம் ஓரளவு நன்மையைத் தரும். விவசாய நிலங்களால் நன்மையுண்டாகும். மத்திம வயதிற்குமேலே விவசாயத்தைக் கவனிக்கும் நிலையுண்டு. பச்சைப் பசேலென்ற தாவரமும், பயறு வகைகளும், தானியமும் நன்மையளிக்கும்.

சூரியனுடன் மற்ற நட்புக்கிரகங்கள் கூடினாலும் நன்மையளிக்கும். மத்திய வயதிற்கு மேலே வாகன யோகங்களும் அவற்றால் இலாபங்களும் உண்டாம். கட்டிய மனை செழிப்புற்று விளங்கும். சுகமானது இளமையில் குறைவாயும், பின் வாழ்வில் அதிகமாகவும், நிம்மதியைத் தரும் நிலைகளுண்டு.

சூரியனோடு சுக்கிரன் சனி கூடினால், விவசாயம் மற்றும் கல்வி விஷயங்களில் வரக்கூடிய பலனைத் தடுப்பார்கள். இராகு கேதுக்கள் சூரியனோடு கூடினாலும் கிரகண தோஷம் ஏற்பட்டுப் பலனைத்

தடை செய்யும். சூரியனுக்குத் தக்க பிரீதிகள் செய்வதன் மூலம் நற்பலன்களை அடையுமென்று நாடி வாயிலாகக் கூறப்படுகிறது.

ரிஷப இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சூரியன் இராசிக்கு 3ஆம் இடமான கடகத்திலிருந்தால் மிகவும் மத்திமமான பலனைத் தரும். தாய்க்குச் சூலைநோயும், வெப்ப நோயும் உண்டாகும். தகப்பனால் தாய்க்குத் தொல்லைகள் உண்டாம். தாய்வழிச் சுகங்கள் குறைவாகவே இருக்கும். மனை மற்றும் கட்டடங்கள் வகையில் எழுச்சியானது சிறிது நாள் குறைந்தும் சிறிது விருத்தியுடனும் காணப்படும். 4ஆம் பாவ பலன்கள் ஒரே மாதிரியாகத் தொடர்ந்து வாரா. இருப்புக்கு எடமேற்கில் மனை கட்டும் விதியும், உழவு செய்யும் விதிகளும் உண்டாகும்.

சூரியனுடன் செவ்வாய் கூடினால் தாய் இரத்த வீரியங்கள் குறைந்து சோர்ந்து காணப்படுவாள். பூமியில் இலாபமிருக்காது. ஆனால், குரு உச்சமாகிக் கூடினால் புதையல் உள்ளிருக்கும் விதிகளும் யோகங்களும் உண்டாகும். ரிஷப இராசிக்காரர்களுக்குக் கடகத்தில் சூரியனிலிருந்து, செவ்வாயும் சேர்வாராகில் மனை வகையில் புதையல் யோகமுள்ளவர் என்று நாடி வாயிலாக அறியப்படுகின்றது. கண்டெடுக்கும் விதிகளும் எதிர்பாரா விதமாய் ஏற்படும்.

கல்வியில் முயற்சி இருந்தாலும், அது பாதியிலேயே தடைப்படும். வாகனம், மனை கட்டுதல் போன்ற அமிசங்களும் அவ்வாறே இருக்கும். சத்திரிய குணங்களும் மேலோங்கி இருக்கும். தான தர்மம் செய்து நல்ல புகழும் பட்டமும் கிடைக்க விதியுண்டு.

சூரியனுக்கு எந்திர மந்திர பிரீதிகள் செய்தும், சிவனுக்குப் பூஜைகள் செய்தும் நல்ல பலன்களையும் புதையல் எடுக்கும் அமைப்புகளையும் பெறுவாரென்று கூறப்படுகிறது.

# மிதுனம்
# நான்காம் பாவம்

திருமாலாகிய புதனை 4ஆம் பாவ அதிபதியாகப் பெற்ற மிதுன இராசி அன்பர்களே!

4ஆம் பாவமென்பது தாய், மனை, வாகனம், கல்வி, விவசாயம், நெருங்கிய வியாபாரம், சுகம், சொத்து, புதையல் நிலைகள் போன்றவற்றைக் குறிப்பிடும். உங்கள் இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான புதன் மேஷம் முதல் மீனம் வரை 12 இராசிகளிலும் இருந்த பலனையும் மற்ற கிரகங்களோடு கூடிய பலனையும் தனித்தனியே நாலாம் பாவமாக ஸ்ரீ பதஞ்சலி மகரிஷி அருளிய சந்திர நாடியின் மூலமாகக் கூறப்படுகின்றது. அன்பர்கள் தங்கள் இராசிக்குப் புதன் எங்கு உள்ளார் என்று பார்த்து, 4ஆம் பாவ பலனை அறிந்து கொள்ளுங்கள்.

"உண்டப்பா நட்புறு மிரட்டைமதி நாலோன்
உரைக்கவரும் புங்கனவன் ஆட்சியுச்ச மேறில்
கண்டதோர் வித்தைமேல் வாகன யோகம்
காட்டலாம் பால்யோகம் பசுவிருத்தி
விண்டுரைப்பேன் தாயவட்கும் யோக மென்றே
விரிக்கவரும் உழவுஒத்து மனைசுகமாய்த்
தண்டிநின்று நாலோனும் பண்டிதனும்
தலத்தினிற்க தரணிமேல் பலன்தான் பாரே."

மிதுன இராசிக்கு 4-க்குடைய புதன் கூடாத கிரகத்தோடு கூடினால் அமையும் பலன்கள்:

"தண்டிற்கும் தாய்மனையோன் பண்டிதனும்
தனவில்லாம் கற்கடத்தி லிருந்தா லுந்தான்
கெண்டைமேல் நீசமொத்துத் தான்கூட
கருத்தனுக்குப் பலனுமில்லை அதம மென்றே
கண்டிடுமோர் நீசபங்கம் ஆகிடினும்
கவலைமேல் யோகம்மெத்த உண்டென்று
பண்டிதனும் பகைபெறவே மத்திம மென்றே
பலனதுவும் இரண்டேற ஒன்றிடவே..."

துர்பலன்கள் இருப்பின் எந்திர, மந்திர பிரீதிகள் செய்து பலனைத் தக்க வைத்துக்கொள்ளவும்.

மிதுன இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 4ஆம் இடமான கன்னியிலேயே ஆட்சி உச்சமானால் 4ஆம் பாவ வகையில் மிகவும் உயர்வான பலன்கள் உண்டாகும். கல்விகள் தேர்ச்சியுடன் காணப்படும். கணித வித்தையிலும், நுட்ப வித்தைகளிலும் ஈடுபாடும் பட்டம் வாங்கும் நிலையும் உண்டாகும்.

தாய், நல்ல நிலையில் மதிக்கப்படுவாள். அவளின் முன்வாழ்வு மத்திமமாகவும் பின்வாழ்வு உத்தமமாகவும் இருக்கும். ஆச்சார அனுஷ்டானங்கள் கொண்டவளாகவும் இங்கிதம் தெரிந்தவளாகவும் இருப்பாள். இருப்புக்கு வடக்கில் மனையிருக்க விதியுண்டாகும். மத்திம வயதிற்குமேல் கலையழகுடன் மனை கட்ட பிராப்தி ஏற்படும். புதனுடன் சுக்கிரன் நீசமாகிக் கூடினால், பூர்வ புண்ணியச் சொத்துகளால் நன்மைக்குறை ஏற்படும்; அது அழியும் நிலையிலிருக்கும். அந்த மனையும் சாபம் பெற்று விளங்கும். புதன் மற்ற நட்புக் கிரகங்களான செவ்வாய், குரு, சனி போன்றோருடன் சேர்ந்திருந்தால் 4ஆம் பாவ வழியில் சுமுகமான நற்பலன்கள் ஏற்படும்.

உழவுத்தொழிலில் பிற்பலன்களே அதிகம் உண்டாம். பச்சைப் பயறுகள், பச்சைத் தாவரங்கள், பச்சை நிறத் தானியங்கள் போன்றவற்றில் பெருநன்மையுண்டாம். வாகன யோகங்களும் தடைப்படும். வாகனங்கள் அவயோகத்தை ஏற்படுத்தும். புதனுடன் மற்ற கிரகங்கள் கூடினால் மேன்மையான பலன்கள் உண்டாம்.

புதனுடன் சூரியன் சேர்ந்தாலும் பலன்- குறைவாகவே ஏற்படுத்தும். தனக்கு உயர்வான மனிதர்கள் தொடர்புகளும், அரசுத் தொடர்புகளும் கிடைக்காமல் தடைப்படுத்தும். புதன் கிரகத்திற்கு யந்திர, மந்திர பிரீதிகளும் மஹாவிஷ்ணுவுக்கு ஆராதனைகளும் செய்தால் நல்ல பலனையடையலாம் என்று சந்திரநாடி கூறுகிறது.

**மிதுன இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியாகிய புதன் இராசிக்கு 5ஆம் இடமான துலாத்தில் நட்புப் பெற்றிருந்தால் பலன் அளவாகவும், ஆனால், நல்ல பலன்களாகவே அமையும். தாயின் வழி சில பூர்வ புண்ணியாஸ்திகளை அடையவும், மனை பாகத்தை அடையவும் சில பிராப்திகள் உண்டு. புதனுடன் சுக்கிரன் ஆட்சியாகி**

அமைந்தால் தாய்வழி உதவிகளும், விவசாய உதவிகளும் ஏற்படும். தாய்க்குச் சில காலகட்டங்களில் நேத்திர ரோகமுண்டாகும். ஆனாலும் பலமுடனேயே இருப்பார்கள். இருப்புக்குத் தென் கிழக்கில் மனை வாங்கும் விதியும், உழவு செய்யும் விதிகளும் உண்டாகும். ஆனால், புதனுடன் சூரியன் நீசமாகிக் கூடினால், அந்த விதிகள் தடைப்பட்டு விளங்கும். தன் தாய்க்கும் உடல் வீரியங்கள் குறைந்து காணப்படும்.

புதனுடன் சனி உச்சமாகி இருந்தால் தாயைவிடத் தகப்பன் கையே ஒங்கியிருக்கும். தாயைச் சில விதத்தில் தகப்பனானவர் மட்டுப்படுத்துவார். தாய்க்குச் சில கண்டங்களும், முழங்கால் ரோகங்களும் ஏற்படும். புதனுடன் சுக்கிரன் ஆட்சியாகிக் கூடினால், உயர்ந்த பலன்கள் உண்டு. வாகன யோகங்கள் உண்டாம். அலங்காரமான அழகிய தரமான இரதம் போன்ற வாகனங்களைப் பெறுவதற்கும் விதியுண்டு. அதுபோல் வீடுகளும் அழகிய அமிசங்களுடன் கட்ட விதிகள் ஏற்படும்.

புதனுடன் நீசக்கிரகங்களுள் எவரேனும் கூடினால் 4ஆம் பாவ பலன்கள் தடைப்படும். ஆட்சிக்கிரகம் அவர்களோடு கூடினால் நீசபங்க ராஜயோகம் ஏற்படுத்தி, வாழ்வில் திடீர் யோகப் பலன்களைக் கொடுப்பார்கள்.

நஞ்சை நிலங்களைவிடப் புஞ்சை நிலங்கள் மேன்மையுடன் இருக்கும். கல்வியானது இளமையில் தடைப்பட்டுப் பின்பு நல்லபடியாக விளங்கும். புதனுக்கு யந்திர, மந்திர பிரீதிகளும் மஹாவிஷ்ணுவுக்கு ஆராதனைகளும் செய்தால், நல்ல யோக பலன்களைப் பெறலாமென்று கூறப்படுகின்றது.

மிதுன இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 6ஆம் இடமான விருச்சிகத்தில் நட்புப் பெற்றிருந்தாலும் சமபலத்தையே பெறுகின்றார். பொதுவாக, மத்திம பலன்களையே ஏற்படுத்தும். தாய், உடல் வீரியங்களும் மனத்தைரியங்களும் உள்ளவளாய் இருப்பாள். புதனுடன் செவ்வாய் சேர்ந்தால் தாய்க்கு இரத்த சம்பந்தப்பட்ட நோய்கள் ஏற்படும். உங்களுக்குப் பூமியானது கடன், வில்லங்கம் போன்றவற்றால் பாதிக்கப்பட்டு இருக்கும் நிலை உருவாகும். மனைகள், கட்டடங்கள் ஆகியவற்றை வாங்கினாலும்

கட்டடங்களைக் கட்டினாலும் கடன் பேரிலே இருக்கும் நிலை ஏற்படும்.

விருச்சிக இராசியில் புதனுடன் குரு, சனி முதலானோர் கூடினால் 4ஆம் பாவ பலன்கள் மத்திமமாகவே உண்டாகும். கல்வி பெறக் கடினத் தடையுண்டு. கடன் வாங்கி வித்தை மேற்கொள்ளும் நிலையை உண்டாக்கும். எவ்வளவு உழைத்தாலும் விவசாயத்தில் பலன் கிட்டாத நிலையே உண்டாகும். இதனால் இலாபம் கிட்டாமல் கடன் வாங்க வேண்டிய நிலை ஏற்படும்.

புதனுடன் செவ்வாயும் சுக்கிரனும் கூடினால் மனை மற்றும் வாகன வழியில் யோகபலன்கள் உண்டாகும். புதனுடன் இராகு கேதுக்கள் கூடினாலும், பயிர்கள், பூச்சிகளால் பாதிப்புறும். இருப்புக்குத் தெற்கில் வாங்கக்கூடியதும், வரக்கூடியதுமாகப் பூமி இருக்கும். அந்தத் திக்கில் மனைகள் கட்ட வேண்டியது வரலாம். புதனுடன் சூரியன், குரு, சனி போன்ற கிரகங்கள் கூடி, அந்த நிலையுள்ள சாதகர் வீடு கட்டினால், கடனால் துன்பப்படுவர் என்றும், வீட்டினால் துன்பம் அடைவீர் என்றும் நாடி நூல் வழியாக அறியப்படுகின்றது. புதனுக்குக் கடுமையான யந்திர, மந்திர பிரீதிகளும் மஹாவிஷ்ணுவுக்கு ஆராதனைகளும் செய்தால் நல்ல பலன்களை அடையலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.

மிதுன இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 7ஆம் இடமான தனுசு இராசியில் நட்புப் பலத்துடனிருப்பதால், அளவான பலன்களையும், ஆனால் சுமுகமான நல்ல பலன்களையும் 4ஆம் பாவ வழியில் கொடுப்பார். மிதுன இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதி புதன் தனுர் இராசியில் இருக்கப் பிறந்தவருக்கு வரக்கூடிய மனைவியால் போகமும், மனையும், வாகன வசதிகளும் கிட்டும் என்று கூறப்படுகின்றது. புதனுடன் குருவும் ஆட்சியாகிக் கூடுவாராகில் மனைவி வகையிலான உயர்ந்த பலன்கள் 4ஆம் பாவ வழியில் உண்டாகும். ஆனால், தாயானவள் ஓர் அளவுடனேயே நடத்தப்படுவாள். நல்ல நிலைமைகள் அவளுக்கு இல்லை. உங்களால் வித்தைகள் மேலோங்கி இருக்கும். அடுத்தவருக்கு அறிவுரை கூறும் நிலையில் உங்கள் அந்தஸ்து உயர்ந்திருக்கும். புதனுடன் செவ்வாய் கூடினால் மட்டுமே இடர் உண்டாகும்.

மனை, வீடுகள் கட்டுவதில் தகராறும், கடன் பிரச்சினைகளும் ஏற்படும். இருப்புக்கு வடகிழக்கில் மனை வாங்கும் விதியுண்டாகும். புதனுடன் செவ்வாயைத் தவிர மற்ற கிரகங்கள் கூடுவதால், நாலாம் பாவ வழியில் உயர்ந்த பலன்கள் உண்டாகும். புதனுடன் சுக்கிரன் கூடி குரு சேர்ந்திருந்தால், மனைவி பெயரிலேயே நடக்கும். அதுவே நன்மையாக இருக்கும். வீடு, மனை, வாகனங்கள், விவசாயங்கள் ஆகியன நற்பலனைக் கொடுக்கும்.

புதனோடு செவ்வாய் சேர்ந்திருந்தால் பூமி வகையில் முன்பிரச்சினைகளும், அவை தீர்ந்து இலாபங்களும் உண்டாகும். தோட்ட விளைச்சல் நற்பலன்களை ஏற்படுத்தும்; பழுப்புற்ற தானிய வகைகள் உயர்வான பலன்களைத் தரும். புதனுக்கு எந்திர, மந்திர பிரீதிகளும் மகாவிஷ்ணுவுக்குப் பூஜைகளும் செய்தால், உயர்வான பலன்கள் உண்டென்று நாடி வழியாக அறியப்படுகின்றது.

மிதுன இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 8ஆம் இடமான மகரத்திலிருந்தால் மத்திமமான பலன்களே ஏற்படும். நீசக்கிரகங்கள் புதனுடன் கூடினால் அதம பலன்களே உண்டாகும். தாய்க்கு அடிக்கடி நோய்களும், முழங்கால் வாத ரோகங்களும் வந்து அடிக்கடி தொல்லைப்படுத்தும். பலமுறை அட்டம கண்டத்தைத் தழுவுவார்கள். புதனுடன் சனி ஆட்சியானால் தாய்க்கு ஆயுள் பலமுண்டாம். உங்கள் கல்வி தடைப்படும். மனச்சஞ்சலத்தினால் படிக்க மனமிராது.

புதனுடன் சனி கூடுவதால் உழவுத்தொழில் விருத்தியடையும். ஆனால், மன நாட்டம் அதில் இராது. புதனுடன் குரு நீசமாகிக் கூடினால் உங்கள் மனைவிக்கும் தாய்க்கும் சேராது அடிக்கடி சண்டைகள் வரும். அது போல், வாகனங்கள், உழவு போன்றவை தொழிலாகச் செய்ய முடியாத நிலையை ஏற்படுத்தும்.

புதனுடன் செவ்வாய் உச்சமாகிக் கூடினால், பூமியானது வலுப்பட்டிருக்கும்; ஆனால், பயனில்லாத நிலையில் இருக்கும். வாகன யோகங்கள் குறைவாகவே இருக்கும். மீறிய செயல்பாட்டினால் விபத்துகளைச் சந்திக்கும் நிலைகளுண்டாம். வாகனச் சக்கரங்கள் பழுதடையும் நிலையிலிருக்கும். இருப்புக்கு மேற்கில் மனை வாங்கும் யோகமுண்டாகும். புதனுடன் சுக்கிரன்

கூடினால் நல்ல அலங்காரமான மனைகள் கட்ட முயற்சிகளும், பொருளுதவியும் ஏற்படும். பூமி வகையில் கருமை, பழுப்பு நிறமுள்ள தானியங்கள் நல்ல பலன் கொடுக்கும்.

சில காலங்களில் கரிசல் காட்டு வருமானம் உண்டாகும். சொந்த பந்தங்கள், ஒட்டியும் ஒட்டாமலேயும் இருக்கும். நீச பதத்தைக் கண்டுபிடிப்பார்கள். நீசத்தனமான போக்கை உடையவர்களாய் இருப்பார்கள். புதனுக்கு எந்திர, மந்திர பிரீதிகள் செய்தால் உயர்வான பலன்களை அடையலாம்.

மிதுனத்தில் 4ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 9ஆம் இடமான கும்பத்தில் நட்புப் பெற்றிருந்தாலும், மத்திமமான பலன்களே 4ஆம் பாவ வழியில் உண்டாகும். தாய்க்கு வாத ரோகங்களை உண்டு செய்யும். புதனுடன் சனி ஆட்சியாகிக் கூடினால் தந்தை தாயை அடக்குவதிலேயே இருப்பார். இதனால் குடும்பத்தில் மனக்கிலேசம் உண்டாகும். கல்வி கற்றாலும் அது மந்தமான நிலையிலேதான் இருக்கும். குறுகிய காலத்தில் வித்தையைக் கற்க முடியாது.

கும்பத்தில் புதனுடன் செவ்வாய், சூரியன் போன்ற கிரகங்கள் பகையாகிக் கூடினால் மத்திமமான பலன்களே உண்டாகும். ஆனால், புதனுடன் சனி வலுத்திருந்தால், பிதுர் வழியில் உழவுத்தொழில் நல்லபடியாக இருக்கும். கரிசல்காடாக இருந்தால், நல்ல பொழிவும், காட்டு வெள்ளாமையும் நன்கு நடக்கும். கரிய நிறத் தானியங்கள் நன்கு விளையும். நல்ல வியாபாரம் உண்டாகும். புதனுடன் சுக்கிரன் கூடினால் வாகன பிராப்திகள் தகப்பனால் உண்டாகும். புதன், சுக்கிரன் ஆகியவரோடு சனி கூடுவாராகில் வாகனங்களுக்கு மந்த கதியே ஏற்படும். சக்கரங்கள் அடிக்கடி பழுதாகும்.

தானிருக்கும் இருப்புக்கு மேற்கில் மனை கட்டக்கூடிய விதியும், உழவு செய்யக்கூடிய விதியும் உண்டாகும். கும்பத்தில் புதனிருந்து சுக்கிரன், சனி, குரு போன்ற கிரகங்கள் இருந்தால் தகப்பன் வீட்டிலேயே வசிக்கும் நிலை உண்டாம். பின்பு தனிப்பட்ட முறையில் மனை கட்ட விதிகள் ஏற்படும். சுகங்கள் மந்தமாகவே இருக்கும். வாத ரோகமாகவும், மந்த நடையாகவும் இருக்கும். தேகமே மந்தமாகக் காணப்படும். கும்பத்தில் புதனுடன் இராகு, கேது

கூடினால் தாய்க்கு ஆபத்து உண்டாகும். விஷ ஜுரங்கள் வந்து போகும். உங்கள் கல்வி பாழாகும். பொதுவாக, மந்தமான பலன்களே உண்டு என்று நாடி நூலின் வழியாக அறியப்படுகின்றது. புதனுக்கு தக்க பிரீதிகள் செய்தால் உயர்வான பலன்களை அடையலாம்.

மிதுன இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 10ஆம் இடமான மீனத்தில் நீசமாகி இருந்தால் பெரும்பாலும் அதம பலன்களே உண்டாம். தாய்க்கு இதய ரோகம் உண்டாகும். அவளால் மனைப்பலன்கள் குறைவாகவே இருக்கும். உங்களுக்குக் கல்வி கற்க முடியாது. மீறிக் கற்றாலும் தொழில் என்ற அளவில் செல்ல முடியாது வருந்துவீர்கள். நில புலம், மாடு, மனை போன்ற வற்றிலிருந்து ஜீவனடபம் குறைவாகவே இருக்கும். கால்நடைகள் வளர்ப்பும் நன்றாய் இராது. உழவைத் தொழிலாக அண்டியிருந்தால் மிகவும் கஷ்டமாகும். விதைத்த நெல் சாவியாகப் போகும் நிலை உண்டாகும்.

புதன் நீசமாகிச் சுக்கிரன் உச்சமானால் திடீர் வாகன யோகம் உண்டாகும். ஆனால், அதற்குத் தக்க பிரீதிகள் செய்து தக்க வைத்துக்கொள்ள வேண்டும். புதனும் சுக்கிரனும் கூடினால் நீசபங்க ராஜயோகம் ஏற்பட்டு, வாழ்வின் மத்திமத்திலே வாகன யோகங்கள் ஏற்படும்; ஆனால், தொடர்ந்து தொழிலாகச் செய்ய முடியாது.

புதன் நீசமாகிக் குரு ஆட்சியானால், சுகம் சுமாராய் இருக்கும். புதன் மட்டும் தனியே மீனத்தில் நீசமானால் அனைத்து வழியிலும் கெடுதியே ஏற்படும். புதனுடன் குரு, சுக்கிரன் போன்ற கிரகங்கள் கூடுதலால் ஏற்பட்ட யோக பலன்களே உண்டு. புதனுடன் குரு கூடுதலால் இருப்புக்கு மேற்கில் மனை கட்டும் விதி உண்டாகும்.

நீசக் கிரகத்துடன் சுபகிரகங்களோ உச்சக் கிரகங்களோ கூடவில்லையானால், மனை யோகம் கிட்டாது என்று நாடி வாயிலாக அறியப்படுகின்றது. மனை யோகம், வாகன யோகம் ஆகியவற்றை உண்டு செய்யப் புதனுக்கு எந்திர, மந்திர பிரீதிகள் செய்தால் நற்பலன்களை அடையலாம். நீசம் பெற்ற கிரகத்தோடு நட்புக் கிரகங்கள் கூடினாலும் மத்திம பலனே உண்டு.

மிதுன இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 11ஆம் இடமான மேஷத்தில் நட்புப் பெற்றால் பலன்கள்

குறைவாகவும், ஆனால், சாதக பலன்களே உண்டாகும் என்றும் கூறப்படுகின்றது. புதன் மேஷத்தில் தனித்திருந்தாலும் செவ்வாயோடு கூடி இருந்தாலும், தாய் வீரியமானவராகவும், தைரிய குணங்களைப் பெற்றவராகவும் இருப்பார். அவருக்கு இரத்த சம்பந்தமான ரோகங்கள் ஏற்பட்டு அவஸ்தைப்படுவார். உங்களுக்கு மனையோக இலாபமுண்டாம். புதனோடு சூரியன் அல்லது சுக்கிரன் கூடினால் வாகன யோகமும், இலாபமும் ஏற்படும். இவர்களோடு சனி நீசமாகிச் சேர்ந்தால் பலனை மிகவும் தடை செய்வார். மனை யோகங்கள், வாகன யோகங்கள் ஆகியன இருந்தாலும், மந்த நிலையே இருக்கும் என்று கூறப்படுகின்றது.

மேஷத்தில் புதனோடு சூரியன், சுக்கிரன் ஆகியோர் கூடினால நற்பலன்கள் உண்டாகும். புதனோடு செவ்வாய் கூடுவதால் பூமி இலாபங்கள் உண்டு. செம்மண் பூமியானால் யோகமுண்டு. பயிர்களும், சிவப்பு நிறத் தானியங்களும் நல்ல சுபிட்ச பலனைத் தரும். ஆனால், சாதகர் வண்டி, வாகனங்கள், கால்நடைகள் ஆகியவற்றை உடையவராக இருப்பார். புதனுடன் சனி நீசமாகிக் கூடினால், இலாபமுண்டாயினும் மந்தமான சூழ்நிலைகளே ஏற்படும். துரித கதியில் செயல்கள் இரா. இருப்புக்குத் தெற்குத் திக்கில் மனை அமையும் விதிகளும், வீடு கட்டும் பிராப்திகளும் உண்டு.

புதனுடன் உச்ச கிரகங்களோ ஆட்சிக் கிரகங்களோ சேர்ந்தால், வித்தையில் இலாபம் உண்டாகும். பெருமை, ஆள்பழக்கம், பெரியோரின் தொடர்பு போன்றவை ஏற்படும். புதனுடன் சனி சேர்ந்தால் கல்வியானது இலாபம் தராது; மந்தமாகவே இருக்கும். புதனுக்குப் பிரீதிகள் செய்தால் உயர்வான பலன்களைப் பெறலா மென்று நாடி கூறுகிறது.

மிதுன இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியாகிய புதன் இராசிக்கு 12ஆம் இடத்தில் ரிஷபத்தில் நட்புடனிருப்பதாலும், மறைவுப் பலன்களையும், நல்ல பலன்களையும் சேர்த்துச் செய்வார். தாய்க்கு நேத்திர ரோகமுண்டாகும். உயர்ந்த குடியில் பிறந்து வறுமையில் வாழ்பவராயிருப்பார். அவர்கள் குடும்பம் நாளடைவில் பிரிந்து இருக்கும். தாய்க்கு நோயினால் விரயச் செலவுகள் உண்டாகும். புதனுடன் சுக்கிரன் ஆட்சியாகிக் கூடினால் வாகன யோகம்

உண்டெனினும், அந்த யோகத்தையும், அதனால் இலாபத்தையும் அடைவதற்குக் கடினமாக இருக்கும்.

மனைகள், .காடுகள், கழனிகள் ஆகியன இருந்தாலும், வரவைவிடச் செலவே அதிகம் காணப்படும். அதிக விரயத்தின் மேல் கல்வியைத் தொடர வேண்டியிருக்கும். ஆனால், அந்தக் கல்வியினால் இலாபமோ, புகழோ குறைவாகவே இருக்கும். இருப்புக்குத் தென்கிழக்கில் மனை வாங்கும் அமிசங்கள் உண்டாகும். மறைவு பெற்ற புதனோடு இரண்டுக்கும் மேற்பட்ட ஆட்சி, நட்பு பெற்ற பல கிரகங்கள் கூடினால் மனை கட்டும் விதி உண்டாகும். அம்மனை அதிகமான விரயத்துடன் ஆடம்பரமாகக் காணப்படும். புதனுடன் சுக்கிரன் ஆட்சியாக இருந்தால் பால் பாக்கியம் உண்டாகும். கால்நடைகள் விருத்தியாயிருந்தாலும், வரவுக்கும் செலவுக்கும் சரியாகவே இருக்கும். வாகன யோகங்களும் அப்படியே.

வரவு இருந்தாலும் அதையும் மீறிச் செலவுகள் தலை தூக்கி நிற்கும். தொழில் இரகசியங்களைக் காப்பாற்றுவது கடினமாய் இருக்கும். விரயத்தின் அடிப்படையிலே சுகங்கள் காணப்படும். புதனுக்குக் கடுமையான யந்திர, மந்திர பிரீதிகள் செய்தும் திருமாலுக்குப் பூஜைகள் செய்தும் நல்ல உயரிய பலன்களை அடையலாமென்று கூறப்படுகின்றது.

மிதுன இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதி புதன் இராசியிலேயே இருந்தால் நல்ல பலன்கள் உண்டாகும். புதனானவர் ஆட்சியாகித் தனித்திருந்தாலும், வேறு சுபக்கிரகங்கள் கூடினாலும் நன்மையான பலன்களுண்டாம். ஆனால், சந்திரனுடன் புதன் கூடினால் பலன்கள் இருந்தாலும், குறைவாகவே காணப்படும். தாய் தன்னோடு இருக்க விதி உண்டாம். அவள் இயற்கையிலே ஆச்சார, அனுஷ்டானங் களோடு புராணக் கதைகளைப் படித்தவராகவும் இருப்பார். கல்வி கள் மேன்மையுடனிருக்கும். கணிதக் கல்விகளும், உயரிய பட்டங் களும் உண்டாம்.

இயற்கையிலேயே மனை, காடு, கழனி என்று இருக்க விதி உண்டாம். இருப்புக்கு வடக்கில் மனையும், வீடு கட்டுவதற்கு விதியும் உண்டாகும். புதனுடன் சுக்கிரன் சேர்ந்தால் வாகன யோகம்

உண்டாகும். சுகங்களுக்குக் குறைவில்லை. மனை சுகமும், மக்கள் சுகமும் உண்டாகும்.

புதனுடன் சூரியன் பகையாகிச் சேர்ந்தால் சில பலன்களைத் தடை செய்வார். மனைகள் வெப்ப பூமியாக இருக்கும். வறட்சியுடன் இருக்கும் நிலை உண்டாகும். புதன் 2-க்கும் மேற்பட்ட நட்புக் கிரகங்களுடன் கூடினால் போக பாக்கியங்களும் களத்திர சுகங்களும், இள நங்கையரைக் கூடும் சுகமும் உண்டாகும். 40 வயதிற்கு மேல் வண்டி வாகனங்கள் வந்தால் ஸ்திரமாக இருக்கும். புதனுடன் இராகு கேதுக்கள் கூடினால் பலன்களைக் கூட்டிக் குறைத்துத் தரும். பயிர்கள் அடிக்கடி பாதிக்கப்படும். மனைகள், வீடுகள் ஆகியன பழமையானவையாக இருந்தால், சர்ப்ப ஊடுருவல் உண்டாகும். வீடுகள் பாழடையும். புதனுக்கு யந்திர மந்திர பிரீதிகளும், ஆதிகேசவப் பெருமாளுக்கு ஆராதனைகளும் செய்தால் பெருநன்மையுண்டாகும் என்று மகரிஷி சந்திர நாடியின் மூலமாகச் கூறுகிறார்.

மிதுன இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 2ஆம் இடமான கடகத்தில் நட்புப் பெற்றிருந்தாலும் தன் பகை வீட்டில் மத்திம பலன்களையே தருவார். தாய்க்கு அடிக்கடி உடல் நோவுகளும் உண்டாகும். படுத்த படுக்கையாகிப் பின்பு தெளியும் நிலை அடிக்கடி ஏற்படும். புதனுடன் செவ்வாய் நீசமாகிக் கூடினால் இரத்த நோய்கள் தாய்க்கு அதிகம் ஏற்படும். உங்களுக்குப் பூமி வகையில் இடருண்டாகும். பூமி விளைச்சல் பாதிநாள் நன்றாயும், பாதிநாள் மோசமாகவும் இருக்கும். தாய்க்கு உடல் வீரியங்கள் குறைந்து இரத்த சோகையை ஏற்படுத்தும். புதனுடன் சுக்கிரன் கூடினால் வாகனயோகங்கள் மத்திமமாகவே உண்டாகும். வீடு, மனைகள் கட்டுவதிலும், இடர்கள் ஏற்படும். தனங்கள் புரள்வதற்குக் கஷ்டமாயிருக்கும். கடகத்தில் புதனிருக்கக் குரு கூடினால் நன்மையுண்டு; மற்ற கிரகங்கள் கூடினால் மனைவியினால் மனைகளும், வாகன பிராப்திகளும் உண்டு. உயர்ந்தோரால் போற்றப்படும் நிலை உண்டாம். பெரியோரின் தொடர்புகளும் உண்டாகும்.

புதனுடன் நீசக் கிரகமும் 2-க்கும் மேற்பட்ட பகைக் கிரகங்களும் கூடினால் கல்வி தடைப்படும். வாகன, வண்டி நிலைகளும்,

யோகங்களும் மட்டுப்படும். அதனால் தனம் புரளாது. விவசாய வர்க்கங்களிலும் மத்திமமான பலன் உண்டாகும். புதனோடு செவ்வாய் நீசமாக நிலம், சாபம் உண்டாகும். இவர்களுடன் குரு கூட நன்மையுண்டாம். திடீர் யோகங்கள் 4ஆம் பாவ வழியில் ஏற்படும்.

புதனும் செவ்வாயும் 4ஆம் பாவ கிரகங்களும் மட்டும் கூடினால் அதம பலன்களே உண்டாம். இதனால் தொல்லைகளே அதிகம் ஏற்படும். புதனுக்குக் கடுமையான எந்திர, மந்திர பிரீதிகளும் பெருமாளுக்கு ஆராதனையும் செய்தால் நல்ல பலன்களை அடையலாம் என்று அறியப்படுகின்றது.

மிதுன இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதி புதன் இராசிக்கு 3ஆம் இடமான சிம்மத்தில் பகை பெற்றால் மத்திமமான பலன்களே உண்டாகும். புதனுடன் சூரியனும் குருவும் கூடினால் நற்பலன்கள் உண்டாகும். புதனுடன் 2-க்கு மேற்பட்ட பகைக் கிரகங்கள் கூடினாலும், புதன் தனித்து இருந்தாலும் மத்திமமான பலன்களே உண்டாகும். தாய்க்குச் சிரசு நோய்களும், உடல் உஷ்ண நோய்களும் ஏற்படும். இருப்புக்குக் கிழக்கில் மனையும், காடு கழனிகளும் இருக்க விதியுண்டாகும். அவை உஷ்ண பூமிகளாக இருக்கும். நீர் வற்றிவிடும். வீடுகள், குடி இருக்க முடியாதபடி பீடையாகும். வண்டி வாகன யோகங்களும், மனை யோகங்களும் குறைவாகவே இருக்கும். வெப்ப மண்டலப் பயிர்கள் கோதுமை, சோளம், மக்காச் சோளம் போன்ற பயிர்கள் - மட்டுமே வளரும்.

புதனுடன் இரண்டுக்கு மேற்பட்ட பகைக் கிரகங்கள் கூட கல்வி பாதிக்கப்படும். புதனுடன் குரு சேர ஓரளவு படிப்பினை எட்டலாம். கல்வியால் நலன்கள் உண்டாகும். பால் பாக்கியங்கள் குறைவாய் உண்டு. மாடுகள், கால்நடைகள் ஆகியன இருந்தாலும் மடியிலிருந்து பால் குறைவாகவே சுரக்கும். எந்த இரகசியத்தையும் மறைவாய் வைக்க முடியாது.

இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதி புதன் பகையானால், பலன் குறைவே உண்டாம். புதனுக்கு யந்திர, மந்திர பிரீதிகளும் மஹா விஷ்ணுவிற்கு ஆராதனைகளும் கடுமையாகச் செய்தால் நற்பலன் கள் உண்டாகுமென்று கூறப்படுகின்றது.

# கடகம்
## நான்காம் பாவம்

அசுர குரு சுக்கிராச்சாரியாரை 4ஆம் இடத்து அதிபதியாகப் பெற்ற கடக இராசி அன்பர்களே! உங்களுக்குத் தாய், வீடு, மனை, கல்வி, விவசாயம், சுகம், வாகனம், புதையல் போன்றவற்றிற்கு அதிபதியாக உள்ள சுக்கிரன், உங்கள் இராசிக்கு எந்த இடத்தில் இருக்கிறார் என்று பார்த்துப் பலனை அறிய வேண்டுகிறோம். சுக்கிரன் இந்த 12 இராசிகளில் இருந்த பலனும், அவரோடு சேர்ந்த கிரகங்களின் தொடர்பும் 12 பாகமாக ஸ்ரீ பதஞ்சலி மகரிஷி சந்திர நாடியில் கூறுகிறார்.

### உச்ச ஆட்சிப் பலன்

"அருமதிக்கு நாலோனும் சுங்க னாகி
இடையொரு விடைசீர் நிறைக்கோலி லாட்சியேற
பெருசல சஞ்சாரியி லுச்ச மாக
பெருமைமேல் சுகங்களதும் தான்பலவாய்
கருதவரும் மனைமேவும், மாடமொத்து
காட்டலாம் வாகனங்கள் வித்தை மேலாய்
தருமேதான் தனையீன்றோன் சுகங்கள்பல
தனயனுக்குப் பெருவாறாய் பலனுந் தானே !"

### நீசப் பகை பலன்

"பிருகுமவர் கன்னியிலே நீச மாக
பொருத்தமில்லாச் சத்ருக்கள் சேர்ந்திடினும்
குருவுமவர் சுங்கனொடு கூடிடினும்
குறிப்புடனே பலனில்லை மத்திமமாம்
சுருதிபல கற்றிருந்தும் வீணாய்ப் போகும்
சுந்தரனின் தாய்க்குமே கேடுபல
தேருபல வாகனங்கள் மொண்டியென்றே
தனயனுக்குச் சுகமதுவும் போகுந்தானே !"

சுக்கிரனுக்கு ஆராதனையும் மந்திர, யந்திர பிரீதிகளும் மஹாலக்ஷ்மிக்கு பூஜைகளும் செய்தால் நற்பலன்களை அடையலாமென்று ஸ்ரீ பதஞ்சலி மகரிஷி சந்திரநாடியில் கூறுகிறார்.

கடக இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 4ஆம் இடமான துலாத்தில் ஆட்சியாக இருந்தால் நற்பலன்கள் உண்டாகும். தாய் உயர்ந்த குலத்தில் தோன்றியவளைப் போல் இருப்பாள். சுக்கிரன் ஆட்சியாகச் சூரியன் கூடி நீசமானால் தாயிடம் தந்தையின் உறவுகள் மோசமாக இருக்கும். தாய்க்கும் தகப்பனுக்கும் பிடிக்காமல் போக விதியுண்டாம். உங்களுக்குப் யால் பாக்கியங்களும். கால்நடைப் பாக்கியங்களும் உண்டாகும்.

சுக்கிரனுடன் சனியும் உச்சமாகிக் கூடினால் படிப்பில் மந்த கதி ஏற்படும். ஆனால், விவசாயம் நல்லபடியாக இருக்கும். இருப்புக்கு தென்கிழக்கில் மனையும், காடும் கழனியும் இருக்க விதிகள் உண்டாம். நெல் விவசாயங்களும், வெள்ளை நிற மொச்சை போன்ற தானியங்களும் மேன்மையடையும். வியாபாரத்தில் இலாபமுண் டாகும்.

சுக்கிரனுடன் அவர் சத்துருவான சூரியன் நீசமாகிக் கூடினால், சில காலகட்டங்களில் கடுமையான வறட்சி ஏற்பட்டு, மனை, காடு, கழனிகள் ஆகியன பாதிக்கப்படும். சுக்கிரனுடன் சனி உச்சமாகிக் கூடினால், மனைவியால் வாகன சுகமும், மனை சுகங்களும் உண்டாகும். ஆனால், வாகனங்களுக்குச் சுக்கிர பீடைகள் அடிக்கடி வரும். இரும்பாலாகிய வாகனங்கள் விருத்தியடையும்.

சுக்கிரன், சனி ஆகியவற்றுடன் சூரியன் நீசமாகிக் கூடினால் சில யோக பலன்களைத் தடை செய்வார். ஆனால், நீசபங்க ராஜயோகம் ஏற்பட்டு, அதன் பலன்களை வாகனம் அல்லது மனை வழியாக ஏற்படுத்துவார். சுக்கிரனுடன் மற்ற கிரகங்கள் கூடினால் மத்திம பலன்களே ஏற்படும். சுக்கிரனுடன் உச்சக் கிரகம் கூடி, அதனுடன் நட்புக் கிரகங்கள் கூடினால், உச்சக் கிரக திசை புத்திகளில் வீடு கட்டும் அமைப்பும் உண்டாகும். கலையமிசம் மிக்க கோட்டங்கள் கட்டும் அமைப்பும் உண்டாகும். சுக்கிரனுடன் நீசக் கிரகமும், ஓர் உச்சக் கிரகமும் கூட அவர் மனையில் புதையல்

உண்டாம். சுக்கிரனுக்குத் தக்க எந்திர, மந்திர பிரீதிகள் செய்து நன்மையான பலனைப் பெறலாம்.

கடக இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 5ஆம் இடமான விருச்சிகத்திலிருந்தால், சுக்கிரன் நட்புடன் இருந்தால் நல்ல பலன்கள் உண்டாகும். சுக்கிரனும் செவ்வாயும் ஆட்சியாக இருந்தால், சுக்கிர மங்கள யோகம் உண்டாகும். தாய்வழிப் பூர்வ புண்ணியங்கள் நிலைத்திருக்கும். ஆனால், அவை பயனற்றவையாகவும் இருக்கும். தாய் வீரியமுள்ளவளாகவும் இருப்பாள். பிள்ளைகள் அவளுக்கு அடங்கியே நடப்பார்கள்.

சுக்கிரனுடன் புதன் கூடினால் கல்வியில் தேறலாம். ஆனால், அது ஓரளவுடனே இருக்கும். பால் பாக்கியங்கள், பசு பாக்கியங்கள் ஆகியன குறைவாகவே இருக்கும். சுக்கிரனுடன் செவ்வாய் கூடினால் பூமி வலுத்திருக்கும். புன்செய் நிலங்கள் நல்ல வருமானத்தைத் தரும். மலைத்தோட்டங்கள் நன்மை தரும். இருப்புக்குத் தென்கிழக்கில் மனை கட்டவும், தோட்டம் அமைக்கவும் விதிகள் உண்டாகும்.

சிவப்பு நிறத் தானியங்கள், கிழங்கு வகைகள் ஆகியவற்றால் மேன்மையுண்டாம். வாகன யோகங்களும் உண்டாம். அவை தம் புத்திரரால் பராமரிக்கப்படும். அவ்வாறு இருந்தால் மேன்மையுண்டாம். சுக்கிரனுடன் குரு, சனி போன்றோர் சேர்ந்தால் தாய்க்குக் கால் ரோகமும் இதய ரோகமும் உண்டாம். விவசாயம் மந்தமாக இருக்கும்.

சுக்கிரனுடன் இராகு, கேது ஆகியன கூடினால் நற்பலன்களைத் தரும். வீடுகளிலும் தோட்டங்களிலும் சர்ப்ப ஊடுருவல் இருக்கும். சுக்கிரனுடன் சூரியன் சேர்ந்தால் மத்திம பலன்களே உண்டாகும்.

சுக்கிரனோடு ஆட்சிக்கிரகமும் நட்புக்கிரகமும் கூடினால் 4ஆம் பாவ வழியில் மேன்மையான பலன்களுண்டு. பூர்வ புண்ணிய ஆஸ்தி வழியில் மனைகள் கட்ட பிராப்திகள் உண்டாகும். சுக்கிரனுக்கு யந்திர, மந்திர பிரீதிகள் உண்டாகும். சுக்கிரனுக்கு யந்திர, மந்திர பிரீதிகள் செய்வதாலும் மகாலட்சுமிக்கு பூஜைகள் செய்வதாலும் உயர்வான பலனுண்டு என்று நாடி வழியாக அறியப்படுகிறது.

கடக இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 6ஆம் இடமான தனுசு இராசியில் இருந்தால் மத்திமமான

பலன்களை உண்டு செய்யும். சுக்கிரனுடன் குரு கூடினால் மத்திமமான பலன்களே உண்டாகும். தாயானவள் நோய் நொடி என்றிருப்பாள். இதய ரோகமும், இரத்த அழுத்த நோயும் உண்டாகும். உங்கள் கல்விகள் பாதிக்கப்படும். மீறிய கல்விகளினால் கடன் நொம்பலங்கள் உண்டாகும்.

சுக்கிரன் தனுசு வீட்டில் இருந்தால் மத்திமமான பலன்களையே செய்வார். தனுசில் சுக்கிரன் பாவியாகி இருக்கிறார். செவ்வாய் கூடினால் யோகமுண்டாம். பால் பாக்கியங்கள், காடு, கழனிகள், மனைகள் ஆகியன இருந்தாலும் கடன் பேராலேயே இயங்கிக் கொண்டிருக்கும். வாகன யோகம் குறைவாகவே உண்டாம். வில்லங்கம், விவகாரம் என்று இருக்கும்.

சுக்கிரனோடு குருவைத் தவிர இரண்டுக்கும் மேற்பட்ட நட்புக் கிரகங்கள் கூடினால், சில உத்தம பலன்கள் உண்டாகும். சுக்கிரன் மட்டும் தனித்திருந்தால் மத்திம பலன்கள் நாலாம் பாவ வழியில் உண்டாகும். சுகங்கள் குறைவாகவே காணப்படும். அதிகம் திருப்தி யிராது. பொன், பொருள், ஆபரணங்களால் ஏற்படும் சுகம் குறைவாகவே இருக்கும். சொந்த மனைகள், விவசாய நிலங்கள் ஆகியன இருந்தாலும் அவை நல்ல செழிப்புடன் விளங்கா. கடன் வாங்க வேண்டியதுவரும். இல்லையேல், சொத்துகள் சிக்கலான வையாகவும், விவகாரத்துடன் கூடியவையாகவும் இருக்கும்.

சுக்கிரனுடன் குரு கூடிக் கூட பகைக் கிரகம் சேர்ந்தால் 4ஆம் பாவ வழியில் மிகவும் அதம பலன்களே உண்டாகும். சுக்கிரனுக்குக் கடுமையான எந்திர, மந்திர பிரீதிகள் செய்வதன் மூலமும் மகாலக்ஷ்மிக்குக் கடுமையான பூஜைகள் செய்வதன் மூலமும் நல்ல பலன்களை அடையலாம்.

கடக இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியாகிச் சுக்கிரன் இராசிக்கு 7ஆம் இடமான மகரத்தில் நட்புப் பெற்றிருந்தால் நற்பலன்கள் உண்டாம். சுக்கிரனுடன் செவ்வாய் உச்சமாகிக் கூடினால் யோகமுண்டு. தாய் வீரியமாயிருப்பாள். பூமி தன் வயப்படும். விவசாயம் நல்லபடியாக இருக்கும். சுக்கிரனுடன் சனி கூடினால் வரக்கூடிய மனைவியினால் நிலங்கள், வாகனங்கள் ஆகியன பராமரிக்கப்படும். தன் தாயோடு மனைவி ஒத்துப் போவாள். தாய்க்கு முழங்கால் ரோகமும், தொடை நடுக்கங்களும் உண்டாகும். சுக்கிரனுடன் சூரியன் பகையாகவும், குரு நீசமாகியும்

கூடினால் மத்திம பலன்களே ஏற்படும். உழவு நிலங்கள் வறட்சியாகவும், நீர் வற்றி வறண்டு காணப்படும். குடும்ப சுகம், மனைவி சுகம் ஆகியன தடைப்படும்.

நீசம் பெற்ற கிரகத்தோடு ஆட்சிக் கிரகம் சனி சேர்ந்தால் 4ஆம் இடவழியில் சில யோகப் பலன்கள் உண்டாகும். சுக்கிரனுடன் சனி மட்டும் சேர்ந்திருந்தால், மனை, மாடு, காடு, கழனி என்ற வகையில் மனைவியின் ஆதிக்கங்கள் நிறைந்திருக்கும். கல்விப்பயிற்சிகள் இருந்தாலும் மந்தமான நிலைகளே உண்டாகும். இருந்தாலும், தரமான கல்வியைப் பெறலாம். பால் பாக்கியங்கள் குறைவாகவே உண்டு. எருமை மாடுகளால் பால் பாக்கியங்கள் மிகுந்து காணப்படும்.

இருப்புக்கு மேற்கில் மனை வாங்கும் விதிகளும், வீடுகள் கட்டும் விதிகளும் உண்டு. அப்படியே வீடுகள் கட்டினாலும், மந்தமாகவே கட்டி முடிப்பதற்கு நெடுநாள் ஆகும். மனைவி பெயராலேயே வாகனங்கள், வீடுகள், மனைகள் அமையும். சுக்கிரனுக்குக் கடுமையான பிரீதிகள் செய்வதால் நல்ல பலன்களை அடையலா மென்று நாடி நூல் கூறுகின்றது.

கடக இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் 8ஆம் இடத்தில் கும்பத்தில் இருந்தால் மத்திமமான பலன்களே உண்டாகும். தாய்க்கு முழங்கால் ரோகங்களும், அவற்றால் வேதனைகளும் உண்டாகும். தாயைப் பல விஷயங்களில் நொம்பலப்படுத்தும். சுக்கிரனுடன் சூரியன் சேர்ந்திருந்தால் மனை வகையில் சிக்கல் உண்டாகும். நிலம் வறட்சியாயிருக்கும். பயிர்கள் காய்ந்து போகும் நிலை உண்டாகும்.

சுக்கிரனுடன் புதன், குரு, செவ்வாய் போன்ற கிரகங்கள் கூடினால் சில பாதகப் பலன்களைத் தடுக்கும். சுக்கிரனுடன் சனி கூடத் தாய்க்கு ஆயுள் பங்கமில்லை. ஆனால், மனை வகையில் ஏதாவது நொம்பலங்களை உண்டுபண்ணிக்கொண்டே இருக்கும். பால் பாக்கியங்களில் குறைவு உண்டாம். எருமை மாடுகள், கருப்பு நிறக் கால்நடைகள் ஓரளவு தாக்குப் பிடிக்கும். இருப்புக்கு மேற்கில் மனையிருக்கும் விதிகளும், கட்டும் விதியும் உண்டெனினும், மந்தமான நிலைகளிலே கட்டடம் எழும்பும். கல்வி தடைப்படும். இளமையில் வாலிப சேஷ்டைகளால் கல்வி மந்தமாகவும், அதன்மீது விருப்பமில்லாமலும் இருக்கும். கரிசல் காடாக இருந்தால் நன்மை

யுண்டாம். கரிய நிறத் தானியங்களின் விளைச்சல் சொற்ப மாயிருக்கும். வாகன யோகங்கள் குறைவாகவே உண்டாகும். வாங்கினால் துன்ப' நிலை ஏற்படும்.

சுக்கிரனோடு இராசிக்கு அட்டமாதிபதியான சனி கூடினால் அவர்களுடன் சுபக்கிரகங்களும் கூட நன்மை ஏற்படும். சுக்கிரனுடன் செவ்வாய் கூடினால் பூமியில் சாபங்களும் சில உயிரினங்கள் மடிதலும் ஏற்படும். இதுபோல், சில துர்பலன்களைத் தவிர்க்கச் சுக்கிரனுக்கு எந்திர, மந்திர பிரீதிகள் செய்வதன் மூலமும், மகாலட்சுமிக்கு ஆராதனைகள் செய்வதன் மூலமும், நல்ல பலன்களை அடையலாமென்று அறியப்படுகின்றது.

கடக இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன், இராசிக்கு 9ஆம் இடமான மீனத்தில் உச்சம் பெற்றிருந்தால் மேன்மையான உத்தம பலன்கள் ஏற்படும். தாய், செல்வாக்குடனிருப் பாள். அதிகாரமும் பலமாயிருக்கும். ஆச்சார அனுஷ்டானங்களோடு தெய்வ பக்தியாயிருப்பாள். அவளால் உங்களுக்குப் பலன் தங்கும். ஆதரவும் உண்டாகும். உயர்ந்த கல்வி, நல்ல புகழ், செல்வாக்கு ஆகியவற்றுடன் இருக்க விதிகள் ஏற்படும். சுக்கிரனுடன் புதன் நீசமாகிக் கூடினால், கல்வி தடைப்படும். அதனால் சில விரயமுண்டாகும். சுக்கிரனுடன் 2-க்கு மேற்பட்ட நட்புக் கிரகங்கள் கூடினால், மனை, காடு, கழனி, வயல் நிலைகள் ஆகியன செழித்திருக்கும். இருப்புக்கு வடகிழக்கில் மனை கட்டவும், அலங் காரக் கோட்டங்கள் கட்டவும் விதி உண்டாகும்.

சுக்கிரனுடன் குரு ஆட்சியாகிக் கூடத் தன் தகப்பன் வழியிலேயே மனை கட்டவும், உழவு வகைகளை நடத்தவும், பூர்விக மனையில் குடியிருக்கவும் விதியுண்டாம். வயல் விளைச்சல்கள், நெற்பயிர்கள் ஆகியவற்றில் பலமுண்டாகும். பசுமாடுகளும் அவற்றால் பால் பாக்கியங்களும் சுகமும் உண்டாகும்.

பொதுவாக, மீன சுக்கிரன் நற்பலன்களைத் தருவார். செவ்வாய், புதன் ஆகியன கூடினால் சில யோக பலன்கள் உண்டாம். ஆனால், சில மத்திம பலனுக்குப் பின்தான், உத்தம பலன்களைக் கொடுக்கும். சுக்கிரனுக்கு மந்திர, யந்திர பிரீதிகள் செய்தால் உயர்ந்த பலன்கள் உண்டாகும்.

கடக இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன், இராசிக்கு 10ஆம் இடமான மேஷத்தில் நட்புடன் அமர்ந்திருந்தால், தாய்க்கு நல்ல தேக சௌக்கியமும், வண்டி வாகன சேர்க்கையில் நன்மையுமுண்டு. கால்நடை வாகனமும் சொத்து, வீடு, மனை, நிலம் போன்றவற்றில் நல்ல மேன்மையும், விவசாயத்தில் நல்ல இலாபமும், கல்வியில் பட்டம் பெறுதலும் உண்டாகும்.

சுக்கிரனுடன் செவ்வாய் ஆட்சி பெற்றுக் கூடியிருந்தால் தொழிலில் மேன்மைகளும், நன்மதிப்புகளும், வீடு கட்டுதலும் உண்டாகும். செம்மண் பூமியினால் நன்மையான பலன்களும், நல்ல இலாபங்களும் உண்டாகும். சிவப்பு நிறத் தானியங்களால் நல்ல இலாபம் உண்டாகும். இருப்புக்கு வடகிழக்கில் வீடு கட்ட யோகம் ஏற்படும்.

சுக்கிரனுடன் குரு கூடினால் தந்தைக்கு நல்ல ஆரோக்கியம் இருக்கும். தாயும் தந்தையும் நல்ல சுகத்துடன் நல்ல ஒற்றுமையுடன் இருப்பார்கள். தந்தையின் தொழிலைச் செய்ய வேண்டியது வரும். வீட்டில் வில்லங்கம் இருந்தாலும், அது சிறிது காலத்தில் தீர்ந்துவிடும். பொன் ஆபரணங்கள் சேர்வதுமுண்டு. நன்செயில் நெல் விளைச்சலால் இலாபமுண்டு.

சுக்கிரனுடன் சனி நீசமாகிக் கூடினால், தாய்க்கு வாதரோகப் பீடைகளும், மனைவிக்கு நோய் நொடியும் ஏற்படும். கால் நடைகளால் பொருள் இழப்பும், வண்டி வாகனங்களால் நஷ்டமும் ஏற்படும். இதற்குச் சுக்கிரனுக்கு யந்திர, மந்திர பிரீதிகள் செய்தால் நல்ல பலன்களை அடையலாம்.

கடக இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதி சுக்கிரன் இராசிக்கு 11ஆம் இடமான ரிஷபத்தில் ஆட்சி பெற்றால், தாய்க்கு நல்ல ஆரோக்கியம் இருக்கும். வீடு, மனை ஆகியன அலங்காரத்துடனும், கால்நடை, வாகனங்கள் நல்ல நிலையிலும் இருக்கும். வண்டி, வாகனங்களான சொகுசு வாகனங்கள் நல்ல முறையில் இருக்கும். மூத்த சகோதரரால் நல்ல இலாபம் கிடைக்கும். கலையமிசம் பொருந்தியவராக இருப்பார்கள். கல்வியில் பட்டம் வாங்க யோகமுண்டு.

சுக்கிரனோடு புதன், சனி ஆகியன கூடினால் வீடு, மனை ஆகியவற்றால் நல்ல இலாபமுண்டு. அதே சமயத்தில் வில்லங்கமும்

விவகாரங்களும் உண்டு. பச்சைப்பயறு வகைகளில் இலாபங்கள் வந்து சேரும். விவசாயத்தால் இலாபமும், மனைவியினால் நன்மைகளும் வாகனங்களால் நன்மையான பலன்களும் நடக்கும். இரும்பு வாகனங்களினால் நன்மையும் அபிவிருத்தியும் உண்டு.

சுக்கிரனோடு குரு கூடினால் பொன், பொருள், ஆபரணச் சேர்க்கையினால் கடன்களும் நொம்பலங்களும் வந்து சேரும். பொன் ஆபரணமும், அதனால் பணச்செலவும், வில்லங்கமும் வந்து மாறும்.

சுக்கிரனோடு சூரியன் கூடினால் மூத்த சகோதரனால் தனச்சேர்க்கையும், நல்ல இலாபங்களும் உண்டாகும். இருப்புக்கு வடக்கு, வடகிழக்கு போன்ற திசைகளில் வீடு, மனை ஆகியன அமைய விதியுண்டு. இதற்குச் சுக்கிர பிரீதியும் யந்திர, மந்திர பூஜையும் செய்தால் மஹாலக்ஷ்மிக்கு ஆராதனையும் செய்தால் நற்பலன்களை அடையலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.

கடக இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 12ஆம் இடமான மிதுனத்தில் நட்புப் பலத்துடன் இருப்பதால், மந்தமான பலன்கள் உண்டாகும். சுக்கிரன் இராசிக்கு 12ஆம் இடத்தில் மறைவு ஆவது, அவ்வளவு நல்ல பலன்களைத் தராது. தாயாருக்கு நோவும், அதனால் விரயச் செலவுகளும் உண்டாம். சுக்கிரனுடன் எந்த நட்புக் கிரகங்களும் கூடினாலும் மத்திமமான பலன்களே ஏற்படும். கணிதக் கல்விகள் மேன்மை தரும். பட்டங்களை விரயத்தின் அடிப்படையிலே வாங்க முடியும். பால் பாக்கியம் குறைவாக உண்டாகும். வாகனங்களும், மனைகளும், தேவையில்லாமல் விரயத்தை ஏற்படுத்தும்.

சுக்கிரனுடன் செவ்வாய் கூடினால் சில நன்மைகள் ஏற்படும். சுக்கிரனுடன் சூரியன் கூடினால் அதமமான பலன்கள் உண்டாம். மனைகள் பாதியிலே நிற்கும். சுக்கிரனுடன் இராகு, கேதுக்கள் இருந்தால் தாயாருக்கு விஷபயமும் மனை, தோட்டம் ஆகியவற்றில் சர்ப்ப ஊடுருவலும் உண்டாகும். கால்நடைகள், பசுக்கள் ஆகியன குறைவாகவே நன்மையை ஏற்படுத்தும். தீவனத்திற்குப் பணம் விரயமாகும். ஆனால், பலன் குறைவாகவே உண்டாம். சுகங்கள் குறையும். சுப விரயத்தினால் கூடிய சுகங்கள் உண்டாகும். இருப்புக்கு வடக்கில் மனை கட்ட விதியும், தோட்டம் அமைக்க

நிலையும் உண்டாகும்.. அவை அலங்காரமாகவும் கலையமிசமும் கூடியவையாகவும் இருக்கும்.

எதிலும் திட்டமிட்டபடி அதிகச்செலவு உண்டாகும். செலவு மிகுதியால் முயற்சிகளுள் சில பாதியிலேயே நின்று பின்பு முடியும் நிலையுண்டாகும். சுக்கிரன் மிதுனத்தில் நட்புப் பலனைத் தந்தாலும் விரய பலனையும், மறைவுப் பலனையும் அதிகம் ஏற்படுத்துவார். சுக்கிரனுக்குத் தக்க பிரீதிகள் செய்வதன் மூலம் நல்ல பலன்களை அடையலாமென்று சந்திரநாடி கூறுகிறது.

கடக இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதி சுக்கிரன் இராசியிலேயே பகை பெற்றிருந்தால் மத்திமமாகவே இருக்கும். தாய்க்கு உடல் நலம் எப்பொழுதும் குறைவாகவே இருக்கும்; சிறிது நாள் தேறியும் இருக்கும். பொருளாதாரத்திலும் அப்படியே உண்டு; நிரந்தரமான ஸ்திரமான நிலையை உண்டு செய்யாது. சுக்கிரனுடன் செவ்வாய் நீசமாகிக் கூடினால் தாய் இரத்த சோகை நோய்களுடனும், உடல் வீரியமற்றும், மனத்தைரியமற்றும் இருப்பாள். பால் பாக்கியங்கள் குறைவாகவே உண்டாம்.

சுக்கிரனுடன் குரு உச்சமாகிக் கூடினால் சில நன்மைகள் உண்டாம். விவசாயம், நன்மைகளைத் தரும். பொன், பொருளினால் ஏற்படக்கூடிய சுகங்கள் உண்டாகும். சுக்கிரனுடன் மற்ற பகைக் கிரகங்கள் கூடினால் மத்திமமான பலன்களே ஏற்படும். வீடுகள், கோட்டங்கள், பங்களாக்கள் ஆகியன கட்டினால் சில நாள் வளர்ந்து நிற்கும் நிலையிலேயே இருக்கும். வாகன யோகங்கள் குறைவாகும். நல்ல முன்னேற்றம் காணாமல் வளர்ந்து தேயும் நிலையிலே இருக்கும். இருப்புக்கு வடமேற்கில் மனை கட்டும் விதிகளும், அவை வளர்ந்து தடைப்படும் விதியும் உண்டாம். தானியங்களில் பூச்சிகள் ஏற்படும். புழு, பூச்சிகள் உண்டாகிப் பயிருக்கு அழிவுகள் உண்டாகும். சுக்கிரனுக்குத் தக்க பிரீதிகள் செய்தால், மேன்மை யான பலன்களை அடையலாமென்று நாடி கூறுகின்றது.

கடக இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 2ஆம் இடமான சிம்மத்தில் பகை பெற்றிருந்தால் மத்திமமான பலன்களே உண்டாகும். சுக்கிரன் தனது சத்துரு வீட்டில் இருந்தால் மத்திமமான பலன்களைச் செய்வார். சுக்கிரன் குருவோடு கூடினால் மட்டுமே சில பலன்கள் ஏற்படும். மற்ற பகைக் கிரகங்களுடன் பலன் குறைவாக இருக்கும். தாய், தனபிராப்திகளில்

குறைவாக இருப்பாள். உடல் உஷ்ண நோய், தலைபாரம், சிரசு நோய் ஆகியன உண்டாகும். பசு வர்க்கங்களால் நன்மை குறைவாகவே இருக்கும். எருமை மாடுகள் இருந்தால் பலனிராது. உஷ்ண நோயினால் பாதிக்கப்படும். வாகன யோகங்களுக்குக் குறைவுண் டாகும். கால்நடைகள் நல்ல செழிப்புடன் இருந்தால் பலன் குறைவாகவே இருக்கும். எருமை மாடுகள் இருந்தால் நோயினால் பாதிக்கப்படும்.

வண்டி வாகனங்கள் செலவு உண்டாக்கும். தன பிராப்திகளில் வழக்கு ஏற்படும். சுகம் உண்டாகும். இருப்புக்குக் கிழக்கில் மனை கட்ட விதிகளும், அதற்கு முன் மற்ற வீடுகள் இல்லாதிருத்தலும் உண்டாகும். சுக்கிரனுடன் பகைக்கிரகங்கள் 2-க்கு மேற்பட்டுக் கூடினால், மத்திமமான வயதில் வீடு கட்ட விதிகளும், அதனால் தோஷங்களும் உண்டாகும். காடு, கழனிகள், மனைகள் ஆகியன வெப்ப பூமியாக இருக்கும். வெப்ப மண்டலப் பயிர்கள், மனைகள் ஆகியன சொற்ப இலாபத்தை அளிக்கும். அவற்றால் தோஷங்கள் உண்டாகும். வீடு, கழனிகள், வெப்பப் பயிர்கள் ஆகியன 4ஆம் இடத்தில் கூடி, நல்ல இலாபத்தைத் தரும். கல்விகள் தனமின்மையால் தடைப்படும். சுக்கிரனுடன் சூரியன் கூடி இருந்தால் அரசு வகையில், வாகனங்கள் மனைகள் பிராப்திகள் ஏற்படும். இருந்தாலும் கவனமாக இருக்க வேண்டும். சுக்கிரனுக்குத் தக்க எந்திர, மந்திர பிரீதிகள் செய்தால் நலம் என்று நாடி கூறுகிறது.

கடக இராசிக்கு 4ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 3ஆம் இடமான கன்னியில் நீசமானால் அதம பலன்களே உண்டாம். புதன் கூடினால் யோகம் தரும். சுக்கிரன் தனித்திருந்தாலும், பகைக் கிரகங்களோடு கூடினாலும் 4ஆம் பாவ வழியில் துர்பலன்களே ஏற்படும். தாய்க்குக் காமாலை நோய்களும், ஈரல் நோய்களும் ஏற்படலாம். உங்கள் கல்வி தடைப்படும். இளமையிலேயே வாலிப சேட்டைகளால் மனம் நொந்து கல்வி குறைவுபடும். விளைச்சல் குறைவாகவும், வீடுகள் பீடை பிணிகள் பிடித்துக் காணப்படும்.

சுக்கிரனுடன் புதன் ஆட்சியுச்சமாகிக் கூடினால் நீசபங்க ராஜ யோகம் ஏற்பட்டு, வாகன யோகங்களும் உண்டாகும். அவற்றைத் தக்க வைக்க பிராப்தி வேண்டும். சுக்கிரனுக்குக் கடுமையான பிரீதிகள் செய்வதன் மூலம், பலனைத் தக்க வைக்கலாம்.

தாய் வழியில் பலன்கள் குறைவாகவே இருக்கும். புதனுடன் நட்புக் கிரகங்கள் கூடினால் விவசாய வழியில் இலாபத்தை அடையலாம். தனக்கிளைய சகோதரர்கள் தன் மனையிலே இருந்து, காடு, கழனிகளை உழுது பராமரித்து வருவார்கள். பச்சைக் காய்கறிகள், பச்சை நிறத் தானியங்கள் ஆகியன மேன்மையான பலனளிக்கும்.

சுக்கிரன் நீசமாகித் தனித்திருந்தாலும், பகைக் கிரகத்துடன் கூடினாலும், மனை கட்ட விதிகள் குறையும். பால் பாக்கியங்கள் ஏற்படா. இருப்புக்கு வடக்கில் மனை கட்டவும், வாங்கவும் விதியுண்டாம். மனைகள் இருந்தால் பாழடைந்தும், பீடை பிடித்தும் காணப்படும். சுக்கிரனுக்குக் கடுமையான பிரீதிகள் செய்தால் வாகன வழியிலும் மனை வகையிலும் நல்ல பலனைப் பெறலாமென்று நாடி நூல் கூறுகிறது.

# சிம்மம்
## நான்காம் பாவம்

செவ்வாயை 4ஆம் இடத்து அதிபதியாகப் பெற்ற சிம்ம இராசி அன்பர்களே! மகரிஷி பதஞ்சலி முனிவர் சந்திர நாடியின் வழியாக அருளியபடி 4ஆம் பாவம் என்பது தாய், கட்டிய மனை, இடம், கல்வி, வாகனம், சுகம், விவசாயம், புதையல் நிலைகள் போன்றவற்றைக் குறிப்பிடும். சந்திர நாடியில் செய்யுள்கள் உள்ளபடியால், சில உதாரணப் பாடல்களை மட்டும் கொடுத்து, அவற்றின் சாராம்சம் 12 பாவங்களில் அவர் நிற்கும் பலன்களாக இங்கு தரப்பட்டுள்ளன. அவரவருக்கு என்ன பலன்கள் என்பதைப் பார்த்துக் கண்டறியவும்.

### செவ்வாய் ஆட்சி, உச்சப் பலன்

"அரியுமதி நாலோனும் குசனுமவன்
ஆற்றலொடு வருடை, தேளதனில் யாட்சியாக
புரியுமந்த மனைவழியே யுத்தம பலன்
பொருந்தமேல் தனையீன்றோன் சுகங்களொத்து
கரியிடத்துச் சுரமானி லுச்ச மாகின்
குமரனுக்குச் சுகங்களுடன் கிருஷி பாக்யம்

பரிமேலாய்ச் செல்லும்விதி மன்னன் போலே
பங்கமில்லை யங்கசுகம் மேன்மை தானே."

இதற்குச் சுப்பிரமணியருக்கு ஆராதனை பூஜைகளும் செவ்வாய்க்கு யந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் துஷ்ட பலன்கள் நீங்கி நன்மையான பலன்களை அடையலாம் என்று ஸ்ரீ பதஞ்சலி மகரிஷி சந்திர நாடியில் கூறுகிறார்.

சிம்ம இராசிக்கு 4ஆம் அதிபதியாகிய செவ்வாய் 4ஆம் இடமான விருச்சிகத்தில் ஆட்சியுடன் அமர்ந்திருந்தால் உத்தமமான பலனுண்டாம். பூமியானது வலுத்திருக்கும். தாய், வீரியமுள்ளவளாய் இருப்பாள். தைரியம் மிகுந்து காணப்படும். காடு, கழனி, மாடு, மனை போன்றவற்றில் தாய் ஆதிக்கம் செலுத்துவாள். இருப்புக்குத் தெற்கில் மனை இருக்கவும், அது விஸ்தீரணமாக இருக்கவும் விதியுண்டாம். உழவுகள் செழிப்பாகவும், புஞ்சைக்காடுகள் நல்ல செழிப்பாகவும் இருக்கும். அமோக விளைச்சலுண்டாகும்.

செவ்வாயுடன் இராகு, கேது உச்சமாகி இருந்தால், மனையில் புதையல்கள் உண்டென்று நாடி நூல்கள் கூறுகின்றன. அதனைத் தக்க முறையில் பிரீதிகள் செய்து பயன்படுத்த வேண்டும். வேறு ஊழ்வினை அமிசங்கள் உண்டா என்று கண்டறிய வேண்டும்.

ஆட்சி பெற்ற செவ்வாயுடன் புதன் கூடினால் கல்வி தடைப்படும். இரசாயனக் கல்வியாகவும், விவசாயக் கல்வியாகவுமிருக்கும். மனையானது செம்மண் நிலமாக இருந்தால் மேன்மையான பலன்கள் உண்டாகும்.

செவ்வாயுடன் சூரியன், சனி, குரு ஆகியன கூடினால் சில மத்திம பலன்களைத் தரும். தாய்க்குச் சிரசு ரோகத்தையும், கால் வாதத்தையும் ஏற்படுத்தும். பொன், பொருள், சுகம் ஆகியவற்றைத் தடை செய்யும். ஆனால், மனைப்பலன்கள் சுமுகமாக இருக்கும். சிவப்பு நிறத்தானியங்கள், வித்துகள், கிழங்குகள், தாவரங்கள் ஆகியன நல்ல பலன்களை அளிக்கும்.. மலைக்காட்டு வருமானம் உண்டாகும். பூமியினால் ஏற்பட்ட செல்வங்கள் நிலைத்திருக்கும்.

செவ்வாயுடன் சுக்கிரன் கூடினால் வாகன யோகமுண்டாகும். சுக்கிர மங்கள யோகம் உண்டாகி, வண்டி வாகன வழியில் நற்பலன்களை உண்டு செய்யும். ஆனால், கால்நடைப் பலன்கள் மத்திமமாக உண்டு. காளைகள், வண்டி மாடுகள் ஆகிய பலனுண்டாம்.

செவ்வாய்க்குப் பிரீதிகள் செய்தால் உயர்வான பலன் உண்டாகும்.

சிம்ம இராசிக்கு 4ஆம் இடத்ததிபதி செவ்வாய் இராசிக்கு 5ஆம் இடமான தனுசில் பகையாகி இருந்தால் மத்திமமான பலன்களை உண்டு செய்யும். செவ்வாயின் சத்துருவான புதன் கூடினாலும் பலன் குறைவாம். பூர்வ புண்ணிய பூமிகள் ஸ்திரமானவையாய் இரா. கை மாறிக்கொண்டிருக்கும் அமைப்பாயிருக்கும். தாய்க்கு இதய ரோகம் உண்டாகும்.

செவ்வாயுடன் குரு கூடினால் நன்மையுண்டாம். பூர்வ புண்ணிய நிலங்களினால் தானிய வருவாய்களும் விருச்சிகங்களினால் (மரம்) வருவாயும் உண்டாகும். அவை குத்தகைக்கும் விடப்படும். கல்விப் பயிற்சிகள் உயர்வானவையாகவும், மற்றவர்கள் மதிக்கக்கூடியன வாயும் இருக்கும். பால் பாக்கியங்கள் குறைவாகவே உண்டாகும்.

செவ்வாயுடன் சுக்கிரன் கூடினால் மேன்மையுண்டாகும். அடிப்படையிலேயே, மாடு கன்றுகள் உடையவராய் இருக்க விதியுண்டாம். செவ்வாயுடன் குரு ஆட்சியாகிக் கூடினால் பொன், பொருளினால் ஏற்படக்கூடிய சுகங்கள் உண்டாகும். பெரியோர்களின் ஆசி, அவர்களின் நட்பு ஆகியவற்றைப் பெற்றுச் சமூகத்தில் நல்ல நிலையில் இருக்கலாம். பூர்வ புண்ணிய மனைகள், கட்டடங்கள் ஆகியன இருந்தாலும் அவற்றில் வசிக்கும் அமைப்பு குறைவாகவே உண்டாம். இருப்புக்குத் தெற்கில் மனை வாங்கும் அமைப்புகளும், மனை அபிவிருத்தி செய்யும் நிலைகளும் 40 வயதிற்கு மேல் உண்டாகும்.

செய்வாயுடன் சுக்கிரனும் குருவும் சேர்ந்தால் வாகன யோகங்கள் உண்டு. நல்ல வண்டி வாகனங்களை உடையவராயிருக்கும் அமிசங்கள் உண்டாகும். வியாபார விஷயங்கள் பாதுகாக்கப்படும். தானிய மார்க்கங்களினால் வருவாய் உண்டாகும். பூர்வ புண்ணிய மனைகளை விட்டுவிட்டால் 40 வயதுக்குமேல் ஸ்திரமான மனைகளை அடையும் விதிகள் ஏற்படும். செவ்வாய்க்கும் சுப்பிரமணிய தேவருக்கும் யந்திர, மந்திர பிரீதிகள் செய்தால் நல்ல உயர்வான பலன்கள் உண்டாகுமென்று நாடி கூறுகின்றது.

சிம்ம இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு 6ஆம் இடமான மகரத்தில் உச்சம் பெற்றால், மனை, மாடு, காடு, கழனி, தாய், வாகனம் வழியில் வில்லங்க விவகாரங்களை உண்டாக்கிப் பின்பு உயர்வான பலன்களைக் கொடுப்பார். தாய்க்கு முழங்கால் ரோகங்களும், இரத்த அழுத்த நோய்களும் உண்டாகும். தாய்க்கும் உங்களுக்கும் சில வகையில் மனக்கிலேசம் அடிக்கடி உண்டாகும். தாய், தைரிய குணங்களை உடையவளாய் இருப்பாள். அவளின் கோபத்தை அடக்குவது கடினம். பூமிச்சொத்துகள் வலுத்து இருந்தாலும், பங்காளிச் சண்டைகள், வில்லங்கங்கள், விவகாரங்கள் என்று இருக்கும். இதனால், செழுமையாக இருந்தாலும், அவற்றைப் பயன்படுத்த முடியாத நிலையே இருக்கும்.

செவ்வாய் உச்சமாகிச் சனி ஆட்சியாகிக் கூடச் சேர்ந்தால் சுகங்கள் குறையும்; கால்கள் நடக்க முடியாமல் வாதனை செய்யும். இரும்பு சம்பந்தமான வாகனங்கள் இருந்தால் மத்திமமான பலன்களையும், விவகாரத்தையும் கொடுத்துப் பின்பு உயர்வான பலன்கள் உண்டாகும். செவ்வாய், புதன் ஆகியன கூடினால் கல்வி தடைப்படும். அல்லது மிகவும் மந்தமாக இருக்கும். முரண்பாடாகக் கல்விகள் உண்டாகும்.

செவ்வாயுடன் நீசமான குரு கூடினால் பின்வாழ்க்கையில் மனை, காடு, கழனி என்று வில்லங்க விவகாரங்கள் இருந்தால் வெற்றி ஏற்படுத்திக் கொடுக்கும். அதற்கு முன் பல கஷ்டங்களை அனுபவிக்க வேண்டிவரும். பால் பாக்கியம் குறைவாகும். எருமை மாடுகள் இருந்தால் சில பலன்கள் உண்டு. இருப்புக்கு மேற்கில் மனை கட்ட விதியுண்டாகும். அது கடன் தொந்தரவால் பாதி யிலேயே நிற்கும் நிலையும் உண்டாகும். வண்டி, வாகன நன்மைகள் பின் வாழ்க்கையில் உண்டாகும்.

செவ்வாயுடன் இராகு கூடினால் பகை வெல்லத் திறமைகள் ஏற்படும். இழந்த மனைகளை மீண்டும் பெறலாம். பூமிகளில் சர்ப்ப ஊடுருவலும் அதிகமாய் இருக்கும். செவ்வாய்க்கு எந்திர, மந்திர பிரீதிகளும் சுப்பிரமணிய தேவருக்கு ஆராதனையும் செய்தால் நல்ல பலனை அடையலாம்.

சிம்ம இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு 7ஆம் இடமான கும்பத்தில் பகை பெற்றால் மத்திமமான பலன்கள் உண்டாகும். தாய்க்கு வாத ரோகங்கள் உண்டாகும். கரு விழிகள் பாதிக்கப்படும். தாயும், தன் மனைவியும் அவ்வளவு சரியாக ஒத்துப் போகமாட்டார்கள். சண்டைகள், மனக்கிலேசங்கள் ஆகியன வந்துகொண்டே இருக்கும். சண்டைகளினால் வில்லங்கமும் விவ காரமும் வரும்.

செவ்வாயுடன் சனி கூடினால் மனை, மாடு, காடு, கழனி போன்ற வகைகள் தன் மனைவியின் ஆளுமைகளில் இருக்கும். பால் பாக்கியங்கள் குறைவாக உண்டாகும். எருமை மாடுகள் பால் போன்ற நல்ல பலனை அளிக்கும். தனக்குச் சொந்தமான பூமியில் நிரந்தா மான வருமானத்தை எதிர்பார்க்க முடியாது. கல்விகள் மந்த மாகவும், கற்பதற்குத் தடையாயும் இருக்கும். இரும்பு உலோகங்கள் சம்பந்த மான கல்வியைத் தொழில்முறையாகக் கற்க வேண்டியது வரும். நிலங்கள் கரிசல் காடாய் இருந்தால் நல்ல பலன்கள் உண்டாகும். கருமை நிறத் தானியங்கள், கரும்பு போன்றவை நல்ல பலனைத் தரும். இருப்புக்கு மேற்கில் மனை கட்டவும், தோட்டம் அமைக்கவும் விதிகள் ஏற்படும்.

வண்டி வாகன யோகங்கள் மத்திமமாகவே உண்டு. வண்டி வாகனங்களை அடிக்கடி மாற்ற வேண்டியது வரும். வீடுகள், மனைகள் உள்ள இடத்தில் நிரந்தரமாக ஜீவிக்க முடியாது. குடும்ப சுகங்களில் வரவும் செலவும் சரிசமமாய் இருக்கும்.

பெரும்பாலும் 4ஆம் பாவ வகையில் மனைவியின் போக்கின் படியே இருக்க வேண்டியதுவரும். செவ்வாயுடன் ஆட்சிக் கிரகமோ, இரண்டுக்கும் மேற்பட்ட நட்புக் கிரகங்களோ கூடினால் நற்பலன்கள் உண்டாகும். செல்வமும், சுகமும் குறையும். மனை வகையில் அடிக் கடி மனக்கிலேசமாகிக் குடும்ப சுகம் குறையும். செவ்வாய்க்குக் கடுமையான யந்திர, மந்திர பிரீதிகளும் சுப்பிரமணிய தேவருக்குப் பிரீதிகளும் செய்வதன்மூலம் உயர்ந்த பலன்களை அடையலாம்.

சிம்மத்தில் 4ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு 8ஆம் இடமான மீனத்தில் பகை பெற்றால் மத்திமமான பலன்களே உண்டாகும். தாய் மிகவும் கஷ்ட ஜீவனத்தை நடத்திக் குடும்பத்தை

முன்னுக்குக் கொண்டுவர நினைப்பாள். மனைகள் நிரந்தர மானவையாய் இரா. தாயின் வழி ஆதரவு குறைந்தே காணப்படும்.

செவ்வாயுடன் புதன் நீசமாகிக் கூடினால் கல்விகள் தடைப்படும். இளமையிலேயே கேள்வி ஞானங்களும், அறிவு முதிர்ச்சியும், உண்டாகும். செவ்வாயுடன் குரு ஆட்சியாகவோ, அவர்களுடன் சுக்கிரன் உச்சமாகவோ கூடினால் வண்டி வாகனம், மனை, சுகம் என்ற வகையில் பிற்பலனை அடையலாம். செவ்வாய் மட்டும் தனித்தோ, நீசக்கிரகமும், பகைக்கிரகங்களும் கூடியோ இருந்தால் 4ஆம் பாவ வகையில், அவ்வளவு நன்மைகளை அடைய முடியாது. கஷ்ட ஜீவனத்தோடு, வறிய வாழ்க்கையைச் சுகக் குறைவாக வாழ வேண்டியிருக்கும். பால், பாக்கியங்கள் குறைவாக உண்டாகும். தாயின் உடலுக்கு அடிக்கடி பங்கம் வரும். அட்டம கண்டத்தை அடிக்கடி தொட்டு வருவாள்.

செவ்வாயுடன் குரு ஆட்சியாகிக் கூடினால் வாழ்வில் பின் யோகங்கள் உண்டாகும். ஆனால், வண்டி, வாகன யோகங்கள் குறைவாகவே இருக்கும். மீறிய செய்கையினால் விபத்துகளையும் வாகனங்களை அடிக்கடி பழுது பார்க்க வேண்டிய நிலையையும் ஏற்படுத்தும். விவசாய நிலங்கள் இருந்தாலும் அவற்றைப் பராமரிக்க முடியாது. கீழ் நிலையில் உள்ளவர்கள் அதனை அபகரிப்பார்கள். காட்டு விளைச்சல்கள் மேன்மை உண்டாக்கும். இருப்புக்கு ஈசான்ய திக்கில் மனை கட்டவும், காடு வாங்கவும் விதி உண்டாகும். ஆனால், அவற்றின் பலன்களைத் தக்க வைப்பது மிகவும் கடினமாகும். செவ்வாய்க்கு யந்திர, மந்திர பிரீதிகள் செய்வதன் மூலம் உயர்வான பலன்களை அடையலாமென்று நாடி வாயிலாக அறியப்படுகிறது.

சிம்ம இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு 9ஆம் இடமான மேஷத்தில் ஆட்சியாகி இருந்தால் நன்மையான பலனுண்டாம். தாய் தைரிய, வீரிய குணங்களை உடையவளாய் இருப்பாள். தகப்பன் சம்பாதித்த பூமிகளும் மனை களும் கிட்டும். நிலபுலன்கள், வண்டி வாகனங்கள், வீடு, மனை போன்றவையும் பால் பாக்கியங்களும் ஏற்படும். தாய், தந்தையுடன் இணங்கிச் செல்பவளாயிருப்பாள்.

செவ்வாய் ஆட்சியாகிச் சூரியன் அங்கு உச்சமாகிக் கூடினால் நல்ல பலன்கள் உண்டாகும். தன் தந்தை வகையிலான மனைகளும், வண்டி வாகனங்களும் தன்னைச் சேரும். வித்தை மேலோட்ட மாகவே இருக்கும். இரசாயன சம்பந்தக் கல்விகளும் உண்டாகும். வேளாண்மைக் கல்வியும் உண்டு. தன் தகப்பன் வாயிலாகவே சொத்து சுகம், பூமி, மனை, வண்டி, வாகனம் போன்றவற்றை அடைய முடியும்.

செவ்வாயுடன் சனி சேர்ந்து நீசமானால் சில பலன்கள் தடையாகவும், சில பலன்கள் யோகமாகவும் அமையும். மனை வேலைகளையும், விவசாய வேலைகளையும் நினைத்தபடி செய்ய முடியாது மிகவும் மந்த கதியே ஏற்படும்.

செவ்வாயுடன் உச்ச கிரகங்கள் கூடினால் மேன்மையான பலன்களைத் தருவார். நீசக் கிரகங்களோ, பகைக்கிரகங்களோ கூடின் முன்பலன்களை மத்திமமாகவும் பிற்பலன்களை நல்லபடியாகவும் செய்வார். செவ்வாயோடு சுக்கிரன் கூடினால் யோகமுண்டாகும். இதனால் பால் பாக்கியங்களும் வண்டி வாகன யோகங்களும் சிறப்புடன் அமையும். தெய்வ வழிபாடுகளில் சிரத்தையுண்டாகும். பெரியோர்களின் ஆசியும், அனுக்கிரகமும் உண்டாகும். செவ்வாய் நீசம் பகைக் கிரகச் சேர்க்கையால் துர்பலன்கள் செய்தால் செவ்வாய்க்கு யந்திர, மந்திர பிரீதிகள் செய்து நல்ல பலன்களை அடையலாம் என்று நாடி நூல் கூறுகிறது.

சிம்ம இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு 10ஆம் இடமான ரிஷபத்தில் நட்புப் பலத்துடன் இருக்க நல்ல பலன்கள் உண்டாகும். தாய், உயர்ந்த குடியில் பிறந்தவளாகவும், நல்ல பழக்கவழக்கங்களை உடையவளாகவும் இருப்பாள். சொத்துகள் பலமாகவும், வீடு, மனை, வாசல் போன்ற வற்றில் ஜீவன பலம் நிறைந்தும் காணப்படும். பால் பாக்கியங்கள் உண்டாகும். கால் நடைகள், பசுக்கள் ஆகியன வளர்த்தால் நல்ல யோகமுண்டாகும்.

செவ்வாயுடன் சுக்கிரன் சேர்ந்தால் சுக்கிர மங்கள யோகமும், அதனால் பால் பாக்கியங்களும் பெருகிக் காணப்படும். பூமி சம்பந்த மாகவும், வாகனம், மனை, கால்நடைகள் ஆகியன சம்பந்தமாகவும் தொழில்கள் அமைய விதிகள் உண்டாகும். செவ்வாயுடன் சுக்கிரன்

சேர்ந்திருப்பதால் வாகன யோகம் உண்டாகும். அழகான மாட மாளிகைகள், கால்நடைகள், மனை, காடு, கழனி, சொத்துகள், இளநங்கையரைக் கூடும் சுகம் போன்ற இந்திரனுக்கு ஒப்பான சுகங்கள் ஆகியன உண்டென்று கூறப்படுகின்றது. வாழ்வில் இந்திர போகத்தை அடைவார்கள். கல்வியிருந்தாலும் இல்லாவிட்டாலும் உயர்ந்த அறிவுடைய பெருமக்களின் தொடர்பும், பழக்கங்களும் ஏற்படும். இருப்புக்குத் தென்கிழக்கில் மனை கட்ட விதிகள் ஏற்படும்.

பலன்கள் நிரந்தரமாக உண்டெனினும், அந்த பலன்களைத் தக்க வைக்கச் செவ்வாய்க்குக் கடுமையான பூஜைகளும், சுப்பிரமணிய தேவருக்கு ஆராதனையும் செய்து வந்தால், உயர்ந்த பலன்களை அடையலாம் என்று நாடி நூல் வழியாக அறியப்படுகின்றது

சிம்ம இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதி செவ்வாய் இராசிக்கு 11ஆம் இடமான மிதுனத்தில் நட்புப் பெற்றிருக்க, பொதுவாக 4ஆம் பாவ வகையில் நன்மைப் பலன்கள் உண்டெனினும் செவ்வாய் தன் சத்துரு வீட்டில் பலனை மத்திமமாகவே செய்வார். தாயாருக்கு அடிக்கடி மாரகத்துக்கு ஒப்பான கண்டத்தைக் கொடுப்பார்.

செவ்வாயுடன் புதன் ஆட்சியாகிக் கூடினால் கல்வி தடைப்படும். மனை வகையில் இலாபங்கள் இருந்தாலும், தனக்குக் கீழ் உள்ள பணியாள்கள் அவற்றை அபகரிப்பார்கள். தானிய இலாபமுண்டாகும். பால் பாக்கியங்கள் இருந்தாலும் குறைந்தே காணப்படும். சுகங்களுக்குக் குறைவில்லை.

செவ்வாய் இரண்டுக்கு மேற்பட்ட நட்புக் கிரகங்களுடன் கூடினால் மனை வகையிலும், வண்டி, வாகன வகையிலும் யோகம் ஏற்பட்டு உயர்வான பலன்களை ஏற்படுத்துவார். தனக்குச் சொந்த மான பூமியிலிருந்து தானிய இலாபமுண்டு. மலைக்காடுகள் இருந்தால் நல்ல இலாபங்கள் உண்டு. சிவப்பு நிறமான பயிர்கள், கிழங்குகள் ஆகியன நல்ல பலனைக் கொடுக்கும். ஆடுகள், கால்நடைகள் ஆகியவற்றால் பலனுண்டு. இறைச்சிக்காகக் கொண்டு செல்லப்படும் கால்நடைகளால் இலாபமுண்டாம்.

செவ்வாயுடன் புதன் சேரச் சில பலன்களைத் தடைசெய்து கொண்டே இருப்பார். செவ்வாயுடன் சுக்கிரன் சேர யோகமுண்டாம். இதனால் வண்டி, வாகனம் போன்ற பலன்கள் தரும். அழகான மாட

மாளிகைகள் கட்டவும் வாய்ப்பு உண்டாகும். இருப்புக்கு வடக்கில் மனை கட்டவும், தோட்டம் அமைக்கவும் விதி ஏற்படும். செவ்வாயுடன் இராகு, கேதுக்கள் கூடினால் மாட மாளிகைகளிலும், மனைகளிலும் சர்ப்ப ஊடுருவல் உண்டாகும்; ஆனாலும், பாதக மில்லை. சுப்பிரமணிய தேவர் உபாசனைகள் நல்ல பலனைத் தரும்.

சிம்ம இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு 12ஆம் இடமான கடகத்தில் நீசமாய் இருந்தால் பலன் மிகவும் மத்திமமாகவே அமையும். தாய்க்கு உடல் நிலை மோசமாய் இருக்கும். பாதி நாள் உடல் நலமாகவும், பாதி நாள் சோர்வுடனும், உடல் நோயுடனும் இருப்பார்கள். உடல் வீரியமும் மனத்தைரியமும் அற்று இருப்பார். பூமிகள் இருந்தால் அவை பயனற்றனவாய் இருக்கும். நாம் நினைப்பதற்கு ஏற்ப விவசாயம் நடக்காது; முரணாகவே இருக்கும். விவசாயம், மனை ஆகியன பலனில்லாமல் பணம் விரயமாகும். கல்வி, தடைப்படும். மீறிய வித்தைகளினால் விரயமுண்டாம்.

செவ்வாயுடன் குரு உச்சமாகிக் கூடினால் சில யோக பலன்கள் உண்டாகும். வண்டி, வாகனங்கள் இருந்தாலும் அளவுக்கு மீறிய செலவினங்கள் உண்டாம்.

நீசம் பெற்ற செவ்வாயுடன் பகைக் கிரகங்கள் கூடினால் 4ஆம் பாவ வழியில் மிகவும் மத்திமமான பலன்களே ஏற்படும். பால் பாக்கியமும், குடும்ப சுகங்களும் குறையும். விரயத்திற்கு மேல் விரயம் வந்து தொல்லைகளை உண்டுபண்ணும். மனைகள், தோட்டங்கள் ஆகியன இருந்தாலும், அவற்றின் அபிவிருத்தி காரணமாகச் செலவுகள் அதிகம் உண்டாகும். பூமிகள் இருந்தாலும் உழவு செய்வதற்குக் கடினமாய் இருக்கும். செவ்வாய்க்குக் கடுமையான யந்திர, மந்திர பிரீதிகளும் சுப்பிரமணிய தேவருக்குக் கடுமையான உச்சாடனமும் செய்தால் உயர்வான பலன்களைப் பெறலாம்.

பொதுவா, இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதி மறைவிடத்தில் நீசமானால் மத்திமமான் பலன்களை உண்டாக்கும். சுப கிரகங்கள் பார்த்தாலும் கூடினாலும் அதம பலன்கள் குறையும்.

சிம்ம இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசியிலே இருந்து, பகை பெற்றிருப்பதால் மத்திமமான பலன் களே ஏற்படக்கூடும். தாய்க்கு நல்ல ஆரோக்கியம், ஆயுள் ஆகியவை இருக்கும். சிங்கச்சேய்க்குப் பங்கமில்லை என்ற கூற்றின்படி, நில புலன்கள், காடு, குறிப்பாகச் செம்மண் பூமியில் நல்ல விளைச்சல் ஏற்பட்டு இலாபத்தைத் தரும். மாடு, கன்று அபிவிருத்தி, பால் பாக்கியங்கள், சுகபோஜனம், நற்சுகம் ஆகியவற்றை அடைய விதியுண்டு.

செவ்வாயுடன் சூரியன் ஆட்சி பெற்றுக் கூடி இருந்தால் தந்தையும் தாயும் ஒற்றுமையுடனும் நல்ல ஆயுள் ஆரோக்கியத்துடனும் இருப்பார்கள். வீடு, மனை. வாகனம் போன்றவற்றால் நல்ல இலாப மும் உண்டாகும். காடுகளினால் நன்மையான பலன்கள் கிடைக்கும்.

செவ்வாயுடன் குரு, சந்திரன் ஆகியன கூடினால் நற்சுகமும் வீடு, மனை அலங்காரங்களும், தாய் வழியில் நல்ல இலாபமும் பெற்று வாழ்வார்கள். இருப்புக்குக் கிழக்கில், வீடு, மனை, தோட்டம் போன்றவை இருக்க நன்மையுண்டு.

செவ்வாயுடன் சுக்கிரன், சனி, புதன் ஆகியவர்கள் கூடினால் கால்நடை வாகனங்களும், இரும்பு வாகனங்களும், கனரக வாகனங் களும் நன்மை தரும். விவசாய அபிவிருத்தியால் மேன்மைகளும், கல்வி தடைப்படுதலும் உண்டாகும். இதற்குச் சுப்பிரமணியருக்கு அர்ச்சனை ஆராதனைகளும், செவ்வாய்க்கு யந்திர, மந்திர பிரீதி களும் பூஜைகளும் செய்தால் நற்பலன்களை அடையலாம் என்று ஸ்ரீ மகரிஷி பதஞ்சலி முனிவரின் சந்திரநாடி கூறுகின்றது.

சிம்ம இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு 2ஆம் இடத்தில் இருந்தால், நட்புடன் பலமாய் இருந்தால் நற்பலன் உண்டாகும். தாய், குடும்பத்தைக் கவனிப்பதில் தனிக் கவனம் செலுத்துவார். வீடு, மனை, வாகனம், சொத்து போன்றவை தாயின் ஆளுகையில் இருக்கும். விவசாய மேன்மை உண்டாகும். கல்வியில் பட்டம் பெறும் யோகமும் உண்டாகும்.

செவ்வாயுடன் ஆட்சி உச்சம் பெற்ற புதன் கூடினால் கல்விப் பட்டம் பெறுவார்கள். வீடு, மனை, வாகனம் ஆகியவற்றால் நல்ல இலாபம் கிடைக்கும். விவசாயங்கள் நன்மை தரும். தாய்க்கு நன்மை

உண்டாகும். சுபகாரியங்கள் நடக்கும். பச்சைப் பயறுகள் மூலம் நல்ல சுகமான பலன்கள் கிட்டும்.

செவ்வாயுடன் சுக்கிரன் சேர்ந்து சுக்கிரன் நீசமானால் வாகனங்களினால் இடரும், அதனால் கஷ்டங்களும் உண்டாகும். வீடு கட்டுவதில் பிரச்சினைகள், கடன்கள், வில்லங்கம் ஆகியன உண்டாகும். பச்சைப் பயறு போன்ற தானியங்களினால் விளைச்சலும் நன்மையும் ஏற்படும்.

செவ்வாயுடன் குரு சேர்ந்தால் கால்நடைகளால் வருமானங்களும், இரும்பு வாகனத்தால் சுகமும் உண்டு. நல்ல பலன்கள் உண்டு. பொன் ஆபரணச் சேர்க்கை உண்டாகும்; வீடு, மனை, வாகனம் ஆகியன வாய்க்கும். தாய், நல்ல ஆரோக்கியமாய் இருப்பார்; எப்பொழுதும் உண்மை பேசக்கூடியவராகவும் இருப்பார். பால் சாப்பிடும் நிலை உண்டாகும். செவ்வாயுடன் இராகு, கேது கூடினால், மனையில் தரித்திரமுண்டாகும். பொய் பேசக் கூடியவராகவும் இருப்பார்கள். தாய் நோயுடன் இருப்பாள். நீதி, நேர்மை, பக்தி போன்றவை அவ்வீட்டில் இரா. இவ்வாறு ஸ்ரீ பதஞ்சலி மகரிஷி சந்திரநாடி . நூல் கூறுகின்றது.

சிம்ம இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு 3ஆம் இடமான துலாத்தில் நட்புடனிருந்தால் நற்பல மாகும். தாய் நல்ல குடியில் தோன்றியிருப்பாள். ஓரளவு செல்வச் செழிப்புடனிருப்பாள். அவளுக்கு நேத்திர ரோகமுண்டாம். பால் பாக்கியங்கள் ஏற்படும். கால்நடைகளால் நல்ல வருமானம் அதிகம் உண்டாகும். சுகமும் உண்டாகும். பெரும்பாலும் ஆடை, அணிகலன், பெண்கள் போகம் என்ற வகையில் சுகங்கள் ஏற்படும்.

செவ்வாயுடன் சுக்கிரன் சேர்ந்தால் சுக்கிரமங்கள யோகம் ஏற்பட்டு, வண்டி, வாகன வகைகள் உயர்வு பெறும். மனைகள், மாளிகைகளாகும் விதிகளும் உண்டாகும். செவ்வாயுடன் சூரியன் நீசமாகிக் கூடினால் அதம பலன்கள் உண்டாகும். தாய்க்குச் சிரசுத் தொந்தரவுண்டாகும். பூமிகள் செழிப்பு வற்றியும் காணப்படும்.

செவ்வாயுடன் சுக்கிரன் ஆட்சியாகிக் கூட இரண்டுக்கு மேற்பட்ட நட்புக்கிரகங்கள் கூடினால் உயர்ந்த பலன்கள் உண்டாகும். இருப்புக்குத் தென்கிழக்கில் மனை கட்டும் விதிகளும், தோட்டம் அமைக்கும்

விதிகளும் ஏற்படும். வண்டி வாகனங்களால் நன்மை உண்டாகும். தனக்கிளைய சகோதரர்கள் அவற்றை நிர்வகித்து வருவார்கள்; பராமரிப்பார்கள். இளமையில் சுகபோகங்களினால் கல்விக்குத் தடை ஏற்படும். பின்பு, தொடர்ந்து நல்லபடியாக விளங்கும். பொதுவாக, உத்தம பலன்களே உண்டாகும். செவ்வா யோடு சூரியன் நீசமாகிச் சேர்ந்தால் கெடுதியான பலனுண்டு. ஆட்சிக்கிரகங்கள் அதனோடு சேர நீசபங்க ராஜயோகம் ஏற்பட்டு, நல்ல பலனைக் கொடுக்கு மென்று கூறப்படுகின்றது. சில துர்பலன்கள் உண்டு. செவ்வாய்க்கு யந்திர, மந்திர. பிரீதிகளும், சுப்பிரமணியருக்கு ஆராதனையும் செய்யவும்.

## கன்னி

## நான்காம் பாவம்

உங்கள் இராசிக்கு 4ஆம் இடத்ததிபதியாகக் குருவைப் பெற்ற கன்னி இராசி அன்பர்களே!

4-ஆம் பாவமென்பது தாய், மனை, வாகனம், கல்வி, சுகம், விவசாயம் போன்ற துறைகளைக் குறிக்கும். கன்னி இராசிக்கு 4-ஆம் இடத்ததிபதியான குரு மேஷம் முதல் மீனம்வரை 12 இராசிகளிலும் இருந்த பலனும், மற்ற கிரகங்களோடு சேர்ந்த பலனும் மகரிஷி பதஞ்சலி மகாமுனிவரின் திருவாக்கின்படி உங்களுக்கு ஆராய்ந்து கொடுக்கப்பட்டுள்ளன.

அதன்படி, குருவானவர் உங்கள் இராசிக்கு எத்தனையாவது இடத்தில் அமர்ந்துள்ளார் என்று கண்டு, 4ஆம் பாவ பலன்களைக் கண்டுகொள்ளவும்.

"பெண்மதிக்கு நாலோனு மறையோனும்
பகரவரும் கேந்திரங்கள் ஏறிடினும்
விண்மணியான், ஆரலொடு அம்புலியொத்து
வேதனவன் கூடினு மிருந்திடினும்
கண்டதொரு மனைபலனும் மக்கள்பலன்
காட்டலாம் வண்டியொடு வாகனயோகம்

அண்டுமொரு சுகங்களொத்து மனைமார்க்கம்
அரிவைசுகம் ஆற்றலொடு மிருக்கும் பாரே"

குருவானவர் இராசிக்குக் கேந்திரங்களில் இருந்தாலும் சுப வீடுகளில் சூரியன், செவ்வாய், சந்திரன் போன்றோரோடு சேர்ந்திருந்தாலும், நாலாம் பாவ பலன்களை நல்ல முறையில் செய்வார் என்று கூறப்படுகின்றது. சில துர்பலன்கள உண்டானால், குருவுக்கு யந்திர, மந்திர பிரீதிகள் செய்து நல்ல பலனை அடையும் படி கூறப்படுகின்றது.

கன்னி இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 4இல் தனுசிலே ஆட்சியாக இருக்க, உத்தமமான பலனுண்டு. 4ஆம் பாவ வழியில் மேன்மை உண்டாகும். குருவுடன் புதனும் சுக்கிரனும் கூடினால் மத்திமமான பலன்களை ஏற்படுத்தும். புதனும் சுக்கிரனும் தவிர மற்ற கிரகங்கள் குருவுடன் கூடினால் 4ஆம் பாவம் சிறக்கும். தாய்க்கு மனைகள், விவசாயங்கள் தானியக் களஞ்சியங்கள் போன்றவை இயற்கையிலேயே இருக்க விதியுண்டாம். தாயின் சுகத்திற்குக் குறைவில்லை. குருவுடன் சுக்கிரன் சேர்ந்தால் மாரகக் கண்டத்தைக் கொடுப்பார். நேத்திர ஹீனமும் உண்டாகும். உங்கள் கல்விகள், வித்தைகள் ஆகியன உயர்தரமாகும்; மற்றவர்கள் மதிக்கும் நிலையிலும் இருக்கும். குருவுடன் புதன் கூடக் கல்வியானது திசை மாறிப் போகும். சுகங்களுக்குக் குறைவில்லை. பொன் பொருளினால் சுகங்களும், விவசாயத்தினால் நன்மைகளும் ஏற்படும். 40 வயதிற்குமேல் நன்மையான பலன்கள் உண்டாகும். இருப்புக்கு வடகிழக்கில் மனை கட்டவும், கட்டடங்கள் அபிவிருத்தி செய்யவும் விதியுண்டாகும்.

குருவோடு சுக்கிரன் பாவியாகிக் கூடினால் வாகன யோகங்கள் தடைப்படும். வீரிய செயல்களினால் தண்டமும் கண்டமும் உண்டாகும். குருவுடன் பாவி சேர்ந்து 2-க்கும் மேற்பட்ட சுபக் கிரகங்கள் கூடினால் பாவியின் பலனைக் குறைக்குமாம். நிலம், நீச்சு, காடு, கழனி போன்றவை இருந்தாலும், முற்பலன்கள் குறை வாகவும், பிற்பலன்கள் அதிகமாகவும் இருக்கும்.

குருவோடு பூமிகாரகனான செவ்வாய் கூடினால், விவசாய வர்க்கங்களுள் நெல், விவசாயம், கரும்பு போன்ற பயிர்கள்

செழிப்புற்று இருக்கும். குருவோடு பாவிகள் கூட மனைகளும் வீடுகளும் பீடை பிடித்தும், பிணிகளோடும் இருக்கும். துர்க்கிரகச் சேர்க்கையால் குரு அதம பலன்களைச் செய்தால் தக்ஷிணாமூர்த்தி தேவருக்கும், குருபகவானுக்கும் எந்திர, மந்திர பிரீதிகளும், ஆராதனையும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும்.

கன்னி இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியாகிய குரு இராசிக்கு 5ஆம் இடமான மகர இராசியில் நீசம் உற்றிருப்பதால் மத்திமமான பலன்களே உண்டு. தாய்வழி பூர்வ புண்ணியங்கள் பாதிக்கப்படும். அவை பயனுள்ளவையாக இரா. அல்லது தன் கைக்குக் கிடைக்காமல் போகும். தாய்க்குக் கால் முட ரோகமும் வாதங்களும் ஏற்படும். உங்களுக்கு குடும்பச் சுகங்களும் தாய்வழிச் சுகங்களும் பெரியோர்களின் பழக்கவழக்கங்களும் உண்டாகும். வித்தை இருந்தாலும், மந்தமான நிலையில் இருக்கும். உயரிய வித்தைகள் கற்பதற்குத் தடை ஏற்படும். விவசாய நிலைகள், மனைகள், காடுகள் ஆகியன இருந்தாலும் அவை நல்ல பொலிவுடன் இரா.

நீசமுற்ற குருவுடன் பூமிகாரகனான செவ்வாய் கூடினால் நீசபங்க ராஜயோகம் ஏற்பட்டு, விவசாய வழிகளிலும் மனை மற்றும் காடு கரை வழிகளிலும் திடீர் இலாபங்களும் மனையில் புதையல் தோண்டி எடுக்கும் நிலையும் உண்டாகும். நீசமுற்ற குருவோடு சனி ஆட்சியாகிக் கூடினாலும் இவ்வகையான பலன்களுண்டாம். வாகன யோகங்களும் கால்நடை யோகங்களும் குறைவாகவே உண்டு. குருவுடன் சனி சேர எருமை மாடுகளால் பால் பாக்கியம் ஏற்படும். கரிய நிற வித்துகள், தானியங்கள், வியாபார விருத்தி ஆகியன உண்டாகும். இரும்பு சம்பந்த வாகன உதிரிப் பாகங்களால் மேன்மை உண்டாகும். சுகங்கள், கீர்த்திகள் ஆகியன வாழ்வின் தொடக்க காலத்தில் மந்தமாகவும், குருவுடன் ஆட்சி உச்ச கிரகங்கள் கூடினால், திடீர் யோகங்களும் செல்வாக்கும் உண்டாகும். இருப்புக்கு மேற்கில் மனை கட்டவும், காடுகள் வாங்கவும் யோகம் உண்டாகும். குரு தனித்து நீசமானாலும் புதன், சுக்கிரன் ஆகியன போன்ற சத்துருக்களுடன் கூடினாலும், தன் புத்திரர்களினால் மனை வகையில் தொல்லையும், கேடும் உண்டாகும். துர்பலன்களைத் தவிர்க்கக் குரு பிரீதிகள் செய்ய நற்பலன்களை அடையலாம்.

கன்னி இராசிக்கு 4ஆம் இடமான குரு இராசிக்கு 6ஆம் இடமான கும்பத்திலிருந்தால் மத்திமமான பலன்கள் உண்டாகும். தாய்க்கு வாத ரோகங்கள் உண்டாகும்; உடல் மந்தமாகவும் நடை தளர்வாகவும் இருக்கும். அடிக்கடி சண்டை சச்சரவுகளால் தாய், வழியில் உங்களுக்கு மனக்கிலேசங்களும் சஞ்சலமும் உண்டாகும். தாய் சதா நோய்வாய்ப்பட்டுத் துன்புறுவாள். சுகங்கள் குறைவாகவே இருக்கும். மனைகள், காடுகள், நிலம், நீச்சுகள் ஆகியன இருந்தாலும் வில்லங்க விவகாரங்களாகவும் கடன் வகையில் குத்தகைக்கு விடப்பட்டுமிருக்கும்.

குருவுடன் பகைக் கிரகங்கள் கூடினாலும் சத்துருக்களான புதன், சுக்கிரன் ஆகியன கூடினாலும் வீடு, மனை, வாகனம், வித்தை போன்றவற்றில் வில்லங்க விவகாரம் தொடர்ந்துகொண்டே யிருக்கும். இருபாம்புகளான இராகு, கேதுக்கள் கூடினாலும் மத்திம பலனே. இருப்புக்கு மேற்கில் மனை கட்டும் விதிகளும் காடு வாங்கும் விதிகளும் அவற்றால் தொல்லைகளும் உண்டாம். குருவுடன் சனி ஆட்சியாகிக் கூட மந்த நிலைமையாக இருந்தாலும், விவசாயம், மனை வேலைகள் ஆகியன இயங்கிக்கொண்டிருக்கும். ஆனால், சுகத்துக்குப் பங்கமுண்டு. பொன் ஆபரணங்களாலும் ஆசார அனுஷ்டானங்களாலும், பொழுது போக்கால் ஏற்படக்கூடிய சுகங்கள் குறைவாக இருக்கும். எருதுகள், எருமை மாடுகள் ஆகிய கால்நடைகள் இருந்தால் நன்று. உங்களுக்கு பால் பாக்கியம் சொற்பமாக உண்டாகும். பசுக்களாலும், மற்ற கால்நடைகளாலும் கிட்டும் பால் பாக்கியங்களும், இறைச்சிப் பொருள்களும் விருத்தியைத் தாரா. பொதுவாக, குரு தனித்து இருந்தாலும், சத்துரு பகைக் கிரகங்களுடன் சேர்ந்திருந்தாலும் 4ஆம் பாவம் சிறவாது. கடுமையான கிரகப் பிரீதிகள் மூலமும் தக்ஷிணாமூர்த்தி தேவருக்குத் தொடர்ந்து ஆராதனை மூலமும், படையல் செய்வதன் மூலமும் சில சிறப்பான பலன்களை அடையலாம் என்று நாடி நூல் வாயிலாக அறியப்படுகிறது.

கன்னி இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 7ஆம் இடமான மீனத்தில் ஆட்சி பெற்றிருந்தால் நற்பலன்கள் உண்டாம். தாய்க்கு உடல் நலமும் சுகங்களும் ஏற்படும். குருவின் சத்துருக்களான புதன் நீசமாகவோ, சுக்கிரன் உச்சமாகவோ கூடினால்

பலன்கள் முரண்பாடாகவே அமையும். குரு ஆட்சியாகி 2-க்கும் மேற் பட்ட நட்புக் கிரகங்களுடன் கூடினால், மனைவி வகையில் நிலம் நீச்சுகள், காடு கழனிகள், மனைகள், கோட்டங்கள் ஆகியன பராமரிக்கப்பட்டும் அபிவிருத்தி செய்யப்பட்டும் வர விதியுண்டாம்.

குருவுடன் சுக்கிரன் உச்சமாகிக் கூடினால், தாய்க்கும், தன் களத்திரத்திற்கும் ஒத்துக்கொள்ளாது. குரு தனித்திருந்தால் நன்மை உண்டாகும். குருவுடன் புதன் நீசமாகிக் கூடினால் வித்தைகள் தடைப்படும். கணிதம் சம்பந்தப்பட்ட வித்தைகள் உங்களுக்கு வாய்க்க விதிகள் குன்றவு. குழப்பமே மிஞ்சும்.

குருவோடு சுக்கிரன் கூடி உச்சமானால் வாழ்வின் முற்பகுதியில் வாகன யோகங்கள் குறைவு; பிற்பகுதியில் வாகன யோகங்களும் தன் மனைவியின் பெயரால் செய்ய யோகங்களும் உண்டாகும். இருந்தாலும், வாகன வகையில் கவனமாய் இருத்தல் நலம். இருப்புக்கு வடகிழக்கில் மனை கட்ட விதியுண்டு. அதனால் நன்மைகளுண்டாகும். அந்த மனை ஆடம்பரம், அலங்காரம் ஆகியவற்றைக் கொண்டதாகவும் இருக்கும். 4ஆம் பாவத்தைப் பொறுத்தவரை நிலங்கள், மனைகள், வீடுகள் ஆகியவற்றைத் தன் மனைவி பெயரால் செயல்படுத்தினால் அதிபதி ஆக விதியுண்டு.

குருவுடன் புதன் நீசமானால் நீசபங்க ராஜயோகம் ஏற்பட்டு, வாழ்வின் பிற்பகுதியில் எதிர்பாரா வகையில் புதியதொரு வியாபார அபிவிருத்தியும் விவசாயத் தோட்டங்கள், புதிய மனைகள், வண்டி வாகனங்கள் ஆகியன வாங்க யோகமும் உண்டாகும். அவற்றை உரிய முறையில் தக்க வைத்துக்கொள்ள வேண்டும். குருவுக்கு எந்திர, மந்திர பிரீதிகளும், தக்ஷிணாமூர்த்தி தேவருக்கு ஆராதனையும் செய்தால் நற்பலன்கள் உண்டு என்று நாடிநூலால் அறியப்படுகின்றது.

கன்னி இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 8ஆம் இடமான மேஷத்தில் பகை பெற்றிருக்க நாலாம் பாவத்தின் சிறப்புக் குறையும். பூமிகள், மனைகள், காடு கழனிகள் ஆகியன இருந்தாலும் அவை பயனற்றுக் கவனிப்பார் யாரும் இல்லாமல் இருக்கும். தாய், சுகக்குறைவுடன் இரத்த சம்பந்தப்பட்ட, நோய்களால் பெரிதும் உபாதைப்படுவர். குருவுடன் செவ்வாய்

ஆட்சியாகிக் கூடினால் தாய்க்கு அடிக்கடி அட்டம கண்டங்கள் வந்துபோகும். குருவோடு சூரியன் உச்சமாகிக் கூடினாலும், சுக்கிரன் சேர்ந்திருந்தாலும், தாயைவிடத் தகப்பன் ஆளுமை அதிகமாய் இருக்கும். அது தாயைப் பல விதத்தில் சங்கடப்படுத்தும்.

குருவுடன் செவ்வாய் ஆட்சியாகிக் கூடினால் பால் பாக்கியங்கள் குறைவு. ஆனால், கால்நடைகளைக் கொன்று செய்யப்படும் இறைச்சி வியாபாரத்தால் செல்வம் உண்டாம். அதனால் சுகத்திற்குப் பங்கம் ஏற்படும். வீடுகள், மனைகள் ஆகியவற்றில் பீடைகள் ஏற்பட்டு, சதா சஞ்சல உணர்வுகள் இருக்கும். குருவுடன் சனி நீசமாகிக் கூடினால் தாய்க்கு முடரோகமும், தடுமாறுதலால் மாரகக் கண்ட முமுண்டாகும்.

விவசாய நிலத்தால் மந்தமான நிலையே உண்டு. இருப்புக்குத் தெற்கில் மனை வாங்கவும், அங்கு வீடு கட்டவும், கால்நடைக் கிடைகளை அமைக்கவும் விதி ஏற்படும். ஆனால், சுகத்திற்குப் பங்கம் ஏற்பட்டுள்ளபோது குருவுடன் நீசக்கிரகமும், சுக்கிரனும், புதனும் சேர்ந்தால் தாய் முதல் வித்தைவரை 4ஆம் பாவத்திற்குக் கேடுண்டாகும். குருவுடன் இராகு கூடினால் சில விதத்தில் நல்ல பலன்களும் சில துர்பலன்களும் கலந்து நடக்கும். குரு தனித்திருந்தால் மத்திம பலனேயாம். குருவுக்குக் கடுமையான பிரீதிகளும், ஆராதனையும் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

கன்னி இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான குருவானவர் தம் சத்துரு வீடான ரிஷபத்தில் நட்புடனிருந்தாலும் மத்திம பலனே உண்டு. தாய்க்கும் தந்தைக்கும் இடையே மனக்கிலேசங்களும், கருத்துவேறுபாடும் உண்டாகும். சுகத்திற்கும் பங்கமுண்டாகும். தாய்க்கு நேத்திர ஹீனங்களும் நோயும் ஏற்படும். குருவுடன் சுக்கிரன், புதன் ஆகியன தவிர்த்து மற்ற கிரகங்கள் கூடினால் நற்பலன்களையும், சத்துருக்கள் கூடினால் மத்திம பலன்களையும் தரும். குருவுடன் சுக்கிரன் கூட பால் பாக்கியங்கள் வாழ்வில் முன்பாதியில் மத்திமமாகவும், பின்பாதியில் உத்தமமாகவும், கால் நடைகளால் ஏற்படும் பால் பாக்கியங்கள் முன் குறைவாகவும் பின் அதிகமாகவும் அமையும். வண்டி வாகனயோகமும் அப்படியே அமையும். முன்யோகம் குறைவாகவும் பின் யோகம் அதிகமாகவும் உண்டு.

குருவுடன் புதன்கூட வித்தைகள் கற்கத் தடை ஏற்படும். ஆனால், கேள்வி ஞானங்கள் சிறந்திருக்கும். கணித வித்தைகள் மத்திமமாகும். குரு தன் சத்துருக்களுடன் கூடி இருக்க ஆடை, ஆபரணம், பொன், பொருள்கள், இளநங்கையரைக் கூடுதல் ஆகிய பாக்கியங்கள் குறைவாகவே அமையும். ஆனால், ஆச்சார அனுஷ்டானங்களுடனும், தெய்வ பக்தியுடனும் இருக்க விதியுண் டாம். பசு யோகமும் அதனால் பால் பாக்கியமும் பின்யோகமாய் அமையும். இருப்புக்குத் தென்கிழக்கில் அழகிய மனை கட்ட விதியும் தோட்டங்கள் அமைக்க பிராப்தமும் ஏற்படும்.

குருவுடன் சத்துருக்கள் கூடாது மற்ற கிரகங்கள் கூட ஓரளவு நற்பலன்கள் உண்டாகும். குரு சத்துருக்களுடன் கூட முற்பலன் மத்திமமாம். தன் தகப்பன் வழி சொத்துகளுக்கும் மனைகளுக்கும் பாக்கியதை இல்லையாம். 4ஆம் பாவ வழியில் நற்பலன்களை அடையக் குருவுக்கு ஆராதனைகளும், எந்திர, மந்திர பிரீதிகளும் தக்ஷிணாமூர்த்திக்குப் பிரீதிகளும் பூஜைகளும் செய்வதால், நற்பலன்களை அடையலாம்.

கன்னி இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 10ஆம் இடமான மிதுனத்தில் தன் சத்ரு வீட்டில் நட்புடனிருந்தாலும் 4ஆம் பாவத்தைப் பொறுத்தவரை பலன் கூடக் குறைய அமையும். தாய் ஆச்சார அனுஷ்டானம் உள்ளவளாகவும், கேள்வி ஞானங்களில் சிறந்தவளாகவும் இருப்பாள். தாய்க்கு முன்வாழ்க்கை உத்தம மாகவும், பின்வாழ்க்கைச் சுகங்கள் மத்திமமாகவும் இருக்கும். உங்கள் கல்வி தடைப்பட்டாலும் செழித்தோங்க விதிகளுண்டாம். கணிதக்கல்வியில் ஈடுபாடும், ஆனால், அதனை அடைய முடியாமல் வருத்தமும் உண்டாகும். குருவுடன் புதன் கூடினால் பிற்பலன்களே அமையும். பால் பாக்கியங்கள் குறைவுண்டாம்.

வித்தையினால் ஏற்படும் சுகங்களும், புகழும், செல்வாக்கும், 40 வயதிற்கு மேலேயே அமையும். நிலங்கள், அவை சம்பந்தப்பட்ட விவசாயங்கள் ஆகியன தொழிலாக அமைதலும் உண்டாம். உழவு வகையில் 40 வயதுவரை மத்திமமான பலன்கள் உண்டு. அதற்குப் பின் சிறப்பைக் கொடுக்கும். குருவுடன் 2-க்கும் மேற்பட்ட நட்புக் கிரகங்கள் கூடினால் மனை வகையிலான தொழில்கள் சிறக்கும். சத்துருக்கள் கூடினால் மத்திமமாகும். வாகன யோகங்கள் குறைவு;

தொழிலாகச் செய்தால் மத்திமம். தன் வசதிகளுக்குள் இருந்தால் தவறில்லை. நஞ்சை நிலங்களைவிடப் புஞ்சை நிலங்களே பலன் தரும். தானிய வகை வியாபாரமும், வித்தை சம்பந்தப்பட்ட நூலக வியாபாரமும் நன்மையைத் தரும். இருப்புக்கு வடக்கில் மனை கட்டவும் காரியாலயங்கள் அமைக்கவும் 40 வயதிற்குமேல் விதியுண்டு.

நிலங்கள் விருத்தியாகவும், அவை கட்டட மனைகளாகவும் வாய்ப்புண்டாம். விவசாய நிலங்களில் மத்திம பலன்களே உண்டு. குரு தனித்து இருந்தாலும், நட்புக் கிரகங்களுடன் சேர்ந்து இருந்தாலும், பொதுவாகவே பிற்பலன்களே அதிகமுண்டு. தொடர்ந்து நல்ல பலன்களைப் பெறக் குருவுக்குக் காரகப் பிரீதிகளும், அவருக்கு அதிதேவரான தக்ஷிணாமூர்த்திக்கு பூஜைகளும் செய்தால் நல்ல பலன்கள் உண்டாகும்.

கன்னி இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதி குரு இராசிக்கு 11ஆம் இடமான கடகத்தில் உச்சமாய் இருந்தால், 4ஆம் பாவ வழியாக இலாபப் பலன்கள் உத்தமமாக உண்டாகும். குரு தனித்து இருந்தால் நற்பலன்கள் உண்டு. நீசக் கிரகத்தோடும் பகைக் கிரகங்களோடும் சேர்ந்தால் மத்திம பலன்களாகும். தாய்க்குச் சுக செளக்கியங்கள் ஒரே மாதிரி இரா. நோயினால் படுத்து எழுந்திருப்பார்கள். குளிர் ஜுரங்கள், சிலேத்தும நோய்கள் ஆகியன உண்டாகும்.

குரு உச்சமாகி, செவ்வாய் அங்கு நீசமாகி இருந்தால் பூமி வகையில் முன் இலாபங்கள் அதிகம்; பின் இலாபங்கள் குறைந்து மறுபடியும் அதிகரிக்க விதியுண்டு. கால்நடை பால் பாக்கியத்தில் குறைவு ஏற்படும். இறைச்சிக்காகவும் அவை கொல்லப்பட்டு விற்கப் படுவதால் அதிக இலாபம் ஏற்படும். கால்நடைகளின் தோல் பொருள் களினால் நல்ல இலாபம் உண்டாகும். சுகங்கள் ஒரே மாதிரியாய் இரா. விட்டுவிட்டுத் தொடரும் நிலையை உடையனவாய் இருக்கும். வாழ்வின் பிற்பலன்களாக வாகன யோகங்கள் அமையும். அல்லது வாகனங்கள் வாங்கத் திடீர் யோகம் ஏற்படும்.

குரு தனித்திருந்தால் வாகன நன்மைகளும் மனை வகையான நன்மைகளும் ஏற்படும். வித்தையை அரைகுறையாக முடிக்கத் தோன்றும். குருவுடன் கேது கூடினால் ஞான வித்தைகள்

பலிதமாகும். இருப்புக்கு வடமேற்கில் மனைகள் கட்டவும், அவை இலாபகரமானவையாகவும் அமையும்; விற்றால் நன்மையுண்டாம். மனைவகையான யோகங்களில், நிலங்கள் கைமாறுதல் கைமேல் பலனாகும். நிலைத்திருக்கும் நிலங்களால் ஏற்படும் நன்மை குறைவேதான். வியாபாரங்கள், விவசாயங்கள் ஆகியவற்றைவிட மனை வகையிலேயே நல்ல விருத்தி ஏற்படும். குரு துர்க்கிர கங்களுடன் சத்துருக்களுடன் கூடினால் ஏற்படும் துர்பலன்களைத் தவிர்க்க, குருவுக்குப் பிரீதியும் தக்ஷிணாமூர்த்திக்கு ஆராதனையும் செய்தால் நல்ல பலன்கள் உண்டாகும் என்று சந்திரநாடி கூறுகிறது.

கன்னி இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 12ஆம் இடமான சிம்மத்தில் இருந்தால் மறைவுப்பலனும் அதன் வகையில் மத்திம பலனும் உண்டாம். தாய்க்குச் சிரசு ரோகமும், அதனால் செலவுகளும் சுகத்துக்குப் பங்கமும் ஏற்படும். நிலங்கள், மனைகள் போன்றவை இருந்தாலும், அவை உஷ்ண பூமியாகவும், வறண்ட பூமியாகவும் இருக்க விதியுண்டாம். பால் பாக்கியங்கள் குறையும். கால்நடையால் நட்டங்களுண்டாகும். எருமை மாடு களிருந்தால், பால் பாக்கியங்கள் குறைவாய் இருக்கும். சுகத்துக்குப் பங்கமும் விரயமும் ஏற்பட்டு நொம்பலப்படுத்தும். குருவோடு ஆட்சிக் கிரகம் கூடினாலும், பகைக் கிரகம் கூடினாலும், மத்திம பலனையே உண்டாக்கும். கல்வி தடைப்படும். எவ்வளவுதான் கற்றாலும் மத்திமக் கல்வியே தரும்.

இருப்புக்குக் கிழக்கில் மனை கட்ட விதியுண்டு. அதில் நீர் வறண்டுவிடும். பல விரயச் செலவுகளும் உண்டாகும். வாகன யோகங்கள் மத்திமமாய் இருக்கும். மீறி வாங்கினால் பழுதுகள் உண்டாகும். வெப்ப மண்டலப் பயிர்கள் வறட்சி தாங்கக்கூடிய பயிர்களால் சில நன்மைகள் உண்டு. மனைகள் கட்டினாலும், அபிவிருத்தி செய்தாலும் செலவினங்களே அதிகமுண்டு. குறிப்பிட்ட நல்ல பலன்களைத் தாரா.

குருவோடு 2-க்கு மேற்பட்ட பகைக் கிரகங்கள் கூடினால் 4ஆம் பாவ வழியில் விரயங்களே அதிகமுண்டாகும். விவசாயத்தால் உண்டாகும் பலன்களில் வரவைவிடச் செலவே அதிகமாய் இருக்கும். இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதி கெட்டிருந்தால்

உயிரான இலக்கினத்திற்கு 4ஆம் இடத்து அதிபதி நற்பலன் தரும் இடங்களிலிருந்தால் யோகமும் பலனும் உண்டாகும். அல்லது கதியாகிய சூரியனுக்கு 4ஆம் இடத்து அதிபதியான கிரகம் நல்ல இடங்களில் இருந்தால் நற்பலன்கள் உண்டாகும். குருவுக்குக் கடுமையான எந்திர, மந்திர பூஜைகள் செய்வதன் மூலம் நற்பலன் களை அடையலாம் என்று நாடி நூல் கூறுகிறது.

கன்னி இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான குரு இராசியிலே இருந்தால், குரு நட்புக் கிரகங்களுடன் கூடி இருந்தால் நல்ல பலன்கள் உண்டாகும். நீசக் கிரகத்துடனும் தன் சத்துருவான புதனுடனும் கூடி இருந்தால், மத்திமமான பலன்களே உண்டாகும். தாய்க்குச் சுகங்களிருந்தாலும் மன்னயோகமில் தொந்தம் உண்டாம். குருவுடன் சுக்கிரன் நீசமாகிக் கூடினால் தான் பிறந்த மனை சாபம் உள்ளதாகவும் பீடை பிடித்ததாகவும் தோன்றும்.

குருவுடன் புதனும் சுக்கிரனும் சேர்ந்து கூடினாலும், சத்துருக்களுக்கிடையே நீசபங்க ராஜயோகமிருந்தாலும் 4ஆம் பாவ பலன்கள் வழியாக அந்தப் பலனைப் பிற்பகுதியிலேயே பெறமுடியும். கல்வி, வாகன யோகம் , வீடு, மனை, கோட்டங்கள் ஆகியன கட்டுவதில் வாழ்வில் முன் தடைகளும் ஏற்படும். பிற்பகுதியில் பால் பாக்கியங்களும் கால்நடை யோகங்களும் உண்டாகும்.

குருவுடன் சுக்கிரன் மட்டும் தனித்துக் கூடினால் அழகிய மனைகள் கட்டத் தடையும், வாகன யோகம் குறைதலும் ஏற்படும். குரு 2-க்கும் மேற்பட்ட நட்புக் கிரகத்துடன் கூடினால் 4ஆம் பாவ வகையில் சில மேன்மைகளைச் செய்வார். செவ்வாயுடன் கூடினால் பூமி மாற்றான் கைக்குப் போய்விடும்.

குரு தனித்து இருந்தாலோ, நட்புக் கிரகத்துடன் சேர்ந்திருந்தாலோ, விவசாயம், உழவு ஆகியவற்றைவிடக் காடு வளர்ப்பதிலும் மரம் வெட்டிப் பிழைப்பதிலும் ஆர்வம் உண்டாகும். குரு, அசுரகுருவான சுக்கிரனுடன் தனித்துக் கூடினால் அதம பலன்களே உண்டாகும்.

கன்னி இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 2ஆம் இடமான துலாத்தில் நட்புடனிருந்தால் மத்திம பலன்களே உண்டாகும். தாய்க்கு நல்ல ஆரோக்கியம் உண்டு. தாய்,

குடும்பத்தை நிர்வகிக்கும் பொறுப்பில் இருப்பார். வீடு, மனை, வாகனம் போன்றவையால் மத்திமமான பலன்களே உண்டாகும். விவசாயம், வியாபாரம் போன்றவற்றில் ஓரளவு இலாபம் கிடைக்கக்கூடிய நிலையுண்டு.

குருவுடன் ஆட்சி பெற்ற சுக்கிரன் கூடினால் நற்சுகமும், கல்வியில் ஓரளவு தேர்ச்சியும் உண்டாகும். வீடுகள், மனைகள் ஆகியன அலங்காரத்துடனும் கலையமிசம் பொருந்தியனவாகவும் இருக்கும். விவசாயங்கள் நல்ல முறையில் நடந்தாலும் நல்ல இலாபங்களைக் கொடுக்கா. வியாபாரமும் சற்று மந்தமான சூழ்நிலையில் இருக்கும். ஆனால், ஓரளவு இலாபத்தைத் தரும். புஞ்சைக் காடுகளினால் நல்ல வருமானம் உண்டு. மொச்சை போன்ற தானியங்களால் நல்ல இலாபம் உண்டு. வடகிழக்கில் வீடு உண்டாகும்.

குருவுடன் சனி, புதன் ஆகியன கூடினால் குடும்பத்தில் நிம்மதி இராது. தாய்க்கும் மனைவிக்கும் முதலில் முரண்பாடும், பின் ஒற்றுமையும் இருக்கும். வில்லங்கங்கள் ஏற்பட்டு, காசு பண விரயத்தால் குடும்பம் ஒற்றுமையாக நடக்க விதியுண்டாகும். சுகம் குறைவாகவே காணப்படும். முதலில் கல்வியில் பட்டம் வாங்கத் தடை ஏற்படும்; பின் தேர்ச்சியுண்டு.

குருவுடன் சூரியன் நீசமாகிக் கூடினால் குடும்பத்தில் ஒற்றுமை குறைவாக இருக்கும். மனைவியால் வில்லங்கமும், குடும்பக் கலகமும், காசு பண விரயமும் ஏற்படும். இதற்குக் குருவுக்கு ஆராதனைப் பிரீதியும், தக்ஷிணாமூர்த்திக்குப் பூஜையும் யந்திர, மந்திர வழிபாடும் செய்தால் நலம் தரும்.

கன்னி இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதி குரு இராசிக்கு 3ஆம் இடத்தில் பகை பெற்று அமர்ந்திருந்தால் மத்திமமான பலன்களே உண்டு. தாயின் பேச்சுக்குக் குடும்பத்தில் மதிப்புக் குறையும்; ஆரோக்கியம் பாதிக்கப்படும். சதா உஷ்ண நோயினால் அவதிப்பட நேரிடும். காடு, வீடு, மனை, இடம், சொத்து, சுகம், கல்வி, விவசாயங்கள் போன்றவற்றால் மத்திம பலன்களே ஏற்படும்.

குருவுடன் ஆட்சி பெற்ற செவ்வாய் கூடினால் சகோதரர்களினால் நன்மையும், உதவியும் உண்டு. தாயினால் காசு, பணம்

விரயமேற்படும். காடுகளில் துவரை, மரம் போன்றவற்றால் இலாபம் ஏற்படும். வீடு, மனை, வாகனம் போன்றவற்றால் அதிகம் விரயமும், பின் இலாபமும் உண்டாகும். கால்நடைகள் அதிகம் இரா. பால் பாக்கியம் குறையும். இருப்புக்குத் தெற்கில் மனை அமைய விதியுண்டு.

குருவுடன் சனி, புதன் ஆகியன கூடினால், மத்திம பலன்களே உண்டு. வீடு, மனை, வாகனம் போன்றவற்றால் வில்லங்கம் விவகாரம் அடிக்கடி ஏற்படும். இளைய சகோதரர்கள் மூலம் பணம் நட்டம் உண்டாகும். கல்வியில் தேர்ச்சியடைய முடியாது. விவசாயங்கள் நல்ல முறையில் நடந்தாலும் இலாபத்தை எதிர்பார்க்க முடியாது.

குருவுடன் இராகு, கேதுகள் உச்சமாகிக் கூடினால் அந்நிய மதத்தினரால் நல் உபசரிப்புக்கிட்டும். கீழ்த்தரமான பெண்களின் சுகத்தை நாடுவர். பெண்களின்மீது உள்ள மோகத்தால் வியாதி ஏற்பட்டு அதனால் பணச்செலவும் ஏற்பட விதியுண்டு. மது, மாது, சூது போன்ற மூன்றுக்குமே அடிமைப்பட நேரிடும். இதற்குக் குரு காரகப் பிரீதியான தக்ஷிணாமூர்த்திக்கு யந்திர, மந்திர பிரீதிகள் செய்ய நற்பலன்கள் உருவாகும்.

## துலாம்
## நான்காம் பாவம்

தங்கள் இராசிக்கு 4ஆம் இடத்ததிபதியாகச் சனீஸ்வர பகவானைப் பெற்ற துலா இராசி அன்பர்களே! 4ஆம் பாவம் என்பது தாய், வீடு, மனை, வாகனம், கல்வி, விவசாயம் போன்ற பலனைக் குறிப்பிடும். சனியானவர் உங்கள் இராசிக்கு எத்தனையாவது இடத்தில் இருக்கின்றார் என்று அறிந்து உங்களின் பலன்களைக் கண்டுகொள்ளவும். சனியானவர் துர்வீடுகளிலும், துர்க்கிரகங்களுடனும் கூடித் துர்பலன்களை 4ஆம் பாவ வழியில் செய்தால், பின் கூறப்பட்டுள்ள சனிபகவான் யந்திர, மந்திரங்களை முறைப்படி பிரயோகித்து மேன்மையான பலன்களை அடைவீராகவும்.

"துலாமதிக்கு நாலோனு மந்தவன்
துலங்கமே லாட்சியுச்சமேற பலனேயாகும்

நலமான புங்கனொடு சுங்கன் சேர
நாட்டமுடன் பெருபலனே செய்வார்தானே!
பலமான கிருஷியொடு தானிய மார்க்கம்
பகரவரும் அயலோக வாகனங்கள்
புலங்களொடு புஞ்சையொடு மனைவகையும்
புணருமோர் பெண்டுவகை சுகமுந்தானே"

சனியானவர் ஆட்சி உச்சமாகிப் புதன், சுக்கிரன் ஆகியவற்றோடு சேர்ந்தால் நல்யோகப் பலனாகும். நாலாம் பாவ வழியில் சிறப்பான பலன்களைக் கொடுப்பார் என நாடி நூல் வாயிலாக அறியப்படுகின்றது.

துலா இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 4ஆம் இடமான மகரத்தில் ஆட்சிப் பலத்துடன் இருந்தால் உத்தம மான பலன்களை அடையலாம். தாய், நல்ல ஆயுள் ஆரோக்கியத் துடன் இருப்பார்கள். தாயினால் நல்ல இலாபமும், அழகிய வீடும், வண்டி, வாகனச் சேர்க்கையும், பால் விருத்தி, காடு, விவசாயம், வியாபாரம், நற்சுகம் போன்றனவும் உண்டாகும்.

ஆட்சி பெற்ற சனியுடன் புதன், சுக்கிரன் ஆகியன கூடினால் நற்பலன்கள் உண்டாகும். பெண்களினால் சுகபோக வாழ்க்கையையும் நிலம், நீச்சு, விவசாயம் போன்ற பாக்கியங்களையும் அடைவார்கள். அலங்கார ஊர்தி மற்றும் கனரக இரும்பு வாகனச் சேர்க்கையும் இருக்கும். கல்வியில் நன்றாகத் தேர்ச்சி இருக்கும். சதா ஸ்திரீ சுகம் உண்டாகும். கட்டடக்கலை, பூமியில் மண் தோண்டுதல் ஆகிய வற்றில் அதிகமான இலாபமும் பண வரவும் உண்டு. இருப்புக்கு மேற்கில் வீடு கட்ட மார்க்கமுண்டு.

ஆட்சி பெற்ற சனியுடன் உச்சம் பெற்ற செவ்வாய் கூடினால் பலன்கள் மத்திமமாகவே இருக்கும். அடிக்கடி தாய்க்கும் மனைவிக்கும் இடையே சண்டை சச்சரவுகள் இருந்துவரும். விவசாயங்கள் நல்ல பலன்களைத் தரும். தன இலாபங்களினால் பிரச்சினைகள் மெத்தவுண்டு. காடுகளினால் நன்மைகள் உண்டு. துவரை, எள்ளு போன்ற தானியங்களினால் இலாபங்கள் உண்டு.

ஆட்சி பெற்ற சனி நீசம் பெற்ற குருவுடன் கூடினால் அதம பலன்கள் நடக்கும். தாய்க்குப் பீடையும், மனக்கிலேசமும், பணவிரயமும் உண்டாகும். இராகு, கேது கூடினால் மத்திமமான

பலன்கள் உண்டாகும். இதற்குச் சனி பிரீதியும் யந்திர, மந்திர பூஜைகளும் செய்தால் நற்பலன்களை அடையலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.

துலா இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 5ஆம் இடமான கும்பத்தில் ஆட்சி பெற்றிருப்பதால் நல்ல பலன்கள் உண்டாகும். தாயின் உடல் நலம் நன்றாய் இருக்கும். தாயும் பிள்ளையும் அன்புடன் இருப்பார்கள். பூர்வ புண்ணியச் சொத்துகள் ஆஸ்திகள், தாய்மாமன் மூலம் நல்ல வருவாய், காடு, மனை, வீடு, விவசாயம் போன்றவற்றால் நல்ல இலாபம் ஆகியன கிடைக்கும்.

சனியுடன் சுக்கிரனும் புதனும் கூடினால் கல்வியில் பண விரயமும், அதற்குப் பின் தேர்ச்சியும் உண்டாகும். பிள்ளைகளால் நல்ல இலாபமும் உதவியும் இருக்கும். ஆனால், புத்திரர்கள் முன் கோபிகளாகவும், மந்தபுத்தி உள்ளவர்களாகவும் இருப்பார்கள். காடுகளில் புஞ்சைப்பயிர்களான மொச்சை, பச்சைப்பயறு போன்றவை இலாபம் தரும். இருப்புக்கு மேற்கில் வீடமைய விதியுண்டு. தோட்டம், துரவுகளால் நல்ல இலாபங்கள் உண்டாம்.

சனியுடன் சூரியன், செவ்வாய், குரு போன்ற கிரகங்கள் கூடினால் கணவன் மனைவியரிடையே அடிக்கடி சண்டை சச்சரவுகள், தம்பி களால் பிரச்சினைகள், பூர்விகச் சொத்துகளால் பாகப்பிரிவினை ஆகியன ஏற்படும். வில்லங்கமும், மனஸ்தாபங்களும் உண்டாகும். கல்வி, தடைப்படும். சுகங்கள் அற்பமாகவே காணப்படும். சனி தனித் திருந்தால் நல்ல பலன்கள் உண்டாகும். இராகு கேதுகளிருந்தால், மத்திமமான பலன்கள் உண்டாகும். எருமை மாடுகள் மற்றும் பாம்புகள் தோட்டங்களிலும் வீடுகளிலும் வாசம் செய்ய விதி உண்டாம். இதற்குப் பரிகாரமாகச் சனிக்குப் பிரீதியும், யந்திர, மந்திர பூஜையும் செய்தால் நல்ல பலன்கள் உண்டாகும்.

துலா இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 6ஆம் இடமான மீனத்திலிருந்தால் மத்திம பலன்களே உண்டாகும். தாய்க்கு ரோக பீடையும், வாத ரோகங்களும் உண்டாகும். வீடு, மனை, வாகனங்களினால் வில்லங்கம், விவகாரம், மனஸ்தாபங்கள் ஆகியன ஏற்படும். உங்களுக்கும் வாதநோய்களினால் சிரமமும் கஷ்டமும் ஏற்படும். விவசாயங்கள் மந்த நிலையிலேயே இருக்கும்.

சனியுடன் குரு ஆட்சி பெற்றிருந்தால் வாகன யோகம் தடைப் படும். கனரக இரும்பு வாகனங்களினால் நட்டமும், வில்லங்கங்களும் ஏற்படும். புத்திரர்களால் விவகாரம், புத்தி மங்குதல் ஆகியன உண்டாகும். இளைய சகோதரர்களால் நட்டங்களும், விவசாய, வியாபார நட்டங்களும் உண்டாகும். குருவும் சனியும் சேர்ந் திருப்பதால் 'குரு சண்டாள யோகம்' உண்டாகும். இதனால் அவயோகம் உண்டாகும்.

சனியுடன் சுக்கிரன் உச்சம் பெற்றுக் கூடினால் வாகன சுகமும், இளம் பெண்களினால் நற்சுகமும், அலங்கார மனைகள், வீடுகள் ஆகியவற்றால் நல்ல சுகமும் தாய்க்கு நல்ல சுகமும் உண்டாகும். கனரக வாகனங்களும், கால்நடைச் செல்வங்களும் நிறைந்து காணப்படும். அலங்கார ஊர்தி யோகமும் உண்டு.

சனியுடன் புதன் நீசம் பெற்றுக் கூடினால் அதம பலன்கள் நடக்கும். கல்வி, தடைப்படும். வாகனங்கள் பழுதுபடும். சொத்து, வீடு, மனை, ஆஸ்தி ஆகியன விரயமாகும். தாய்க்குப் பீடையும் உண்டாகும். சனியுடன் மற்ற கிரகங்களான ராகு கேதுகள் கூடினால் மத்திம பலன்களையும், செவ்வாய், சூரியன் ஆகியன கூடினால் மத்திம பலன்களையும் கொடுப்பார்கள். இதற்குச் சனீஸ்வரனுக்குப் பிரீதியும், எந்திர, மந்திர பூஜைகளும் செய்தால் நன்மைகளை அடையலாம் என்று நாடி நூல் கூறுகிறது.

துலா இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 7ஆம் இடத்தில் நீசமாகி இருப்பதால் அதம பலன்களே நடக்கும். தாய்க்குக் கண்டங்கள் அடிக்கடி வந்து மாறும். வீடு, மனை, வாகனங்கள் போன்றவற்றை இழந்து நிற்க வேண்டியதுவரும். கல்வி தடைப்படும். விவசாயங்கள் செழிப்பாக இரா. வியாபாரத்தில் மந்தமான சூழ்நிலை உருவாகும்.

நீசம் பெற்ற சனியுடன் உச்சம் பெற்ற சூரியன் கூடினால், பின் யோகப் பலனும், முன் நட்டமும் ஏற்படும். களத்திரத் தொல்லைகள், சுகங்கள் ஆகியவற்றில் குறைவு உண்டாகும். அடிக்கடி சண்டை சச்சரவுகள் வரும். மூத்த சகோதரர்களால் உதவியும் கிடைக்கும். மனைவிக்கு அடிக்கடி சுகக்குறைவு ஏற்படும்.

சனியுடன் செவ்வாய் கூடினால் ஆட்சி பெற்ற கிரகமானபடியால் முன் நட்டங்களும், பின் இலாபங்களும் உண்டாகும். மனைவியினால் நிலங்கள் சீர்திருத்தப்பட்டு, மனைகள் வாங்கப்படும். மனைவியின் ஆதிக்கம் 4ஆம் பாவ வழியில் அதிகம் ஏற்படும்.

சனி ஆட்சி உச்சக் கிரகங்களுடன் கூடினால், முன் நட்டங்களையும், பின் யோகங்களையும், நட்புக் கிரகங்களுடன் கூடினால் மத்திம பலன்களையும் கொடுப்பார். களத்திர பலவீனமும் ஏற்படும். இதனால் சுகங்கள் குறைவுபடும். மலைக்காடுகளில் உண்டாகும் தானியங்கள், கிழங்கு வகைகள் ஆகியவற்றினால் நன்மையுண்டாகும். சொந்த பூமிகள் இருந்தாலும் மந்த நிலையே ஏற்படும். இருப்புக்குத் தெற்கில் மனை கட்ட விதியும், கட்டி இருந்தால் அது மந்தமாகவும், பாழடைந்தும் ஏதாவது ஒரு காரணத்தினால் தடைப்படும்.

சனி நீசமானால் பலன் குறைவு. சுபர்களுடனோ, ஆட்சிக் கிரகங்களுடனோ கூடி இருந்தால் சில துர்பலன்களைத் தவிர்க் கலாம். சனிக்குத் தக்க பிரீதிகள் செய்வதன் மூலம் உயர்பலனை அடையலாமென்று நாடி வாயிலாக அறியப்படுகின்றது.

துலா இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 8ஆம் இடமான ரிஷபத்திலிருந்தால், சனி நட்புப் பெற்றிருப்பதால் நல்ல பலன்களைச் செய்வார். தாய்க்கு ஆயுளும், ஆரோக்கிய விருத்தியும் உண்டாகும். உங்கள் ஆயுளையும் விருத்தி அடையச் செய்வார். வீடு, மனை, வாகனம், கல்வி, விவசாயம் போன்றவை நல்ல சிறப்பானவையாகவும், இலாபம் தரக்கூடியவையாகவும் இருக்கும்.

ரிஷபச்சனியுடன் ஆட்சி பெற்ற சுக்கிரன் கூடினால் மாடி மனைகள் இருந்தாலும், அவை பழுது ஏற்பட வாய்ப்புண்டு. காடுகள், கழனிகள் ஆகியன அபரிமிதமான விளைச்சலைத் தந்தாலும் இலபாங்கள் குறைவு. மொச்சை, எள்ளு போன்ற புன்செய்ப் பயிர்களால் உங்களுக்கு இலாபம் கிடைக்கும். இவர்களுடன் புதன் சேர்ந்தால் முதலில் கல்வி தடைப்பட்டு, பின் தேர்ச்சியும் உண்டு. தந்தையும் தாயும் நல்ல ஒற்றுமையுடன் இருப்பார்கள்.

சனியுடன் குரு கூடினால் மனையால் வில்லங்கம் ஏற்படும். விவசாயத்தில் நஷ்டமும் ஏற்படும். சனியுடன் செவ்வாய், சூரியன் ஆகியன கூடினால் மறைந்த பலனுடன் கூடிய சனி நட்புடனிருப்பதால் எள்ளு, எருமை, இரும்பு வாகனங்கள் ஆகியவை நல்ல செழிப்புடன் விளங்கும். செம்மண் பூமி, புஞ்சைக் காடுகள் ஆகியவற்றால் நல்ல இலாபம் ஏற்படும்.

சனியுடன் இராகு கூடினால் நல்ல பலனைத் தருவார். கேது கூடினால் மயக்கம், தலை சுற்றல் போன்ற வியாதிகளையும், இரத்த சம்பந்தமான நோய்களையும், மர்ம நோய்களையும் உண்டாக்கும். இதற்குக் குருவுக்குப் பிரீதியும் தக்ஷிணாமூர்த்திக்குப் பிரீதிகளும் பூஜை புனஸ்காரமும் செய்தால் நல்ல பலன்களைப் பெறலாம்.

துலா இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியாக உள்ள சனி இராசிக்கு 9ஆம் இடமான மிதுனத்தில் நட்புடனிருப்பதால் நல்ல பலன்களைச் செய்வார். தாய்க்கு நல்ல ஆயுள், ஆரோக்கியம் ஆகியன காணப்படும். தந்தையும் தாயும் ஒற்றுமையுடன் இருப்பார்கள். நிலபுலன்கள், காடு கழனிகள், வாகனம், பால் பாக்கியம் முதலியவை நிறைந்து காணப்படும். பெரியவர்களிடம் பக்தியுடனும் இருப்பார்கள்.

சனியுடன் புதன் ஆட்சி பெற்றுக் கூடினால் தகப்பனாரின் பாசத்துக்கு உரியவராகவும், பெரியோர்களிடம் மிகுந்த மரியாதை யுள்ளவராகவும் தெய்விக வழிபாடுகளில் சிறந்தவராகவும் இருப்பார் கள். கல்வியில் பட்டம் பெறுவார்கள். பிதுர்பாக்கிய சொத்துகள் மூலம் இலாபங்கள் உண்டு. கணிதக்கல்வி உண்டாகும்.

சனியுடன் செவ்வாய், சூரியன் ஆகியன கூடியிருந்தால் வாகனங்களால் நட்டங்களும் விரயங்களும் ஏற்படும். பால் பாக்கியம் குறைவுபடும். தனக்கு வடக்கில் வீடு அமைய யோகமுண்டு. கட்டடங்கள் கட்டினாலும் குடி இருக்கும் அமைப்பு இராது.

சனியுடன் குரு கூடினால் புத்திரர்களினால் தொல்லைகளும், வழக்குகளும், விவகாரங்களும் பிதுர்பாக்கியச் சொத்துகளின் மூலம் ஏற்படும். விவசாயம் மந்தமாகும். கடலைக் காடுகளில் நல்ல விளைச்சல் இருக்கும்.

சனியுடன் இராகு, கேது கூடினால் மத்திமமான பலன்களே உண்டாகும். தந்தைக்குக் கண்டம் ஏற்படும். பிதுர் பாக்கியத்தை அழிக்கும். இதற்குச் சனீஸ்வரனுக்குப் பிரீதியும், எந்திர, மந்திர பூஜைகளும் செய்தால் நற்பலன்களை அடையலாம் என்று சந்திரநாடி கூறுகிறது.

துலா இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 10ஆம் இடமான கடகத்தில் பகை பெற்றிருப்பதால் மத்திமமான பலன்களே ஏற்படும். தாய்க்குச் சரீர பீடைகள் கண்டத்தைக் கொடுக்கும். வீடு, பழுது ஏற்படும் நிலையிலிருக்கும். மனைகள், வாகனங்கள் ஆகியன எல்லாமே சரிவர இரா. 10ஆம் இடத்தில் சனி இருப்பதால் ஜீவன பங்கத்தை ஏற்படுத்தும். கல்வி, தடைப்படும். விவசாயம் இலாபத்தைக் கொடுத்தாலும், விளைச்சல் அதிகமாக இராது.

சனியுடன் உச்சம் பெற்ற குரு கூடினால் இளைய சகோதரர்களாலும் எதிரிகளாலும் தொல்லைகளும் பாகப்பிரிவினை யால் மனஸ்தாபமும், மனச்சஞ்சலமும் இருக்கும். காடுகளில் விளைச்சல் அதிகம் இராது. வாத ரோக வியாதி உண்டாகும். பெண்களினால் சுகமும் அதனால் வியாதிகளும் வில்லங்கமும் மனஸ்தாபங்களும் ஏற்படும்.

சனி, நீசம் பெற்ற செவ்வாயுடன் கூடினால் அவ்வளவாக நல்ல பலன்களைச் செய்யமாட்டார். முன்னுக்குப் பின் முரணான பலன்கள் உண்டாகும். நிலம், நீச்சு போன்றவற்றில் நல்ல விளைச்சல் இராது. செம்மண் பூமிகள் வறண்டு காணப்படும். வீடுகள், மனைகள், கட்டடங்கள் ஆகியவற்றால் நஷ்டமும், பணச்செலவும் ஏற்படும்.

சனியுடன் புதன், சுக்கிரன் ஆகியன கூடினால் வாகனத்தால் நட்டம் ஏற்படும். கனரக வாகனங்களில் அடிக்கடி பழுது ஏற்படும். பெண்களினால் நோய் நொடிகளும் உண்டாகும். புதன் நட்புப் பெற்றுக் கூடி இருப்பதால், ஓரளவு தானிய இலாபமும், நன்மையும், வாகன சுகமும் ஏற்படும். இதற்குச் சனீஸ்வரருக்குப் பிரீதியும், யந்திர, மந்திர பூஜைகளும் செய்தால் நன்மையான பலன்கள் உண்டாகும்.

துலா இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 11ஆம் இடமான சிம்மத்தில் இருந்தால் நல்ல பலன்களைச்

செய்யமாட்டார்; மத்திமமான பலன்களைத்தான் செய்வார், வீடு, மனை, வாகனம், கல்வி, விவசாயம் போன்றவற்றால் கணிசமான இலாபம் அடைந்தாலும், அந்த இலாபத்தால் பலனை அடைய முடியாது. தாய்க்குப் பீடை உண்டாகும்.

சனியுடன் சூரியன் சேர்ந்திருந்தால் மத்திமமான பலன்களை உண்டாக்குவார். தாய், தந்தையர் ஒற்றுமையுடன் இருக்க மாட்டார்கள். காடுகளினால் நன்மையான பலன்களை அடையலாம் விவசாய மந்தம் உண்டாகும். இருப்புக்குக் கிழக்கில் மனை அமை விதியுண்டு. மூத்த சகோதரர்களால் பிரச்சினைகள், மனஸ்தாப ஆகியன வந்து மாறும்.

சனியுடன் குரு நட்புடன் இருந்தால் இலாபம், அதனால் சுக பதவி சுகம், பெண்ணால் சுகம், வாகன சுகம் ஆகிய சுகங்க ஏற்படும். சுக்கிரன் சேர்ந்தால் வாழ்க்கையில் இவர் சுகியா வாழ்வார். புதன் சேர்ந்திருந்தால் கல்வியில் பட்டம் பெறுவார் பந்துக்களின் ஆதரவு உண்டாகும்.

சனியுடன் செவ்வாய் சேர்ந்தால் காடுகளினால் நன்மையான பலன்களும், கால்நடைகளால் இலாபங்களும் கிடைக்கும். பால் பாக்கியம் குறைந்துகொண்டே வரும். துவரை, எள்ளு போன்ற தானியங்களினால் இலாபம் கிடைக்கும். செம்மண் பூமி நல்ல விளைச்சலைக் கொடுக்கும். சனியுடன் இராகு கேதுகள் கூடினால் அதம பலன்கள் உண்டாகும். இதற்குச் சனீஸ்வரருக்குப் பிரீதியும், யந்திர, மந்திர பிரீதியும் செய்தால் நல்ல பலன்களை அடையலாம் என்று சந்திரநாடி கூறுகிறது.

துலா இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 12ஆம் இடமான கன்னியில் நட்புப் பெற்றிருப்பதால் மத்திமமான பலன்களை ஏற்படுத்தும். தாய்க்கு நல்ல ஆரோக்கியமும் ஆயுளும் இருந்தாலும், அடிக்கடி வாத ரோகங்களால் அவதிப்படுவார். வீடு, மனை, வாகனங்கள், கல்வி, விவசாயம், சொத்துகள் மற்றும் சுகங்கள் ஆகியவை ஓரளவு சுமாரான பலன்களைத் தரும்.

சனியுடன் ஆட்சி உச்சம் பெற்ற புதன் கூடினால் கல்வியில் கஷ்டப்பட்டுப் பட்டம் வாங்கும் நிலை உருவாகும். வீடு, மனை, கட்டடங்கள், வாகனங்கள் போன்றவற்றால் விரயமும், செலவுகளும்

அதிகம் ஏற்படும். விவசாய அபிவிருத்திக்கு அதிகம் செலவு செய்து பலனை அடையமுடியும். பால் பாக்கியம் முன்பு குறைந்தும், பின்பு நிறைந்தும் இருக்கும்.

சனியுடன் சுக்கிரன் நீசமாகிப் புதனும் நீசமாகிக் கூடினால் உங்களுக்கு நீசபங்க ராஜயோகம் ஏற்படும். புது மனைகள், கட்ட டங்கள் ஆகியவற்றைக் கடன்பட்டே கட்ட வேண்டியது இருக்கும். வாகனங்கள் அடிக்கடி பழுதுபட்டுக்கொண்டே இருக்கும். விவசாயம், நன்மையைத் தராது. கால்நடைகள் நோய் நொடியுற்று அதனால் விரயமுண்டாகும். ராஜயோகம் நிலைப்பதில்லை.

சனியுடன் சூரியன் கூடினால் வரக்கூடிய இலாபங்களும் விரயமாகும்; நிலைத்து நிற்காது. மூத்த சகோதரரால் வில்லங்கம் உண்டாகும். அவருக்குக் கண்டமுண்டு. சனியுடன் இராகு கேதுக்கள், செவ்வாய் ஆகியன கூடினால் நற்பலன்கள் ஏற்படு வதில்லை. இராகு இருப்பதால் மது, மாது மயக்கங்கள் ஏற்படும். இதற்குச் சனீஸ்வரருக்குப் பிரீதியும், யந்திர, மந்திர பூஜைகளும் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

துலா இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சனி இராசியிலே உச்சம் பெற்று இருந்தால், உத்தமமான பலன்கள் ஏற்படும். தாய் தன் குடும்பத்தை நிருவகிக்கும் பொறுப்பில் இருப்பார். வீடு, மனை, வாகனங்கள், கல்வி, விவசாயம், சொத்து, சுகம், வியாபாரம் போன்றவற்றால் நல்ல இலாபங்களை அடைய விதியுண்டு.

துலாத்தில் உச்சம் பெற்ற சனியுடன் ஆட்சி பெற்ற சுக்கிரன் கூடினால் வீடு, மனை, வாகனங்கள் ஆகியன நிறைந்தவர்களாகவும், கனரக இரும்பு வாகனங்களுக்கு அதிபதியாகவும், அலங்கார ஊர்தி மற்றும் பேருந்துகளுக்கும் அதிபதியாகவும் இருப்பார்கள். கால் நடைச்செல்வங்கள், எருமைகள் அபிவிருத்தி, விவசாயம், நிலம், நீச்சு போன்றவற்றினால் அதிக இலாபமுண்டாகும். அதனால் சிவச்செல்வம் நிரம்பியவராகவும் காணப்படுவார். காடு கழனிகள் சிறப்புறும். பெரியதொரு விவசாயப் பண்ணைக்கு அதிபதியாக ஆகும் நிலையும் ஏற்படும். தாயினால் அதிக நன்மை கிட்டும். அவ்வளவு நிருவாகத்தையும் தாமே நிர்வகிக்கும் திறமையுடன் தாய் இருப்பார்.

துலாத்தில் நீசம் பெற்ற சூரியனுடன் சனி கூடினால் மூத்த சகோதரர் இருந்தாலும், அவர் இல்லை என்ற விதத்திலே இருப்பார். அவரால் சிறு உதவிகூடக் கிடைக்காது. மண், பொன், பொருள், ஆபரணாதிகள் ஆகியவற்றை இழக்கும் நிலை ஏற்பட்டு, பின் சேரும் நிலை உண்டாகும். தனக்கு மேற்கில் வீடு அமையும் யோகம் உண்டாகும். சூரியன் நீசத்தால் கடன் கப்பு நொம்பலங்கள் வந்து சேரும்.

சனியுடன் குரு, செவ்வாய் ஆகியன சேர்ந்தால் ஓரளவு மத்திம பலனை எதிர்பார்க்கலாம். மற்ற கிரகங்களான இராகு கேதுகள் கூடினால் அதம பலன்களை உண்டு பண்ணும். இதற்குச் சனீஸ்வரருக்குப் பிரீதிகளும், யந்திர, மந்திர பூஜைகளும் செய்ய நன்மையான பலன்களை அடையலாம் என்று கூறுகிறது.

துலா இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 2ஆம் இடத்தில் பகை பெற்றிருப்பதால், மத்திம பலன்களே ஏற்படும். தாய்க்குப் பீடைகளும், நொம்பலங்களும் இருந்தாலும், குடும்பத்தை அவரே நிர்வகிப்பவராய் இருப்பார். வீடு, மனை, வாகனங்கள், சொத்து, சுகம் போன்றவற்றில் அவ்வளவாக இலாபங்களை எதிர்பார்க்க முடியாது. விவசாயம் சீரான பலனைத் தரும். காடு, கழனிகள், தோட்டங்கள் ஆகியன நட்டத்தையே ஏற்படுத்தும்.

சனியுடன் ஆட்சி பெற்ற செவ்வாய் கூடினால் தனச் சேர்க்கையும், வீடு, மனை, தாய், கட்டடங்கள், விவசாயங்கள் போன்றவற்றால் அதிக நன்மையும் உண்டாம். விவசாயத்தினால் நன்மையும், செம்மண் பூமியால் அதிக இலாபமும் உண்டாகும். சிவப்பு நிறத் தானியங்களால் இலாபமும், துவரை, எள்ளு போன்ற பயிர்கள் மூலம் நல்ல பலன்களையும் அடையலாம். தமக்குத் தெற்கில் வீடு, தோட்டம் ஆகியன அமைய விதியுண்டு.

சனியுடன் குரு கூடினால், இளைய சகோதரர்களினால் பகையும், மனஸ்தாபமும் உண்டாகும். பொன், பொருள், ஆபரணங்கள் ஆகியவற்றை இழக்க நேரிடும். புதன் கூடினால் கல்வியில் பட்டம் பெறும் நிலையும் கணிதப் பொறி படிப்பு பயில வேண்டிய நிலையும் ஏற்படும். பச்சைப் பயறு தானியங்கள் நல்ல பலன்களைத் தரும்.

சனியுடன் உச்சம் பெற்ற இராகு கூடினால் மது மாமிசச் சுவையைச் சுவைப்பதில் பிரியம் உள்ளவராக இருப்பார். கேது

கூடினால் முற்பகுதியில் மத்திம பலன்களையும், பின் அதம பலன்களையும் கொடுப்பார். இதற்குச் சனீஸ்வரருக்குப் பிரீதியும், யந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் நற்பலன்களை அடையலாம் என்று நாடி நூல் கூறுகிறது.

துலா இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 3ஆம் இடமான தனுர் இராசியில் இருந்தால், நட்புடன் இருப்பதால் மத்திம பலன்களை உண்டு செய்வார். தாய் நல்ல குணங்களுடன் பொறுமைசாலியாய் இருப்பார். வீடு, மனை, வாகனங்கள், விவசாயம், வியாபாரம், சொத்து, சுகம் ஆகியவையும் மத்திம பலன்களைச் செய்யும். கல்வியில் மிகவும் கஷ்டப்பட்டே பட்டம் பெறும் நிலை உண்டாகும்.

சனியுடன் ஆட்சி பெற்ற குரு கூடினால் தாயினால் நன்மையும், இளைய சகோதரரால் உதவியும் பொன், ஆபரணச் சேர்க்கையும், பொருள் சேர்க்கையும் உண்டாகும். காடுகளினால் நல்ல மகசூல் ஏற்பட்டு நல்ல இலாபத்தை அடையக்கூடிய நிலை உருவாகும். வாழ்வின் பிற்பகுதியில் எதிரிகளினாலும், இளைய சகோதரர்களாலும், வில்லங்கம், வழக்கு, மனஸ்தாபம் ஆகியவை ஏற்படும்.

சனியுடன் செவ்வாய், சூரியன் ஆகியன கூட நன்மையான பலன்களையும், பிற்பகுதியில் பொருளிழப்பையும் ஏற்படுத்துவார். கல்வியில் பட்டம் பெறுவதில் தடை ஏற்படும். விவசாயம், நில புலன்கள் ஆகியன நன்மைகளைத் தாரா. காடுகளுள் செம்மண் பூமி நன்மையான பலனைத் தரும். துவரை, உளுந்து, எள்ளு போன்ற தானியங்கள் நல்ல இலாபங்களைத் தரும்.

சனியுடன் இராகு கேதுகள் கூடினால் வீடு, மனை, வாகனங்கள் போன்றவை நஷ்டத்தையும், கல்வியில் தடையும் வாகனப்பழுதும் ஏற்பட வாய்ப்புண்டு. மேலும் தானியங்களுள் உளுந்து, கொள்ளு ஆகியன இலாபத்தைத் தரும். பால் பாக்கியம் சேராது. இதற்குச் சனீஸ்வரருக்கு அர்ச்சனையும், யந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும் என்று சந்திரநாடி கூறுகிறது.

# விருச்சிகம்
## நான்காம் பாவம்

விருச்சிக இராசிக்கு 4ஆம் இடத்ததிபதியாக சனீஸ்வர பகவானைப் பெற்று, சனியானவர் சுப இடங்களில் நின்றாலும், நல்ல கிரகங்களுடன் கூடினாலும் உயர்யோக பலன்களைக் கொடுப்பார். 4ஆம் பாவமென்பது தாய், மனை, வாகனம், வண்டி, சுகம் போன்ற பலன்களைக் குறிப்பிடுவதாகும். மேஷம் முதல் மீனம் வரை சனியானவர் உங்கள் இராசிக்கு எத்தனையாவது இடத்தில் இருக்கின்றார் என்று அறிந்து, தங்களின் பலன்களை அறிந்து கொள்ளவும். சனியானவர் துர்பலன்களைக் கொடுக்க நேர்ந்தால் அவருக்கு யந்திர மந்திர பிரீதிகள் செய்வதன் மூலம் உயர்பலனை அடையலாம் என்று நாடி நூல் வாயிலாக அறியப்படுகின்றது.

"மதிக்குத்தான் நாலோனாய் மந்தன்வர
மறைவில்லாக் கோணகேந்திர மேறிடினும்
பதியுடனே யாட்சிநல மறிந்திடினும்
பகவரும் வண்டிமுதல் வாகனயோகம்
கதியுடனே காரியவர் கூடினாலும்
காட்டலாம் பலனதும் மத்திமம்தானே
விதியொடுதான் மதிமேலாய் கதிநோக்கி
வழுத்தவரும் பிருதிமேல் நலம்பாரே"

சனியானவர் இராசிக்கு மறைவில்லாமல், கோண கேந்திரங்களில் இருந்தாலும் தன்னுடைய வீட்டில் ஆட்சியானாலும் பலன் நல்ல படியாகத் தருவார். சூரியனோடு கூடினாலும், சிம்ம வீட்டில் இருந் தாலும் மத்திம்மான பலன்களே உண்டென்று கூறப்படுகின்றது. விருச்சிக இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 4ஆம் இடத்தில் ஆட்சி பெற்றிருந்தால், தாய்க்குத் தேக சௌக்கியம், ஆயுள் போன்ற சுகங்கள் கிடைக்கும். வீடு, மனை, வாகனங்கள், கல்வியில் பட்டம் ஆகியன வாங்க விதியுண்டு. நிலம், ;ச்சு, விவசாயம், காடு, கழனி, தோட்டம் போன்றவற்றால் நல்ல லாபமும் கிடைக்கும். வீடுகள், கட்டடங்கள், மாடி, மனை, வாகனங்கள் போன்றவை கிடைக்க விதியுண்டு.

விருச்சிக இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சனியுடன் சுக்கிரன், புதன் ஆகியோர் கூடினால், நூதனத் தொழில் தொடர்பு களால் நன்மையுண்டாகும். அலங்கார மனையும் மாளிகையும், அலங்காரமான ஊர்தியில் போகக்கூடிய வாகன சுகமும் வாய்க்கும். பெண் சுகம் உண்டாகும். கனரகத் தொழில் எந்திரங்கள், விவசாயப் பண்ணைகள் போன்றவை நல்ல இலாபத்தைக் கொடுக்கக்கூடியன வாய் இருக்கும். கால்நடை வர்க்கங்களில் எருமை மாடு, செம்மறி ஆடு போன்றவை நன்கு விருத்தியாகும். கல்வி, நூதனத் தொழில் ஆகியவற்றில் பட்டமும் புகழும் ஏற்படும். இருப்புக்கு மேற்கில் வீடமையும்.

சனியுடன் சூரியன், குரு ஆகியவர்கள் கூடினால் தாய்க்குப் பூர்வ புண்ணிய ஆஸ்திகளால் நன்மையும் தொழிலில் மேன்மையும் பிற்பகுதியில்தான் உண்டு. முற்பகுதியில் கஷ்ட ஜீவனத்தையே கொடுக்கும் நிலையிலிருக்கும். பொன் ஆபரணச் சேர்க்கை, பொருள் சேர்க்கை ஆகியவற்றால் இலாபங்கள் கிடைக்க விதி யுண்டு. செவ்வாய் கூடினால் தாய்க்கு அனல், உஷ்ண சம்பந்தமான பீடைகள் ஏற்பட வாய்ப்புண்டு.

சனியுடன் இராகு கேது கூடினால் விவசாயத்தில் நட்டமே உண்டாகும். உளுந்து, கொள்ளு போன்ற தானியங்களால் நன்மைப் பலன் உண்டாகும் என்று சந்திரநாடி கூறுகிறது. இதற்குச் சனீஸ் வரருக்குப் பிரீதிகளும் யந்திர, மந்திர பூஜைகளும் செய்வதால் நன்மையான பலன்களை அடையலாம்.

விருச்சிக இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 5ஆம் இடமான மீனத்தில் நட்புடன் அமர்ந்திருப்பதால் மத்திமமான பலன்கள் நடக்கும். தாய்க்கு நல்ல தேக சௌக்கியம் உண்டாகும். வீடு, மனை, வாகனங்கள் போன்றவற்றால் நல்ல இலாபம் உண்டா கும். கால்நடை வாகனங்கள், நிலபுலம், காடு கழனிகள், விவசாயம் ஆகியன ஓரளவு நன்மையைத் தரும்.

சனியுடன் உச்சம் பெற்ற சுக்கிரன் கூடினால் தாய்க்கு ஆயுள், சௌகரியம், சம்பத்து ஆகியவற்றை உடையவர்களாய் இருப்பார்கள். மனைவியால் அதிக இலாபமும் பொன் ஆபரணச் சேர்க்கைகளும், வாகன சுகங்களும், அலங்கார ஊர்தியோகமும், வைரமணி,

முத்தாபரணம் போன்ற அணிகலன்கள் சேர்க்கையும் உண்டாகும். கனரக வாகனங்களினால் நன்மையான பலன் உண்டாகும்.

சனியுடன் நீசம் பெற்ற புதன் கூடினால், பட்டம் வாங்குவதில் தடை ஏற்படும். சௌக்கியக் குறைகளும், வாயுக் கோளாறினால் அவதியும், பொருள் செலவும் ஏற்படும். விவசாயம் நட்டத்தை ஏற்படுத்தும். பால்பாக்கியம் குறையும். வீடு, மனை, வாகனங்களால் நட்டம் ஏற்படும். தோட்டம், காடு, கழனி போன்றவற்றால் நட்டமும் செலவும் ஏற்படும். இவர்களோடு குரு ஆட்சி பெற்றுக் கூடினால் நீசபங்க ராஜயோகம் ஏற்படும். முன்பாதி கஷ்டத்தையும், பின்பாதி இலாபகரமான ஆடம்பரமான வாழ்க்கையையும் ஏற்படுத்தும்.

சனியுடன் இராகு கேதுகள் கூடினால் மத்திமமான பலன்களை உண்டு செய்யும். 4ஆம் பாவப் பலன்களால் கஷ்டம் ஏற்படும். இதற்குச் சனிக்குப் பிரீதிகளும், ஆராதனைகளும் யந்திர, மந்திர பிரீதிகளும் பூஜைகளும் செய்தால் நல்ல பலன்களை அடையலாம் என்று சந்திரநாடி கூறுகிறது.

விருச்சிக இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 6ஆம் இடமான மேஷத்தில் மறைந்து நீசமுற்று இருப்பதால், மத்திமமான பலன்களே நடக்கும். தாய், நோய் நொடியினால் அவஸ்தைப்படுவார்; வாதரோகங்களும் அனல் சம்பந்தமான பீடைகளும் உண்டாகும். வீடு, நிலம், மனை, சொத்து, சுகம், கல்வி போன்றவை எல்லாமே நஷ்ட பலனைக் கொடுக்கும். விவசாயங்கள் கைவிட்டுப் போகும் நிலை உண்டாகும்.

நீசம் பெற்ற சனியுடன் செவ்வாய் ஆட்சி பெற்றுச் சூரியன் உச்சம் பெற்றுக் கூடினால், தாய்க்கு உஷ்ண ரோகப் பீடைகளும், கண்டங்களும் அடிக்கடி வந்து மாறும். பால் பாக்கியங்கள் குறைவுபடும். சொந்த வீடுகள் பல இருந்தாலும், அந்நிய மனையில் போய் வாசம் செய்ய விதியுண்டாகும். தொழிலில் நஷ்டங்களும், கஷ்டங்களும் வரும். காடு, கழனிகள் நஷ்டத்தைக் கொடுக்கும். அடிக்கடி தாய்க்குக் கண்டங்கள் வந்து மாறும்.

நீசம் பெற்ற சனியுடன் குரு கூடினால் பொன் ஆபரணச் சேர்க்கைகளால் பணம் செலவாகிக் கடனுக்கு ஆளாக நேரிடும். தங்கம், வெள்ளி போன்ற அணிகலன்கள் உங்கள் கைவிட்டுப்

போகும் நிலை உண்டாகும். புதன் கூடினால் விவசாயத்தில் ஓரளவு நன்மை உண்டாகும். எள்ளு, பச்சைப் பயறு போன்ற தானியங்கள் நல்விளைச்சலைத் தரும். சனியுடன் இராகு கூடினால், பெண்களி னால் வியாதிகளும் பீடைகளும் உண்டாகும். மது, மாது போன்ற மயக்க வஸ்துகளை அனுபவிக்க வேண்டிவரும்.

நீசம் பெற்ற சனியுடன் செவ்வாய் ஆட்சி பெற்றுச் சூரியன் உச்சம் பெற்றுக் கூடினால் நீசபங்க ராஜயோகம் ஏற்படும். அவை நிலைத்து நிற்கா. இதற்குச் சனீஸ்வரருக்கு அர்ச்சனை ஆராதனைகளும் யந்திர, மந்திர பிரீதியும் செய்தால் நல்ல பலன்களை அடையலாம்.

விருச்சிக இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 7ஆம் இடத்தில் நட்புடனிருப்பதால் நல்ல பலன்கள் உண்டாகும். தாய்க்குத் திரேக மேன்மைகளும், நற்சுகமும் கிடைக்கும். வீடு, மனை, வாகனங்கள் நல்ல நிலையில் இருக்கும். சொந்த வீட்டில் நிறைந்த பாக்கியங்களுடன் சௌக்கியத்துடன் வாழ்பவர்களாய் இருப்பார்கள். விவசாயம் நல்ல முறையில் இருக்கும். காடு, கழனிகள், தோட்டங்கள், கல்வி, சொத்து, சுகம், மனைவியினால் தனம், ஆடை, ஆபரணம், மனைவியின் மூலமாக அசையாச் சொத்து ஆகியவற்றை அடையக்கூடிய பாக்கியமுண்டாகும். இருப்புக்குத் தென்கிழக்கில் வீடு அமையும்.

சனியுடன் சுக்கிரன் ஆட்சி பெற்றுக் கூடினால் தாய்க்குத் தேக சௌக்கியம், ஆயுள் ஆகியன உண்டாம். வரக்கூடிய மனைவியினால் பொன், பொருள், பூஷணாதி, அசையாச் சொத்துகள் ஆகியவை உண்டாம். மண், பெண், பொன் ஆகியவற்றின் மூலம் அதிக நன்மை யும் இலாபமும் நற்சுகமும் கிடைக்கும். அலங்கார மனைகள் பல இருக்கும். தோட்டம், காடு, கழனி போன்றவை மனைவியினாலும் தாயினாலும் நிர்வகிக்கப்படும். தாயும் மனைவியும் ஒற்றுமையுடன் இருப்பார்கள். விவசாயப் பண்ணைகளும், கனரக வாகனங்களும் அலங்கார வாகனமும் அதனால் நற்சுகமும் கிடைக்கும்.

சனியுடன் புதன், இராகு ஆகியன கூடினால் அயல் நாட்டுத் தொடர்பால், நூதனத் தொழில் மேன்மையால் தனமும் நற்சுகமும் கிட்டும். மனைவிக்கும் தாய்க்கும் பீடையுண்டாகும். சனியுடன் கேது

கூடினால் மனைவிக்குச் சிரசு நோயும், 4ஆம் பாவ பலன்களில் நட்டமும் ஏற்பட விதியுண்டு. இதற்குச் சனீஸ்வரருக்கு எந்திர, மந்திர பிரீதிகள் செய்து நற்பலன்களை அடையலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.

விருச்சிக இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 8ஆம் இடமான மிதுனத்தில் நட்புடனிருப்பதால், தாய்க்குத் திரேக ஆரோக்கியம், ஆயுள் ஆகியவை இருக்கும். வீடு, மனை, வாகனங் கள், சொத்து, சுகம், ஆளடிமை வர்க்கங்களினால் சுகமும், பெண் களினால் சுகமும், விவசாய மேன்மைகள், காடு கழனிகளால் நன்மையும் பசு, பால் பாக்கியங்கள் ஆகியனவும் உண்டாகும்.

சனியுடன் ஆட்சி பெற்ற புதன் கூடினால் திரேக மேன்மை, ஆயுள் ஆகியன நல்ல நிலையில் இருக்கும். விவசாய நன்மைகளும், பண்ணைகளால் நல்ல வருமானமும் கிடைக்கும். பசு, பால் பாக்கியங் கள் அதிகமாய் இருக்கும். கால்நடை அபிவிருத்தி ஆகும். தொழில் மேன்மையுறும். இருப்புக்கு வடக்கில் வீடு, தோட்டம், மனை ஆகியன அமைய விதியுண்டாகும். காடுகளினால் நல்ல வருமானம் கிடைக்கும் பச்சைப்பயறு, எள்ளு போன்ற தானியங்கள் நல்ல நிலையில் இருக்கும்.

சனியுடன் சுக்கிரன் மிதுனத்தில் நட்புடனிருப்பதால் நல்ல அலங்கார மனைகள், மனைவியால் நற்சுகம் ஆகியன கிடைக்க விதியுண்டு. பால் பாக்கியங்கள் நிறைய உண்டு. எருமைகளாலும் எருதுகளினாலும் நல்ல பலன்கள் உண்டாகும்.

சனியுடன் குரு சேர்ந்தால் பொன், ஆபரணச் சேர்க்கையும் நற்பலன்களும் உண்டு. புத்திரர்களினால் மனச்சங்கடங்களும், கஷ்டங்களும் வந்து விலகும். சனியுடன் இராகு கேதுகள் சேர்ந் தால், விஷபயம், விஷ ரோகம் முதலியவை ஏற்படும். இதற்குச் சனீஸ்வரருக்கு அர்ச்சனையும் எந்திர, மந்திர பிரீதியும் பூஜையும் செய்ய நற்பலன்கள் உண்டாகும்.

விருச்சிக இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 9ஆம் இடமான கடகத்தில் பகை பெற்று அமர்ந்திருப்பதால் தாய்க்குத் திரேக சௌக்கியம் குறைவாக இருக்கும். மனை, மாளிகை, வாகனங்கள், கால்நடை வர்க்கங்கள், பால் பாக்கியம் ஆகியவை குறைவாக இருக்கும். தகப்பனாருக்கும்

தாய்க்குமிடையே ஒற்றுமைக் குறைவு. வாகனப் பழுதுகளால் நஷ்டமும் கஷ்டமும் ஏற்படும். எத்தனை வீட்டிற்குச் சொந்தக் காரராய் இருந்தாலும், வாடகை வீட்டில் குடியிருக்கும் நிலை உண்டாகும்.

சனியுடன் உச்சம் பெற்ற குரு கூடினால் தாய்க்குத் தேக சௌக்கியம், ஆயுள், ஆரோக்கியம் ஆகியன நிறைய உண்டு. பொன், பொருள், பூஷணாதி, ஆடை, ஆபரணச் சேர்க்கை ஆகியன உண்டாகும். விவசாயப் பண்ணைகள் மூலம் இலாபமும் நன்மையும் உண்டாகும்.

சனியுடன் புதன் சேர்ந்தால் விவசாய நன்மைகளும் அதன் மூலம் இலாபங்களும், கல்வியில் தடையும் உண்டாகும். தகப்பனாருக்குக் கண்டத்தை உண்டாக்கும். தாய்க்குச் சீதள நோய் போன்றவை ஏற்படும். பிதுர் பாக்கியச் சொத்துகள் மூலமாக இலாபங்கள் வரும். அதனால், மூத்த சகோதரர்களினால் தொல்லைகளும் வழக்குகளும் வந்து சேர விதியுண்டாம்.

சனியுடன் செவ்வாய் நீசமானால் வம்பு, வழக்குகள், குடும்பத்தில் சச்சரவுகள், அமைதியின்மை ஆகியவை உண்டாகும். சனியுடன் சூரியன், இராகு, கேது, சுக்கிரன் ஆகியோர் சேர்ந்தால் மத்திமமான பலன்கள் உண்டாகும். இதற்குச் சனீஸ்வரருக்குப் பிரீதி செய்தும், எந்திர, மந்திர, பூஜைகள் செய்தும் நற்பலன்களை அடையலாம்.

விருச்சிக இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 10ஆம் இடமான சிம்மத்தில் பகை பெற்றிருப்பதால், தாய்க்குப் பீடையும், அலைச்சலும் உண்டாகும். வீடு, மனை, வாகனம் போன்ற வற்றினால் முன்பாதி நன்மைகளும் பின்பாதி நஷ்டங்களும் உண்டாகும். விவசாயம் நன்மையான பலன்களைக் கொடுக்காது. விவசாய நிலங்கள் வறட்சியாக இருக்கும்.

சனியுடன் ஆட்சி பெற்ற சூரியன் கூடினால் தாய்க்குப் பீடையும், உஷ்ணரோகமும், சிரசு நோயும் உண்டாகும். காடுகளினால் நன்மை யும், வறட்சித் தாவரங்களின் விளைச்சலால் நன்மையான பலனையும் தரும். வீடு, மனை, வாகனங்கள் ஆகியன நல்ல பலனைத் தாரா. சொத்துகளால் சொற்ப இலாபத்தைத்தான் எதிர்பார்க்கலாம். தாய், தந்தையர் ஒற்றுமையாக இருக்க மாட்டார்கள்.

சனியுடன் சுக்கிரன், புதன் ஆகியன கூடினால் சேவகவிருத்தியும் பால்பசு விருத்திகளும், வண்டி வாகனச் சேர்க்கையும் அதனால் நன்மையான பலனும் உண்டாகும். பெண் போகத்தால் சுகமும் நன்மையும் ஏற்படும். தொழிலில் மேன்மையும் நூதனத் தொழிலில் அபிவிருத்தியும், அதனால் அபரிமிதமான நன்மையும் உண்டாகும். கிழக்குத் திசையில் வீடு அமைதலும் உண்டாகும்.

சனியுடன் செவ்வாய் கூடினால் தொழிலில் சிக்கல்களும், முன்னுக்குப் பின் முரணாகப் பேசுதலும், வில்லங்க, விவகார வழக்குகளினால் கெடுதலான பலன்களும் ஏற்பட விதியுண்டாம். இரும்பு, அனல் சம்பந்தமான தொழில் செய்வார்கள். மிக்க நட்டத்தை அடைவார்கள்.

சனி, இராகு கேதுகள் கூடினால் மத்திம பலன்களையே எதிர்பார்க்கலாம். அவ்வளவு சிறப்பான பலன்களைக் கொடுக்காது. இதற்குச் சனீஸ்வரருக்கு அர்ச்சனையும், எந்திர, மந்திர பூஜைகளும் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

விருச்சிக இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதி சனி இராசிக்கு 11ஆம் இடமான கன்னியில் நட்புடனிருப்பதால் நன்மையான பலன்களே நடக்க விதியுண்டு. தாய்க்குத் தேக சௌகரியமும் ஆயுளும் நல்ல முறையில் இருக்கும். தாயினால் நல்ல இலாபம் ஏற்படும். வண்டி, வாகனம் போன்றவை நல்ல பலனைத் தரும். விவசாயம், காடுகள், கழனிகள் போன்றவற்றால் நல்ல இலாபம் கிடைக்க விதியுண்டு. கல்வியில் தடையும் பின் தேர்ச்சியும் உண்டு.

சனியுடன் ஆட்சி உச்சம் பெற்ற புதன் கூடினால், இரும்பு வாகனங்களான கனரக வாகனங்கள், நவீன அதிநவீன தொழிற்கூடங்கள், நூதனத் தொழில்துறை வியாபாரத் தலங்கள், எந்திரக்கூடங்கள், வீடு, மனைகள், கட்டடங்கள், விவசாயப் பண்ணைகள், புஞ்சைத் தானியங்கள் ஆகியவை நல்ல பலன்களைத் தரும். பெண்களால் நற்சுகமும், மூத்த சகோதரரால் நன்மையான உதவிகளும் ஏற்படும். கணிதவியலில் பட்டம் பெறுவார்கள். நூதன ஆடை, ஆபரணங்கள், நூதன கணிதப் பொறிகள் ஆகியவற்றால் நன்மையான பலன்கள் உண்டாகும். இருப்புக்கு வடக்கில் வீடு கட்ட அல்லது மனை இருக்க யோகமுண்டாம்.

சனியுடன் சுக்கிரன் நீசமாகிப் புதன் உச்சமாகிக் கூடினால் நீசபங்கப்பட்டு, ராஜயோகத்தைக் கொடுப்பார்கள். அலங்கார ஊர்தி யோகம் உண்டாகும். மேலும், செய்தொழிலால் இலாபமும், பின் விரயமும் ஏற்படும்.

சனீஸ்வரனுக்கு எந்திர, மந்திர பிரீதிகள் செய்வதன் மூலமும், பூஜைகள் செய்வதன் மூலமும் நன்மையைப் பெறலாம் என்று சந்திரநாடி கூறுகிறது.

விருச்சிக இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதி சனி இராசிக்கு 12ஆம் இடமான துலா இராசியில் உச்சம் பெற்றிருப்பதால் உத்தம பலன்கள் நடக்க விதியுண்டு. தாய்க்கு நல்ல ஆரோக்கியம் இருக்கும். குடும்பத்தையும், வண்டி, வாகனங்கள் போன்றவற்றையும் நிர்வகிக்கும் பொறுப்பில் இருப்பார். விவசாய மேன்மைகள் சிறந்து விளங்கும். பண்ணைகளால் இலாபமும் நன்மையான பலன்களும் உண்டாகும். வீடு, மனை, வாகனங்கள் போன்றவற்றில் நல்ல வருமானம் உண்டு. பொருள் விரயமும் உண்டு.

உச்சம் பெற்ற சனியுடன் சுக்கிரன் ஆட்சி பெற்றால் வீடு, மனைகள், நிலங்கள், காடு, கழனிகள், தோட்டம், விவசாயம், நிலம், நீச்சு, பொன், பொருள், ஆடை, ஆபரணங்கள், வைர மணிகள், நீலமணிக் கோவைகள், அலங்கார மாளிகைகள், அலங்கார ஊர்திகள் மற்றும் கனரக வாகனங்கள் ஆகியன சிறந்து விளங்கும். இவற்றைக்காட்டிலும் தாயின் அன்பும் ஆதரவும் உங்களுக்கு நிறைய கிடைக்கும். எருமை விருத்தி, பசு விருத்தி, ஆட்டு வர்க்கம் போன்றவற்றால் இலாபமும், நன்மையான பலனும் அடையலாம். ஆனால், கல்வி, தடைப்படும். நல்ல கலையமிசம் பொருந்திய மனைவியால் சுகமும் கிடைக்கும்.

சனியோடு சூரியன் நீசமாகிக் கூடினால் மூத்த சகோதரரால் நட்டமும், பொருள் செலவும் உண்டாகும். இவர்களோடு சுக்கிரன் சேர்ந்தால் நீசபங்க ராஜயோகம் உண்டாகும். சனியோடு புதன் சேர்ந்தால் மூத்த சகோதரரோடு பகை உண்டாகும். கல்வியில் சிறந்த தேர்வும் உண்டாகும். மனைவிக்கும் தாய்க்கும் இடையே நல்ல உறவு இருக்கும். பச்சைப்பயறு, எள், புன்செய்ப்பயிர்த் தானியங்கள் ஆகியன இலாபம் தரும்.

சனியோடு இராகு கேதுகள் சேர்ந்தால் மத்திமமான பலன் களையே தருவர். இதற்குச் சனீஸ்வர பகவானுக்கு அர்ச்சனை களும் ஆராதனைகளும் யந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் நற் பலன்களை அடையலாம்.

விருச்சிக இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சனி இராசியிலேயே இருந்தால், மத்திமமான பலன்களே உண்டாகும். தாய்க்கு உஷ்ண சம்பந்தமான தேக பீடைகள் இருக்கும். அதிகமான பொருள் விரயங்கள் ஏற்படும். வீடு, மனை, வாகனங்கள் ஆகியன இருந்தாலும், கஷ்டத்தையும் நட்டத்தையும் .கொடுக்கும். விவசாயம் நல்ல முறையில் இராது. காடு, கழனிகள் ஆகியன வறண்டு பயனற்றனவாய் இருக்கும். ஓரளவ மரங்களினால் பலன்கள் கிடைக்க விதியுண்டு. எதிரிகளால் தொல்லையையும், மனக் கஷ்டத்தையும் அனுபவிக்க வேண்டிவரும்.

தாய்க்குப் பீடைக்ள் உண்டு. வீடு இருந்தாலும் அதில் குடி இருக்கும் நிலை இராது. வாடகை வீட்டிலோ, வெளியூரிலோ போய்க் குடி இருக்க விதியுண்டாகும். சனியுடன் செவ்வாய் கூடினால் வண்டி வாகனங்கள் பயனற்றவையாகிவிடும். அவற்றைப் பழுதடைந்த நிலையில்தான் காணமுடியும். செம்மண் பூமியில் செய்யப்படும் புன்செய் விவசாயம் நல்ல இலாபம் தரும். இருப்புக்குத் தெற்கில் வீடு, மனை ஆகியன இருக்க விதியுண்டாகும்.

சனியுடன் சந்திரன், செவ்வாய் ஆகியன கூடினால் நீசபங்க ராஜயோகம் ஏற்படும். பால் பாக்கியம் குறைவுடனிருக்கும். பசு, கன்று, காலிகள் ஆகியன நஷ்டத்தையே ஏற்படுத்தும். சனியுடன் குரு, சூரியன் ஆகியன கூடினால் உத்தியோக மேன்மை இருந்தாலும், நல்ல பலன்களை அடைய முடியாது. சனியுடன் புதன் சேர்ந்தால், விவசாயத்தால் மேன்மையான பலன்களையும், தானிய வகையில் நல்ல விளைச்சலையும் பெறலாம். இலாபத்தையும் தர விதியுண்டு. புதன், சனி, சுக்கிரன் ஆகியன விருச்சிகத்திலிருந் தாலும் வாகன சுகம் நிறைய உண்டு. மனைவியால் நல்ல இலாபம் உண்டு.

இராகு சனியுடன் கூடி உச்சமுற்றிருந்தால் மயக்கம் ஏற்படும். இலாகிரி வஸ்துகளால் அவர்களுக்கு எந்த இடையூறும் இல்லை.

சனீஸ்வரருக்கு அர்ச்சனையும், யந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் நன்மையான பலன்களை அறியலாம். விருச்சிக இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியாகிய சனி இராசிக்கு 2ஆம் இடத்தில் தனுசில் நட்புடனிருந்தால் மத்திமமான பலன்களே ஏற்படும். தாய் நல்லபடியாக இருப்பார்; அமைதியுடன் குடும்பத்தைக் கவனிக்கும் தன்மையுடனிருப்பாள். வீடு, மனை, வாகனங்கள் போன்றவை சுமாரான பலன்களைத் தரும். விவசாயம் ஓரளவு நன்மையைத் தரும். வண்டி வாகனங்கள், கால்நடை வாகனங்கள் ஆகியன நல்ல நிலையிலிருக்கும். பொருள் செலவும், பணச்செலவும் ஏற்படும்.

சனியுடன் குரு கூடி ஆட்சி பெற்றிருந்தால் பால் பசு விருத்தி, தனச்சேர்க்கை, கட்டடம், வீடு, மனை, வாகனம் போன்றவற்றினால் நன்மையான இலாபங்களைப் பெறலாம். வண்டி, வாகனங்களினால் நல்ல வருமானங்களைப் பெறலாம். விவசாய மேன்மைகள் உண்டு. காடு, கழனிகள் போன்றவற்றால் ஓரளவு இலாபம் உண்டு. தென்மேற்கில் வீடு, தோட்டம் ஆகியன அமைய நன்மை ஏற்படும். உங்கள் இனிமையான பேச்சிற்கு என்றும் மதிப்பு இருக்கும்.

சனியுடன் புதன், சுக்கிரன் ஆகியன சேர்ந்தால் மனைவியால் நல்ல இலாபங்களுண்டு. தோட்டம், விவசாயம், கல்வி ஆகியன தடைப்படும். தனச்சாலை கேந்திரங்களினால் நல்ல இலாபம் கிடைக்க விதியுண்டு. சனியுடன் செவ்வாய் இராகு கேதுகள் கூடினால் அவ்வளவாக நல்ல பலன்களை எதிர்பார்க்க முடியாது. இதற்குச் சனீஸ்வர பகவானுக்கு யந்திர, மந்திர பிரீதிகள் செய்தால் நல்ல பலன்களை அடையலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.

விருச்சிக இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 3ஆம் இடமான மகரத்தில் ஆட்சி பெற்றிருந்தால், தாய் நல்ல திடகாத்திரமான தேகத்துடன் விளங்குவார். வீடு, மனை, கட்டடம், நிலம், நீச்சு, ஆளடிமை போன்ற வர்க்கங்களில் நல்ல இலாபங்களை அடையலாம். இளைய சகோதரரால் நன்மையும் உதவியும் உண்டு. பெண்களினால் நற்சுகமும் உண்டாகும்.

சனியுடன் செவ்வாய் உச்சம் பெற்றுக் கூடின் மண் வகைகளுள் செம்மண் பூமியும் கரிசல் மண் பூமியும் நல்ல விளைச்சலைத் தரும். சகோதரர்கள் மூலம் நன்மையும் இலாபமும் உண்டாகும். வண்டி,

வாகனம், காடு, கழனிகள் போன்றவற்றால் இலாபமும், பொருள் சேர்க்கையும் உண்டாகும். துவரை, நல்ல விளைச்சலைத் தரும். தைரியம், வீரியம் ஆகியன நிறைந்து இருக்கும். பட்டம், பதவி, புகழ், ஆளடிமை வர்க்கங்களினால் நல்ல பலன் கிடைக்கும். கல்வி, தடைப்பட்டுப் பின் தேர்ச்சியடைய விதியுண்டு.

சனியுடன் நீசம் பெற்றுக் கூடினால் நல்ல பலன்களை எதிர் பார்க்க முடியாது. ஆடை, ஆபரணச் சேர்க்கையினால் அதிகமான தனம் விரயமாகும். பொன், பொருள்களைக் கடனுக்காக இழக்க நேரிடும். வாக்குப் பலிதமிராது. சனியுடன் குரு நீசமாகிச் செவ்வாய் உச்சம் பெற்றிருந்தால் நீச பங்க ராஜயோகம் ஏற்பட விதியுண்டு.

சனியுடன் இராகு கேதுகள் சுக்கிரன், புதன் ஆகியவர்கள் கூடி இருந்தால் மத்திமமான பலன்களையே எதிர்பார்க்கலாம். இருப்புக்கு மேற்கில் வீடு, தோட்டம் ஆகியன அமைய மார்க்கமுண்டு. சனீஸ் வரருக்கு அர்ச்சனையும் யந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் நல்ல பலன்களை அடையலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.

## தனுசு
## நான்காம் பாவம்

தேவ குருவை 4ஆம் இடத்ததிபதியாகப் பெற்ற தனுசு இராசி அன்பர்களே!

4ஆம் பாவமென்பது தாய், மண், மனை, வயல், வண்டி, வாகனம், சுகம் போன்ற பலன்களைக் குறிப்பிடுவதாகும். அந்தப் பலன்களைக் குருவானவர் உங்கள் இராசிக்கு மேஷம் முதல் மீனம் வரை எத்தனையாவது இராசியில் உள்ளார் என்பதை அறிந்து, உங்கள் நாலாம் பாவ பலன்களை அறிந்துகொள்ளவும். குருவானவர் சில துர்க்கிரக சேர்க்கைகளால் தவறான பலன்களைக் கொடுக்க நேர்ந்தால் குருவுக்குத் தக்க எந்திர மந்திர பிரீதிகளைச் செய்து நல்ல பலன்களை அடைவீராகவும்.

"வேதரவர் மதிக்குத்தான் நாலோ னாகி
வழுத்ததொரு கிரகத்துட னாட்சியுச்சமேறின்
சோதனைகள் பலபடவாய்த் தான்கடந்து

சுத்தபலன் நாலாம்பாவ வழியிலேதான்
வாதனைகள் தானின்றிச் சுகங்களதும்
வையகத்தில் பெருவாறாய்ப் பெறுவா னென்றே
போதனைசெய் முனிவருமே செப்பினார்கள்
பொய்யில்லை பிருதிமேல் பலனும் பாரே"

குருவானவர் இராசிக்குக் கேந்திரமேறினாலும், ஆட்சி, யுச்ச இடங்களில் சுபகிரகங்களுடன் கூடினாலும் உயர்வான பலன்கள் 4ஆம் பாவ வழியில் தீர்க்கமுடன் உண்டென்று ரிஷி நூல் கூறு கின்றது. தெய்வ பிரீதிகள் மூலம் உ.யர்வான பலன்களை அடைய லாமெனக் கூறுகின்றனர்.

தனுசு இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 4ஆம் இடமான மீனத்தில் ஆட்சியானால் நற்பலன்கள் உண்டாம். தாய் நல்லபடியாகவும் சுகத்தோடும் இருப்பாள். குருவோடு நீசக்கிரகமான புதனும், உச்சக் கிரகமான சுக்கிரனும் கூடினால் சில பலன்கள் தடையுண்டாம். தாய்வழியில் பலன் குறைவாகவும், தாய்க்கு நேத்திர ரோகமும் உண்டாகும். குருவுடன் புதன் நீசமாகிக் கூடினால் கல்வியில் தடை உண்டாகும். ஆனால், நீசபங்க ராஜயோகத்தினால் மனை, வண்டி, வாகனம் ஆகியவற்றில் பிற்பலன்களைக் கொடுக்கும். குருவுடன் மற்ற நட்புக் கிரகங்கள் கூடினால் உத்தமமான பலன்களே உண்டாம். இருப்புக்கு வட கிழக்கில் மனை கட்டவும் தோட்டம் அமைக்கவும் விதி உண்டாம்.

குருவின் சத்துருவான சுக்கிரன் உச்சமாகிக் கூடினால் முன் மத்திம பலன்களையும், பின் உத்தம பலன்களையும், வாகனயோகம், அலங்கார மாளிகைகள், திரைப்பட அரங்குகள், திருமண மண்டபங்கள் போன்ற வகையில் உண்டு செய்வார். வாழ்க்கையின் பிற்பகுதியில் சுகமாய் இருக்கும்.

குரு தனித்திருந்தாலும் நட்புக் கிரகங்களுடன் சேர்ந்திருந்தாலும் உத்தமமான பலன்களே உண்டாகும். காடுகளைவிட விவசாய நிலங்கள், நெல் விளைச்சல், மனை இலாபங்கள் ஆகியன உண்டு.

குருவுடன் செவ்வாய் பகையாகிக் கூடினால் பூமி வகையில் முன் நட்டமும், பின் இலாபங்களும் உண்டாம். தேவகுருவுடன் அசுர குரு கூடினால் பின் நன்மைகள் உண்டென்றும், குருவுக்கும்

தக்ஷிணாமூர்த்தி தேவருக்கும் அர்ச்சனைகளும், யந்திர மந்திரப் பிரீதிகளும் செய்தால் நல்ல பலன்களைத் தரும் என்று அறியப்படுகிறது.

தனுசு இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 5ஆம் இடத்தில் மேஷத்தில் பகை பெற்றிருப்பதால், மத்திமமான பலனுண்டாகும். செவ்வாய் ஆட்சியாகிச் சேர்ந்தாலும், சூரியன் உச்சமாகிக் கூடினாலும் யோகமுண்டாகும். குருவுடன் ஆட்சி உச்சக் கிரகங்கள் கூடினால் தாயைவிடத் தகப்பன் கை ஓங்கி இருக்கும். தாய் பணிந்து செல்லுவாள். ஆனால், தைரியம், வீரியம் ஆகியன உடையவளாய் இருப்பாள். அவளுக்கு இரத்த சம்பந்தமான ரோகங்கள் உண்டு. பூர்வ புண்ணிய மனைகளையும் விவசாய நிலங்களையும், பழுது செய்யும் தகப்பன் தொழிலையும் பணியையும் தொடர விதி ஏற்படும். பால் பாக்கியங்கள் குறைவாம். கால்நடை உயிர் வதைகளால் இலாபமும், தோல் மற்றும் இறைச்சி வழியில் பொருளீட்டும் விதிகளும் ஆட்டுக்கிடை, மேய்ச்சல்கள் போன்றவற்றில் ஆர்வமும் உண்டாகும்.

குருவுடன் சனி நீசமாகிக் கூடினால் வாகன யோகங்கள் மத்திமமாய் உண்டாகும். தன்னுடைய நிலம், மனை, கழனிகள் ஆகியவற்றில் வேலைகள் நடந்தாலும் மந்தமாகவும், சில சமயம் செயலற்றும் இருக்க விதி உண்டாகும். குருவுடன் செவ்வாய், சூரியன், மித்துரு கிரகங்கள் கூடினால் பூர்வ புண்ணிய ஆஸ்தி களையும், மனைகளையும், தொழில்களையும் பெற விதியுண்டு குருவுடன் பகைக்கிரகங்களோ, நீசக் கிரகங்களோ கூடினால் தாயின் சுகத்திற்கும், தன் சுகத்திற்கும் கேடாகும். கல்வி தடைப்படும் அல்லது மந்த நிலை உண்டாகும். குருவுடன் இராகு கூடினால் மேன்மையுண்டாகும். வியாபார விஷயங்கள் இரகசியமாய் வைக்கப்படும். தானிய வகையில் நல்ல பலன்கள் உண்டாகும் குருவுடன் சுபக்கிரகங்களோ, ஆட்சி, உச்ச கிரகங்களோ சேர்ந்தால் பூர்வ புண்ணியத்தில் இருப்புக்குத் தெற்கில் மனைகட்ட விதியுப் அல்லது அந்த வீட்டில் வசிக்க விதியும் ஏற்படும். குருவுடன் நீசக்கிரகங்களோ, அசுபகிரகங்களோ கூடித் துர்பலன்களை ஏற்படுத்தினால் தக்ஷிணாமூர்த்தி தேவருக்குப் பிரீதிகளும்

குருவுக்கு எந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் நல்ல பலன்களை அடையலாம்.

தனுசு இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதி குரு இராசிக்கு 6ஆம் இடத்தில் ரிஷபத்தில் தன்னுடைய சத்துரு வீட்டிலிருந்தால் மத்திம மான பலன்களைத் தருவார். அசுர குரு சுக்கிரன் குருவோடு சேராமல் மற்ற மித்துரு கிரகங்களுடன் கூடினால், ஓரளவு சுமுக பலன்களாம். தாய்க்கு நோயிடரும், நொம்பலங்களும் உண்டாகும் குருவோடு புதன், சுக்கிரன் ஆகியன சேர்ந்தால், கல்வியில் தடை ஏற்படும். வீடு, மனை, நிலபுலன்கள், காடு கழனிகள் போன்றவற்றில் முன் இலாபங்களையும், பின் நட்டங்களையும் ஏற்படுத்தும் மனையினால் வில்லங்க விவகாரம் ஏற்பட்டு கோர்ட்டில் வழக்கு மனக்கவலை, வியாஜ்ஜியம் போன்றவை ஏற்படும். வண்டி வாகனங்கள் பழுதடையும் நிலையை உருவாக்கும். கால்நடைகள் நோய் நொடிகளால் அவதியுறும் அல்லது இழப்பு ஏற்படும். தங்கம் வெள்ளி போன்ற அணிகலன்களைக் கடனுக்காக இழக்க நேரிடும்

குருவோடு செவ்வாய், சூரியன் போன்ற கிரகங்கள் கூடினால். புத்திரர்களால் நிலபுலன் விரயமும் காசு பணச்சேர்க்கை தடைப் படுதலும் உண்டாகும். தகப்பன் வழியில் பிதுர் பாக்கியங்களை இழக்க நேரிடும். தந்தையின் சொத்தை நீங்கள் பங்கு போட்டுக் கொள்ள முடியாதபடி வழக்குகளும் வில்லங்கங்களும் நிறைந்து இருக்கும்.

குருவோடு சனி, இராகு, கேது ஆகியன சேர்ந்தால் வாதரோகங்களும், தோல் நோய்களும் ஏற்படும். மர்ம உறுப்புகள் நோய்த் தொந்தரவால் அவதியுறும். குருவுக்கும், தக்ஷிணா மூர்த்திக்கும் ஆராதனைகளும் பிரீதிகளும், எந்திர, மந்திர பூஜைகளும் செய்து நற்பலன்களை அடைய வேண்டும் என்று நாடி நூல் கூறுகிறது.

தனுசு இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 7ஆம் இடமான மிதுனத்தில் நட்புப் பெற்றிருந்தால் தாய் நல்லபடியாக இருப்பாள். வீடு, மனை, வாகனங்கள் ஓரளவு நன்மை யான பலனைத் தரலாம். விவசாயங்கள், பண்ணைகள் ஆகியன அபிவிருத்தியடை.யும்.

குருவுடன் புதன் ஆட்சி பெற்றுக் கூடினால் தாய்க்கும் தாரத்திற்கும் இடையே சண்டை சச்சரவுகளும் மனஸ்தாபங்களும் ஏற்படும். மனைவியால் நற்சுகம் கிட்டும். மனை அலங்காரங்கள் அமையும். நெல், புன்செய்ப் பயிர்த் தானியங்கள் ஆகியன நல் விளைச்சல் உண்டாகும். இவரோடு சுக்கிரன் கூடினால் நல்ல பலன்களை முன்கொடுப்பார். பின்பு, மது, மாது போன்ற சுகங்களுக்காகக் காசு பண விரயத்தை ஏற்படுத்துவார். அலங்கார ஊர்திகளும், அலங்கார மனைகளும், விருந்தினர் மாளிகையும், அதிதி மண்டபங்களும் இவருக்குச் சொந்தமாக வடக்கில் இருக்க விதியுண்டு. கல்வி தடைப்படும்.

குருவுடன் சூரியன் பகையாகக் கூடினால் மனைவியால் சண்டை சச்சரவும், கோபதாபங்களும் உண்டாகும். விவசாயம் வறட்சியாகி, காடு, கழனிகளில் விளைச்சல் இல்லமாற் போய்விடும். குருவோடு செவ்வாய் கூடினால் ஓரளவு காடு, கழனிகள் மூலம் சொற்ப இலாபத்தைப் பெறலாம். நெல் விளைச்சல் அதிக மகசூலைத் தராது. பால் பாக்கியங்கள் இல்லாத நிலை ஏற்படும்.

குருவுடன் இராகு, கேதுகள் கூடினால் மத்திமமான பலன்கள் ஏற்படும். மனைகள் பழுதுபடும். பாம்புகள் வீட்டில் வருவதும் போவதுமாயிருக்கும். மனைவிக்கு மர்மமான முறையில் வியாதியும், பத்து, படை போன்ற தோல் வியாதிகளும் ஏற்பட விதியுண்டு. இதற்குக் குருவுக்கும் தக்ஷிணாமூர்த்திக்கும் எந்திர, மந்திர பிரீதிகள் செய்ய நல்ல பலன்களை அடையலாம்.

தனுர் இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதி குரு இராசிக்கு 8ஆம் இடமான கடகத்தில் உச்சம் பெற்றால் நல்ல பலன்களை அடையக்கூடிய விதியுண்டு. தாய், வறிய குடும்பத்தில் பிறந்தவராய் இருப்பார். தாயாரின் வழி ஆதரவு குறைந்திருக்க விதியுண்டு.

உச்சம் பெற்ற குருவுடன் நீசம் பெற்ற செவ்வாய் சேர்ந்திருந்தால் நீசபங்க ராஜயோகம் வாழ்வின் பிற்பகுதியில்தான் ஏற்படும். மனை, வீடு, வாகனம் போன்றவற்றைத் தன் சொந்த சம்பாத்தியத்தில் அனுபவிக்க வேண்டிவரும். நிலம், நீச்சு, காடு, கழனிகள் ஆகியன சுமாரான இலாபத்தைக் கொடுக்கும். புத்திர கிலேசமும், அதனால்

மனச்சஞ்சலமும் ஏற்பட விதியுண்டு. வடமேற்கில் வீடு கட்டும் யோகமுண்டாகும்.

உச்சம் பெற்ற குருவுடன் சூரியன், புதன் ஆகியன சேர்ந்திருந்தால் விவசாயம் நல்ல விளைச்சலையும், நன்மையையும் தரும். காடு, கழனிகளில் தானியங்களும் நெல் போன்றவையும் நல்ல இலாபத்தைக் கொடுக்கும். பிதுர் பாக்கியச் சொத்தை அனுபவிக்க முடியாத நிலை உருவாகும். மனைவியால் குடும்பத்தில் மகிழ்ச்சி இராது. கல்வி யோகம் ஏற்படும்.

உச்சம் பெற்ற குருவுடன் சுக்கிரன், சனி, இராகு கேதுகள் ஆகியவை சேர்ந்தால் மத்திமமான பலன்களே உண்டாகும். வாகனங்கள் பழுதுபடும். வீடு, மனை ஆகியவற்றால் இளைய சகோதரர்களின் தொல்லை உண்டாகும். இதனால் பகை ஏற்படவும் விதியுண்டு. நீதி மன்ற வழக்கு, வில்லங்கம், வியாஜ்ஜியம், மனஸ்தாபம் போன்றவை ஏற்பட விதியுண்டு. முன் வெற்றியும் கிடைக்கும். சீதள நோய் ஏற்பட்டுப் பணச்செலவும் ஏற்பட விதியுண்டாகும். குருவுக்கும், தக்ஷிணாமூர்த்தி தேவருக்கும் அர்ச்சனையும், எந்திர, மந்திர பிரீதிகளும் செய்ய நல்ல பலன்களை அடையலாம் என்று நாடிநூல் கூறுகிறது.

தனுர் இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 9ஆம் இடமான சிம்மத்தில் நட்புடனிருப்பதால் நல்ல பலன்களே உண்டாகும். தாய், நல்ல ஆயுள் ஆரோக்கியத்துடன் இருப்பார். தாய், தந்தையர் நல்ல ஒற்றுமையுடன் இருப்பார்கள். நிலபுலன்கள், வீடு, மனை, வாகனம், கல்வி, விவசாயம் ஆகியவை நல்ல முறையில் நடக்கும்.

குருவுடன் சூரியன் ஆட்சி பெற்றுக் கூடினால் நிலம், நீச்சு, சேர்க்கை, வாகனங்கள், விவசாயம் போன்றவை நல்ல இலாபத்தைத் தரும். கல்வியில் பட்டம் பெறுவர். வீடுகள், கட்டடங்கள் ஆகிய வற்றை இருப்புக்குக் கிழக்கில் கட்ட விதியுண்டு. பால் பாக்கியம் மனையில் உண்டு. தந்தையின் அன்பைப் பெற்றிருப்பார்கள். பெரியோரிடத்தில் பணிவுடனிருப்பார்கள். புன்செய் விவசாயங்கள் நல்ல இலாபத்தைக் கொடுக்கும். அலங்கார மாளிகைகள் கட்டவும், பொன், பொருள் சேர்க்கை உண்டாகவும், பிதுர்ராஜித சொத்தை

அனுபவிக்கவும் யோகமும் உண்டாகும். தெய்வ வழிபாடுகள், சுகம், சௌக்கியம் ஆகியவை நிறைந்து காணப்படும்.

குருவுடன் சுக்கிரன், செவ்வாய் போன்றவர்கள் கூடினால் செம்மண் பூமி, புஞ்சைக்காடு ஆகியவற்றால் இலாபமும், அமோக விளைச்சலும் ஏற்படும். சுக்கிரன் சேர்ந்து இருப்பதால் பிதுர் வழியில் உள்ள சொத்துகளுக்கு வில்லங்க விவகாரம் உண்டாகும். குருவோடு புதன் கூடினால் மனைவியோடு அடிக்கடி சண்டையிடவும், கோபதாபங்கள் ஏற்படவும் வாய்ப்புண்டு.

குருவுடன் இராகு கேதுகள் சேர்ந்து கூடினால் தகப்பனாருக்குக் கண்டமும், பாக்கியங்களை அனுபவிக்க முடியாத நிலையும் உண்டாகும். குருவுக்கும், தட்சிணாமூர்த்தி தேவருக்கும் அர்ச்சனையும் யந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் நல்ல பலன்கள் உண்டாகும்.

தனுர் இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 10ஆம் இடமான கன்னியில் நட்புப் பெற்றிருப்பதால் மத்திமமான பலன்களே உண்டாகும். தாயினால் தொழில் மேன்மைக்கான உதவிகள் உண்டாகும். தாய் நல்ல நிலையில் இருப்பார். விவசாய மேன்மைகள், வீடு, மனை, வாகனம், வியாபாரம், தொழில்கள், கொடுக்கல் வாங்கல், கல்வியில் பட்டம் பெறுதல் ஆகியன உண்டாகும்.

குருவுடன் ஆட்சி உச்சம் பெற்ற புதன் கூடினால் நூதனத் தொழிலால் மேன்மை உண்டாகும். அச்சு இயந்திர சாலைகள், கணிதப்பொறி இயந்திரங்கள், காகிதம், அதிநூதனத் தொழில்கள், தொலைத் தொடர்புச் சாதனங்கள் ஆகியவற்றால் நன்மையுண்டாகும். கொடுக்கல், வாங்கலில் சிறப்பும், அதிக இலாபமும் உண்டாகும். அலங்கார மனைகள், வீடுகள், கட்டடங்கள், அலங்கார ஊர்திகள், விவசாய இலாபங்கள், நெல், தானிய விளைச்சலால் அபிவிருத்தி, நல்ல இலாபங்கள் ஆகியன உண்டு. கல்வியில் பட்டம் பெறவும் கணிதக் கல்வியில் சிறப்புப் பட்டம் வாங்கவும் விதியுண்டாகும். பால் பாக்கியம் உண்டு. இருப்புக்கு வடக்கில் குடியிருக்கும் மனைகள், தோட்டம் ஆகியன அமைய வாய்ப்பு உண்டு. நற்சுகமும் உண்டு.

குருவுடன் சுக்கிரன் நீசமாகிக் கூடினால் வீடு, மனையால் வில்லங்கமும், விவகாரமும் இருந்தாலும் அடிக்கடி வந்து மாறும். வாகனங்கள் கிடைத்தும் கிடைக்காத நிலையில் இருக்கும். காடுகளினால் சொற்ப இலாபங்கள் உண்டு. குருவுடன் செவ்வாய், இராகு, கேது ஆகியன கூடினால் மத்திமமான பலன்களே உண்டாகும். குருவுக்கும் தட்சிணாமூர்த்திக்கும் பிரீதிகளும், யந்திர, மந்திர பூஜைகளும் செய்தால் நற்பலன்களை அடையலாம் என்று சுந்திரநாடி கூறுகிறது.

தனுர் இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 11ஆம் இடமான துலாத்தில் நட்புப் பெற்றிருந்தால் மத்திமமான பலன்களே உண்டு செய்வார். தாய்க்கு நல்ல ஆரோக்கியம் இருக்கும். வீடு, மனை, வாகனம், கல்வி, விவசாயம் போன்றவை நல்ல பலன்களைக் கொடுக்கும்.

குருவுடன் உச்சம் பெற்ற சனி கூடினால் இளைய சகோதரர் நல்ல சுகத்துடனும் இலாபகரமாகவும் இருப்பார். உங்களுக்குப் பல நன்மைகளைச் செய்வார். வண்டி, வாகனங்கள் போன்ற கனரகவாகனங்கள் நல்ல பலனைத் தரும். வீடு, மனை, தோட்டம், துரவு, நிலபுலன்கள் நல்ல இலாபகரமாய் இருக்கும். வீடு, தென்கிழக்கில் அமையும்.

குருவுடன் ஆட்சி பெற்ற சுக்கிரன் கூடினால் விவசாய இலாபங்கள் உண்டாகும். காடு கழனிகள், புஞ்சைப் பயிர்கள், மொச்சை, நிலக்கடலை போன்ற தானியங்கள் ஆகியன நல்ல பலன்களைத் தரும். அலங்கார மனைகள், அலங்கார ஊர்திகள், கலையமிசம் பொருந்திய பெண்களின் தொடர்பால் இலாபங்கள், பல மனைகளுக்கு அதிபதியாக இருக்கக்கூடிய யோகம் ஆகியன உண்டாகும். மூத்த சகோதர நன்மையும் உண்டாம்.

குருவுடன் நீசம் பெற்ற சூரியன் கூடினால் பிதுர்ராஜித சொத்துகள் கிடைக்காத நிலை ஏற்படலாம். அப்படிக் கிடைத்தாலும் நீண்ட நாள் நீங்கள் அனுபவிக்க முடியாது. குருவுடனும் சூரியனுடனும் சுக்கிரன் சேர்ந்தால் நீசபங்க ராஜயோகம் அடைய விதியுண்டு.

குருவுடன் செவ்வாய் சேர்ந்தால் பூமி, மனை ஆகியவற்றால் நல்ல இலாபங்களும், விவசாய மேன்மைகளும், காடு கழனிகளால் நற்பலனும் உண்டாகும். குருவுடன் இராகு, கேது ஆகியன சேர்ந்தால் மத்திமமான பலன்கள் உண்டாகும். குருவுக்கும் தக்ஷிணாமூர்த்தி தேவருக்கும் அர்ச்சனையும் ஆராதனையும் செய்தால் நன்மையான பலன்களைப் பெறுவார்கள் என்று சந்திர நாடி கூறுகிறது.

தனுர் இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 12ஆம் இடமான விருச்சிகத்தில் பகை பெற்றிருப்பதால் மத்திமமான பலன்கள் உண்டாகும். தாய் நோயுற்று இருப்பார். தாய்க்கும் உங்களுக்கும் மனக்கசப்பு உண்டாகும். வீடு மனைகளிருந்தும் வாடகை வீட்டில் குடி இருக்கும் நிலை உண்டாகும். விவசாயம் நல்லபடியாக இராது. தம் நிலையை உணராதவராகவும் இருப்பார். கல்வியில் நாட்டம் இராது.

குருவோடு செவ்வாய் ஆட்சி பெற்றுக் கூடினால் பெண்கள் போகத்தினால் சுகமும், சகோதரர்களினால் நன்மையும் சுகமும் கிடைக்க விதியுண்டு. செம்மண் பூமி நல்ல இலாபத்தைக் கொடுக்கும். பால் பாக்கியங்கள் நல்லபடியாக இருக்கும். வீடு, மனை, இலாபங்கள் ஆகியன விரயமாகும் நிலை உண்டாகும். விவசாய மேன்மைகள் நல்லபடியாக இருக்கும். இவை பிற்கூறில் விரயமாகும் நிலை உண்டாகும்.

குருவோடு சூரியன், புதன் ஆகியன கூடினால் மத்திமமான பலன்களாக நடக்கும். பிதுர்ராஜித சொத்துச் சுகங்களால் நன்மை ஏற்படாது. தொழில் நல்லபடியாக நடவாது. இருப்புக்கு வடக்கில் வீடு, நிலபுலம் ஆகியன இருக்க விதியுண்டு. குருவோடு சுக்கிரன், சனி ஆகியன கூடினால் வாகனங்கள் பழுதுகளாகும். விரயமும், கொடுக்கல் வாங்கலில் நாணயமற்ற நிலையும் உருவாகும். மனைவியால் தொல்லைகளும் கோபதாபங்களும் உண்டாகும்.

குருவோடு இராகு கேதுகள் கூடினால் மத்திமமான பலன்களை ஏற்படுத்தும். சுக சௌகரியக் குறைவும், மது, மாது தொடர்பால் கஷ்டங்களும் நஷ்டங்களும், பூமி காணிகள் விரயமாதலும் நேரும். இதற்குக் குருவுக்கும் தட்சிணாமூர்த்திக்கும் பிரீதிகளும் யந்திர,

மந்திர பிரீதிகளும் செய்தால் நற்பலன்கள் உண்டாகுமென்று சந்திர நாடி கூறுகிறது.

தனுர் இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான குரு இராசியிலே குரு ஆட்சி பெற்றிருப்பதால் நல்ல உத்தமமான பலன்கள் நடக்கும். தாய், நல்ல நிலையில் இருப்பார். திரேக மேன்மையும் சௌக்கியமும் நிறைந்து இருக்கும். வீடு, மனை, வாகனங்கள், கல்வி, விவசாயம், வியாபாரம், சொத்துசுகம் போன்றவை உண்டாகும்.

ஆட்சி பெற்ற குருவோடு சந்திரன், சூரியன், செவ்வாய் போன்ற கிரகங்கள் கூடினால் நல்ல பலன்களாக நடக்கும். பிதுர்ராஜித சொத்துகளை அனுபவிக்கும் யோகம் உண்டாகும். வண்டி வாகனங்களால் நல்ல வருமானம் கிடைக்கும். மாளிகை போன்ற வீடுகள், நிலபுலன்கள் வடகிழக்கில் இருக்க யோகம் உண்டாகும். கல்வியில் தேர்ச்சியுண்டு. நீதித்துறை, தனம் புரளும் கேந்திரங்கள் ஆகியவற்றில் தொழிலோ உத்தியோகமோ கிடைக்கும். மாடு கன்றுகள் அபிவிருத்தியாகும். சுகபோஜனங்கள் சயன சுகங்கள் ஆகியன கிடைக்கும்.

ஆட்சி பெற்ற குருவோடு சனி, புதன் போன்ற கிரகங்கள் சேர்ந்து கூடினால் மனைவியால் நற்சுகமும் கிடைக்கும். இளைய சகோதரர்களால் நன்மைகள் கிடைக்க விதியுண்டு. தொழில் மேன்மைகளும், காடு கழனிகளால் இலாபமும், காடுகளில் நல்ல விளைச்சலும் ஏற்படும்.

ஆட்சி பெற்ற குருவோடு இராகு கேதுக்கள் சேர்ந்து கூடினால் திரேக அசௌக்கியம், தோல் வியாதிகளினால் நஷ்டம், நொம்பலங்கள் ஆகியன உண்டாகும் நிலை உண்டாகும். குருவுக்கும் தட்சிணாமூர்த்திக்கும் யந்திர, மந்திர பிரீதிகள் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

தனுர் இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 2ஆம் இடமான மகரத்தில் நீசமுற்றிருப்பதால் மத்திம பலனே நடக்கும். தாய்க்குத் திரேகமேன்மை இராது. சதா நோய் நொடியுடன் இருக்கும் நிலை உண்டாகும். வண்டி, வாகன நஷ்டங்களும், அசௌக்கியமும், புத்திர விரயமும் அபகீர்த்தியும் உண்டாகும்.

குருவுடன் ஆட்சி பெற்ற சனி கூடினால் வாக்கு சாதுரியமும் கல்வியில் தடையும், தாய்க்கு அடிக்கடி கண்டமும் வந்து விலகும். நிலபுலன்கள் வருவாயை அளிக்கா. குடும்பத்தில் நொம்பலங்கள் இருக்கும். தனச்சேர்க்கை உண்டு. சாஸ்திர மறதிகளும் மந்தமான புத்திகளும் உண்டாகும். காடு, கழனிகள் நஷ்டம் ஏற்படுத்தும். வீடு, மனை, வாகனம் போன்றவற்றால் நட்டம் ஏற்படும். இருப்புக்கு மேற்கில் வீடு நிலபுலன்கள் இருக்க விதியுண்டு.

குருவுடன் உச்சம் பெற்ற செவ்வாய் கூடினால் புத்திரரினால் நன்மையும். பூர்வ புண்ணியச் சொத்து சுகம், வீடு, மனை போன்ற வகைகளை அனுபவிக்கவும் விதியுண்டு. செம்மண் பூமியால் இலாபமும், வாழ்வின் பிற்பகுதியில் விரயமும் உண்டாகும். குருவுடன் புதன், சுக்கிரன் ஆகியோர் கூடினால் வாக்கு சாதுரியம், குடும்ப வில்லங்கம், மனைவியால் குடும்பம் விருத்தி அடைதல் ஆகியன உண்டாகும்.

குருவுடன் இராகு கேதுகள் கூடினால் வியாதிகளும் மது போதைப் பழக்கமும், தோல் வியாதிகளும் ஏற்படும். குருவுக்கும் தக்ஷிணாமூர்த்திக்கும் எந்திர, மந்திர பிரீதிகளும் பூஜைகளும் செய்தால் நன்மையான பலனை அடையலாம்.

தனுர் இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 3ஆம் இடத்தில் மறைந்து நட்புப் பெற்றிருப்பதால், மத்திமமான பலனைக் கொடுக்கும். தாய் மகன் உறவு நன்றாய் இராது. தாய் வகையில் உதவிகளை அடைய முடியாது. குருவுடன் சனி ஆட்சி பெற்றுக் கூடினால் இளைய சகோதரர்கள் மூலம் நன்மையும் உதவிகளும் கிடைக்கும். தாய்க்கு வியாதியும் பீடையும் அதிகம் இருக்கும். வீடு, நிலபுலன் சேர்க்கையால் அதிகமான நட்டமும் கஷ்டமும் ஏற்படும். கல்வியால் தடை ஏற்படும். விவசாயத்தால் நன்மைகள் உண்டு. பால் பாக்கியம் குறைவு. எருமை மாடுகள் விருத்தியாகும்.

இருப்புக்கு மேற்கில் வீடு, மனை, தோட்டம் ஆகியன அமைய விதி உண்டு. வண்டி, வாகனங்கள் ஆகியன நஷ்டத்தை ஏற்படுத்தும். காடு கழனிகள் வாழ்வின் பிற்பகுதியில் விரயமாகும் நிலை ஏற்படும். குருவோடு புதன், சுக்கிரன் கூடினால் மனைவியால்

சில நேரம் நன்மையும், வில்லங்க விவகாரமும், வேலையாள்களினால் விவகாரமும், அபகீர்த்தியும் செலவுகளும் அதிகமாகும்.

குருவுடன் செவ்வாய் சேர்ந்தால் இளைய சகோதரர் உதவி செய்யமாட்டார். பட்டம், பதவி, புகழ், வீடு, மனை, வாகனம் போன்றவற்றை இழக்க நேரிடும். இராகு கேதுகள் சேர்ந்தால் நல்ல நிதானம், தைரியம் ஆகியன இருக்கும். கோபமும் இருக்கும். குருவுக்கும் தட்சிணாமூர்த்திக்கும் எந்திர, மந்திர பிரீதிகள் செய்தால் நற்பலன்களை அடையலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.

## மகரம்
## நான்காம் பாவம்

சுப்பிரமணியரை அதிதேவராகப் பெற்ற செவ்வாய் பகவானை 4ஆம் இட அதிபதியாகப் பெற்ற மகர இராசி அன்பர்களே!

நாலாம் பாவமென்பது தாய், மண், மனை, வயல், வண்டி, வாகனம், சுகம் போன்ற பலன்களைக் குறிப்பிடுவதாகும். இந்த 4ஆம் பாவ பலன்களை மேஷம் முதல் மீனம் வரை 12 இராசிகளில் செவ்வாய் இருந்த பலனையும், மற்ற கிரகங்களோடு கூடிய பலனையும் பதஞ்சலி மகரிஷியின் நூல் வாயிலாக அறிந்து கூறப்பட்டுள்ளது. அன்பர்கள் தங்கள் இராசிக்கு எத்தனையாவது இடத்தில் செவ்வாய் இருக்கின்றார் என்றறிந்து, தங்களின் நாலாம் பாவ பலனை அறிந்துகொள்ளுமாறு கேட்டுக்கொள்ளப்படு கிறார்கள். செவ்வாய் துர்க்கிரகத்துடன் கூடி, துர்பலன்கள் கொடுக்க நேர்ந்தால் செவ்வாய்க்கு யந்திர, மந்திர பிரீதிகள் செய்து நல்ல பலனையடைவீராகவும்.

"குசனுமவர் மதிக்குத்தான் நாலோ னாகி
குன்றாது யாட்சி யுச்ச மேறிடினும்
அசராது நாலாம்பாவ பலனு மேதான்
ஆரல்சேய் தீர்க்கமுடன் கொடுப்பார் தானே"

"தானேதான் தன்சத்ரு வகையில் கூட
தனயனுக்குத் தாய்வகையும் தானிய மார்க்கம்

காணேதான் வண்டியொடு வாகன மார்க்கம்
கருதமேல் மத்திமமே பிருதிமேல் உத்தமமே"

செவ்வாயானவர் தம் சத்துருக்களோடு கூட நேர்ந்தால் 4ஆம் பாவ பலன் மத்திமமாகவே உண்டென்று கூறுகின்றார். பிரீதிகள் மேல் உத்தம பலன் கிடைக்குமெனப்படுகின்றது.

மகர இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு 4ஆம் இடமான மேஷத்தில் ஆட்சி பெற்றிருப்பதால், தாய்க்கு ஆயுள் ஆரோக்கியம் நிறைந்து இருக்கும். வீடு, மனை, வாகனங்கள் ஆகியவற்றில் அபிவிருத்தி இருக்கும். நல்ல பலன்களைத் தரும். கல்வியில் பட்டமும். விவசாய மேன்மையும் உண்டாகும்.

ஆட்சி பெற்ற சேயுடன் உச்சம் பெற்ற சூரியன் கூடினால் தாய்க்குத் தீர்க்காயுள் உண்டு. பொன், பொருள் அபிவிருத்தி, சிவபூஜை செய்தல், பெண்களால் நற்சுகம் ஆகியன கிடைக்கும். பல வீடு, மனைகள் இருக்கும். வாகனங்களால் நல்ல வருமானம் கிடைக்கும். விவசாய நிலங்கள் நல்விளைச்சலைத் தரும். புன் செய்க்காட்டுத் தானியங்களால் நல்ல இலாபம் கிடைக்க விதியுண்டு.

ஆட்சி பெற்ற சேயுடன் உச்சம் பெற்ற சூரியனும் நீசம் பெற்ற சனியும் கூடினால் தன விரயமும், பொருள் விரயமும் முற்பகுதியில் ஏற்பட்டு, தத்தமது திசா புத்திகளில் இராஜ யோகத்தைக் கொடுப்பார்கள். கால்நடை அபிவிருத்தி அடையும். இருப்புக்குத் தெற்கில் வீடு, மனைத் தோட்டங்கள் ஆகியன அமைய விதியுண்டு

ஆட்சி பெற்ற சேயுடன் குரு கூடினால் பொன் பொருளால் நஷ்டமும் விரயமும் ஏற்பட விதியுண்டு. விவசாய நிலங்கள் விளைச்சலைத் தருவதில்லை. வாயுத் தொல்லைகளால் சுகக்கேடு உண்டாகும். புதன் கூடினால் ஸ்திரீ போக சுகம், இளைய சகோதர நன்மை, பிதுர் வர்க்கத்தின் அன்பு பாக்கியம் ஆகியவற்றை அனுபவிக்க விதியுண்டு. சுக்கிரன் கூடினால் புத்திரரால் இலாபம் தொழிலில் மேன்மை, வாகன சுகம், வாகன அபிவிருத்தி போன்றவை ஏற்படும். இராகு கேதுகள் கூடினால் பிரயாண நன்மைகள், தியானம் நீதி நேர்மையோடு வாழ்தல், போதை மயக்கம் போன்றவை ஏற்படும்

சுப்பிரமணியருக்கு அர்ச்சனை ஆராதனைகளும், செவ்வாய்க்கு எந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

மகர இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு 5ஆம் இடத்தில் ரிஷபத்தில் நட்புடன் அமர்ந்திருப்பதால், மத்திமமான பலன்களைக் கொடுக்கும். தாய்க்கு நல்ல ஆரோக்கியம் இருக்கும். வீடு, மனை, வாகனங்கள் போன்றவை நல்ல இலாபத்தைக் கொடுக்கும். குலதெய்வ அனுக்கிரகம் உண்டாகும். புத்திரரால் நன்மையும், விவசாய இலாபமும் உண்டாகும். காடு கழனிகளால் இலாபமும், க்ல்வியில் பட்டம் பெறுதலும், பூர்வ புண்ணிய வசத்தால் தெய்வ பக்தியும், நல்ல ஒழுக்கமும் ஏற்படும்.

செவ்வாயுடன் சுக்கிரன் சேர்ந்தால் வாகன சுகமும் பெண்களால் நற்சுகமும் ஏற்படும். விவசாயத்தில் நல்ல நெல் விளைச்சலுண்டு. புன்செய்த் தானியங்களான மொச்சை, துவரை போன்ற தானியங்கள் நல்ல இலாபத்தைக் கொடுக்கும். பால் பாக்கியம், பசு விருத்தி போன்றவை ஏற்படும். கால்நடை வாகனங்களான எருதுகள் அபிவிருத்தி அடையும். கல்வியில் பட்டப்படிப்பு, கலையமிசம், கலாரசனை ஆகியன ஏற்படும். இருப்புக்குத் தென்கிழக்கில் ஆடம்பரமான கலையமிசமும் அழகும் பொருந்திய வீட்டில் குடியிருப்பீர்கள்.

சேயுடன் புதன், சனி ஆகியன கூடினால் தனச்சேர்க்கையும் கொடுக்கல் வாங்கலில் வில்லங்கமும் விவகாரமும் ஏற்படக்கூடும். தந்தையின் அன்பும், ஆதரவும் கிடைக்கும். எதிரிகளால் அவ்வப்போது தொல்லை ஏற்படலாம். சேயுடன் குரு, சூரியன் ஆகியன சேர்ந்தால் மத்திம பலன்களே உண்டாகும். இளைய சகோதரரால் மனஸ்தாபங்கள் உண்டாகிப் பின் மறைந்து சமாதானம் ஏற்படும். பொன், பொருள், ஆபரணச் சேர்க்கை ஆகியன இருக்கும். பின், அவை விரயமாகவும் நேரும்.

சேயுடன் இராகு கேதுகள் சேர்ந்தால் மத்திம, அதம பலன்களைத் தருவார்கள். விஷரோகம், மது, மாது போன்றவற்றால் கெடுதியான பலன்கள் ஏற்படும். சுப்பிரமணியருக்கு அர்ச்சனையும், செவ்வாய்க்கு பிரீதி, எந்திர, மந்திர பூஜைகளும் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

மகர இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதி செவ்வாய் இராசிக்கு 6ஆம் இடமான மிதுனத்தில் இருப்பதால் மத்திமமான பலன்களே ஏற்படும். தாய், வாயு ரோக வியாதிகள் நிறைந்தவராக இருப்பார். வீடு, மனை, வாகனம் போன்றவை அவ்வளவாக நற்பலன்களைக் கொடுக்க மாட்டா. கல்வி, தடைப்படும். சுகங்கள் கெடும். சத்துருக் களினால் தொல்லை இருக்கும்.

சேயுடன் ஆட்சி பெற்ற புதன் கூடினால் வாயுரோகம், நோய் நொடிகள், சத்துரு விருத்தி போன்றவை ஏற்படலாம். வியாபாரம் நல்ல முறையில் நடக்கும். தான் இருக்குமிடத்திலிருந்து வடக்கில் வீடு, தோட்டம் ஆகியவை இருந்தால் நன்மையான பலன் உண்டாகும். சுக்கிரன் கூடினால், வீடுகள் பல இருந்தாலும் தன் வீட்டில் வசிக்க முடியாத நிலையும், பூர்விகச் சொத்துகளில் வில்லங்கமும், விவகாரமும் வந்து மாறும்.

சேயுடன் சூரியன், குரு ஆகியன கூடினால் விவசாய இலாபங்கள் கணிசமாகக் கிடைக்கும். நிலபுல வருவாய்கள் நன்றாக இருக்கும். சூரியன் இருப்பதால் காட்டுத் தானியங்களான கடலை, மொச்சை போன்ற தானியங்கள் நல்ல விளைச்சலையும் வருவாயையும் தரும். பொன், பொருள், ஆபரணச் சேர்க்கைகள் மட்டுப்படும். உயர்கல்வி பயில முடியாத நிலை ஏற்படும். சிரசு நோயால் அவதி இருக்கக்கூடும்.

சேயுடன் சனி கூடினால் வண்டி, வாகன இலாபங்கள் நல்ல முறையில் இருக்கும். தாய்க்குப் பீடையும், விவசாய இலாபங்களில் நல்ல வருமானமும் கிடைக்கும். எருமையினால் பால் பாக்கியங்கள் கிடைக்கும். பச்சைப் பயறு, எள் போன்ற புன்செய்த்தானியங்கள் நல்ல வரவைத் தரும். கனரக வாகனங்கள் வாங்கும் யோகமும், அவற்றால் பொருள் விரயமும் உண்டு. வாகனப்பழுது அடிக்கடி ஏற்படும்.

சேயுடன் இராகு, கேதுகள் கூடினால் எதிரியை வெல்லும் சாமர்த்தியம், தைரியம் போன்றவை நிறைந்து காணப்படும். ஆனால், மத்திம பலனுண்டு. சுப்பிரமணியருக்கு அர்ச்சனையும், அங்காரகப் பிரீதியும் யந்திர, மந்திர பூஜைகளும் செய்ய நற்பலன்கள் உண்டாகும்.

மகர இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு 7ஆம் இடமான கடகத்தில் நீசம் பெற்றிருப்பதால், தாய்க்கு உஷ்ண ரோகப் பீடையும், கண்டங்களும் அடிக்கடி வந்து மாறும். வீடு, மனை, வாகனங்கள் ஆகியன நஷ்டத்தைத் தரும். விவசாயம், வியாபாரம், பிளவை ரோகம், கட்டிகள் போன்றவற்றால் தொல்லைகள் ஏற்படும். மனைவியினால் தொல்லைகளும் மனக்கசப்பும் உண்டாம்.

நீசம் பெற்ற சேயுடன் குரு உச்சம் பெற்றால் நல்ல பலன்கள் ஏற்படும். இளைய சகோதரரால் நன்மையும், நாற்கால் ஜீவனத்தால் நஷ்டமும், விவசாய மேன்மைகளால் பாதி இலாபமும் ஏற்படும். செவ்வாய் தசை குரு புத்தியிலும், குரு தசை செவ்வாய் புத்தியிலும் இராஜ யோகத்தைக் கொடுக்கும். கல்வியில் பட்டம் வாங்குதல் தடைப்படும். மனைவியால் பொன், பொருள் சேர்க்கை உண்டு. பிற்பகுதியில் காடு கழனிகளால் நஷ்டம் ஏற்படும். பெண்களால் சுகம் கிட்டாது. இதுவும் பாதி கிடைத்தும் கிடைக்காமலும் இருக்கும். போக இன்பத்தில் திருப்தி இராது. வடமேற்கில் வீடமைய விதியுண்டு.

நீசம் பெற்ற சேயுடன் சூரியன், புதன் ஆகியன கூடினால் மத்திமமான பலன்களே ஏற்படும். பிதுர் பாக்கியச் சொத்துக்களை அனுபவிக்கக்கூடிய விதியும், வில்லங்க விவகாரமும் ஏற்படும். காடுகள் அபிவிருத்தி அடையும். பச்சைப்பயறு போன்ற தானியங்கள் நல்ல மகசூலைத் தரும். சேயுடன் சனி, சுக்கிரன் ஆகியன சேர்ந்தால், தொழில் நிர்வாகத்தை மனைவி கவனிப்பார். எருமையினால் பால் பாக்கியம் கிடைக்கும். இவர்களுடன் இராகு, கேதுகள் கூடினால் பலன்கள் மட்டுப்படும். இதற்குச் சுப்பிரமணி யருக்கு அர்ச்சனையும், அங்காரகப் பிரீதியும் செய்தால் நல்ல பலன்களை அடையலாம்.

மகர இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு 8ஆம் இடமான சிம்ம இராசியில் கூடினால், தாய்க்கு மேன்மையும் பூர்வ புண்ணிய வசத்தால் ஆயுள் ஆரோக்கிய விருத்தியும் கிடைக்கும். வீடு, மனை, வாகனங்கள் ஆகியன இருந்தாலும், அந்தச் சுகத்தை அடைய முடியாது. விவசாயங்களுள் புன்செய் விவசாயம் இலாபத்தைத் தரும்.

சேயுடன் ஆட்சி பெற்ற சூரியன் கூடினால் ஆயுள் நிலை நன்றாக இருக்கும். கல்வியில் கஷ்டப்பட்டே உயர்கல்விப் பட்டம் வாங்க முடியும் நிலை உருவாகும். காடு கழனிகளில் அவ்வளவாக இலாபத்தை எதிர்பார்க்க முடியாது. செம்மண் பூமி வகையால் அபரி மிதமான இலாபம் கிடைக்கும். வீடு, மனை, வாகனங்கள் ஆகிய வற்றில் அடிக்கடி பழுது ஏற்படும். கிழக்கில் வீடமைய விதியுண்டு.

சேயுடன் குரு, சுக்கிரன் ஆகியன கூடினால், மிகவும் மத்திமமான பலன்களே ஏற்படும். புத்திரரால் உபத்திரவம் உண்டு. தொழில் நஷ்டங்கள் ஏற்படும். நிரந்தரத் தொழில் இல்லாமையால் குடும்பக் கஷ்டத்தை நீங்களே சுமக்க விதி உண்டாகும். இளைய சகோதரர் பாசமுடன் இருப்பார். குடும்பத்தை நிர்வகிப்பார்.

சேயுடன் இராகு, கேது, சனி ஆகியன கூடினால், கனதனச் சேர்க்கையிராது. பொன், பொருள், பூஷணாதிகளை இளமையில் அடைய முடியாது. தங்கம், இரும்பு போன்ற உலோகங்களை விற்க வேண்டியது இருக்கும். ஸ்ரீ சுப்பிரமணியருக்கு அர்ச்சனையும், அங்காரகப் பிரீதியும் செய்தால் நன்மையான பலன்களை அடையலாம்.

மகர இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியாக உள்ள செவ்வாய் இராசிக்கு 9ஆம் இடமான கன்னியில் இருந்தால் மத்திமமான பலன்களுண்டு. தாயும் தந்தையும் நல்ல ஒற்றுமையுடன் இருப்பார்கள். வீடு, மனை, வாகனம் போன்றவை நல்லபடியாக இருக்கும். இப்போது அவ்வளவாக நல்ல பலன்களை அனுபவிக்க முடியாது. விவசாய நட்டங்களும் ஏற்படும்.

சேயுடன் புதன் உச்சமாகிக் கூடினால் தாய் தந்தையர் ஒற்றுமை யுடன் வாழ்வார்கள். வீடு, மனை, வாகனங்கள் ஆகியன நன்கு அமையும். விவசாயம், பசுமைப்புரட்சி வழியில் நல்ல அமோக விளைச் சலைப் பெற விதி உண்டு. வாகனங்கள் நல்ல அபிவிருத்தியடையும். கால்நடை வர்க்கங்களினால் பால் பாக்கியம் கிட்டும். பசு விருத்தியாகும். இருப்புக்கு வடக்கில் வீடு, தோட்டம் ஆகியன அமைய விதியுண்டு. கல்வியில் கணிதப் பயிற்சியில் பட்டம் பெற யோகமுண்டு. வாக்கில் சாதுரியம், நூதனத் தொழில், பிதுர் பாக்கியங்களை அனுபவிக்க நேர்தல் ஆகியன வாய்க்கும்.

சுக்கிரன் நீசமாகிச் சேயுடன் கூடினால் பூர்வ புண்ணியச் சொத்துகளை அடைய விதி இல்லை. பால் பாக்கியம் மட்டுப்படும். கால்நடைச் செல்வ அபிவிருத்தி இராது. தத்தம் திசைப் புத்திகளில் இராஜயோகத்தைக் கொடுப்பார்கள்.

சேயுடன் சூரியன், குரு ஆகியன கூடினால் பொன், பொருள் சேர்க்கை உண்டு. தகப்பனாருக்குக் கண்டமுண்டு. மத்திம பலன்களே உண்டாகும். இராகு, கேது ஆகியன கூடினாலும் மத்திமமான பலன்களை உண்டுசெய்யும். சுப்பிரமணியருக்கு அர்ச்சனையும், அங்காரகப் பிரீதியும், யந்திர, மந்திர பூஜைகளும் செய்தால் நல்ல இலாபம் உண்டாகும்.

மகர இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சேய், இராசிக்கு 7ஆம் இடமான துலாத்தில் நட்புடனிருப்பதால் மத்திமமான பலன்களே உண்டாகும். தாய், நல்லபடியாக இருப்பார். வீடு, மனை, வாகனங்கள், கல்வி, விவசாயம், சொத்து, சுகம் போன்றவை நல்ல பலனைத் தரும். தாய்க்கு ஆயுள், ஆரோக்கியம் ஆகியன நிறையவுண்டு.

சேயுடன் சுக்கிரன் ஆட்சியாக இருந்தால், கலையமிசம் பொருந்திய வீடுகள், மாளிகை போன்ற வீடுகள் ஆகியன இருக்கும். மனைகள், கட்டடங்கள் ஆகியன பல உண்டு. பால் பாக்கியம் பெருகும். கால்நடை விருத்திகளும், பசு விருத்திகளும் உண்டு. அலங்கார மனை, அலங்கார ஊர்திகள் ஆகியவற்றை அனுபவித்துச் சுகித்திருப்பர். நூதனத் தொழில் மேன்மைகளும், ஆடை ஆபரணச் சேர்க்கையும் உண்டாகும்.

சேயுடன் சனி உச்சமாகக் கூடினால் கனரக வாகனங்களுக்கு அதிபதியாகவும், எருமை விருத்திகள் மூலம் பால் பாக்கியம் பெறவும் விதியுண்டு. கனதனச் சேர்க்கை, இயந்திர சாலைகள் மூலம் அதிக இலாபங்கள், அதிநூதன தொழில் மேன்மைகள் ஆகியன உண்டாகும். இருப்புக்குத் தென்கிழக்கில் வீடு, தோட்டம் ஆகியன அமைய விதியுண்டு. கல்வியில் பட்டம் பெற்றவராகவும், கலைகளில் பிரியம் கொண்டவராகவும் இருப்பார்கள்.

சேயுடன் சூரியன், சனி சுகியான சுக்கிரன் ஆகியோர் கூடி இருந்தால் நீசபங்க ராஜயோகத்தைக் கொடுப்பார்கள். அவர்களுடன்

புதன் சேர்ந்திருந்தால், மத்திமமான பலன்களைக் கொடுப்பாரென்று அறியலாம். விவசாயம், காடு, கழனிகள் ஆகியன நற்பலனைக் கொடுக்கும். இராகு, கேது ஆகியன செவ்வாயுடன் கூடினால் அதம பலன்களைக் கொடுக்கும். சுப்பிரமணியருக்கு அர்ச்சனையும், அங்காரகப் பிரீதியும், யந்திர, மந்திர பூஜைகளும் செய்தால் நல்ல பலன்களை அறியலாம் என்று சந்திரநாடி கூறுகிறது.

மகர இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதி சேய் இராசிக்கு 11ஆம் இடமான விருச்சிகத்தில் ஆட்சி பெற்றிருந்தால் நல்ல உத்தமமான பலன்கள் நடக்கும். தாய்க்கு நல்ல விதமான ஆயுள், ஆரோக்கியம் ஆகியன இருக்கும். வீடு, மனை, வாகனங்கள், கல்வி, சொத்து, சுகம் போன்றவற்றால் நல்ல இலாபம் கிடைக்க விதியுண்டு. கல்வியில் பட்டம் பெறுதலும், மூத்த சகோதரரால் நன்மையும் உதவியும் இலாபமும் உண்டு. தெற்கில் வீடமைய விதியுண்டு.

ஆட்சி பெற்ற சேயுடன் சூரியன், குரு ஆகியன கூடினால் சகோதரர்களால் நன்மையும், உதவியும் கிடைக்க விதி உண்டு. பால் பாக்கியங்களும், ஆட்டு வர்க்கத்தினால் அதிக இலாபமும் கிட்டும். விவசாயத்தில் செம்மண் பூமியாகில் நல்ல பலன்களைத் தரும். புன்செய்ப்பயிரான துவரை, கடலை ஆகியன நல்ல விளைச்சலுடன் அதிக இலாபத்தைத் தரும். வண்டி வாகனங்களால் நல்ல வருமானம் கிட்டும். நிலபுலன் சேர்க்கை உண்டாகும். வீடுகள், மாட மாளிகைகள் போன்றவை நல்ல இலாபம் தரக்கூடியனவாய் இருக்கும். ஆடை, அணிகலன்கள் சேர்க்கை உண்டாகும்.

ஆட்சி பெற்ற சேயுடன் புதன், சுக்கிரன் ஆகியவர்கள் கூடினால் மத்திமமான பலன்கள் நடக்கும். ஆடை, அணிகலன் சேர்க்கை, பால் பாக்கியம், வீடு, வாகனங்களில் அவ்வப்போது சிறு சிறு வழக்கு, வில்லங்கம், பிதுர் வழி சொத்துகளால் வில்லங்கம் ஆகியன ஏற்படும். சேயோடு சனி கூடினால் கனதனச் சேர்க்கை இருக்கும். விவசாய மேன்மைகளால் இலாபங்களும் உண்டாகும்.

சேயுடன் இராகு உச்சம் பெற்றால் பட்டமும் தைரியமும், நஞ்சை புஞ்சையால் இலாபமும், பிதுர் வர்க்கத்தினரான பாட்டன் பாட்டிக்குச் சுகமும் ஏற்படும். சேய்க்குப் பிரீதியும், சுப்பிரமணியருக்கு

அர்ச்சனையும், மந்திர, யந்திரப் பிரீதிகளும் செய்தால் நன்மை உண்டாகும்.

மகர இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதி சேய், இராசிக்கு 12ஆம் இடமான தனுசில் பகை பெற்றிருப்பதால் மத்திமமான பலன் களையே கொடுப்பார். தாய்க்குத் திரேக சௌக்கியம் குறைந்து காணப்படும். வீடு, மனை, வாகனங்கள் போன்றவற்றின் மூலம் பலன் குறைவாக அனுபவிக்க விதியுண்டு. கல்வியில் பட்டம் பெறுவதில் தடை உண்டாகும். பிளவைகள், கட்டிகள், இரத்த சம்பந்தமான நோய்கள், பிணி பீடைகள் ஆகியன இருப்பதால் சுகக்கெடுதல் ஏற்படும்.

தனுசில் சேயுடன் ஆட்சி பெற்ற குரு கூடுவதால் பொன், பொருள், ஆபரணச் சேர்க்கையுண்டு. இருப்புக்கு வடகிழக்கில் வீடு, தோட்டம், நிலபுலம் ஆகியவற்றை அடைய விதியுண்டு. கஷ்டப்பட்டே பட்டம் வாங்க வேண்டியது இருக்கும். அதனால் பண விரயமும், பொருள்கள் விரயமும் ஏற்படும். தனுசில் சேயுடன் சனி கூடினால் விவசாய மேன்மைகளும் நஞ்சை, புஞ்சை, வீடு, மனை, வாகனங்கள் போன்றவற்றால் விரயமும், சுக சௌகரியக் குறைவும் வறுமை, கஷ்டம், நஷ்டம் ஆகியனவும் ஏற்படும். காணி, பூமி ஆகியன விரயமாகும்.

தனுசில் சேயுடன் புதன், சூரியன் ஆகியன கூடினால் தொழில் மேன்மைகளும் இலாபங்களும் உண்டாகும். வியாபாரம் நல்ல நிலையில் இருக்கும். விவசாய மேன்மைகள் உண்டாகும். வில்லங்க விவகாரத்தில் தீமை ஏற்படும். தெய்விக வழிகளில் ஈடுபாடு நிறைந்திருக்கும். மொத்தத்தில் சிரமமான வாழ்க்கையுண்டு. முன் இலாபங்களும் பின் நஷ்டங்களும் உண்டாகும்.

சேயுடன் இராகு கூடினால் தொழில் செய்வதால் வந்த இடையூறுகளை எல்லாம் போக்கச் செய்வார். மது, மாது, சூது ஆகிய தொடர்பு ஏற்படக்கூடும். சுப்பிரமணியருக்குப் பூசையும், அர்ச்சனையும் யந்திர, மந்திர பிரீதியும் செய்தால் நற்பலன்களை அடையலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.

மகர இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியாகிய செவ்வாய் இராசியிலே உச்சம் பெற்றிருப்பதால், தாய் நல்ல திடகாத்திரமாய்

இருப்பார். வீடு, மனை, வாகனம், விவசாயம், சொத்து, சுகம், கல்வி போன்றவை நிறைந்தும், பெண் சுகங்கள் நிறைந்தும், பணியாள்களுக்கு மத்தியில் நல்ல சுக போகங்களுடனும் வாழ்வார்கள்.

உச்சம் பெற்ற சேயுடன் ஆட்சி பெற்ற சனி கூடினால், வீடு, மன்ன, நிலபுலம், கால்நடை, வாகனங்கள், வண்டி வாகனங்கள், கனரக வாகனங்கள், எந்திரங்கள், நிறைந்த பணியாள்கள் முதலிய வற்றைப் பெற்றிருப்பார்கள். பால் பாக்கியம் வாய்க்கும். சொத்து சுகம் கிட்டும். கால்நடைகளுள் ஆடுகள், எருமைகள் விருத்தியடையும். பெரியோர்களின் ஆசி கிட்டும். விவசாய மேன்மைகள் உண்டாகும். தானிய விளைச்சலால் நன்மையும் இலாபமும் ஏற்படும். பெண்களின் மூலம் சொத்துச் சேர்க்கையும் உண்டாகும்.

சேயுடன் சுக்கிரன் சேர்ந்தால் கவி பாடும் திறமையும் கல்வியில் புலமைப் பட்டமும் வாய்க்கும். நல்ல திறமையும் உண்டாகும். இருப்புக்கு வீடு, தோட்டம் ஆகியன அமைய விதியுண்டாம். சேயுடன் புதன் சேர்ந்தால் பசுமைப் புரட்சி ஏற்படும். பிதுர்களுக்கு இவரால் மோக்ஷ பரிகாரமும் தவறாது பிண்டமும் கிடைக்கும்.

சேயுடன் இராகு சேர்ந்தால் ஞானம், கீழ்த்தரமான வியாபார மேன்மை, அழகிய பொருள்களினால் இலாபம், கீழ்க்குலத் தொழிலால் நன்மையும் இலாபமும் ஆகியன உண்டு. கேது கூடினால் தரித்திரம் உண்டாகும். இதற்குச் சுப்பிரமணியருக்கு அர்ச்சனையும், அங்காரகப் பிரீதியும் செய்தும், யந்திர, மந்திர பூசைகள் செய்தும் நன்மையான பலனைப் பெறலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.

மகர இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதி இராசிக்கு 2ஆம் இடத்தில் கும்பத்தில் நட்புடன் அமர்ந்திருப்பதால் மத்திமமான பலனுண்டு. தாய்க்குத் திரேக மேன்மை உண்டாகும். வீடுகள், நிலபுலன்கள், வண்டி, வாகனச் சேர்க்கை ஆகியவற்றால் இலாப முண்டாகும். கல்வியில் பட்டம் பெறுவார்கள். விவசாயம் நல்ல இலாப முறையில் நடக்கும். சொத்து சுகங்கள் நல்லபடியாக இருக்கும்.

சேயுடன் ஆட்சி பெற்ற சனி கூடினால் நன்மையான பலன்கள் உண்டாகும். கனதனச் சேர்க்கை உண்டாகும். வாக்குச் சாதுரியம் இருக்கும். வீடு, வாசல், நிலபுலன்களால் நல்ல வரவு இருக்கும். தாய்,. குடும்பத்தை நிர்வகிப்பவராய் இருப்பார்; ஆனால், அடிக்கடி நோய்வாய்ப்படுவார். வண்டி, வாகனங்களினால் நற்சுகமும் கால் நடை விருத்தியும் எருமையினால் பசு, பால் விருத்தியும் பாக்கியங்களும் உண்டாகும். இருப்புக்கு மேற்கில் வீடு கட்ட விதியுண்டு. விவசாய மேன்மை உண்டாகும்.

சேயுடன் சூரியன், குரு ஆகியன கூடினால் அவ்வளவு நன்மையான பலன்களைச் சொல்ல முடியாத நிலை உருவாகும். குடும்பத்தில் சுகக்குறைவும், நிம்மதிக் குறைவும் உண்டாகும். வீடு, மனை, வாகனம் போன்றவை ஒவ்வொன்றாக விரயமாகும் சூழ்நிலை உருவாகும். பொன், பொருள் சேர்க்கையுண்டு. அதன்மூலம் இலாபமும் உண்டு.

சேயுடன் சுக்கிரன் கூடினால் விவசாய மேன்மை உண்டு. காடுகள், நல்ல விளைச்சலைத் தரும். கல்வியில் புலமைப்பட்டம் பெறும் யோகமும் உண்டு. கலாரசனை உங்களுக்கு இருக்கும். தொழில் மூலம் எஃகு, இரும்பு, இயந்திரத் தொழில்கள் கணிசமான இலாபத்தைக் கொடுக்கும். இராகு கேதுகள் சேர்ந்தால் மத்திமமான பலன்களே ஏற்படும். இதற்குச் சுப்பிரமணியருக்கு அர்ச்சனையும், அங்காரகப் பிரீதியும், எந்திர, மந்திர பூஜையும் செய்தால் நன்மையான பலன்களை அடைய முடியும் என்று சந்திர நாடி கூறுகிறது.

மகர இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதி செவ்வாய் இராசிக்கு 3ஆம் இடமான மீனத்திலிருந்து பகை பெற்றால் மத்திமமான பலன்களே உண்டாகும். தாய்க்குப் பீடை உண்டு. உங்களின் இளைய சகோதரர்கள் நன்கு சிறந்து விளங்குவார்கள். வீடு, மனை, வாகனம், கல்வி, விவசாயம், சொத்து சுகம் ஆகியவை எல்லாமே மட்டுப்படும்.

செவ்வாயுடன் குரு ஆட்சி பெற்றுக் கூடினால் இளைய சகோதரர் களால் நன்மையும் உதவியும் உண்டு. வீடு, மனை, வாகனங்களால் அற்ப சுகமே ஏற்படும். பட்டம், பதவி, புகழ், நல்லொழுக்கம் போன்றவை இருக்கும். கல்வியில் உயர்கல்விப் பட்டம் பெறுதல் உண்டு. தைரியம், வீரியம் ஆகியன நிறைந்து இருக்கும். கால்நடை

வாகனங்களின் அபிவிருத்தி குறைவுபடும். பால் பாக்கியமும் பசு விருத்தியும் நிறைந்து இருக்கும். இருப்புக்கு வடகிழக்கில் வீடு, தோட்டம், நிலபுலம் ஆகியன அமைய விதியுண்டு.

செவ்வாயுடன் சுக்கிரன் உச்சமாகிக் கூடினால் கலைத் தொழிலால் மிக்க இலாபமும், லாட்ஜ், சினிமாத்துறை, நாடகம், சங்கீதம் போன்ற தொழில்களின் மூலம் நல்ல பலன்களும் இலாபமும் கிடைக்க விதியுண்டு. விவசாயத் தொழிலினால் நல்ல நன்மையும் உண்டு. பூர்வ புண்ணியச் சொத்துகளை அனுபவிக்க விதி உண்டாகும். பெண்களால் சுகபோகமும் உண்டு.

செவ்வாயுடன் புதன் நீசமாகிக் கூடினால் மத்திம பலன்களும் அதம பலன்களும் ஏற்படும். தகப்பனாருக்குப் பீடை ஏற்படும். தகப்பனார் சொத்துகளை அனுபவிக்க முடியாது. சேயோடு சனி கூடினால் கல்வியில் தடை ஏற்படும். தைரியம், வீரியம் ஆகியன நிறைந்திருக்கும். இராகு கேதுகள் கூடினால் நன்மையான பலன்களைத் தாரா. சுப்பிரமணியருக்கு அர்ச்சனையும், அங்காரகப் பிரிதீயும், யந்திர, மந்திர பூஜைகளும் செய்தால் நல்ல பலன்களை அறியலாம் என்று நாடி நூல் கூறுகிறது.

## கும்பம்
## நான்காம் பாவம்

அசுர குரு சுக்கிராச்சாரியை 4ஆம் இடத்ததிபதியாகப் பெற்ற கும்ப இராசி அன்பர்களே!

4ஆம் பாவமென்பது தாய், வண்டி, வாகனம், நிலம், நீச்சு, காடுகள், விவசாயம், சுகம் போன்ற பலன்களைக் குறிப்பிடும்.

இந்த நாலாம் பாவ பலன்களை மேஷம் முதல் மீனம்வரை சுக்கிரானானவர் இராசிக்கு எத்தனையாவது இடத்தில் இருக்கின்றார் என்று பார்த்துத் தங்களின் பலனை அறிந்துகொள்ளவும். சுக்கிரன் தன் சத்துருக்களுடன் கூடித் துர்பலன்களைக் கொடுக்க நேர்ந்தால், சுக்கிரனின் யந்திர, மந்திர பிரீதிகளைப் பயன்படுத்தி உயர்வான பலன்களைப் பெறவும்.

"வண்டியொடு வாகனங்கள் போகசுகம்
வழுத்தக்கேள் கும்பமென்ற மதியோர்க்கு
கண்டிடினும் காரகனாம் சுங்கனவர்
கருத்தான சுபரில்லம் கூடிடினும்
விண்டுரைப்பேன் வயல்மேலாய் வரப்புயோகம்
வையகத்தில் மைந்தனுக்கும் பலபடவாய்
மொண்டுமேல் நங்கையரைக் கூடும்சுகம்
மைந்தனவன் பல்வாறாய்ப் பெறுவான்தானே"

"கொல்லுமது பாவரில்லச் சேர்க்கையாலும்
குருடான சுங்கரவர் உச்சமாகி
வல்லதோர் யோகமது கொடுத்தாலும்
வருத்தியே விட்டிடினும் தொடருமேதான்"

சுக்கிரன் நீசபங்க ராஜயோகம் செய்தாலும் உயர்பலனைக் கொடுத்தாலும் தான் வருந்துமாறு கடுமையான செயலுக்குப் பின்னே கொடுப்பாரெனப் படுகின்றது.

கும்ப இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 4ஆம் இடத்தில் ரிஷபத்தில் ஆட்சி பெற்றால், தாய் நல்ல ஆயுள், ஆரோக்கியத்துடன் இருப்பார்கள். வீடு, மனை, வாகனம், கல்வி, விவசாயம், சொத்து, சுகம் போன்றவை நிறைந்தவர்களாய் இருப்பார்கள். அலங்கார மனைகள், அலங்கார ஊர்திகள், பால் பாக்கியங்கள் ஆகியன அதிகம் உள்ளவர்களாய் இருப்பார்கள். பெண்களினால் நற்சுகமும், கல்வியில் பட்டமும் பெறுவார்கள். கால் நடை அபிவிருத்தி, எருது அபிவிருத்தி ஆகியன உண்டாகும். தென்கிழக்கில் வீடு அமைய விதி உண்டாகும்.

சுக்கிரனுடன் சூரியன், குரு ஆகியன சேர்ந்தால் மனைவியால் நற்சுகமும், ஆடை, ஆபரணச் சேர்க்கைகளும் வண்டி, வாகனச் சேர்க்கைகளும் விவசாய நன்மைகளும் பால் பாக்கியங்களும் காடுகள் வளர்ச்சி பெறுதலும் புன்செய்த் தானிய வகைகள் அமோக விளைச்சலும் உண்டாகும். நல்ல இலாபங்களும் உண்டாகும்.

சுக்கிரனுடன் சனி சேர்ந்தால் எருமை, இயந்திர விருத்திகளும், நற்சுகமும் உண்டாகும். கல்வியில் பட்டம் பெறுவார்கள். அதனால் விரயமும் உண்டாகும். சுக்கிரனுடன் புதன் சேர்ந்தால் பூர்வ

புண்ணியச் சொத்துகளை அனுபவிக்கும் யோகமும், ஆயுள் விருத்தியும் உண்டாகும். சுக்கிரனுடன் செவ்வாய் சேர்ந்தால் இளைப சகோதரரால் நன்மையும் தொழிலில் இலாபமும் உண்டாகும்.

சுக்கிரனுடன் இராகு கேதுகள் கூடினால் மயக்க வஸ்துகளுக்கு அடிமையாவார்கள். பாட்டன் பாட்டிகளால் நன்மைகள் உண்டாகும். மர்மமான முறையில் பெண்களால் வியாதிகள் உண்டாகும். சுக்கிரனுக்கு எந்திர, மந்திர பிரீதிகளும் மஹாலக்ஷ்மிக்கு பூஜையும் செய்தால் நன்மைகளை அடையலாம் என்று நாடி நூல் கூறுகிறது.

கும்ப இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 5ஆம் இடத்தில் நட்டனிருந்தால், தாய் நல்ல சௌகரியங்களுடன் இருப்பார். வீடு, மனை, வாகனங்கள், கல்வி, விவசாயம், கீர்த்தி, புத்திர சந்தானங்களால் நன்மை, செல்வம், செல்வாக்கு ஆகியன உடையவராக இருப்பார்கள். அலங்கார மனைகள், பூர்வ சொத்துகள் மூலம் இலாபம் ஆகியன உண்டாகும்.

சுக்கிரனுடன் ஆட்சி பெற்ற புதன் கூடினால் வண்டி, வாகன சேர்க்கையும், பூர்வ புண்ணியச் சொத்துகளை அனுபவிக்கும் பாக்கியமும், பால் பாக்கியமும், கால்நடை அபிவிருத்திகளும், பச்சைத் தானியப் பயறுகள் போன்றவற்றினால் இலாபமும் உண்டாகும். கணிதக் கல்வியில் உயர்பட்டம் பெறுவார்கள் நற்சுகமும் சுகபோஜனமும் உண்டாகும். இருப்புக்கு வடக்கில் நிலம், வீடு, தோட்டம் ஆகியன அமைய விதி உண்டு.

சுக்கிரனும் இராசிநாதன் சனியும் கூடினால் பூர்வ புண்ணியம் நிறைந்தும், பால் பாக்கியங்களும் சுனதன யோகங்களும் மெத்தவுண்டாகும். மாடி, மனைகள், கரிசல் காடுகள் மூலம் எள் போன்ற தானியங்களும், சுனரக வாகனத்தினால் நன்மையான பலனும் உண்டாம். எருமை விருத்தி நல்லபடியாக இருக்கும்.

சுக்கிரனுடன் சூரியன், செவ்வாய், குரு ஆகியன சேர்ந்தால் மத்திமமான பலனே நடக்கும். மனைவியால் நற்சுகமும் இளைய சகோதரரால் நல்லுதவியும் வாக்கு சாதுரியமும் அதனால் வியாபார இலாபமும் உண்டாகும். சுக்கிரனுடன் இராகு, கேது ஆகியன கூடினால் சுமாரான மத்திம பலனே நடக்கும். சுக்கிரனுக்குக் கிரகப்

பிரீதியும், எந்திர, மந்திர பூஜைகளும் ஸ்ரீ மகாலக்ஷ்மிக்கு அர்ச்சனையும் ஆராதனையும் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

கும்ப இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதி சுக்கிரன் இராசிக்கு 6ஆம் இடமான கடகத்தில் பகை பெற்றிருந்தால் மத்திம பலனே. தாய்க்குப் பீடையுண்டாகும். சுக சௌகரியங்களை இழப்பார்கள். தாயோடு விரோதம் கொள்வார்கள். வீடு, மனை, வாகனங்களினால் சண்டை சச்சரவும், தண்டச்செலவும் ஏற்படும். பால் பாக்கியம் நிறைந்து இருக்கும். கால்நடை அபிவிருத்தி மந்தமாகும். நோய் நொடிகளால் அவதியுறுவார்கள். கல்வி, தடைப்படும். விவசாயங்கள் நட்டத்தையே தரும்.

சுக்கிரனுடன் உச்சம் பெற்ற குரு கூடினால் பொன், பொருள், ஆபரணச் சேர்க்கை, கனதனச் சேர்க்கை ஆகியன இருந்தும் கடன்களால் தொல்லையும் நஷ்டமும் ஏற்படும். வாகனங்களால் நல்ல இலாபங்களும், வாக்கு சாதுரியமும் ஏற்படும். வியாதி, பீடைகள் ஆகியன நிறைந்திருக்கும். இருப்புக்கு வடக்கில் வீடு, தோட்டம் ஆகியன அமைய விதியுண்டு.

சுக்கிரனுடனும் குருவுடனும் நீசம் பெற்ற செவ்வாய் கூடினால் இளைய சகோதரரால் சண்டை சச்சரவுகளும் மனஸ்தாபமும் இருக்கும். முற்பகுதியில் தொழிலில் நஷ்டமும் கஷ்டமும் ஏற்படும். தத்தம் திசை புத்திகளில் குருவும் செவ்வாயும் இராஜயோகத்தைக் கொடுப்பார்கள்.

சுக்கிரனுடன் புதன், இராகு கேதுகள் ஆகியன சேர்ந்தால் மத்திம பலன் உண்டாகும். புலால் உண்ணும் பழக்கம், சத்துருக்களை வெற்றி கொள்ளுதல், மது, மாதுக்களால் வியாதி ஆகியவற்றைப் பெற்றிருப்பார்கள். மஹாலக்ஷ்மிக்குப் பூஜையும், சுக்கிரனுக்கு எந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் நல்ல பலன்களை அடையலாம்.

கும்ப இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 7ஆம் இடமான் சிம்மத்தில் பகை பெற்று அமர்ந்திருப்ப தால் மத்திமமான பலன்களே நடக்கும். தாய், உடல் நலத்தை இழந்திருப்பார். வீடு, மனை, வாகனம் போன்றவை இருந்தும் அவற்றை அனுபவிக்க முடியாத நிலை இருக்கும். இவற்றின் மூலம்

இலாபம் கிடைக்கும். வருமானமும் செலவும் இருந்துகொண்டே இருக்கும். மனைவி சொல்லைக் கேட்பவராக இருப்பார்கள்.

சுக்கிரனுடன் சூரியன் கூடி ஆட்சி பெற்றால் மனைவியால் ஆடை, ஆபரணச் சேர்க்கையும் பொன், பொருள் பூஷணாதிகளும், முன்கோபமும் உண்டாகும். காடு, கழனிகள் வறட்சியால் விளைச்சல் இராது. இவர்களுடன் குரு சேர்ந்தால் விவசாய இலாபங்களும் மேன்மைகளும் உண்டாகும். தெய்விக வழிபாடுகளில் மனைவி சிறந்து இருப்பாள். இளைய சகோதரர், வாக்கு சாதுரியம், குடும்பத்தில் நிம்மதி ஆகியன உண்டு. அடிக்கடி, குடியிருக்கும் வீட்டை மாற்றவேண்டிவரும்.

சுக்கிரனுட புதனும் சனியும் கூடினால் நற்பலன்கள் உண்டு. பூர்வ புண்ணியச் சொத்துகளை அனுபவிப்பவர்களாகவும், வண்டி, வாகனங்களை உடையவர்களாகவும், கால்நடை அபிவிருத்திகளான கன்று காலிகளால் நல்ல வருமானம் உடையவராயும் இருப்பார்கள்.

சுக்கிரனுடன் செவ்வாய், இராகு கேதுகள் ஆகியன கூடினால் வரக்கூடிய மனைவி, முன்கோபமும் அகங்காரமும் தைரியமும் வீரியமும் நிறைந்தவளாய் இருப்பாள். இருப்பினும் மத்திம பலனே கொடுக்கும். மகாலட்சுமிக்குப் பூஜையும், சுக்கிரனுக்குக் காரகப் பிரீதியும், யந்திர, மந்திர பூஜைகளும் செய்தால் பலன்களை அடையலாம்.

கும்ப இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 8ஆம் இடத்தில் கன்னி இராசியில் நீசம் பெற்றால் அதம பலன்களே உண்டாகும். தாய்க்கு அசௌகரியங்கள், பீடைகள் ஆகியன உண்டு. தாயார் வறிய குடும்பத்தில் பிறந்தவராய் இருப்பார். வறுமையை அனுபவிக்க நேரிடும். வண்டி, வாகனங்கள், விவசாயம் ஆகியன நல்ல பலனைத் தாரா. கல்வி பயில முடியாது. கால்நடைகளால் நஷ்டமே ஏற்படும்.

நீசம் பெற்ற சுக்கிரனுடன் உச்சம் பெற்ற புதன் கன்னியில் கூடினால், நீசபங்க இராஜயோகம் ஏற்படும். புதன் திசை சுக்கிர புத்தியிலும், சுக்கிர திசை புதன் புத்தியிலும் மாறி மாறி இலாபத்தைக் கொடுத்து இராஜ யோகத்தைக் கொடுப்பார்கள். தகப்பனாருக்கு அதிகப் பீடைகள் உண்டு. பிதுர்ராஜித சொத்துகளை அனுபவிக்க

முடியாத நிலை உருவாகும். வண்டி வாகன யோகங்களும் உண்டாகும். இருப்புக்கு வடக்கில் வீடு, மனை ஆகியன அமைய யோகமுண்டு. விவசாயம், கால்நடைகள் ஆகியவற்றால் இலாப முண்டு. கல்வியில் பட்டம் பெறுவார்கள். பெண்களால் நற்சுகமும் உண்டு.

நீசம் பெற்ற சுக்கிரனுடன் சூரியன், செவ்வாய், குரு ஆகியன கூடினால் மத்திம பலனே உருவாகும். மனைவியால் அடிக்கடி மனஸ் தாபம் ஏற்படும். இளைய சகோதரர் மூலம் சண்டை ஏற்படும். பின் அவர் நன்மையும் உதவியும் செய்வார். தொழில் முடக்கம் ஏற்படும். பணம் விரயமாகும். இலாபங்கள் மத்திமப்படும். மகா லட்சுமிக்குப் பூஜையும், சுக்கிரனுக்குப் பிரீதியும், யந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் நற்பலன்களை அடையலாம் என்று ஸ்ரீ பதஞ்சலி மகரிஷி, சந்திர நாடியின் வாயிலாகக் கூறுகிறார்.

கும்ப இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதி சுக்கிரன் இராசிக்கு 9ஆம் இடத்தில் துலா இராசியில் ஆட்சி பெற்றிருப்பதால் நல்ல உத்தமமான பலன்கள் உண்டு. தாய், தந்தையர் நல்ல திரேக மேன்மையுடன் இருப்பார்கள். வீடு, மனை, வாகனங்கள், கல்வி, விவசாயம், கீர்த்தி, சொத்து, சுகம், பந்துக்கள் வருகை, சுக போஜனம் ஆகியவை நல்ல முறையில் இருக்கும். கல்வியில் பட்டம் பெறுவார்கள். பிதுர்ராஜித சொத்துகளை அனுபவிக்கும் யோகம் உண்டு.

சுக்கிரனுடன் சூரியன் நீசமாகி, சனி உச்சமாகிக் கூடினால் நீசபங்க இராஜ யோகத்தைக் கொடுப்பார்கள். வீடுகள், மனைகள், அலங்கார மனைகள், கட்டடங்கள் ஆகியன பல உண்டு. வண்டி வாகனங்களும் கனரக வாகனங்களும் அவற்றின் மூலம் இலாபமும், நன்மையான பலன்களும் உண்டாகும். பால் பாக்கியம் நிறைந்து காணப்படும். பசு விருத்தியும், எருமை விருத்தியும் அவற்றின் மூலம் இலாபமும் உண்டாகும். பெண்களினால் சுகமும், நற்போஜனமும் உண்டாகும். தெய்வ வழிபாடுகள் சிறந்திருக்கும். இருப்புக்குத் தென்கிழக்கில் வீடமைய யோகமுண்டு. கல்வியில் பட்டம் பெறுவர்.

சுக்கிரனுடன் புதன், செவ்வாய் ஆகியன கூடினால் மத்திம பலனே உண்டாகும். கால்நடை அபிவிருத்திகளும், ஆயுளும்

ஏற்படும். தொழிலில் மேன்மைகளும், இளைய சகோதரரால் நன்மையும் உதவியும் உண்டாகும். இவர்களுடன் இராகு கேதுகள் கூடினால் மத்திமமான பலனே நடக்கும். மகாலட்சுமிக்கு பூஜையும், சுக்கிரனுக்கு எந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் நன்மையான பலனை அடையலாம்.

கும்ப இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 10ஆம் இடமான விருச்சிகத்தில் நட்புடன் இருந்தால் மத்திம பலன்களே நடக்கும். தாய்க்கு நல்ல ஆரோக்கியம் இருக்கும். வீடு, மனை, வாகனங்கள், கல்வியில் பட்டம் ஆகியவற்றைப் பெறுவார்கள். விவசாய மேன்மைகள் உண்டு. கலையமிசம் பொருந்திய வீடுகள், அதிநவீனத் தொழிற்கூடங்கள், திரையரங்கம், கலையரங்கம் முதலியன உண்டாகும். பெண்களினால் சுகமும் மன நிறைவும் ஏற்படும். நற்போஜனமும் உண்டாகும். தெற்கில் வீடு, மனை ஆகியன அமைய விதியுண்டு.

சுக்கிரன் இராசிக்கு 10ஆம் இடத்தில் இருப்பதால் நுட்பமான கலைத்தொழிலால் நல்ல அமோகமான இலாபம் கிடைக்க விதியுண்டாம். சுக்கிரனுடன் செவ்வாய் கூடினால் உத்தியோகத்தில் தொழிலில் மேன்மைகளும் இலாபங்களும், செல்வமும் செல்வாக்கும் உயரும். இராகு சுக்கிரனுடன் கூடினால் சுச்சாப்பொருள் வியாபாரமும், அதன் மூலம் அதிக இலாபமும், மது போன்ற போதை வஸ்துகள் வியாபாரமும் மாமிசம், மீன், கருவாடு போன்ற தொழிலில் மேன்மையும் இலாபமும் கிடைக்க விதியுண்டு. வாகன சுகமும் உண்டு. விவசாயத்தில் நெல்லாலும், புன்செய்க்காட்டுத் தானியங்கள் மொச்சை, துவரை, உளுந்து போன்ற தானியங்களாலும் இலாபம் உண்டாகும்.

சுக்கிரனுடன் குரு, புதன் ஆகியன சேர்ந்தால் வியாபார அபிவிருத்தியும் நல்ல இலாபங்களும் உண்டாகும். மூத்த சகோதரரால் நன்மையும் உதவியும் உண்டு. வாக்கு சாதுரியம் உண்டு. கேது கூடினால் இரசாயனக் கலவைகளால் நல்ல வருமானம் உண்டு. ஆனால், அது சுகத்தைக் கெடுக்கும். சுக்கிரனுக்கு யந்திர, மந்திர பிரீதியும் மகாலட்சுமிக்கு பூஜையும் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

கும்ப இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 11ஆம் இடமான தனுர் இராசியில் நட்புடன் இருப்பதால் மத்திம பலனே உண்டாகும். தாய் நல்ல திரேக மேன்மையுடன் இருப்பார், வீடு, மனை, வாகனம் போன்றவற்றால் நல்ல இலாபம் கிடைக்கும். விவசாயம், நல்ல விளைச்சலைத் தரும். சொத்து, சுகம் போன்றவற்றை அனுபவிக்க விதியுண்டு.

சுக்கிரனுடன் குரு கூடினால் மூத்த சகோதரர்களால் நன்மையும், வீடுகள், அலங்கார மனை ஆகியவற்றால் இலாபமும் கலையரங்கம், திரையரங்கம், அதி நவீன தொழிற்கூடங்கள், "அதிதி கிருகா" (லாட்ஜ்) போன்றவற்றினால் நல்ல இலாபமும் கிடைக்க விதி உண்டாகும். கால்நடை அபிவிருத்தி, பசு விருத்தி, பால் பாக்கியம் ஆகியவை உண்டு. கல்வியில் பட்டம் பெறுவார்கள். சொத்துகளின் மூலம் இலாபமும், இள நங்கையரைக் கூடிச் சுகம் பெறும் பாக்கியமும் உண்டாகும்.

சுக்கிரனுடன் சூரியன், செவ்வாய் ஆகியன கூடினால் மனைவியால் நற்சுகமும், பொன், பொருள், ஆடையாபரணச் சேர்க்கையும், மனைவியால் நற்சுகமும் உண்டாகும். மூத்த சகோதரரால் நன்மையும் உதவிகளும் உண்டாகும். இலாபங்களும் உண்டாகும். இவர்களுடன் புதன் கூடினால் நிபுண யோகம் ஏற்படும். இவர்களுடன் இராகு கேதுகள் கூடினால் நல்ல யோக பலத்தை முற்பகுதியில் எடுத்துக்கொண்டு, பிற்பகுதியில் கொடுப்பார்கள். மகாலட்சுமிக்குப் பூஜையும், சுக்கிரனுக்கு எந்திர மந்திரப் பிரீதியும் செய்தால் நன்மையான பலனை அடையலாம்.

கும்ப இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 12ஆம் இடத்தில் மகரத்தில் நட்புப் பெற்றிருப்பதால் மத்திமப் பலனே உண்டாம். தாய்க்கும் மகனுக்கும் சுக சௌக்கியங்கள் குறைவுபடும்; ஆதரவு இல்லாதவர்களாய் இருப்பார்கள்; வறுமையான நிலையில் இருப்பார்கள். பூமி, காணி நிலங்கள் ஆகியவற்றால் கஷ்டங்களும் விரயங்களும் உண்டாகுமென்பது விதி. வாகன நட்டம் ஏற்படும். விவசாய இலாபங்கள் குறைந்து காணப்படும். கன்று, காலிகள் போன்றவை மூலமும், நிலம் நீச்சு போன்றவை மூலமும் இலாபம் உண்டாகும். பிற்பகுதியில் நட்டமும் உண்டாகும்.

சுக்கிரனுடன் சனி ஆட்சி பெற்றால் நன்மையான பலன்களும், பின்யோகமும் ஏற்படும். வாகன நட்டமும், சுகக் கெடுதிகளும் குறைந்த இலாபமும் காணப்படும். காலம் விரயம், பொருள் விரயம் சுபவிரயம் ஆகியன ஏற்படும். பூமி காணிகளால் நஷ்டமும், இலாபங்கள் குறைந்தும் காணப்படும்.

சுக்கிரனுடன் புதன், சூரியன் ஆகியன சேர்ந்திருந்தால் வண்டி, வாகன சுகங்கள் ஏற்படா. சொத்து, சுகம் ஆகியன நஷ்டத்தைக் கொடுக்கும். பிதுர்ராஜிதச் சொத்துகள் மூலம் வம்பு, வழக்கு ஆகிபன ஏற்படும். மனைவியால் மனஸ்தாபங்கள் ஏற்படும்.

சுக்கிரனும் செவ்வாயும் உச்சம் பெற்றுக் கூடினால் இளைய சகோதரரால் நன்மையும், தொழில் மேன்மையும் உண்டாகும். வீடு. மனை, வாகனங்கள், கட்டடங்கள், விவசாய இலாபம் ஆகியவை உண்டு. குரு நீசம் பெற்றுக் கூடினால் நீச பங்க ராஜயோகம் உண்டாகும். இராகு, கேது ஆகியன கூடினால் மத்திம பலன்கள் உண்டாகும். மகாலக்ஷ்மிக்கு பூஜையும், சுக்கிரனுக்கு எந்திர, மந்திர பிரீதியும் செய்தால் நன்மையான பலன் உண்டாகும்.

கும்ப இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் கும்ப இராசியிலே இருந்தால், மத்திமமான பலன்கள் உண்டு. தாய்க்கு நல்ல திரேக மேன்மை உண்டு. வீடு, மனை, வாகனம், கல்வி, விவசாயம், சொத்து, சுகம் போன்றவற்றால் நல்ல பலன் உண்டாகும். மனைவியால் நல்ல சுகமும், சொத்துகளால் நல்ல இலாபமும் உண்டாகும்.

சுக்கிரனுடன் சனி ஆட்சி பெற்றுக் கூடினால் வீடு, மனை, வாகனங்கள், அலங்கார மனைகள், அலங்கார ஊர்திகள், விவசாய மேன்மைகள், கல்வியில் பட்டம், கனரக வாகனங்களின் மூலம் இலாபம் ஆகியன உண்டாகும். சுக்கிரனுடன் சூரியன், செவ்வாய் ஆகியன கூடினால் தாய்க்கு உடல் மெலிவும், விவசாய நஷ்டமும் உண்டாகும். ஆனால், தொழிலில் நல்ல இலாபம் உண்டாகும். மனைவியினால் நற்சுகம் உண்டாகும். விவசாயத்தில் புன்செய் நிலங்களில் நல்ல விளைச்சலுண்டாகும்.

சுக்கிரனுடன் புதன், குரு ஆகியோர் சேர்ந்தால் பூர்வ புண்ணியச் சொத்துகள் மூலம் இலாபமும், நற்பலனும் உண்டாகும். மூத்த

சகோதரரால் நன்மையும், உதவியும் உண்டாகும். சுக்கிரனுடன் இராகு, கேது ஆகியவர்கள் கூடினால் மது, மாது, சூது ஆகியவற்றில் பிரியம் உடையவர்களாய் இருப்பார்கள். இதற்குச் சுக்கிரனுக்கு எந்திர, மந்திர பிரீதிகள் செய்வதால் நன்மையான பலன் உண்டாகும் என்று சந்திர நாடி கூறுகிறது.

கும்ப இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 2ஆம் இடத்தில் மீனத்தில் உச்சம் பெற்றிருப்பதால், நல்ல உத்தமமான பலன்கள் உண்டாகும். தாய், நல்ல ஆயுளுடனும் ஆரோக்கியத்துடனும் இருப்பார். வீடு, மனைகள், அலங்கார மனைகள், வாக்கு வன்மைகள் ஆகியன உண்டாகும். விவசாய நன்மைகள், ஆடை ஆபரணிகலன்கள் சேர்க்கை, புஷ்பராகம், வைரமணிகள் போன்ற இரத்தின மணிகள் சேர்க்கை, அலங்கார ஊர்திகள் ஆகியன உண்டாகும்.

சுக்கிரனுடன் குரு கூடினால் பொய் பேசாத குணங்களும், ஆடை ஆணிகலன் சேர்க்கையும் உண்டாகும். வாகன சுகம் உண்டு. நேத்திர ரோகம் வந்து மாறும். சுக்கிரனுடன் புதன் நீசமாகிக் கூடினால் நீசபங்க ராஜயோகத்தை அனுபவிக்க விதி உண்டாகும்.

சுக்கிரனுடன் செவ்வாய் கூடினால் இளைய சகோதரர்கள் குடும்பத்தை நிருவகிப்பார்கள். பட்டம், பதவி, புகழ், செல்வம், செல்வாக்கு ஆகியன கிடைக்க யோகமுண்டு. செம்மண் பூமியால் இலாபமும், தொழில் மேன்மையும் உண்டாகும்.

சுக்கிரனுடன் இராகு கேதுகள் கூடினால் மத்திம பலன்களையே உண்டு பண்ணும். குடும்பத்தில் கலகத்தையும், ஒற்றுமையில்லா மையையும் உருவாக்கும். எந்திர, மந்திர பிரீதிகளும் சுக்கிரனுக்கும் மகாலட்சுமிக்கும் அர்ச்சனையும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும்.

கும்ப இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 3ஆம் இடமான மேஷத்தில் சுக்கிரன் நட்புடன் அமர்ந்திருப்பதால், தாய் நல்லபடியாக இருப்பாள். ஆனால், உஷ்ண ரோகம் இருக்கும். வீடு, மனை, வாகனங்கள் போன்றவை நல்லபடியாக இருக்கும். இளைய சகோதரர் மூலம் நல்ல உதவியும் நன்மையும் கிடைக்கும். பட்டம், பதவி, செல்வாக்கு ஆகியன

உண்டாகும். சொத்துகள் மூலம் சுகமும் இலாபங்களும் உண்டாகும். காடு, கழனிகள் நல்ல விளைச்சலுடன் இருக்கும்.

சுக்கிரனுடன் செவ்வாய் சேர்ந்து கூடினால் செம்மண் பூமியால் இலாபமும், இளைய சகோதரரால் நல்ல யோகமும் நன்மையும் உதவியும் உண்டாகும். காடு, கழனிகளில் நல்ல விளைச்சல் உண்டு. மொச்சை, துவரை போன்ற தானியங்கள் நல்ல இலாபத்தைக் கொடுக்கும். வாகனங்களால் நல்ல வருமானமும் உண்டு.

சுக்கிரனுடன் குரு சேர்ந்தால் நல்லதோர் உத்தமமான பலன்கள் உண்டாகும். கனதனச் சேர்க்கை உண்டு. இருப்புக்குத் தெற்கில் வீடமைய விதியுண்டு. சுக்கிரனும், இராகு கேதுகளும் புதனும் சேர்ந்தால் பூர்வ பூண்ணியச் சொத்துகள் மூலம் இலாபத்தை அனுபவிக்க விதி உண்டு. இதற்குச் சுக்கிரனுக்கு பிரீதியும், எந்திர, மந்திர பிரீதியும், மகலாட்சுமிக்குப் பூஜையும் செய்தால் நல்ல பலன்கள் உண்டு என்று ஸ்ரீ பதஞ்சலி மகரிஷி சந்திர நாடியில் கூறுகிறார்.

## மீனம்
## நான்காம் பாவம்

மஹாவிஷ்ணுவின் ரூபமான புதனை நாலாம் இடத்ததிபதியாகப் பெற்ற மீன இராசி அன்பர்களே!

4-ஆம் பாவமென்பது தாய், மனை, வண்டி, வாகனம், நிலம், நீச்சு, காடு, விவசாயம், சுகம், கல்வி போன்ற பலன்களைக் குறிப்பிடும். இப்பதஞ்சலி மகரிஷியின் நாடி வாயிலாக மேஷம் முதல் மீனம்வரை 12 இராசிகளிலும் புதன் நின்ற பலன்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. அவற்றுள் உங்கள் இராசிக்குப் புதன் எத்தனையாவது இடத்தில் இருக்கின்றார் என்று அறிந்து, தங்களின் நாலாம் பாவ பலன்களை அறிந்துகொள்வீராகவும். துர்க்கிரகங்களின் சேர்க்கையால் புதனானவர் துர்பலன்களைக் கொடுக்க நேர்ந்தால், மஹா விஷ்ணுவுக்கு ஆராதனை செய்வதன் மூலமும், கிரக யந்திர, மந்திர பிரீதிகள் மூலமும் உயர்வான பலன்களை அடையலாமெனக் கூறப்படுகின்றது.

"மீனமதி நாலோனும் புங்கனவர்
மதியோடும் பகையோடும் கூடாது
ஆனதொரு வெய்யோனு சுங்கனொடு
ஆண்டதொரு ஆட்சிமனை கூடிடினும்
கூடமேல் பூவையரைக் கூடும்சுகம்
குமரனுக்கு மனையொடுதான் மக்கள்சுகம்
ஆடவரும் சுகங்களொடு அத்துணையும்
அறியவரும் பருவத்திலே கிட்டும் பாராய்..."

புதன் சந்திரனோடு கூடாமல் சூரியன் சுக்கிரனோடு தன்னாட்சி வீடுகளிலும், உச்ச வீடுகளிலும் இருந்தால் நீசபங்க ராஜயோகப் பலன்களை அடையுமாறு 4ஆம் பாவ பலனைச் செய்வார் என்று கூறப்படுகின்றது.

மீன இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 4ஆம் இடமான மிதுனத்திலே ஆட்சி பெற்றால் மிகவும் உத்தமமான பலன்கள் நடக்கும். தாய்க்குத் திரேக மேன்மையும் அந்தஸ்தும் அதிகார பலமும் இருக்கும். வீடு, மனை, நிலபுலன்கள் ஆகியவை நல்ல இலாபம் தருவனவாய் இருக்கும். பல மாடிக் கட்டடங்கள் கட்டும் யோகம் உண்டு. வாகனங்களுள் அலங்கார ஊர்திகளும் உண்டு. கால்நடைச் செல்வங்கள் நிறைய உண்டு. கல்வியில் பட்டம் பெறும் யோகமுண்டு. புஞ்சைக்காட்டுத்தானியங்கள் அமோகமாய் விளைந்து நல்ல இலாபத்தைத் தரும். தாய் வழியில் நல்ல அன்பும், ஆதரவும் உண்டு. சொத்து சுகமும், பெண்களால் நற்சுகமும் ஏற்பட விதியுண்டு. வடக்குத் திசையில் வீடு அமைய விதியுண்டு. பால் பாக்கியம் உண்டு.

புதனுடன் சனி, சுக்கிரன் ஆகியன சேர்ந்தால் பளுத்தூக்கி வாகனம், கனரக வாகனங்கள், எந்திரங்கள் ஆகியவை அமையும். எருமை விருத்தியும், பால் விருத்தியும், நன்மையும் பிதுர்பாக்கியமும் உண்டு. புத்திரரால் கஷ்டமும் மனஸ்தாபமும் உண்டு. அதன் மூலம் விரயமாகவும் விவசாய நிலங்களில் விளைச்சல் இன்றிச் சாவியாகவும் விதியுண்டாம்.

புதனுடன் சூரியன், செவ்வாய், குரு ஆகியன சேர்ந்தால் இளைய சகோதர நன்மையும், எதிரியால் வில்லங்கமும் மனக்கவலையும்,

மனைவியால் நற்சுகமும், பொன் பொருள் சேர்க்கையும் உண்டாகும். புதனுடன் இராகு, கேது கூடினால் மத்திமமான பலனைக் கொடுக்குமென்று சந்திரநாடி கூறுகிறது. புதனுக்கு யந்திர, மந்திர பிரீதியும், திருமாலுக்கு அர்ச்சனையும் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

மீன இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதி புதன் இராசிக்கு 5ஆம் இடமான கடகத்தில் நட்புடனிருந்தால் மத்திமான பலன்கள் ஏற்படும். தாய்க்குத் திரேக மேன்மையுண்டு. வீடு, மனை, வாகனங்கள், கல்வியில் பட்டம் பெறுதல் ஆகியன உண்டு. கால்நடை வர்க்கங்களால் மேன்மையும் உண்டு. விவசாயம் நல்ல இலாபத்தைத் தரும் பெண்களால் சுகமும். பூர்வ சொத்துகளால் நன்மையும் ஏற்படும். பால் பாக்கியமும் உண்டு. இருப்புக்கு வடமேற்கில் வீடு அமைய விதியுண்டு. புத்திரரால் நன்மையுண்டு.

புதனுடன் குரு உச்சம் பெற்றிருந்தால் திரேகமேன்மை, பிராமண போஜன சுகம், கல்வியில் உயர்கல்விப் பட்டம், மாடி மனை ஆகியவற்றை அடைய விதியுண்டு. நல்ல அலங்கார வாகனங்களும், புதிய பல கட்டடங்களும் அமையும். காண்ட்ராக்ட் போன்ற தொழில் முறையில் நல்ல இலாபம் கிடைக்க விதியுண்டு. புத்திரரால் நன்மை உண்டு.

புதனுடன் செவ்வாய், குரு ஆகியன சேர்ந்து கூடினால் நீச பங்க ராஜ யோகத்தைக் கொடுப்பார்கள். நற்பண்பும், நல்லொழுக்கமும், கல்வியில் மேன்மையும், உத்தியோகக் கீர்த்தியும், தலைமையிடமும், சேவகர்களும், சற்புத்திரரும், அவர்களால் நன்மையும் இலாபங்களும் உண்டு.

புதனுடன் சூரியன் சேர்ந்தால் நிபுணயோகம் ஏற்படும். பிதுர் வர்க்கங்களால் இலாபமும் உதவியும் கிடைக்கும். புதனுடன் இராகு, கேது, சனி ஆகியன கூடினால் அவ்வளவாக நன்மையான பலன் கிடைக்காது. திருமாலுக்கு அர்ச்சனையும், புதனுக்கு எந்திர, மந்திர பூஜையும் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

மீன இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 6ஆம் இடமான சிம்ம இராசியில் இருந்தால், மத்திமமான பலன்களே உண்டாகும். வீடு, மனை, வாகனங்கள், விவசாயம் ஆகியவை

ஓரளவு நன்மையைத் தரும். உஷ்ண சம்பந்தமான வியாதிகளையும் பெற்றிருப்பார்கள். கல்வி மட்டுப்படும். பால்பாக்கியம் குறைந்து விடும். சொத்து சுகத்தில் வில்லங்கம், விவகாரம் போன்றவை ஏற்படும். கிழக்குத் திசையில் வீடு அமையும்.

புதனுடன் சூரியன் சேர்ந்தால் எதிரிகளை வெல்லுவார்கள். காடு, கழனிகள் சுமாரான இலாபத்தைக் கொடுக்கும். கல்வி, தடைப்படும். கால்நடை வர்க்கங்களால் நஷ்டம் ஏற்படும். விவசாயத் தொழிலால் மேன்மை இராது. புதனுடன் செவ்வாய் சேர்ந்தால், பண விரயமும் செல்வமும் செல்வாக்கும் மறையும் விதி உண்டாகும்.

புதனுடன் சனி, சுக்கிரன் ஆகியன கூடினால் இளைய மூத்த சகோதரரால் நன்மையும் உதவியும் உண்டாகும். நீர் சம்பந்தமான வியாதிகள் கால்நடைகளுக்கு ஏற்பட்டு இழப்பு நேரிடும். இராகு கேது கூடினால் நன்மையான பலன்களை எதிர்பார்க்க முடியாது. விவசாய இலாபங்கள் பயன் தாரா. மயக்க வஸ்து வியாபாரம் உண்டு. புத்தி மந்தப்படும். புதனுக்கு யந்திர, மந்திர பிரீதிகளும், திருமாலுக்கு அர்ச்சனையும் ஆராதனையும் செய்தால் நன்மையான பலன்களையும் அடையலாம் என்று சந்திரநாடி கூறுகிறது.

மீன இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 7ஆம் இடத்திலிருப்பதால், உச்சம் (கன்னி), உத்தமமான பலன்கள் உண்டாகும். தாய்க்கு நல்ல திரேக மேன்மையுண்டு. வீடு, மனை, வாகனங்கள் ஆகியன நல்ல இலாபத்தைத் தரும். மனைவியால் நல்ல இலாபமும், பொன், பொருள் வரவும் ஏற்படும். விவசாயம் நன்கு அபிவிருத்தியாகும். நஞ்சை, புஞ்சை நிலங்களால் நல்ல இலாபம் கிடைக்க விதியுண்டு. கல்வியில் பட்டம் பெற யோகமுண்டு. பல அலங்கார மனைகள், அலங்கார வீடுகள், மாளிகைகள் ஆகியன உண்டாகும். வியாபார அபிவிருத்தி யோகம் உண்டாகும். பால் பாக்கியம் உண்டு. பசு விருத்திகளும் உண்டு. வடக்கில் வீடமைய விதி உண்டு.

புதனுடன் குரு, சுக்கிரன் ஆகியன சேர்ந்தால் நீச பங்க ராஜயோகத்தைக் கொடுக்கும். வியாபாரம் நல்ல நிலையில் இருக்கும். விவசாய மேன்மையுண்டு. காடு, கழனிகள் விளைச்சலால் நன்மையான பலன்களுண்டு. நூதனத் தொழில்களால் நல்ல

இலாபம் உண்டு. கல்வியில் பட்டம் பெற விதியுண்டு. பெண்களால் நற்சுகமும், ஆயுள் ஆரோக்கியமும் ஏற்படும்.

புதனுடன் சூரியன், செவ்வாய் ஆகியன சேர்ந்தால் செம்மண் பூமியில் நல்ல விளைச்சல், கௌரவம், அந்தஸ்து சுகம், பெண்களால் சுகம் ஆகியவை கிடைக்கும். புஞ்சைப்பயிர்த் தானியங்கள் நல்ல விளைச்சலைத் தரும்.

புதனுடன் இராகு கேதுகள் கூடினால் மத்திமமான பலன்களைச் செய்யும். திருமாலுக்கு அர்ச்சனையும், புதனுக்கு யந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் நன்மையான பலன்கள் உண்டாகும் என்று நாடி கூறுகிறது.

மீன இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 8ஆம் இடமான துலாத்தில் நட்புப் பெற்றிருப்பதால் மத்திமமான பலன்கள் உண்டாகும். தாய்க்குத் திரேக மேன்மையும் உண்டு. ஆனால், அவ்வப்போது பீடைகளும், கண்டங்களும் வந்து மாறும். வீடு, மனை, இலாபங்கள் ஆகியன அவ்வளவாகப் பலன் தாரா. வாகனங்களினால் சுகம் கிடைக்காது. வாகனங்கள் அவ்வப்போது பழுதடையும். விவசாயம் நல்ல விளைச்சலைத் தாரா. வீடு, தென்கிழக்கில் அமையும்.

புதனுடன் சனி, சூரியன், சுக்கிரன் ஆகியன கூடினால் ஆயுள் நல்ல நிலையில் இருக்கும். நீசம் பெற்ற சூரியன் கூடுவதால் நீசபங்க ராஜயோகம் கிடைக்கும். வீடுகள் மாளிகைகளாய் இருக்கும். அலங்கார வாகனங்கள், பளுத் தூக்கும் வாகனங்கள், அதி நூதன கனரக வாகனங்கள், அதி நூதன நவீன இயந்திர சாலைகள் ஆகியன உண்டாகும். கால்நடைகளுள் எருமைகள் விருத்தி அதிகமாகும். எள்ளு, பச்சைப்பயறு, மொச்சை போன்ற புஞ்சைத் தானியங்களில் நல்ல விளைச்சலுண்டாகும்.

புதனுடன் செவ்வாய் கூடுவதால் தனச்சேர்க்கைகள் முன் இருந்து பின் விரயமாகும். புதனுடன் குரு கூடுவதால் பொன், பொருள், சேர்க்கைகள் உண்டு. பின் அதனால் விரயம் உண்டாகும். இராகு, கேதுகள் கூடினால் மத்திமமான பலன்களே உண்டாகும். திருமாலுக்கு அர்ச்சனையும், புதனுக்கு யந்திர, மந்திர பிரீதிகளும்

செய்தால் நல்ல பலன்களை அடையலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.

மீன இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 9ஆம் இடமான விருச்சிக இராசியில் நட்புடன் அமர்ந்தால் மத்திமமான பலன்களே உண்டு. தாய்க்கும் தந்தைக்கும் இடையே ஒற்றுமையுண்டு. வீடுகள், மனைகள் ஆகியன நல்லபடியாக இருக்கும். கால்நடை வர்க்கங்களால் மேன்மையுண்டு. இரும்பு வாகன வர்க்கங்களும் உண்டு.

புதனுடன் செவ்வாய், இராகு ஆகியன சேர்ந்தால் நீசபங்க ராஜயோகம் ஏற்படும். அலங்கார மாளிகைகள், அலங்கார மனைகள், பிதுர் வழியில் பாக்கியங்கள் ஆகியவற்றை அனுபவிக்க விதி உண்டு. விவசாயம் நல்ல பலன்களைத் தரும். விளைச்சல் அமோகமாய் உண்டு. பொறியியற்கல்வியில் பட்டம் பெறுவார்கள். தெற்கில் வீடு, மனை, தோட்டம் ஆகியன அமைய விதியுண்டு.

புதனுடன் சூரியன், சனி ஆகியவர்கள் கூடினால் வில்லங்க விவகாரமும், மூத்த சகோதரரால் நன்மையும் இலாபமும் உண்டாகும். புதனுடன் சுக்கிரன் சேர்ந்திருந்தால் இளைய சகோதரரின் அன்பும் உதவியும் கிடைக்கும். எருமை விருத்தியும் கனரக எந்திரங்களால் நன்மையும் இலாபமும் ஏற்படும்.

புதனுடன் இராகு, கேது ஆகியன உச்சமாகிக் கூடினால் இறைச்சி, தோல் பொருள்கள், அழுகிய பொருள்கள், மீன், உளுந்து, கருவாடு போன்ற வியாபாரங்களினால் நன்மைகளும் இலாபங்களும் ஏற்படும். திருமாலுக்கு அர்ச்சனையும், புதனுக்கு யந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால், நல்ல பலன்களை அடையலாம் என்று சந்திர நாடி கூறுகிறது,

மீன இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 10ஆம் இடமான தனுசில் நட்புடன் அமர்ந்திருந்தால் மத்திமமான பலன்களைக் கொடுக்கும். தாய்க்கு நல்ல வலிமை உண்டு. வீடு, மனைகள், வாகனங்கள் போன்றவை நல்ல நிலையில் இருக்கும். விவசாயம் மேன்மையுறும். கொடுக்கல், வாங்கல் போன்ற நிதிநிலை சம்பந்தமான தொழில்கள் நல்ல இலாபத்தைக் கொடுக்கும். கல்வியில் பட்டம் பெறுவார்கள். அதி நூதனத் தொழிலால் மேன்மையுண்டாகும்.

புதனுடன் குரு ஆட்சியாகிக் கூடினால் இருப்புக்கு வடகிழக்கில் மனை, வீடு ஆகியன அமைய விதியுண்டு. வீடுகள், மனை போன்றவற்றினால் நல்ல வருமானமும் (வாடகை) "அதிதி கிருகா" (லாட்ஜ்) மூலம் நல்ல இலாபமும் உண்டு. அதிநூதன எந்திரங்கள் மனையை அலங்கரிக்கும். ரேடியோ, டி.வி., டெக் போன்ற நூதனத் தொழில் புரிபவராகவும் இருப்பார்கள். விவசாயம் நல்ல முறையில் விளைச்சலைத் தரும். கல்வியில் பட்டம் வாங்க விதியுண்டு. பால் பாக்கியம் பெருகும். கால்நடைகளின் மூலம் நல்ல இலாபம் உண்டு.

புதனுடன் சுக்கிரன், சனி போன்ற கிரகங்கள் கூடினால் தொழிலால் கீர்த்தியும், பெண்களின் சுகமும் சொத்துகளும் வர விதியுண்டு. மனைவியின் பெயரால் தொழில் இலாபம் உண்டு. சுகபோஜனமும், பொன், பொருள் ஆபரணச் சேர்க்கையும் மனை அலங்காரங்களால் ஏற்படும்.

· புதனுடன் இராகு கேதுகள் கூடினால் தொழில் இலாபமும், நஷ்டமும் சம அளவில் கலந்துவரும். திருமாலுக்கு அர்ச்சனையும், புதனுக்கு எந்திர, மந்திர பிரீதியும் செய்தால் உத்தமமான பலன்களை அடையலாம் என்று சந்திரநாடி கூறுகிறது.

மீன இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 11ஆம் இடமான மகரத்தில் நட்புடனிருந்தால் மத்திமமான பலன்களைத் தரும். தாய்க்கு உடல்வாகு திருப்தியான முறையில் சௌகரியமாய் இருக்கும். வீடு, மனை, வாகனம், நிலபுலன்கள், விவசாய மேன்மை, சொத்து சுகம் போன்றவை நல்ல இலாபத்தைக் கொடுக்கும்.

புதனுடன் ஆட்சி பெற்ற சனி கூடினால், மூத்த சகோதரர் மூலம் நன்மையும், பொருள் வரவும், உதவிகளும் உண்டாகும். வீடு, மனை, வாகனங்கள் ஆகியன நல்ல முறையில் இருக்கும். விவசாயம், புஞ்சைத் தானியங்கள், நஞ்சைத் தானியங்கள் ஆகியன நல்ல முறையில் இலாபத்தைக் கொடுக்கும். தொழிற்கல்வியில் பட்டம் பெறுவார்கள். சொத்துகளினால் நல்ல பலன் கிடைக்கும். பெண்களினால் போக சுகமும் உண்டாகும். இருப்புக்கு மேற்கில் வீடு, தோட்டம் ஆகியன அமைய நன்மையுண்டு.

புதனுடன் உச்சம் பெற்ற செவ்வாய் கூடினால் வாக்குச் சாதுரியமும் தனச்சேர்க்கையும், அதன் மூலம் இலாபமும் நன்மையும்

உண்டாகும். கல்வியில் பட்டமும், அதன்மூலம் தொழில் இலாபமும், வருவாயும் உண்டு பண்ணும். துவரை, எள்ளு போன்ற தானியங்கள் நன்கு விளையும்.

புதனுடன் சூரியன் கூடினால் மூத்த சகோதரராலும் மனைவியாலும் அடிக்கடி வில்லங்கம் வந்து மாறும். காடுகள், விவசாயம் ஆகியன நல்ல முறையில் இருக்கும். பால் பாக்கியம் குறையும். மற்ற கிரகங்கள் சேர்ந்தால், மத்திம பலனைத்தான் எதிர்பார்க்கலாம். இதற்குத் திருமாலுக்கு அர்ச்சனையும், புதனுக்கு யந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் உத்தமமான பலன்களை எதிர்பார்க்கலாம்.

மீன இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 12ஆம் இடமான கும்பத்தில் நட்புடன் அமர்ந்திருப்பதால் தாய்க்குத் திரேக மெலிவும், அதன்மூலம் வைத்தியச் செலவும் உண்டாகும். வீடு, மனை, வாகனங்கள் போன்ற இலாபங்களெல்லாம் விரயமாகக் கூடிய நிலை இருக்கும். பால் பாக்கியம் சேராது. தாயின் வழிச் சொத்துகள் விரயமாகக்கூடிய விதியும் உண்டாகும். மேற்கில் வீடு அமைய வாய்ப்பு உண்டாகும்.

புதனுடன் சனி சேர்ந்து ஆட்சி பெற்றால் கனதனங்கள் அதிகமாக விரயமாகும். கல்வி பயில முடியாமல் தடைப்படும். இதனால் அதிகமான பணம் விரயமாகும். வீடு, மனை, வாகனங்கள் ஆகியன பழுதடைய விதியுண்டு. விவசாயம் நல்ல இலாபம் தந்தாலும், கடைசிவரை ஒன்றும் மிஞ்சாது. இலாபமெல்லாம் விரயமாகும்.

புதனுடன் சூரியன், செவ்வாய், குரு ஆகியன கூடினால் காலவிரயம், தொழில் விரயம், பண விரயம் என்று எல்லா விரயமும் ஏற்பட விதியுண்டு. காடுகரைகளும், நிலபுலன்களும் விரயமாகும் சூழ்நிலை உருவாகும்.

புதனுடன் இராகு, கேது ஆகியன கூடினால் தாமதப் பலனையும் மத்திம பலனையும் கொடுப்பார்கள். என்று கூறப்படுகிறது. திருமாலுக்கு அர்ச்சனையும் எந்திர, மந்திர பூஜையும் பிரீதியும் செய்தால் நல்ல இலாபமான பலன்களை அடையலாம் என்று கூறப்படுகிறது.

மீன இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான புதன் இராசியிலேயே நீசம் பெற்றிருந்தால் அவ்வளவு நல்ல பலன்களை

எதிர்பார்க்க முடியாது. தாய்க்கு நோய், நொடி, கண்டங்கள் அடிக்கடி வந்து மாறும் நிலை உருவாகும். வீடு, மனை, வாகனங்கள் ஆகியன நல்ல பலன்களைத் தாரா. விவசாயம், விளைச்சலின்றி இருக்கும். சொத்து, சுகம் ஆகியன கிடைக்காத நிலை வரலாம்.

புதனுடன் ஆட்சி பெற்ற குருவும், நீசம் பெற்ற சுக்கிரனும் கூடினால், மாளிகைகள் போன்ற வீடு, பல மாடிக் கட்டடங்கள், திரையரங்கு, கலையரங்கம், "அதிதி ஹிருகா" போன்றவை மூலம் நல்ல இலாபம் கிடைக்க மார்க்கமுண்டு. மூன்று கிரகங்களும் ஒன்றுசேர்ந்திருந்தால் நீசபங்க ராஜயோகம் ஏற்படும்.

புதனுடன் சூரியன், செவ்வாய், சனி ஆகியவர்கள் கூடினால் உஷ்ண சம்பந்தமான சிரசு நோய்களும் வாத சம்பந்தமான ரோகங்களும் ஏற்படுமென்று அறிந்து கூறப்படுகிறது.

புதனுடன் இராகு கேதுகள் கூடினால் மத்திம பலன்களே கிடைக்குமென்று சந்திர நாடி கூறுகிறது. திருமாலுக்கு அர்ச்சனை யும், புதனுக்கு எந்திர, மந்திரப் பிரீதியும் செய்தால் நன்மையான பலன்களை அடையலாம்.

மீன இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 2ஆம் இடத்திலிருந்தால் (மேஷம்) தாய்க்குக் தேக சௌக்கியம் நிறையவுண்டு. தாயே அந்தக் குடும்பத்தை நிர்வகிக்கும் உரிமையுண்டு. வீடு, மனை, வாகனங்கள் ஆகியன ஓரளவு நன்மையைத் தரும். தானிய விளைச்சல் அவ்வளவு அதிகம் இராது.

புதன், நீசம் பெற்ற சனி, பெரிய இடத்தைப் பெற்று உச்சம் பெற்ற சூரியன் ஆகிய மூவருமிருந்தால் நல்ல பலன்களை அடையலாம். அவரவர் திசா புத்திகளில் நீசபங்க ராஜயோகத்தைப் பெறுவார்கள். புஞ்சை விவசாயம் நல்ல முறையில் 'விளைச்சலைத் தரும். காடு கழனிகள் நிறைந்தும் இருக்க விதியுண்டு.

புதனுடன் சந்திரன், செவ்வாய், இராகு ஆகியன கூடினால் மத்திமமான பலன்களே ஏற்படும். வாக்கு சாதுரியம், கனதனச் சேர்க்கைகள், குடும்பத்தில் ஒற்றுமை ஆகியன உருவாகலாம், கல்வி தடைப்படும். முன்பகுதியில் பால் பாக்கியம் குறைந்து, பிற்பகுதியில் நிறைந்தும், காணப்படும். பூர்வ புண்ணியச் சொத்துகளை அனுபவிக்க யோகமுண்டு. பெண்களால் சுகமும் உண்டாகும்.

புதனுடன் கேது சேர்ந்தால், வாக்குப் பலிதமாகும். 4ஆம் பாவ பலன்கள் இளமையில் முற்றிலும் அழிந்துவிடும். திருமாலுக்கு அர்ச்சனையும், புதனுக்கு யந்திர, மந்திர பிரீதிகளும் செய்வதன் மூலம் நல்ல பலன்களை அடையலாம்.

மீன இராசிக்கு 4ஆம் இடத்து அதிபதி புதன் இராசிக்கு 3ஆம் இடமான ரிஷபத்தில் நட்புடனிருப்பதால் தாய்க்குத் திரேக சௌக்கியம் உண்டு. இளைய சகோதரரால் நன்மையும் உதவியும் உண்டு. வீடு, மனை, வாகனம் ஆகியவற்றால் நன்மையுண்டு. தோட்டங்கள், விவசாயங்கள் போன்றவற்றால் சுமாரான பலன்கள் உண்டு. கல்வியில் பட்டம் பெறுவார்கள். கலைக்கல்வி பயில்வார்கள். பால் பாக்கியம் உண்டு. கன்று காலி விருத்தியுண்டு.

புதனுடன் சுக்கிரன் ஆட்சி பெற்றுக் கூடினால் தனச்சேர்க்கை உண்டாகும். இளைய சகோதரர்கள் நல்லவர்களாகவும் இருப்பார் கள். அவர்களால் உங்களுக்கு நன்மைகளும் உதவிகளும் உண்டு. பட்டங்கள், பதவிகள், ஆளடிமை போன்ற சுகங்கள், கலையமிசம் பொருந்திய பெண்களால் நற்சுகம் ஆகியவற்றை அடைய விதியுண்டு.

புதனுடன் சனி சேர்ந்தால், மூத்த சகோதரரால் நன்மையும் உதவியும் உண்டாகும். அதன் மூலம் இலாபங்களும், நன்மைகளும் உண்டாகும். புதனுடன் சூரியன் சேர்ந்தால் இளைய சகோதரரால் வில்லங்க விவகாரம் உண்டு. இதனால் சிலருக்குக் காதல் திருமணம் ஏற்பட விதியுண்டு. இவர்களுடன் இராகு கேதுகள் சேர்ந்தால் மத்திமமான பலன்களுண்டு. விஷபயம், ஜலரோகம் ஆகியனவும், பெண்களுக்கு இடுப்புக்குக் கீழ் வியாதிகள் ஏற்பட விதியுண்டு. திருமாலுக்கு அர்ச்சனையும், ஆராதனையும் புதனுக்கு யந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் நன்மையான பலன்களை அடையலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.



